# சங்க காலப் பெண்பாற்புலவர்கள் வரலாறும் அவர்தம் இலக்கியக் கொடையும்

அழகப்பா பல்கலைக் கழக முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக
அளிக்கப்பெறும் ஆய்வேடு


**ஆய்வாளர்**

*க. அமுதா*

**பதிவெண் : 620**

நெறியாளர்

**முனைவர் தே. சொக்கலிங்கம், எம்.ஏ.,பீ.ஓ.எல்.,பிஎச்.டி.,**






**தமிழ்த்துறை**

அழகப்பா பல்கலைக்கழகம்

**காரைக்குடி - 630 003.**


**2005**

**முனைவர். தே. சொக்கலிங்கம்,**
எம்.ஏ.,பீ.ஓ.எல்.,பிஎச்.டி.,
பேராசிரியர் துறைத்தலைவர் (பணிமூப்பு)
தமிழ்த்துறை, அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.

நாள் : 15-6-2005

ஆய்வு நெறியாளர் சான்றிதழ்

'சங்ககாலப் பெண்பாற்புலவர்கள் வரலாறும் அவர்தம் இலக்கியக் கொடையும்' என்னும் தலைப்பில் **க. அமுதா** அவர்கள் முனைவர் பட்டத்திற்காகச் செய்த இந்த ஆய்வு அழகப்பா பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையில் அவர் செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பட்டது என்றும் இந்த ஆய்விற்காக வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்படவில்லை என்றும் உறுதி அளிக்கிறேன்.

தே. சொக்கலிங்கம்

(தே. சொக்கலிங்கம்)

நெறியாளர்.

**க. அமுதா,**
ஆய்வாளர்,(SRF)
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.

நாள் : 15/6/2005

## ஆய்வாளர் உறுதிமொழி

'சங்ககாலப் பெண்பாற்புலவர்கள் வரலாறும் அவர்தம் இலக்கியக் கொடையும்' என்னும் தலைப்பில் முனைவர் (பி.எச்.டி) பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ்வாய்வு என் சொந்த முயற்சியால் உருவானது என்றும், இதற்கு முன்வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப்படவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

(க. அமுதா)
ஆய்வாளர்

உறுதிக்கையொப்பம் :

ஆய்வு நெறியாளர்

**முனைவர். தே. சொக்கலிங்கம்,**
எம்.ஏ.,பீ.ஒ.எல்.,பிஎச்.டி.,
பேராசிரியர் துறைத்தலைவர் (பணிமூப்பு)
தமிழ்த்துறை, அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.

# நன்றியுரை

"சங்ககாலப் பெண்பாற்புலவர்கள் வரலாறும் அவர்தம் இலக்கியக் கொடையும்" என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்கு ஆய்வு மேற்கொள்ள அனுமதி வழங்கிய அழகப்பா பல்கலைக் கழகத் துணைவேந்தர், ஆட்சிக்குழு உறுப்பினர்கள் ஆகியோருக்கு என் உளம் நிறைந்த நன்றி. பல்கலைக்கழக மானியக்குழு வழங்கிய உதவித்தொகையை உரிய காலத்தில் கொடுத்து ஆய்வுப்பணியைச் செம்மையுறச் செய்வதற்கு உதவிய துணைவேந்தர் திரு. முனைவர் கன்னியப்பன் அவர்களுக்குச் சிரம் தாழ்த்திப் பணிவார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். பல்கலைக்கழக மானியக்குழுவிற்கும் என் நன்றி.

ஆய்வு நெறியாளராக இருந்து ஆய்வுத் தொடக்கத்திலிருந்து ஆய்வின் முடிவு வரை பல்லாற்றானும் நெறிப்படுத்திய மதிப்பிற்குரிய டாக்டர் தே. சொக்கலிங்கம் அவர்களுக்கும், அவரது துணைவியார் சொ. பார்வதி அவர்களுக்கும் என் நன்றி.

ஆய்விற்கு உதவிய தமிழ்த்துறைத் தலைவர் டாக்டர்.இரா. பால சுப்பிரமணியன், பேராசிரியர் டாக்டர்.மு. பாண்டி, திரு. டாக்டர். சே.செந்தமிழ்ப்பாவை, டாக்டர்.சு. இராசாராம், திரு.மு.நடேசன் ஆகியோருக்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆய்வேட்டைத் திருத்தும் பணியில் உதவிய அன்புத் தோழி த. பாரதி, முனைவர்பட்ட ஆய்வாளர் கரு. மணிமேகலைக்கும், மற்றுள்ள ஆய்வாளர்களுக்கும் என் நன்றி.

ஆய்விற்கு வேண்டிய பல நூல்களைக் கொடுத்து உதவிய டாக்டர் வ.சுப. மாணிக்கனார் நூலகத்திற்கும், நூலகர் பொறுப்பாளராக இருக்கும் உயர்.திரு. எஸ். மோகன் அவர்களுக்கும் மற்றுள்ள அலுவலர்களுக்கும் என் நன்றி.

என் தமிழறிவு செம்மையுற அடித்தளமமைத்த இராமசாமி தமிழ்க் கல்லூரி பேராசிரியர்களுக்கு என் நன்றி.

முனைவர் பட்டம் மேற்கொள்ள முழுமுதற்காரணமாய் அமைந்த என் தாயார் திருமதி.க. உமையாள் அவர்களின் சிரம்தாழ்த்தி நன்றியைத் தெரிவித்துக்

கொள்கிறேன். நான் மேன்மேலும் பயில ஊக்கப்படுத்திய என் அன்புக் கணவர் இரா. கணபதி அவர்களுக்கும், என் மகன் க. ஹரீஷ் ராஜாவிற்கும், சுற்றத்தார்க்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்வேட்டைச் செம்மையுறச் செய்தளித்த மரியாதைக்குரிய அண்ணன் அருணாசலம், தெய்வானை தம்பதியருக்கும் தம்பி இராமுவிற்கும் என் நன்றி.

பலமுறை திருத்தம் செய்த போதும் இன்முகத்தோடுச் செய்தளித்த தம்பி திரு. நம்பிராஜ், அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | | |
|---|---|---|---|
| 1. | அகத் | - | அகத்திணையியல் |
| 2. | அகம். | - | அகநானூறு |
| 3. | அதி. | - | அதிகாரம் |
| 4. | இளம். | - | இளம்பூரணர் |
| 5. | உ.ஆ. | - | உரை ஆசிரியர் |
| 6. | உவம. | - | உவமவியல் |
| 7. | களவு. | - | களவியல் |
| 8. | கற்பு. | - | கற்பியல் |
| 9. | குறுந். | - | குறுந்தொகை |
| 10. | சூத். | - | சூத்திரம் |
| 11. | செய்யு. | - | செய்யுளியல் |
| 12. | தொல். | - | தொல்காப்பியம் |
| 13. | நச். | - | நச்சினார்க்கினியர் |
| 14. | நற். | - | நற்றிணை |
| 15. | ப. | - | பக்கம் |
| 16. | ப.ஆ. | - | பதிப்பு ஆசிரியர் |
| 17. | பக். | - | பக்கங்கள் |
| 18. | பதிற். | - | பதிற்றுப்பத்து |
| 19. | புறத். | - | புறத்திணையியல் |
| 20. | புறம். | - | புறநானூறு |
| 21. | புறப்.வெண்பா | - | புறப்பொருள் வெண்பாமாலை |
| 22. | பொருந. | - | பொருநராற்றுப்படை |
| 23. | பொருள். | - | பொருளதிகாரம் |
| 24. | மெய்ப். | - | மெய்ப்பாட்டியல் |
| 25. | யா.கா. | - | யாப்பருங்கலக்காரிகை |
| 26. | வ.எண். | - | வரிசை எண் |

| உள்ளே | | பக்கம் |
|---|---|---|

# முன்னுரை

"உயிரைக் காக்கும் உயிரினைச் சேர்த்திடும்;
உயிரினுக் குயிராய் இன்ப மாகிடும்;
உயிரி னும்இந்தப் பெண்மை இனிதடா;
ஊது கொம்புகள், ஆடு களிகொண்டே".[1]

என்று பெண்மையைப் போற்றிப் பாடினார் மகாகவி பாரதியார். பெண்களைப் போற்றாத நாடு ஏற்றம் பெறாது என்று தமிழ்த் தென்றல் திரு.வி.க. உரைப்பர். சங்க காலம் பெண்களை மதித்துப் போற்றிய காலம். அக்காலத்தில் ஆடவர்க்குச் சமமாகப் பெண்களும் பெருமை பெற்றனர். மொழி அமைப்பில் தமிழில் ஆண்பால் ஈறுகள் போலப் பெண்பால் ஈறுகளும் பெற்று, தமிழ்ப்பெண்மையை உயர்த்திய மொழி தமிழ்மொழி. சங்க காலத்தில் வாழ்ந்த புலவர் நானூற்றெழுபத்து மூன்று பேர். இவர்களில் பெண்பாற்புலவர்கள் நாற்பத்தைவர். இவர்கள் பாடிய பாடல்கள் பெண்பாற்புலவரின் வாழ்க்கை வரலாற்றையும், கல்வி வளத்தையும் காட்டுகின்றன. இவர்களின் பாடல்களை மூலமுதலாகக் கொண்டு உருவானதே இந்த ஆய்வேடு. இந்த ஆய்வேட்டின் நோக்கம் பெண்பாற்புலவர்களின் வரலாறும், அவர்தம் இலக்கிய கொடையையும் வெளிப்படுத்துவதாகும்.

## ஆய்வுப் பொருள் :

இந்த ஆய்வுக்குரிய மூலம் சங்க இலக்கியங்களும் அவற்றைப் பற்றிய திறனாய்வுகளுமாம். சங்க இலக்கியத்தின் மூல நூல்களே ஆய்வுக்கு அடிப்படையாகின்றன. உ.வே.சாமிநாதையரின் பதிப்புகள், ஔவை சு. துரைசாமிப்பிள்ளையின் பதிப்புகள், சைவசித்தாந்த நாற்பதிப்புக்கழக வெளியீடுகள், தமிழ்ப்பல்கலைக்கழகப் பதிப்புகள் ஆகியன, இந்த ஆய்வில் பயன்படுத்தப்பட்டுள்ளன. சங்க இலக்கிய ஏடுகள் கிடைத்தற்கருமையின் அவற்றைப் பார்க்க இயலவில்லை. பல்வேறு மலிவுப் பதிப்புகள் சங்க இலக்கியத்திற்கு வெளிவந்துள்ளன. அவற்றை அவ்வப்போது ஆய்வாளர் பார்த்திருந்தாலும் அவற்றை அடிப்படைச் சான்றாக மேற்கோளாகக் காட்டிலர்.

**ஆய்வு எல்லை :**

ஆய்வுத் தலைப்பிற்கேற்பச் சங்க இலக்கியப்பாடல்கள் அனைத்தும் ஆய்வில் உட்படுத்தப்பட்டுள்ளன. எனினும் பெண்பாற்புலவர்களின் பாடல்களே முழுக்க முழுக்க இவ்வாய்வேட்டின் மூலமுதலாகும். கருத்துத்தெளிவிற்காகச் சங்க இலக்கியச் சொற்பொழிவுகள், சங்க இலக்கியத்திறனாய்வு நூல்கள், அச்சான சங்க இலக்கிய ஆய்வேடுகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**ஆய்வு முன்னோடிகள் :**

சங்க காலப் பெண்பாற்புலவர் பற்றிய பல ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. கட்டுரைகளும் பல எழுதப்பட்டுள்ளன. சங்க காலப் பெண்பாற் புலவர்கள் மீது தமிழ் ஆய்வாளர்களுக்கும் எழுத்தாளர்களுக்கும் தனிக்கவர்ச்சியுள்ளது. இந்நூல்கள் அனைத்தும் வரலாறுகளைத் தொகுத்து நோக்கி விரித்துரைப்பனவாகத் திகழ்கின்றன. இவ்வாறு எழுந்த நூல்களில் 1. இரா. இராகவையங்கார் எழுதிய 'நல்லிசைப் புலமைமெல்லியலார்',[2] 2. கா. கோவிந்தன் எழுதிய, 'சங்கத் தமிழ்ப்புலவர் வரிசை -V பெண்பாற்புலவர்கள்'[3], 3. கே.எஸ். நாகராஜன் எழுதிய சங்ககாலப் புலமைச் செல்வியர்[4], 4.சி.பாலசுப்பிரமணியன் எழுதிய 'The Status of Women in Tamilnadu During the Sangam Age'.[5], 5. பெ.சு.மணி எழுதிய சங்ககால ஔவையாரும் உலகப் பெண்பாற்புலவர்களும்[6], 6. தாயம்மாள் அறவாணன் எழுதிய 'மகடூஉ முன்னிலை - பெண்புலவர் களஞ்சியம்'[7], ஆகியன பெண்பாற்புலவர்கள் பற்றி ஆராய்ந்துள்ளன. இவை ஒவ்வொன்றிலும் பெண்பாற்புலவர்களின் எண்ணிக்கை ஒன்றுபோல் கொடுக்கப்படவில்லை. இந்நூலில் கூறப்பட்டப் பெண்பாற்புலவர்களும் இவ்வாய்வில் ஆராயப்பட்டள்ளனர். ஔவையாருக்குமிகுதியான நூல்கள் எழுந்துள்ளன. இவற்றில் கா. கோவிந்தன் எழுதிய சங்கத்தமிழ்ப்புலவர் வரிசை -4 'ஔவையார்'[8], ம.பொ.சிவஞானத்தின் 'ஔவையார்?'[9], சு.சுப்பிரமணியாச்சாரியாரின் 'ஔவையார் சரித்திரம்'[10] என்று பல நூல்களும் அடங்கும் வெள்ளிவீதியாருக்கு ம.சேசையா எழுதிய 'வெள்ளிவீதி'[11] என்ற நூலும், இப்பொருள் பற்றிய ஆய்வு முன்னோடிகளாகும்.

## ஆய்வேட்டின் அமைப்புமுறை

1. முன்னுரை
2. பாடல் வைப்புமுறை
3. புலவர் வரலாறு
4. அகப்பாடல்களின் திணைக் கூற்றாய்வு
5. புறப்பாடல் திணைத்துறையாய்வு
6. இலக்கியக்கொடை
7. சங்க காலப் பெண்ணியம்
8. முடிவுரை

இவற்றுடன் துணை நூற்பட்டியலும் பின்னிணைப்புகளும் அமைந்துள்ளன.

இயல் ஒன்று ஆய்வின் 'முன்னுரை'யாக அமைகிறது.

பெண்பாற்புலவர்களின் 'பாடல் வைப்புமுறை' இரண்டாம் இயலாக அமைகிறது. இதில் பெண்பாற்புலவர்களின் பாட்டுக்கள் இடம் பெற்ற அகநூல்களான குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு ஆகியவற்றில் இவர்தம் பாட்டுக்கள் எவ்விடத்தில் கோக்கப்பட்டதென்றும், பெண்பாற்புலவர்கள் பாடிய பாடல்கள் எந்த நூலில் மிகுதியாக இடம் பெற்றதென்றும் ஆராய்கின்றன. புறநானூறு, பதிற்றுப்பத்து, ஆகியவற்றில் பெண்பாற்புலவர்கள் பாடிய பாக்கள் எவ்விடத்தில் கோக்கப்பட்டதென்றும் ஆராய்கின்றன. பெண்பாற்புலவரில் ஔவையார் அதிகம் பாடியவர். இவர்பாட்டு குறுந்தொகையில் 15ஆம் இடத்திலும், அகநானூற்றில் பதினோராம் இடத்திலும் தொகுக்கப்பட்டு, புறநானூற்றில் 87-ஆம் பாடலாகத் தொகுத்ததன் காரணம் யாது? என்றும் ஆராய்கிறது.

காக்கைப் பாடினியார் நச்செள்ளையார் பதிற்றுப்பத்தில் ஆறாம்பத்தைப் பாடியவர். இவ்விடத்தில் இப்பாட்டு தொகுத்ததன் காரணம் ஆராயப்பெறுகிறது. பத்துப்பாட்டில் முடத்தாமக் கண்ணியார் பாடிய பொருநராற்றுப்படை எவ்விடத்தில் தொகுக்கப்பட்டதென்றும் ஆராய்கிறது.

பல ஆயிரம் பாட்டுக்களை வகுத்துத்தொகுக்கும் போதுப் பெண்களுக்கு எத்தகைய மதிப்பு-தகுதி-இடம்-கொடுக்கப்பட்டது என்றும், யாருக்கு முதலிடம் வழங்கப்பட்டதென்றும் இங்கு ஆராயப்பெறுகிறது. இதன்மூலம்

பெண்பாற்புலவர்களின் தகுதியும் இலக்கியக் கொடையும் மதிப்பிடப்படுகின்றன. ஆகவே, இந்த ஆய்வேடு மீளாய்வாகவும், ஆழாய்வாகவும் புதிய கருத்துக்கள் கொண்டதாகவும் அமைகிறது.

'புலவர் வரலாறு' மூன்றாமியலாக அமைகிறது. இவ்வியலில் இது வரைப் பெண்பாற்புலவர் என்று கூறப்பட்டோரைப் பெண்பாற்புலவரா? என்று ஆராய்ந்து தெளிகிறது. இவ்வாய்வில் பெண்பாற்புலவர்கள் நாடுவாரியாக ஆராயப்பட்டுள்ளனர். பெண்பாற்புலவர்களின் நாடு அவர் பாடிய பாட்டுக்களாலும், பெயர்க்குறிப்பாலும் ஆராயப்பட்டுள்ளன. காக்கைப்பாடினியார் நச்செள்ளையார் என்ற பெயரில் 'செள்ளை' என்பதுச் செவுளைக்குறிக்கும். இன்றும் சிவகங்கை மாவட்டத்தில் கோபத்தில் ஒருவனைப் பேசும்போதுச் செள்ளையைத் திருப்பிவிடுவேன் என்று பேசுவர். 'செள்ளை' என்பது காதைக் குறிக்கும். நல்லவற்றையே கேட்கும் பெண் நச்செள்ளை எனப்பட்டாள். இப்பெயர் மலையாளத்திலிருந்தமையால் அந்துவஞ்செள்ளை என்று சேரப் பெண்மணியும் குறிப்பிடப்பட்டுள்ளாள். உறுப்பால் பெயர் சுட்டும் வழக்குத்தழுவி இப்பெண்பாற்புலவர் அழைக்கப்பெற்றுள்ளார் என்ற புதுச்செய்தி பெறப்படுகிறது. அதுபோன்று கழார்க்கீரனெயிற்றியார் பெயரில் 'கழார்' என்பது ஊர்ப்பெயர். எயிற்றி என்பது இயற்பெயர். 'எயிறு' என்ற சொல் பல்லைக் குறிக்கும். இப்பெயரும் உறுப்பால் பெற்ற பெயர். இன்றும் ஊரக வழக்கில் நீண்ட பற்களை உடையவரைப் பல்லுப்பயல் என்று பட்டப்பெயரிட்டு வழங்குவர். அதுபோன்று இவருக்குப் பெற்றோரிட்ட பெயர் மறைந்து இப்பெயர் இயற்பெயராகியது.

வெள்ளிவீதியார் என்ற பெண்பாற்புலவர் உளர். இவர் பெயரில் பயிலும் 'வெள்ளி' என்ற பெயரில், வெள்ளியந்தின்னனார் என்ற ஆண்பாற்புலவரொருவர் உளர். வெள்ளி என்பது ஒருகோள். இக்கோள் ஞாயிற்றுக்கு வடக்கு, தெற்கு, ஞாயிற்றின் வழி என்று மூன்று வழிகளிலும் செல்லும். இதை அறிந்த இன்பத்தால் வெள்ளிவீதி சிறப்பிக்கப்பட்டு வெள்ளி வீதியார் எனப்பட்டார். இப்பெயரில் மதுரையில் ஒருவீதியுள்ளது. இவர் பாண்டிய நாட்டுப்புலவர். இதுபோன்ற மற்ற பெண்பாற்புலவர்களின் வரலாறும் ஆராயப்பட்டுள்ளன.

பெண்பாற்புலவர்கள் பாடிய வேந்தர்கள், மன்னர்கள் கொண்டுப்

பெண்பாற்புலவர்களின் நாடு ஆராயப்பட்டுள்ளது. நாடு தெரியாப்புலவர்கள் ஒருங்கு தொகுக்கப்பட்டு ஆராயப்பட்டுள்ளனர்.

'அகப்பாடல்களின் திணைக்கூற்றாய்வு' நான்காமியலாக அமைகிறது. இவ்வியலில் பெண்பாற்புலவர்களின் அகப்பாட்டுக்கள் ஆராயப்பட்டுள்ளன. இவர் தம் அகப்பாடல்களில் கூடுதலாக இடம்பெற்ற பாலைத்திணைப் பாட்டுக்கள் முதலில் ஆராயப்பட்டுள்ளன. இப்பாலைத்திணையை 1. உடன்போக்குப் பாலை 2. பிரிவுப்பாலை என்று இரண்டாக்கி, அதில் களவு, கற்புப்பாட்டுக்கள் எனப்பகுத் தாராயப்பட்டுள்ளன. இப்பாட்டுக்களில் இடம்பெற்ற தலைவன், தலைவி, தோழி கூற்றுக்கள் தொல்காப்பியக் கருத்துக்களோடு ஒப்பு நோக்கப்பட்டிருக்கின்றன. நெய்தல் திணைப்பாக்களில் பெண்பாற்புலவர்கள் பாடிய பாட்டுக்கள் அனைத்தும் பெண் கூற்றுக்களில் அமைந்தவை. இப்பாட்டுக்களைக் களவு, கற்பு எனப்பகுத்து, அதில் தலைவி, தோழி கூற்றுக்கள் என்று ஆராயப்பட்டுள்ளன. குறிஞ்சித்திணைப் பாக்களில் களவுப்பாக்கள் மிகுதி. இப்பாக்களைக் களவு, கற்புப்பாக்கள் எனப்பகுத்து அதில் இடம்பெற்ற தலைவன், தலைவி, தோழி கூற்றுக்கள் ஆராயப்பட்டுள்ளன. மருதத்திணைப் பாக்களில் இடம்பெற்ற தலைவன், தலைவி, தோழி, பரத்தையர் கூற்றுப்பாக்கள் ஆராயப்பட்டுள்ளன. முல்லைத் திணைப்பாக்களில் இடம்பெற்ற தலைவன், தலைவி, தோழி, கண்டோர், உழையர் கூற்றுப்பாக்களும் தொல்காப்பியக் கருத்துக்களோடு ஆராயப்பட்டுள்ளன.

பெண்பாற்புலவர்களின் 'புறப்பாடல் திணைத்துறையாய்வு' ஐந்தாமியலாக அமைகிறது. இவ்வாய்வில் புறநானூற்றில் பெண்பாற்புலவர்கள் பாடிய பாடல்கள் திணை அடிப்படையில் பகுத்தாராயப்பட்டுள்ளன. இதில் எத்திணையில் பாக்கள் மிகுதியாக இடம்பெற்றுள்ளனவோ, அவ்வடிப்படையில் ஆராயப்பட்டுள்ளன. பாடாண்திணைப் பாக்கள் முதலில் ஆராயப்பட்டுள்ளன. இத்திணையில் இயன்மொழித்துறை, பரிசிற்றுறை, பரிசில்கடாநிலை, வாழ்த்தியல் துறை, கடைநிலை, பரிசில்விடை என்ற துறைகள் தொல்காப்பியம், புறப்பொருள் வெண்பாமாலைக் கருத்துக்களுடன் ஒப்பிடப்பட்டிருக்கின்றன. பின் திணை, துறையாய்வாகவும் அமைகிறது. பெண்பாற்புலவர்களின் பாடாண்திணைப் பாக்களில் பரிசில் வேண்டும் குறிப்பைவிடப் புரவலனைப் பாடும் நோக்கம் மிகுந்துள்ளது. இதில்

பெண்பாற்புலவர்களைப் புரவலர் மதித்துப் போற்றியமையும் ஆராயப்பட்டுள்ளன.

வாகைத்திணையும் அதில் இடம்பெற்றுள்ள அரசவாகை, மூதின்முல்லை, ஏறாண்முல்லை, வல்லாண்முல்லை, தாபதவாகைப் பாடல்களும் துறைவாரியாக ஆராயப்பட்டுள்ளன. வாகைத்திணைப் பாக்களில் அதியமான் திருக்கோவலூரை அழித்த வெற்றிச் செய்தி பெறப்படுகிறது. இதுபோன்று பல போர்க்கள வெற்றிகள் அறியப்படுவதை ஆராய்கிறது. இப்பாடலில் பகைமன்னர் பற்றிக் குறிப்பிடவில்லை. இதன்காரணம் யாதுஎன்றும் ஆராய்கிறது. பெண்கள் அந்நாளில் போர்க்களம் சென்றனரா? என்றும், மூதின் முல்லைத்துறைப் பாக்களைப் பெண்பாற்புலவர்கள் பாடியதன் நோக்கமென்ன? என்றும் ஆராய்கிறது.

தும்பைத்திணையும் அதன் துறைகளான தானைமறம், உவகைக் கலுழ்ச்சி, குதிரை மறம், நூழிலாட்டு என்று பெண்பாற்புலவர் பாட்டுக்கள் துறைவாரியாக ஆராயப்பட்டுள்ளன. இத்திணையில் தானை மறத்துறைப் பாட்டுக்கள் அதியனின் வீரத்தைப் பாடுவதாக உள்ளன. இப்பாட்டுக்களில் போர் நடப்பதைத் தடுப்பதை நோக்கமாகக் கொண்டுப்பாடப்பட்டுள்ளன. இவ்வாறு பாடக்காரணம் யாது என்று ஈண்டு ஆராயப்பட்டுள்ளது.

பொதுவியல் திணையும் அதன் துறைகளான கையறுநிலை, ஆனந்தப்பையுள், தாபதநிலை, பொருண்மொழிக் காஞ்சித்துறைப் பாட்டுக்கள் ஆராயப்பட்டுள்ளன. இப்பாடல்களில் கையறுநிலைப் பாட்டுக்களைப் பெண்பாற்புலவர்கள் பாடியிருப்பது புரவலர், புலவருக்கிருந்த உறவைக் காட்டும் விதம் ஆராயப்படுவதுடன், அந்நாளில் சமுதாயத்தில் பெண்பாற்புலவர்கள் பெற்றிருந்த உயர்ந்த இடமும் ஆராயப்படுகிறது.

புறநானூற்றில் குறைந்த எண்ணிக்கையில் அமைந்த வெட்சி, கரந்தை, நொச்சிப்பாடல்களும் துறை வாரியாகத் தொகுத்தாராயப்பட்டுள்ளன. இவ்வாய்வில் எத்திணையில் இவர்கள் பாடவில்லை என்பதும் ஆராயப்படுகிறது. பெண்பாற்புலவர்கள் ஆற்றுப்படுத்தலில் கொண்டிருந்த ஈடுபாடும், வேந்தர், குறுநில மன்னர் கொண்டிருந்த நட்புறவும், ஆண்பாற்புலவர்களுக்கும் இணையாகப் புறப்பாட்டுப் பாடும் திறமும் இவ்வாய்வில் ஆராயப்பட்டுள்ளன. புறநானூற்றுப் பாடல்கள் ஆய்வுடன் பதிற்றுப்பத்தில் ஆறாம்பத்தும், பொருநராற்றுப்படையும் ஆராயப்பட்டுள்ளன.

'இலக்கியக் கொடை' ஆய்வேட்டின் ஆறாமியலாக அமைகிறது. இவ்வியலில் பெண்பாற்புலவர்கள் விரும்பிப் பாடிய யாப்பு எது என்று ஈண்டு ஆராயப்பெறுகிறது. பாடல்களில் பயன்படுத்திய உவமை, உள்ளுறை, இறைச்சி பற்றியும் ஆராய்கிறது. இவ்வாய்வின்மூலம் பெண்பாற்புலவர்களின் கல்விச் சிறப்பு ஆராயப்பெறுகிறது.

'சங்ககாலப் பெண்ணியம்' ஆய்வேட்டின் ஏழாமியலாக அமைகிறது. இதில் பெண்ணியம் பற்றிய ஆராய்ச்சியாளர் கருத்துக்கள் தொகுக்கப்பட்டுப் பெண்ணியம் பற்றிய தெளிந்த கருத்தைத் தருகிறது. தொல்காப்பியம் காட்டும் பெண்ணியமும், சங்கப்பாட்டுக்கள் மூலம் அறியலாகும் பெண்ணியமும் ஒப்பிடப்படுகின்றன. சங்ககாலத்தில் பெண்ணிற்கு மணஉறவில் உரிமை இருந்ததா? என்பதும், பெண்மைப்பண்புகள் பெண்ணைக் கட்டுப்படுத்தினவா? என்றும், கற்பு பெண்ணிற்கு உரியதாகியது ஏன்? என்பதும் ஆராயப்பட்டுள்ளன. இதன்வழி அந்நாளில் இருந்த பெண் கல்வியும், அக்கல்வியினால் சமுதாயத்தில் பெண்கள் பெற்றிருந்த மதிப்பும் புலப்படுத்தப்பட்டுள்ளன. உடன்கட்டை ஏறுதலும், கைம்மை நோன்பும் பெண்ணியத்தைப் பாதித்ததா? என்பதும் ஈண்டு ஆராயப்பட்டுள்ளன.

'முடிவுரை' எட்டாமியலாக அமைகிறது. இதில் ஒவ்வொரு இயலிலும் கண்டறியப்பட்ட தெளிந்த கருத்துக்கள் தொகுக்கப்பட்டுள்ளன.

முடிவுரைக்குப் பின் துணை நூற்பட்டியல் இடம் பெறுகின்றது. இதன் பின் ஆய்வுக்கு அடிப்படையானவை பின்னிணைப்பாக அமைகின்றன.

**மேற்கோள் விளக்கம்**

1. மகாகவி பாரதியார் கவிதைகள், ப.206
2. இரா. இராகவையுங்கார், **நல்லிசைப் புலமை மெல்லியலார்,**
3. கா. கோவிந்தன், **சங்கத் தமிழ்ப்புலவர் வரிசைப் பெண்பாற்புலவர்கள்**
4. கே.எஸ். நாகராஜன், **சங்ககாலப் புலமைச் செல்வியர்**
5. C. Balasubramanian, **The Status of Women in Tamilnadu During the Sangam Age.**
6. பெ.சு.மணி, **சங்ககால ஔவையாரும் உலகப்பெண்பாற்புலவர்களும்,**
7. தாயம்மாள் அறவாணன், **மகடூஉ முன்னிலை-பெண்பாற்புலவர் களஞ்சியம்**
8. கா. கோவிந்தன், **சங்கத் தமிழ்ப்புலவர் பரிசை, 4. ஔவையார்**
9. ம.பொ.சிவஞானம், **'ஔவையார்'**
10. வெ.சு.சுப்பிரமணியாச்சாரியார், **'ஔவையார் சரித்திரம்'**
11. மா. சேசையா, **வெள்ளிவீதி**
12. கண்ணதாசன், **ஆட்டனத்தி ஆதிமந்தி (காவியம்)**

# இரண்டாமியல்

## பாடல் வைப்புமுறை

சங்க இலக்கியம் பாட்டும் தொகையும் எனப்படும். இவற்றில் உள்ள பாடல்கள் 2381. இப்பாக்கள் 473 புலவர்கள் பாடியவை[1]. இவற்றில் பெண்பாற்புலவர்களின் பாக்களும் உள்ளன. இவை, குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு என்ற மூன்று அக நூல்களிலும் புறநானூறு பதிற்றுப்பத்து என்ற இரண்டு புற நூல்களிலும் பத்துப்பாட்டில் ஒரு நூலும் காணப்படுகின்றன. இப்பாக்களை பாடியவர்களில் பெண்பாற்புலவர்களின் எண்ணிக்கையைக் கணக்கிடுவதில் ஆய்வாளர்களுக்கிடையேயும் பதிப்பாசிரியர்களுக்கிடையேயும் கருத்து ஒற்றுமை இல்லை. இதனை, பின்னிணைப்பில் உள்ள அட்டவணை உணர்த்தும்[2].

இவ்வாறு எண்ணிக்கை வேறுபடுவதற்கு யாதுகாரணம்? பாடல்களை தொகுத்தோர், பாடலாசிரியர் பெண்பாற்புலவர் என்றும் ஆண்பாற்புலவர் என்றும் சுட்டிக்காட்டிலர். புலவர்கள் பாடிய பாடல்களால் ஆண் பெண் என்ற வேற்றுமையை அறியமுடியவில்லை. புலவர்களின் பெயர்களாலும் ஆண் என்றோ பெண் என்றோ தெளிவாகத் தெரிந்துகொள்ளமுடியவில்லை. இதனாலேயே பெண்பாற்புலவர்களின் எண்ணிக்கை வேறுபடுகிறது. குன்றியனார், பொதும்பில் புல்லாளங் கண்ணியார், பொன்மணியார், போந்தை பசலையார், பொன்முடியார், வெள்ளைமாளர், முள்ளியூர் பூதியார், காமஞ்சேர்குளத்தார், (நெய்தற்) கார்க்கியார், பொதுக்கயத்துக் கீரந்தையார், நெட்டிமையார், முடத்தாமக்கண்ணியார் போன்ற பெயர்கள் கொண்டு ஆணா? பெண்ணா? என்று அறியமுடியவில்லை. இதனாலேயே பெண்பாற்புலவர்களைக் கணக்கிடுவதில் வேறுபாடுகள் மிகுந்திருக்கின்றன.

### தொகுப்பு முறையும் பெண்பாற் புலவர்களும்

எட்டுத்தொகை நூல்களில் அக இலக்கியம் ஐந்து. இவற்றில் ஐங்குறுநூறு, கலித்தொகை ஆகியவற்றில் பெண்பாற்புலவர்களின் பாடல்கள் இல்லை. ஏனைய மூன்று நூல்களிலும் பெண்டிர் பாடிய பாடல்கள் தொகுக்கப்பட்டிருக்கின்றன. அகப்புற இலக்கியமான பரிபாடலிலும் பெண்பாற்புலவர் பாடவில்லை. முதற்கண், சங்கப் பனுவல்களின் தொகுப்பு முயற்சியை நோக்குழிச் சங்கப் பெண் புலவர்

எவரும் சங்க நூல்களைத் தொகுத்ததாகச் சான்றில்லை. நூல்களைத் தொகுத்த ஆண்பாற் புலவர்களும் ஒரு நூலையே தொகுத்துள்ளனர். ஒருவர் இரு நூல்களைத் தொகுத்திலர். தொகுத்தோர் சங்கப் பாக்களை அகம் புறம் என்ற பொருளடிப்படையிலும் பாடல் அடி எண்ணிக்கை வரையறையிலும் பிரித்துத் தொகுத்திருக்கின்றனர். இவ்வாறே,

"பாடல்களின் பொருளைப் பற்றிச்சிலவும், யாப்பமைதியைப் பின்பற்றி வேறு சிலவும் தொகை செய்யப்பட்டிருக்கின்றன. ஒரே பொருளைப் பற்றி ஒன்றுக்கு மேற்பட்ட தொகுதியைத் தொகுக்குங்கால் பாடல்களின் அளவைத் தழுவியும் தொகை நூல் தொகுக்கப்பட்டிருக்கின்றன. இந்தமுறை பண்டைத் தமிழ்ப் புலவரின் இலக்கிய விமரிசனப் பண்பின் விளைவு தான்"

என்பர் சுப்பிரமணிய அய்யர்[3]. இக்கருத்தும் தொகுப்பின் உண்மையை உணர்த்துகின்றது. சங்கப் பாக்களைத் தொகுத்தவர்கள் முதற்கண் யார் பாடலை வைப்பது? தொகுக்கும் போது எந்த அடிப்படையில் வைப்பது? எந்த வரிசைமுறையில் பாடல்களைத் தொகுப்பது? என்று விதிமுறைகளை வகுத்து வைத்துக்கொண்டிருக்க வேண்டும், அம்முறை இன்று தெரியவில்லை. சங்க இலக்கியத் தொகுப்பு முறையே தனி ஆராய்ச்சிக்கு உரியது.

ஐங்குறுநூற்றுத் தொகுப்பில் சேரநாட்டுத் தலைவன் பெயர் வரும் மருதம் முதற்கண் இடம் பெறுகிறது, எனவே இது சேரநாட்டுத் தொகுப்பாகிறது. ஆனால் நற்றிணை பாண்டிய நாட்டில் தொகுக்கப்பட்டது. பாண்டிய மன்னன் குறிப்பு வரும் பாட்டு முதலில் இடம்பெறவில்லை. கபிலர் பாண்டியருக்குப் பகைஞரான பாரியின் புலவர், இருப்பினும் கபிலர் பாட்டு, நற்றிணையில் முதற்கண் இடம் பெறுகிறது. அரசுகளின் உறவு பார்க்கப்படாமல், நூல் தொகுப்பின்போது புலமை மதிப்பே நோக்கப்பெற்றிருக்கிறது. இவ்வாறு ஒவ்வொரு சங்கத் தொகை நூலிலும் பெண்பாற் புலவர்களின் பாடல்கள் வைக்கப்பட்டுள்ள இடம் இங்கு ஆராயப்பெறுகின்றது.

## குறுந்தொகை

குறுந்தொகை நான்கடிச் சிற்றெல்லையும் எட்டடிப் பேரெல்லையும் கொண்ட

பாக்கள் தொகுக்கப்பட்டுள்ள அகநூல். இந்நூலில் பெண்பாற் புலவர்கள் இருபத்திரண்டு பேர் (22) பாடிய பாக்கள் உள. மற்ற அகநூல்களைவிட இந்நூலில் பெண்பாற் புலவர்களின் பாக்கள் எழுபத்தொன்று (71) இந்நூலில் இடம்பெற்றிருக்கின்றன. இந்நூலில் ஒரு பாடல் மட்டும் பாடிய மெல்லியலாரில் ஆதிமந்தியார், ஊண்பித்தையார், வருமுலையாரித்தியார், வெண்மணிப் பூதியார், பொன்மணியார், குன்றியனார், காமஞ்சேர்குளத்தார், நல்வெள்ளியார் போன்றோர் இடம்பெறுவர். மற்ற புலவர்கள் ஒன்றுக்கும் மேற்பட்ட பாக்கள் பாடியவர்கள். பலர் மற்ற அகநூல்களிலும் புறநூல்களிலும் பாடியவர்கள். இந்நூலில் ஒருபாடல் மட்டும் பாடிய காக்கைப் பாடினியார் நச்செள்ளையார் பதிற்றுப்பத்தில் ஆறாம் பத்தைப் பாடியவர் ஆவார்.

இந்நூலில் மெல்லியலார் பாடல்கள் நானூறு பாக்களுக்குள் ஆங்காங்கே இடம் பெற்றுள்ளன. இந்நூலில் பெண்பாற் புலவரின் பாக்கள் ஐம்பது என்பர் ந.சஞ்சீவி[4]. இவர் அள்ளூர் நன்முல்லையார் (9) நல்வெள்ளியார் (1) பொன்மணியார் (1) குன்றியனார் (6) கார்க்கியார் (நெய்தற்கார்க்கியார்) (2), காமஞ்சேர்குளத்தார் (1) பொதுக்கயத்துக்கீரந்தையார் (1) போன்ற பெண்பாற் புலவர்களின் பாக்களைக் கணக்கிட்டிலர். இந்த ஆய்வில் இவர்தம் பாடலையும் சேர்க்க எழுபத்தொன்றாகிறது.

| பாக்களின் எண்ணிக்கை | பெண்பாற்புலவர்களின் குறுந்தொகைப்பாடல்கள் | மொத்த எண்ணிக்கை |
|---|---|---|
| 1-100 | 4, 15, 23, 27, 28, 29, 30, 31, 32, 35, 39, 43, 44, 48, 50, 51, 55, 58, 67, 68, 80, 87, 91, 93, 96, 97, 99 | 27 |
| 101-200 | 102, 117, 118, 126, 130, 139, 140, 146, 149, 157, 158, 169, 171, 172, 174, 176, 178, 180, 183, 186, 192, 197, 200 | 23 |
| 201-300 | 202, 203, 210, 219, 220, 232, 237, 238, 261, 275, 287, 299 | 12 |
| 301-401 | 301,325,336,337,364,365, 386,388,391 | 9 |
| | | 71 |

இந்த அடிப்படையில் நோக்கின் முதல் இருநூறு பாடல்களுக்குள் பெண்பாற் புலவர்களின் ஐம்பது பாக்கள் இடம்பெற்றிருப்பதை அறியமுடிகிறது.

இந்நூலில் முதல் இருபது என்ற என்ணிக்கையில் ஔவையாரின் பதினைந்தாம் பாடல் ஒன்றுதான் இடம்பெற்றுள்ளது. இந்நூலில் கடவுள் வாழ்த்துப் பாடலையடுத்துத் திப்புத் தோளார் பாடல் முதலிலும், இறையனார் பாடல் இரண்டாவதாகவும், தேவகுலத்தார் பாடல் மூன்றாவதாகவும், காமஞ்சேர்குளத்தார் பாடல் நான்காவதாகவும், நரிவெரூஉதலையார் பாடல் ஐந்தாவதாகவும், பதுமனார் பாடல் ஆறாவதாகவும், பெரும்பதுமனார் பாடல் ஏழாவதாகவும், ஆலங்குடி வங்கனார் பாடல் எட்டாவதாகவும், கயமனார் பாடல் ஒன்பதாவதாகவும் இடம்பெற்றுள்ளன. ஓரம்போகியார் (10) மாமூலனார் (11) ஓதலாந்தையார் (12) கபிலர் (13) தொல்கபிலர் (13) என்று ஆண்பால் புலவர் பாக்கள் ஔவையாரின் பதினைந்தாம் பாடலுக்கு முன்பு உள்ளன. இவர்களிலும் திப்புத்தோளார், இறையனார், தேவகுலத்தார், காமன்சேர்குளத்தார் இவர்கள் ஒரு பாடல் பாடியவர்கள். பாடல்வைப்பில் இப்புலவர் பாக்கள் முதற்கண் வைக்கப்பட்டுள்ளன. அப்பாக்களில் கயமனார் 23 பாடல்களும், கபிலர் 235 பாடல்களும், ஓரம்போகியார் 110 பாடல்களும் மாமூலனார் 30 பாடலும், பாலைபாடிய பெருங்கடுங்கோ 68 பாடலும் பாடியவர்கள். ஆனால், குறுந்தொகையில் ஒரு பாடல் பாடியவர்களின் பாக்களுக்குப்பின் பல பாடல் பாடியவர்களின் பாடல்கள் வைக்கப்பட்டுள்ளன. இதற்குக்கபிலரின் பாடல் குறுந்தொகையில் பதின்மூன்றாம் பாடலாகவும், ஓரம்போகியாரின் பாடல் பத்தாம் பாடலாக இடம்பெற்றிருப்பதும் சான்றாகும். இதனால், பாக்கள் எண்ணிக்கை மிகுதி கருதித் தொகுப்பில் முதலிடம் வழங்கப்படவில்லை என்பது புலனாம். எல்லோரும் புலவர் என்ற ஒருமித்த கருத்தே தொகுப்பில் இருந்ததை இத்தொகுப்பு முறை காட்டுகிறது. ஆண்பாற் புலவர்கள் போன்று ஔவையாரும் ஐம்பத்தொன்பது பாக்கள் பாடியவர் என்றாலும் இவர் பாடல் குறுந்தொகையில் 15ஆம் இடத்தில் வைக்கப்பட்டுள்ளது. இதனை அடுத்து இவர் பாடிய 23ஆம் பாடல் வைக்கப்பட்டுள்ளது. பெண்பாற் புலவரில் ஔவையாரின் பாடலையடுத்து வெள்ளிவீதியாரின் 27ஆம் பாடலும் அடுத்து ஔவையாரின் 28, 29ஆம் பாடல்களும் அடுத்தடுத்து இடம்பெறுகின்றன. ஆதிமந்தியார் ஒரு பாட்டு பாடியவர். இவரே பெண்பாற்புலவர்களில் முதற்புலவராகத் தெரிகிறார். ஆனால் இவருக்கு முதலிடம் கொடுக்கப்படவில்லை. இவர் பாடல் 31ஆம் இடத்தில் பெண்பாற்புலவரில் ஆறாவது

இடமாக வைக்கப்பட்டுள்ளது. இதனையடுத்து அள்ளூர் நன்முல்லையாரின் 32ஆம் பாடலும் இதனையடுத்து ஔவையாரின் 39ஆம் பாடலும் இடம்பெற்றுள்ளன. ஔவையாரை அடுத்து இந்நூலில் மிகுதியான பாக்கள் பாடியவர் அள்ளூர் நன்முல்லையார். இவர் ஒன்பது பாக்கள் இந்நூலில் பாடியவர். நன்னாகையார் (8), வெள்ளிவீதியார் (8) , குன்றியனார் (6) ஒக்கூர் மாசாத்தியார் (5), வெண்பூதியார் (4), கழார்க்கீரனெயிற்றியார் (2), நெடும்பல்லியத்தையார் (2), கார்க்கியார் (2), பூங்கணுத்திரையார் (2) போன்றோர் பல பாடல்கள் பாடியவர்கள். நல்வெள்ளியார் (1), பொன்மணியார் (1), பொதுக்கயத்துக்கீரந்தையார் (1) என்போர் ஒரு பாடல் பாடியவர்கள்.

குறுந்தொகையில் இறுதி இருநூறு (200-400) பாக்களுக்குள் பெண்பாற்புலவர்களின் இருபத்தி இரண்டு பாடல்கள் காணப்படுகின்றன. இந்நூலில் பெண்பாற்புலவர் பாடலாகப் பொன்மணியார் பாடல் இறுதியாக 391ஆம் இடத்தில் இடம்பெற்றுள்ளது. சங்கப்பாக்கள் தொகுப்பினை ஆராய்ந்த ஏ.வி. சுப்பிரமணிய அய்யர்

> "சங்கப் பாடல்கள் நயமும் சுவையும் கருதித் தொகுக்கப்பட்டன. புலவர் பெயர் வரிசையில் பாட்டுக்கள் தொகுக்கப் பெறவில்லை. இதிலிருந்து பண்டைக்காலத்தில் தனிப்புலவருக்கு முக்கியத்துவம் கொடுக்கப்படாமல் அவர் ஆக்கிய பாடல்களுக்குச் சிறப்பு அளிக்கப்பட்டது[5]."

என்பர். இக்கருத்து பெண்பாற் புலவர்களின் பாக்கள் வைப்பு முறைக்கும் பொருந்தும். இந்நூலில் பாடிய காமஞ்சேர் குளத்தாரைப் பெண்பாற்புலவராக தாயம்மாள் அறவாணன்[6] கருதுகிறார். இவர் பாடிய பாடல் ஒன்றுதான். எனினும் இவர் பாடல் இந்நூலில் நான்காவதாக வைக்கப்பட்டுள்ளது. ஔவையாரின் 15ம் பாடலுக்கு முன் முதலில் இடம் பெற்ற பெண்பாற் புலவர் வரிசையில் காமஞ் சேர்குளத்தார் இடம்பெறுகிறார். இதனால் ஒரு பாடல் பாடியோர் பாடலும் பல பாடல்கள் பாடியோரின் பாடல்களுக்கு முன்பு அமைக்கப்பட்டதை அறியமுடிகின்றது. சான்றாக ஆதிமந்தியார் பாடல் குறுந்தொகையில் 31ஆம் இடத்தில் இடம்பெற்றுள்ளது. ஆனால், அள்ளூர்நன்முல்லையார் பாடல் 32ஆம்

இடத்தில் சேர்க்கப்பட்டுள்ளது. இவர் இந்நூலில் ஒன்பது பாக்கள் பாடியுள்ளார். எனினும், இவர் பாடல் ஒருபாடல் பாடிய ஆதிமந்தியார் பாடலை அடுத்து இடம்பெற்றிருக்கிறது. இதற்குக் காரணம்

> "சங்ககாலத்துப் புலவர்களின் இலக்கிய வன்மை மென்மைகளைப் பாட்டின் எண்ணிக்கையை வைத்து அளக்கலாகாது (அளக்கமுடியாது). நூறு பாடியோரின் பாவின் வனப்பும் ஒன்று பாடியோர் பாவின் வனப்பும் சங்கத்தன்மை உடையவையாகவே உள[7]."

என்ற அறிஞர் வ.சுப. மாணிக்கனாரின் கருத்திற்கேற்ப பாக்கள் அனைத்தும் ஒன்றாக மதித்துத் தொகுக்கப்பட்டன. இக்கருத்து பெண்பாற் புலவர்களின் பாக்கள் வைப்பு முறைக்கும் அரண்சேர்க்கும்.

## நற்றிணை

எட்டுத் தொகையில் அகப்பாடல்கள் மிகுதியானவை. பெண்பாற்புலவர்களின் பாடல்களிலும் நூற்றிருபத்தொரு பாடல்கள் அகத்துறை சார்ந்தன. இதில் நற்றிணையில் இருபத்தைந்து பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

நற்றிணையைத் தொகுத்தவர் யார் என்ற குறிப்புக் கிடைக்கவில்லை. தொகுப்பித்தான் பன்னாடு தந்த பாண்டியன் மாறன் வழுதி என்பது பழங்குறிப்பு. இந்நூலின் முதல் பாட்டு, கபிலர் பாடியது. கபிலர் பாரி நாட்டுப்புலவர். இவர் பறம்பு மலையை ஆண்ட பாரி வள்ளலால் புரக்கப்பெற்றவர். இவர் தொகை நூல்களில் பாண்டிய மன்னர்களைப் போற்றிப் பாடிலர். பாரியோடு போரிட்டவர்களை யாண்டும் புகழ்ந்திலர் , போற்றிலர். பாண்டியர்க்கும் கபிலர்க்கும் மன உறவு இல்லை. ஆயினும் கபிலரின் பாடல்களுக்கு மதிப்புக் கொடுத்துப் பாண்டிய நாட்டினர் அவர் பாடல்களைத் தொகுக்க ஏற்றுக் கொண்டிருக்கின்றனர். தங்கள் மன்னனைப் போற்றவில்லை என்பதற்காக அவர் பாடல்கள் புறக்கணிக்கப்படவில்லை. இதனால் அரசுக்காகத் தமிழ் புறக்கணிக்கப்படவில்லை என்பது புலனாம். அவர் மிகுதியான பாக்கள் பாடியிருப்பது அவர் பாடல் முதற்கண் நிற்பதற்கு எதிர்பாராது அமைந்த காரணமாகும். பிறதொகை நூல்களில் இந்த ஒப்புமை இல்லை. முடி கெழு

வேந்தர் மூவரையும் போற்றிய பாடல்கள் இடம் பெறாமல் குறுநிலத் தலைவர் ஆதரவைப் பெற்ற கபிலர் பாடல் இங்கு இடம் பெற்றிருப்பது தொகுத்தவர்கள் நடுநிலையோடும், தமிழ் உணர்வோடும் தொகுத்திருக்கின்றனர் என்பதைக் காட்டுகிறது.

பாண்டிய நாட்டில் தொகுக்கப் பெற்றிருக்கின்ற நற்றிணையில் முதல் ஆறுபாடல்களில் பெண்பாற் புலவர்களின் பாடல் இடம் பெறவில்லை. இந்நூலில் ஏழாம் பாடலாக நல்வெள்ளியாரின் பாலைத் திணைப்பாடல் அமைகிறது. இதுவே, பெண்பாற்புலவர்களின் பாடல்களில் முதற்பாட்டு. தொடர்ந்து கபிலர் பாடிய 13ஆம் பாடலும், பாண்டியன் அறிவுடைநம்பி பாடிய 15ஆம் பாடலும் என்று ஆண்பாற் புலவர்களின் பாக்கள் வருகின்றன. நக்கண்ணையாரின் நெய்தல் திணைப்பாடல் பத்தொன்பதாம் பாடலாகிறது. இருபதாம் பாடல் ஓரம் போகியார் பாடிய மருதத் திணைப்பாடல். நற்றிணையில் முதல் இருபது என்ற எண்ணிக்கைக்குள் பெண்பாற் புலவர்களின் இரண்டு பாடல்கள் மட்டுமே (பாலை, நெய்தல்) தொகுக்கப்பட்டிருக்கின்றன.

| வரிசை எண் | பாடல்களின் எண்ணிக்கை | பெண்பாற் புலவர்களின் நற்றிணைப் பாடல்கள் | மொத்த எண்ணிக்கை |
|---|---|---|---|
| 1 | 1-100 | 7, 19, 47, 70, 87, 90 | 6 |
| 2 | 101-200 | 117, 129, 187 | 3 |
| 3 | 201-300 | 239, 243, 250, 268, 281, 295 | 6 |
| 4 | 301-400 | 304, 312, 357, 369, 371, 381, 390, 335, 348, 394 | 10 |
| | | | 25 |

நற்றிணையில் பெண்டிர் பாடிய பாக்கள் இருபத்தைந்து நற்றிணை நானூறு என்ற பெரும் எண்ணிக்கையில் இருபத்தைந்து நீங்கலாக ஏனைய 375 பாடல்கள் ஆண்பாற்புலவர்கள் பாடியன.

சங்க இலக்கியம் என்ற வானில் ஆங்காங்கே விண்மீன்களாய் மிளிர்வன பெண்பாற் புலவர்களின் பாடல்கள். நற்றிணையில் முதல் நூறு பாக்களுக்குள் ஆறு

இடங்களில் (7,19,47,70,87,90). நல்வெள்ளியார், நக்கண்ணையார், வெள்ளிவீதியார், அஞ்சில் அஞ்சியார் போன்றோர் பாடல்கள் இடம் பெற்றுள்ளன. அடுத்த நூறு (100-200) பாக்களுக்குள் குன்றியனார் பாடல் 117ஆம் இடத்திலும், ஔவையார் பாக்கள் 129ஆம், 187ஆம் இடத்திலும் தொகுக்கப்பெற்றுள; அடுத்து (200-300) நூறு பாக்களுக்குள் (239, 243, 250, 268, 281, 295) குன்றியனார் நப்பசலையார், கழார்க்கீரனெயிற்றியார், ஔவையார் ஆகியோர் பாடிய ஆறு பாடல்கள் தொகுக்கப்பட்டுமிருக்கின்றன.

இறுதி நூறு (300-400) பாக்களுக்குள் (304, 312, 335, 348, 357, 369, 371, 381, 390, 394) மாறோக்கத்து நப்பசலையார் (304), கழார்க்கீரனெயிற்றியார் (312) வெள்ளிவீதியார் (335, 348), குறமகள் குறிஎயினியார் (357), மதுரை ஓலைக் கடையத்தார் நல்வெள்ளையார் (369) போன்றோர்பாடல்கள் இடம்பெற்றுள்ளன. இறுதி நான்கு பாடல்களும் (371, 381, 390, 394). ஔவையார் பாடியன.

இந்நூலில் ஔவையார் பாடிய பாக்கள் ஒன்பது. எனினும் வைப்புமுறையில் ஔவையாருக்கு முதலிடம் வழங்கப்படவில்லை. நற்றிணை தொகுப்புக் கொண்டு ஔவையார் ஏழு முதல் பன்னிரண்டு அடிகளுக்குப்பட்ட பாடல்களை மிகுதியாகப் பாடியவர் என்பது புலனாம்.

சங்க நூலில் குறுந்தொகை அகநானூறு இரண்டிலும் ஔவையாரின் பாடல் பெண்பாற் புலவர்களின் பாடல் வைப்புமுறையில் முதலிடம் பெறுகின்றன. இந்நற்றிணையில் நல்வெள்ளியாரின் பாடல் ஏழாம் இடத்தில் அமைக்கப்பட்டுள்ளது. இவர் இந்நூலில் பெண்பாலரில் முதலிடம் பெறுபவர். ஆனால் ஔவையார் பாடல் நற்றிணையில் 129-ஆம் இடத்தில் கோக்கப்பட்டுள்ளது.

| வ.எண் | நூல் | பெண்பாற்புலவர்கள் | பாடல் எண் |
|---|---|---|---|
| 1 | குறுந்தொகை | ஔவையார் | 15 |
| 2 | நற்றிணை | நல்வெள்ளியார் | 7 |
| 3 | அகனாநூறு | ஔவையார் | 11 |
| 4 | புறநானூறு | பேய்மகள் இளவெயினி | 11 |
| 5 | பதிற்றுப்பத்து | காக்கைபாடினியார் நச்செள்ளையார் | 6ஆம்பத்து |
| 6 | பொருநராற்றுப்படை | முடத்தாமக்கண்ணியார் | இரண்டாமிடம் |

இவ்வட்டவணை, சங்கநூல்களில் பெண்டிர் பாடிய பாடல்களில் வைப்புமுறை முதன்மையை உணர்த்தும்.

நற்றிணைத் தொகுப்பு, தொகுப்பின் போது புலவர் யார்? அவர் எந்நாட்டார்? எச்சாதியார்? என்றெண்ணாமல் புலமை ஒன்றை மட்டுமே கருத்திற்கொண்டுப் பாக்களைத் தொகுத்துள்ளமையைப் புலப்படுத்துகிறது. அரசனின் ஆணையுடன் தொகுத்த சான்றோர், வேந்தர்களைப் பற்றிக்குறிப்பு வரும் பாக்களுக்கும் முதலிடம் கொடுக்கவில்லை. சங்ககாலம் புலமை ஒன்றை மட்டும் போற்றியதைப் தொகுப்புகள் மெய்ப்பிக்கின்றன.

## அகநானூறு எனும் நெடுந்தொகை

அகநானூறு பதின்மூன்று அடிமுதல் முப்பத்தொரு அடி வரையிலான அடிஎண்ணிக்கையுடைய பாக்களின் தொகுப்பு இத்தொகுப்பில் குறிப்பிட்ட எண்கள் குறிப்பிட்ட திணையை உணர்த்துவனவாகச் சுழற்சி முறையில் தொகுப்பட்டுள்ளன (குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை). இந்நூலில் பெண்பாற்புலவர்கள் பதின்மூவர் பாடிய இருபத்து நான்கு பாடல்கள் உள்ளன. இவ்வெண்ணிக்கை மொத்த (400) எண்ணிக்கையில் மிகக் குறைவானதாகும்.

| வ.எண் | பாக்களின் எண்ணிக்கை | பெண்பாற் புலவர்களின் அகநானூற்றுப் பாடல்கள் | மொத்த எண்ணிக்கை |
|---|---|---|---|
| 1 | 1-100 | 11, 22, 32, 40, 41, 45, 46, 98 | 8 |
| 2 | 101-200 | 110, 147, 154, 160, 163, 173 | 6 |
| 3 | 201-300 | 217, 235, 252, 273, 294 | 5 |
| 4 | 301-400 | 303, 324, 352, 362, 384 | 5 |
| | | | 24 |

அகநானூற்றில் ஔவையார் (11, 147, 273, 303) நான்கு பாடலும், கழார்க்கீரனெயிற்றியார் (163, 217, 235, 294) நான்கு பாடலும் பாடியுள்ளனர் வெள்ளிவீதியார் (45, 362), வெறி பாடியகாமக்கண்ணியார் (22, 98), ஒக்கூர் மாசாத்தியார் (324, 384), குன்றியனார் (40,41) ஆகியோர் முறையே இரண்டு பாடல்களும் இயற்றியிருக்கின்றனர். அள்ளூர் நன்முல்லையார் (46), நக்கண்ணையார் (252), நல்வெள்ளியார் (32), அஞ்சியத்தைமகள் நாகையார் (352), குமிழிஞாழலார்

நப்பசலையார் (160), போந்தைப்பசலையார் (110), முள்ளியூர் பூதியார் (173), பொதும்பில் புல்லாளங்கண்ணியார் (154) போன்றோர் முறையே ஒரு பாடலும் பாடியுள்ளனர்.

இந்நூலில் முதற்பாடலாக ஔவையாரின் பதினோராம் பாடலும் அதனையடுத்து, வெறி பாடியகாமக்கண்ணியாரின் 22ஆம் பாடலும், மூன்றாமிடத்தில் நல்வெள்ளியாரின் 32ஆம் பாடலும் இடம்பெற்றுள, நான்காம் இடத்தில் குன்றியனாரின் 40,41ஆம் பாடலும், ஐந்தாம் இடத்தில் வெள்ளிவீதியாரின் 45ஆம் பாடலும், ஆறாம் இடத்தில் அள்ளூர் நன்முல்லையாரின் 46ஆம் பாடலும் கோக்கப்பட்டுள்ளன. பெண்பாற் புலவர்கள் பாடிய பாக்கள் அகநானூற்றில் ஆண்பாற் புலவர்கள் பாடிய பாக்களின் எண்ணிக்கையைவிட மிகக் குறைவானவை. எனினும் முதல் 200 பாக்களுக்குள் 14 பாக்கள் இடம்பெற்றுள்ளன. இதனால் தொகுப்பில் பெண்பாற்புலவர்கள் ஆண்பாற்புலவர்கள் என்ற எண்ணம் மேலோங்கவில்லை. பெண்பாற் புலவர்களின் பாக்கள் குறைவானவை என்றாலும் விரவித் தொகுக்கப்பட்டுள்ளன.

## அகப்பாடல் வைப்புமுறை காட்டுவன

எட்டுத்தொகை நூல்களில் குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு இம்மூன்றிலும் பெண்பாற் புலவர்களின் பாடல்கள் இடம் பெற்றுள்ளன. ஐங்குறுநூறு, கலித்தொகை, பரிபாடல் ஆகியவற்றில் பெண்பாற்புலவர்களின் பாக்கள் இடம் பெற்றில. இதனால் பெண்பாற் புலவர்கள் அடி எண்ணிக்கைக் கூடுதலாக உடைய யாப்பு வகைகளைப் பாட முயன்றிலர் என்பது தெளிவாகும். ஆனால் புறத்தில் பதிற்றுப்பத்தில் காக்கை பாடினியார் நச்செள்ளையார் பாடிய ஆறாம்பத்தும், முடத்தாமக்கண்ணியார் பொருநர் ஆற்றுப்படை பாடியதும் 248 அடிகளில் பாடியதும் நெடும் பாடல் பாடும் திறம் பெண்பாற்புலவர்கள் பெற்றிருந்தமையைக் காட்டுகின்றது. ஒரே திணையைப் பற்றிப் பலபாடல்கள் பாடுவதிலும் அவர்கள் மனம் செல்லவில்லை என்பதை ஐங்குறுநூற்றில் பெண்டிர் பாடாததால் அறியப்படும்.

நற்றிணை பாண்டிய நாட்டில் தொகுக்கப்பட்டது. பாண்டியர்களைப் பற்றிக் கபிலர் பாடவில்லை. இவர் பாண்டிய நாட்டுப் புலவரும் அல்லர். இருப்பினும் கபிலர் பாடல் நற்றிணையில் கடவுள் வாழ்த்துப் பாடலையடுத்து முதல் பாடலாகத்

தொகுத்திருப்பது அவர் புலமை ஒன்றைக் கருதியதேயாகும், தொகுத்தோரும் அக்காலத்தில் வாழ்ந்த புலவர்கள் புலவர் எந்நாட்டவர்? எனப்பாராது பாக்களை மட்டும் நோக்கித் தொகை நூல்களைத் தொகுத்தனர் என்பது புலனாம்.

நற்றிணைத் தொகுப்பில் நல்வெள்ளியார் என்ற பெண்பாற் புலவரின் பாடல் ஏழாம் பாட்டாகக் கோக்கப்பட்டுள்ளது. இவர் பாடல் பெண்பாற் புலவர்களில் முதற்கண் கோக்கப்பட்டமை ஏன் என்பது ஆராய்தற்குரியது. சங்ககாலப் புலவர்களின் இன்றளவும் போற்றப்படும் புலவரான ஔவையார் சங்ககாலப் பெண்பாற் புலவர்களில் மிகுதியும் பாடியவர். நற்றிணையில் ஏழு பாக்கள் பாடியிருந்தும் இவர் பாடல் (1-100) முதல் நூறு பாக்களுக்குள் தொகுக்கப்படவில்லை. நக்கண்ணையார், அஞ்சில் அஞ்சியார், வெள்ளிவீதியார் பாடல்கள் இடம் பெற்றபின்னரே ஔவையாரின் பாடல் நூற்றிருபத்தொன்பதாவது பாடலாகத் தொகுக்கப்பட்டமை சிந்திக்கத்தக்கது. அவர் மூவேந்தர் நாட்டைச் சார்ந்தவர் அல்லர் என்பதால் பின்னுக்குத் தள்ளப்பட்டாரா? என்பது ஆராய்தற்குரியது. பாடல்களின் சிறப்பாலும் பாடிய பாடல்களின் எண்ணிக்கையாலும் ஔவையாருக்கு முதன்மை கொடுத்திருக்க வேண்டும். ஆனால் இத்தொகுப்பில் அவ்வாறு கொடுக்கப்படாதது ஏன் என்பதும் ஆராய்தற்குரியது.

பெண்பாற் புலவர்கள் மூன்றடி முதல் எட்டடி வரையிலான பாடல்கள் பாடுவதில் ஈடுபாடுமிக்கவர்கள். எழுபத்தொரு பாடல்கள் குறுந்தொகையில் இடம் பெற்றிருப்பது இதை உணர்த்துகின்றது. ஔவையார் பாடிய அகப்பாக்கள் இருபத்தாறு இதில் குறுந்தொகையில் பதினைந்து பாடல் இடம் பெற்றுள்ளன. மிகுதியாகப் பாடிய மற்றொரு புலவர் வெள்ளிவீதியார். இவர் பாடிய அகப்பாடல் பதின்மூன்றில் இந்நூலில் எட்டுப்பாடல் இடம் பெறுகிறது. அள்ளூர் நன்முல்லையார் பாடிய அகப்பாடல் பத்து. இதில் ஒன்பது பாக்கள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. குறுந்தொகை குறைந்த அடியெண்ணிக்கையில் அமைந்தப் பாடல்களின் தொகுப்பு. இதில் பெண்டிர் பாடல் மிகுதியாக இடம் பெற்றிருக்கிறது. இதனால் பெண்டிர் குறைவான அடியிலேயே தங்கள் கருத்தைப் பாட விரும்பியதும், உரிப்பொருளுக்கு முதன்மை கொடுத்திருப்பதும், கருப்பொருளை வருணித்துப் பாடாதிருப்பதும் புலனாம்.

"சங்கப் பாடல்கள் முழுமையும் கிடைத்திருக்க வாய்ப்பில்லை. கிடைத்த பாக்களிலும் சுவையுள்ளவை களைத் தொகுத்தோர் எடுத்துக் கொண்டிருக்க வேண்டும்[8]"

என்ற கருத்தும் ஆய்வாளர்கிடையேயுள்ளது. இதன் காரணமாகத் தொகை நூல்களில் பெண்பாற் புலவர்களின் பாக்கள் எண்ணிக்கை குறையக் காரணமாக அமைந்ததா? என்பதும் ஆராய்தற்குரியது.

## புறப்பொருள் தொகை நூல்கள்

பெண்பாற்புலவர்கள் பாடிய புறநானூற்றுப் பாடல் அறுபத்தைந்து. பதிற்றுப்பத்தில் ஆறாம்பத்தும், பொருநராற்றுப்படையும் பெண்பாற்புலவர்கள் பாடியவை. புறநானூற்றுப் பாடல்களின் வைப்புமுறையில், பாடலில் பாடிய வேந்தர் மரபைச் சார்ந்தமைகின்றன. பாடல்கள் சேரன், பாண்டியன், சோழன் என்ற வரிசை முறையில் வருகின்றன. 'இத்தொகுப்பு முறை 85, 86 ஆம் பாடல்களுக்குப்பின் சற்று மாறுகின்றது. இறுதிப் பாடல்கள் கருத்தொற்றுமை கருதி இடம் பெற்றுள்ளன.'[9] இஃது அட்டவணையில் தரப்பட்டுள்ளது.

புறநானூற்றுப் பாடல்கள் சேரர் - பாண்டியர் - சோழர் என்ற முறையில் அமைக்கப் பட்டுள்ளன.

"............................இந்த வைப்புமுறை பிற்பகுதியில் மாறி வருகிறது. ஒத்த கருத்துடைய பாடல்கள் கிடைக்காத காரணத்தால் இவ்வாறு மாறி வருகிறது என்றும்...... சொல்லிலும் பொருளிலும் ஒற்றுமையுடைய பாடல்கள் அடுத்தடுத்து வைக்கப்பட்டுள்ளமை தெரிய வரும்[10]"

என்றும் ஆராய்ச்சியாளர் கருதுவது அரண் சேர்க்கும். ஆதலால் தொகுக்கப்பட்ட தொகுப்பில் பெண்பாற்புலவரில் யார் பாடல் முதலில் இடம் பெறுகிறது என்று பாடல்களை நோக்கும் போது பேய்மகள் இளவெயினியார் பாடல் (11) முதலிடம் பெறுகிறது.

புறநானூற்றில் பத்தொன்பது பெண்பாற் புலவர்கள் பாடியபாக்கள் உள்ளன. இவர்கள் பாடிய பாடல் அறுபத்தைந்து. இவற்றுடன் காக்கைப் பாடினியார் நச்செள்ளையார் பாடிய ஆறாம் பத்தும் முடத்தாமக்கண்ணியார் பாடிய பொருநராற்றுப்படையும் புறப்பொருள் தழுவியன.

பெண்பாற்புலவர்களில் பேய்மகள் இளவெயினியார் பாடியதாகப் புறநானூற்றில் ஒரு பாடல் மட்டும் உளது. புறநானூற்றில் பாடல் வரிசையில் இவ்வம்மையாரின் பாடல் பதினொராம் பாடலாகத் தொகுக்கப்பட்டிருக்கிறது. எனவே இவர் பாடலே பெண்பாற் புலவர் வரிசையில் முதலிடம் பெறுகிறது. இவர் பாடிய பாடல் சேரமான் பாலை பாடிய பெருங்கடுங்கோவைப் பற்றியது.

> புறநானூற்றுத் தொகுப்பில் சேர வேந்தரைப் பாடிய
> பெண்பாற்புலவர் இவர் ஒருவரே[11].

முரஞ்சியூர் முடிநாகனார் (புறநானூறு 2), சேர மன்னர்களில் பெருஞ்சோற்றுதியஞ் சேரலாதனையும், நரி வெரூஉத்தலையார் (புறநானூறு 5), சேரமான் கருவூரேறிய ஒள்வாட் கோப்பெருஞ் சேரலிரும்பொறையும், கபிலர் (புறநானூறு 8) சேரமான் கடுங்கோவாழியாதனையும் பாடியுள்ளனர்.

> "இவ்வேந்தர்களின் வரிசையில் அடுத்துள்ள வேந்தனாகப்
> பாலைபாடிய பெருங்கடுங்கோவைக் கருதுவதால்[12]"

இவ்வேந்தன் பற்றிய பாடல் பதினொராம் இடத்தில் கோக்கப்பட்டுள்ளது. அப்பாடல் பாடிய அம்மையார் பெண்பாற் புலவர் வரிசையில் முதல் இடம் பெறுகிறார்.

இரண்டாமிடத்தில் மாறோக்கத்து நப்பசலையார் பாடல் வருகிறது. இப் பாடல் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனைப் பாடிய பாடல் ஆகும். இவை வைப்புமுறையில் 37,39-ஆம் பாடலாக உள்ளன. இவ்வேந்தனை ஆலத்தூர் கிழார் (34,36,69), வெள்ளைக்குடி நாகனார் (35), ஆவூர் மூலங்கிழார் (38,40), கோவூர்கிழார் (41,46,70), இடைக்காடனார் (52) போன்ற பலரும் பாடியுள்ளனர். இப்பாடல்கள் கருத்து ஒற்றுமைகருதித் தொடர்ச்சியாக அமைகின்றன. பாடல்கள் அனைத்தும் பகைவர் நாட்டுடன் போரிட்டு அழிவினை ஏற்படுத்திய செய்தியைப்

பாடுவனவாகும். அதனால் இப்பாடல்கள் (34, 35, 36, 37,38,39,40,41) தொடர்ந்து இடம் பெற்றுள்ளன. இவ்வரிசையில் 37ஆம், 39ஆம் பாடலைப் பாடியவர் மாறோக்கத்து நப்பசலையார். இப்பாடல்கள் அனைத்தும் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனைப் பாடிய பாடல்கள். இதில் மாறோக்கத்து நப்பசலையார் பெண்பாற்புலவர் என்ற எண்ணமின்றி அவர் பாடிய பாடல்கள் ஆண்பாற் புலவர்பாடல்களோடு தொகுக்கப்பட்டிருக்கின்றன. சங்கப் பாக்கள் தொகுப்பில் ஆண் பெண் என்ற பாகுபாடு பார்க்காது பாடல் யாரைப்பற்றியன, அப்பாடலின் கருத்து என்ன? என்பதற்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டதை மாறோக்கத்து நப்பசலையாரின் பாடல் வைப்புமுறை காட்டுகிறது.

வெண்ணிக்குயத்தியார் சோழன் கரிகாற் பெருவளத்தானைப் பாடிய பாடல் அறுபத்தாறாம் பாடலாகும். இப்புலவர் புறநானூற்றுப் பாடல் தொகுப்பு வரிசையில் மூன்றாமிடம் பெறுபவர். இவரும் மூவேந்தரில் ஒருவனான சோழமன்னனைப் பாடியதால் இவ்வைப்பில் இடம் பெறுகிறார். இவர் கரிகாற் பெருவளத்தானைப் பாடும்போது ‘நின்னினும் நல்லன் புறப்புண்ணாணி வடக்கிருந்தோனே (புறம்.66;5) என்று போரின் முடிவு நிலையைப் பாடுகிறார். இவர் பாடலுக்கு முந்திய அறுபத்தைந்தாம் பாடல் கழாத்தலையார் பாடியது. அப்பாடல் கரிகாற் பெருவளத்தானுடன் போரிட்டுத் தோற்ற சேரமான் பெருஞ்சேரலாதனையும், சேர நாடு பெற்ற அழிவினையும் நேரில் பார்த்து வேந்தன் புறப்புண் நாணி வடக்கிருந்த நிலையைப் பாடியதால் முதலில் தொகுக்கப்பட்டிருக்கிறது. வெண்ணிக்குயத்தியார் பெண்பாற்புலவர். இவருக்கு போர்க்களம் செல்லும் வாய்ப்பு ஆண்பாற்புலவர்க்கு வாய்ப்பது போல் வாய்த்திலது. ஆதலால் செவிவழிக் கேட்டதையும், போரின் முடிவு நாடெங்கும் பரவியதை அறிந்தும் பாடியுள்ளார். இரு பாடல்களும் ஓரிடத்தில் தொகுக்கப்படடிருப்பது கருத்தொற்றுமை கருதியதேயாகும்.

புறநானூற்றில் நக்கண்ணையார் பாடிய பாடல் மூன்றும் ஓரிடத்தில் 83, 84, 85ஆம் பாடலாகத் தொகுக்கப்பட்டுளளன. இவை மூன்றும் சோழன் போரவைக் கோப்பெருநற்கிள்ளியைப் பாடிய பாடல்கள். இப்பாடல் மூன்றும் போரவைக் கோப்பெருநற்கிள்ளி ஆமூர்க்கண் தன் தந்தையை வெறுத்து வந்திருந்த காலத்து அவன் கட்டிளமையையும் போர் வன்மையையும் கண்டு காதல் கொண்ட

நக்கண்ணையார் பாடிய பாடல்கள். ஆதலால் இவை ஒரு சேர அமைந்துள்ளன. இப்போரவைக் கோப்பெருநற்கிள்ளியின் மற்போரைச் சாத்தந்தையர் பாடிய பாடல் 80, 81, 82-ஆம் பாடலாக அமைந்துள்ளன. அதன்பின் நக்கண்ணையார் பாடல் தொகுக்கப்படடிருக்கிறது. இவ்வாறு அமைவதற்கு நக்கண்ணையார் கிள்ளி மீது காதல் கொண்ட குறிப்பு காணப்படுவதும் சாத்தந்தையர் போரவை கோப்பெருநற் கிள்ளியின் வீரத்தைப் பாடியகாரணத்தால் அவர் பாடல் காதல் கொண்டதாகப் பாடிய நக்கண்ணையார் பாடலுக்கு முன்பு வைக்கப்பட்டிருக்க வேண்டும்.

நக்கண்ணையார் பாடலையடுத்து எண்பத்தாறாம் பாடலாகக் காவற்பெண்டு பாடல் வைக்கப்பட்டிருக்கிறது. அப்பாடல் யாரைப்பற்றியது என்ற குறிப்புப் பாடலில்லை. காவற்பெண்டு கோப்பெருநற்கிள்ளியின் செவிலித்தாய் என்று கருதி இவ்விடத்தில் தொகுக்கப்பட்டிருக்கவேண்டும். இக்கருத்து மேலும் ஆராய்தற்குரியது.

ஔவையார் சங்க இலக்கியத்தில் மிகுதியான (59) பாக்கள் பாடியவர். புறநானூற்றில் பெண்பாற் புலவர்களில் இவர் பாடிய பாடல்களே மிகுதியானவை. புறநானூற்றில் ஔவையார் பாடல் எண்பத்தேழாம் பாடலாக அமைக்கப்பட்டுள்ளது. புறநானூற்றில் பெண்பாற்புலவர் வரிசையில் இவர் ஒன்பதாம் இடத்தில் வைக்கப்பட்டிருக்கிறார். ஔவையார் மிகுந்த பாக்கள் பாடியவர் என்ற எண்ணம் மேலோங்க ஓரிடத்தில் பதினெட்டுப் பாடல் தொகுக்கப்பட்டிருக்கின்றன. இவர் பாடல் எண்பத்தேழாம் இடத்தில் இடம் பெறக் காரணம் குறுநில மன்னனான அதியமானையும், அவன்மகன் பொகுட்டெழினியையும், நாஞ்சில் வள்ளுவனையும் பாடியதால் மட்டுமே ஆகும். வேந்தர் பற்றிய பாடல்கள் தொகுப்பிற்குப் பின் குறுநில மன்னர்கள் பற்றிய பாடல் வரிசையில் அதியமான் முதலிடம் பெறுவதற்கு ஔவையின் பாக்களே சிறப்பிடம் கொடுத்தன. இங்கு ஔவையார் பாடல்கள் என்பதால் ஒரு சேரத் தொகுக்கப்பட்டிருக்கின்றன. இப்பாடல்கள் அதியமான் என்ற வள்ளல் பற்றியன என்பதற்காக அவை ஒரு சேர அமைகின்றன.

அதியமான் நெடுமானஞ்சியை ஔவையார் பாடிய பாடலையடுத்து வேள் பாரியைப் பற்றிய பாடல்கள் தொகுக்கப்பட்டுள்ளன. வேள்பாரியைப் பாரி மகளிர் பாடியதும் (புறம்.112) புறநானூற்றில் காணப்படுகிறது. அப்பாடல் கபிலரின்

பாக்களையடுத்து இடம் பெறுகின்றன. வேள் பாரியின் கொடை, நாட்டுவளம் இவற்றைக் கபிலர் பாடினார். அப்பாடலையடுத்துப் பாரி இறந்தபின் இரங்கிப் பாடிய பாரிமகளிரின் பாடல் வருகிறது. பாரி மகளிர் வேள்பாரியின் மக்கள் எனினும் கபிலரின் புலமையையும், பாட்டின் கருத்தினையும் கருத்தில் கொண்டு கபிலர் பாடல்கள் பாரி மகளிரின் பாடலுக்கு முன்பு வைக்கப்பட்டுள்ளன. பாரி இறந்த பின்னுள்ள பாடலின் தொகுப்பில் பாரிமகளிர் பாடல் முதலில் இடம் பெற்றிருக்கின்றது. நாட்டின் அவல நிலையையும், பாரிமகளிர் நிலையையும் பாடிய கபிலரின் பாடல் அதன் பின் இடம் பெற்றுள்ளது. பெண்பாற்புலவர் வரிசையில் ஔவையின் பாடலையடுத்துப் பாரிமகளிர் பாடல் நூற்றிப்பனிரண்டாம் இடத்திலமைந்துள்ளது. இவ்வைப்பால் பெண்பாற் புலவர் வரிசையில் பத்தாம் இடத்தில் பாரிமகளிர் உள்ளனர்.

குறமகள் இளவெயினி ஏறைக்கோனைப் பாடிய பாடல் 157-ஆம் பாடலாகும். இவர் ஒரு பாடல் பாடியவர். இப்பாடல் குறுநிலமன்னன் பற்றியதால் குறுநில மன்னனான மலையமான் திருமுடிக்காரி, நாஞ்சில் வள்ளுவன் பாடல்களையடுத்து இடம் பெற்றுள்ளது. இவ்வைப்பால் இவர் பெண்பாற் புலவர்களில் பதினோராம் இடம் பெறுகிறார்.

இந்நூலில் வேந்தர் குறுநில மன்னர்களில் வீரம் கொடை பண்புகள் தொகுக்கப்பட்டபின் கையறுநிலை பாட்டுகள் தொகுக்கப்பட்டுள்ளன. பேரெயின் முறுவலார் நம்பி நெடுஞ்செழியன் இறந்தபின் பாடிய கையறுநிலை பாட்டு 239ஆம் இடத்தில் வைக்கப்பட்டுள்ளது. இப்பாடலுக்கு முன்பாக வெளிமான் இறந்தபின் பெருஞ்சித்தரனார் பாடிய கையறுநிலை பாட்டு 237ஆம் பாடலாகவும், அதற்கு முன்பு ஔவையார் அதியமான் இறந்தபின் பாடிய கையறுநிலை பாட்டுகள் 231, 232, 235ஆம் பாடலாக தொகுக்கப்பட்டிருக்கின்றன. புறநானூற்றில் பாரி மகளிர் பாரி இறந்தபின் பாடிய பாடல் 112ஆம் இடத்தில் வைக்கப்பட்டுள்ளது. புறநானூற்றில் ஔவையார் அதியனையும் அவன் மகன் பொகுட்டெழினியையும் பாடிய பதினெட்டுப் பாடல்கள் ஒருங்கு தொகுக்கப்பட்டுள்ளன. இவ்விடத்தில் இவர் பாடிய கையறுநிலை பாட்டுக்கள் தொகுக்கப்படாதது ஏன் என்று அறிய இயலவில்லை.

புறநானூற்றுத் தொகுப்பில் பால் வேறுபாடு, குலப்பாகு பாடு பார்க்கப்படவில்லை. இதற்குப் பெருங்கோப்பெண்டுவின் பாடல் தொகுப்பு சான்றாகும். இவர் வேந்தன் மனைவி. இவர் பாடிய கையறுநிலைப் பாட்டு 246ஆம் பாட்டு. இவர் ஒரு பாடல் பாடிய பெண்பாற் புலவர். இவர், பாடிய பாடல் கணவன் ஒல்லையூர் தந்த பூதபாண்டியன் இறந்தபின் உடன்கட்டை ஏற முற்பட்ட நிலையில் பாடியதாகும். இப்பாடல் கையறுநிலைப் பாடல் வரிசையில் 246ஆம் பாடலாக கோக்கப்பட்டுள்ளது. இப்பாடல் பொதுவியல் துறை ஆனந்தப்பையுள் துறையினது. இப்பெருங்கோப்பெண்டு தீப்பாய்ந்த பின் பாடிய பாடலாக அவர் பாடலுக்குப் பின் 247-ஆம் பாடலாக மதுரைப் பேராலவாயர் பாடல் தொகுக்கப்பட்டுள்ளது. இவ்விரு பாடல்களும் நிகழ்ச்சி நடந்த முறையில் இடம் பெற்றிருக்கின்றன.

இப்பாடல்களை அடுத்துக் கணவனை இறந்த மகளிர் உடன்கட்டை ஏறாது உயிர் வாழும் பெண்கள் கைம்மைநோன்பு நோற்றதைப்பாடும் பொதுவியல் திணை தாபதநிலைத் துறையில் அமைந்த பாட்டுக்கள். இப்பாடல்களில் 248ஆம் பாடல் ஒக்கூர் மாசாத்தியார் பாடியது. 249ஆம் பாடல் தும்பி சொகினனார் பாடிய பாடல். அடுத்து வரும் 250ஆம் பாடல் தாயங்கண்ணியார் பாடிய பாடல். இம்மூன்று பாடல்களும் கைம்மைநோன்பு நோற்றல் பற்றிய பாடல்கள். அதனால் ஒக்கூர் மாசாத்தியார், தாயங்கண்ணியார் என்ற இருவர் பாடல்களுக்கிடையேயும் ஆண்பாற் புலவரான தும்பி சொகினனார் பாடல் இடம்பெற்றுள்ளது. இதனால் புறநானூற்றுத் தொகுப்பில் கருத்து ஒற்றுமை பேரிடம் பெற்றமையை அறியமுடியும்

மாற்பித்தியார் புறநானூற்றில் இரண்டு பாக்கள் பாடியவர். இரண்டும் தாபதவாகைத் துறையின. இப்பாடல் ஒரு மன்னனின் இளமைக்காலச் செழுமையையும் துறவுக் காலத்தில் அவன் நிலையையும் பாடுவன. இப்பாடல்கள் கருத்தொற்றுமை கருதி ஓரிடத்தில் 215, 252ஆம் பாடலாகக் காணப்படுகின்றன. இதனைத் தொடர்ந்து கையறுநிலைப் பாக்கள், உண்டாட்டு, முதுபாலைத் துறைப் பாடல்கள் இடம் பெற்றுள்ளன. மதுரைப் பேராலவாயர் பெருங்கோப்பெண்டு தீப்பாய்தலைப் பாடிய பாடல் அமைந்துள்ளது. இப்புலவர் பாடிய 262ஆம் பாடல் வெட்சி உண்டாட்டுத் துறையினது. இதில் தலைவன் ஒருவன் நிரை கவர்ந்து

வந்ததைப் பாடியுள்ளார். அதனால் வெற்றிப்பாக்கள் தொகுப்பில் இப்பாடல் இடம்பெற்றுள்ளது. இவ்வாறான பாக்கள் தொகுப்பிற்கிடையில் வேந்தர்களை பாடிய பாடல்களும் கலந்துவருகின்றன. புறநானூற்றில் குறைந்த எண்ணிக்கையிலுள்ள திணைப் பாக்கள் வெட்சி, கரந்தை, நொச்சி பாடல்கள் இவை ஒருங்கு 263-ஆம் பாடலுக்குபின் பத்துப் பாக்களுக்குள் இடம் பெற்றுள்ளன. இதில் வெறிபாடிய காமக்கண்ணியார் எனும் பெண்பாற்புலவர் பாடிய நொச்சித் திணை செருவிடை வீழ்தல் துறைப்பாடல் 271-ஆம் பாடலாக அமைகிறது.

பாடலில், வேந்தன், மன்னன் என்று நோக்கப்படவில்லை; இவற்றின் கருத்தடிப் படையில் திணை, துறையை அமைத்துள்ளனர்; அவை போர்க்காலத்தில் வீரர்களைப் பற்றியும், போரின் முடிவில் வீரனின் இறப்பினால் வருந்திய மனைவியரைப் பற்றியும், வீரனின் மகிழ்ச்சி, வெற்றியின் பெருமிதம் ஆகியன குறித்த பாடல்கள் என்ற கருத்தடிப்படையில் புறநானூற்று இறுதிப் பாடல்கள் தொகுக்கப்பட்டுள்ளன. இப்பாடல்களில் ஔவையார் (266-ஆம் வெட்சி), ஒக்கூர் மாசாத்தியார் (279-வாகை-மூதின்முல்லை), மாறோக்கத்தது நப்பசலையார் (280) பொதுவியல் ஆனந்தப்பையுள்; ஔவையார் (286) குடிநிலையுரைத்தல்; அள்ளூர் நன்முல்லையார் (306) (மூதின்முல்லை) என்று பாடல்களின் கருத்தாய்ந்து தொகுத்துள்ளனர். பெண்பாற் புலவர்களின் பாக்களில் இறுதிப் பாடலாக ஔவையாரின் (392) பாடல் அமைந்துள்ளது. இப்பாடல் பொகுட்டெழினியின் பரிசில் கடைநிலையைப் பாடிய பாடலாகும்.

## புறப்பொருட் புலவர் பற்றிய முடிபுகள்

புறப்பொருள் குறைந்த அடிகளில் புலவர்கள் பாடிய பாக்களின் தொகுப்பு. புறநானூற்றின் தொகுப்புநிலைப் பாடல்களை நன்கு படித்துத் திணைதுறை வகுத்து, கருத்தாய்ந்துத் தொகுக்கப்பட்டதாகும். இந்நூலின் தொடக்கப் பாக்கள் சேரன் - பாண்டியன் - சோழன் என்ற வேந்தர்கள் முறையில் மாறிமாறித் தொகுக்கப்பட்டுளன. வேந்தர்களைப் பாடியோர் பாக்கள் முதலிடம் பெறுகின்றன. பெண்பாற் புலவர்களில் மிகுதியாகப் (33) பாக்கள் ஔவையார் பாடியிருப்பினும் இந்நூலில் அவர் பாடல் 87-ஆம் பாடலாகவே நிறுத்தப்பட்டுள்ளது. பேய்மகள்

இளவெயினியார் புறநானூற்றில் ஒரு பாடல் பாடியிருந்தும் அவர் பாடல் முதலிடத்தில் வருகிறது. பேய்மகள் இளவெயினியார் சேரன் பாலை பாடிய பெருங்கடுங்கோவைப் பாடியதால் பதினொராம் பாடலாக அமைந்தது. இவர் முதற்கண் இடம் பெற்ற பெண்பாற் புலவராகிறார். ஔவையார் குறுநில மன்னனான அதியமான் நெடுமானஞ்சியைப் பாடியதால் 87-ஆம் இடத்தில் அமைக்கப்பட்டுப் பெண்பாற் புல்வர் பாடல் வரிசையில் ஒன்பதாம் இடத்திலுள்ளார்.

ஆண்பாற்புலவர், பெண்பாற்புலவர், இனம், எண்ணிக்கை மிகுதியான பாக்கள் பாடியவர் என்ற பாகுபாடு தொகுத்தோர் நோக்கில் காணப்படவில்லை. கருத்தாய்வுத் தொகுப்பில் எப்பாடல் இடம் பெற்றதோ அவ்வரிசையில் பாடல்கள் தொகுக்கப்பட்டுள்ளன.

புறநானூற்றில் மிகுதியாக ஒருவர் பாடிய பாக்கள் தொடர்ந்து ஒருங்கு தொகுக்கபட்டமைக்கு ஔவையார் பாக்கள் நல்ல சான்றாகும் (87-104). பதினெட்டுப் பாடல்கள் ஒருங்கே தொகுக்கப்பட்டுள்ளன. காரணம் அதியமான், அவன் மகன் பொகுட்டெழினியைப் பாடிய பாடல்களின் தொகுதி என்பதும், ஔவையாரின் புலமை நலமும் காரணமாகும்.

புறநானூறு, வேந்தர், குறுநில மன்னர் குலப்பெண்களும் பாக்கள் பாடிய நூல். பெருங்கோப்பெண்டு(246), பாரி மகளிர் (112), இருவர் பாடலும் துன்பியல் பாடல்களாக அமைகின்றன. பெருங்கோப்பெண்டு கணவர் இறந்த நிலையிலும் பாரிமகளிர் தந்தை இறந்த நிலையிலும் கையற்றுப் பாடினர். இதனால் அரசமகளிர் இன்பியல் நிலையைவிடத் துன்பியலைப் பாட நேர்ந்தமை அறியப்படும்.

புறநானூற்றில் குறுநில மன்னர்களின் பாக்கள் தொகுப்பிற்குப்பின் கையறுநிலைப் பாடல், தாபதநிலைப் பாக்கள் ஏறாண்முல்லைப் பாக்கள், வெட்சி, நொச்சி, கரந்தை என்று தொகுப்பு காணப்படுகின்றன. மூதின்முல்லைப் பாக்களைப் பெண்கள் பாடியுள்ளமை பெண்ணின் வீரத்தைப் பெண்புலவர் பாடவிழைந்தமையைக் காட்டும்.

கபிலர் பாரியைப் பாடிய கொடை வீரப் பாடல்களைத் தொடர்ந்து பாரிமகளிர் பாடிய கையறுநிலைப் பாடலும், கபிலர் பாடிய கையறுநிலைப் பாடலும் இடம்

பெறுகின்றன. ஆனால் ஔவையார் அதியமானைப் பாடிய பாடலைத் தொடர்ந்து அதியமானைப் பாடிய கையறுநிலைப் பாடல் அமைந்திலது. ஓரிடத்தில் பதினெட்டுப் பாடல் இடம் பெற்றமை கருதி இடம் பெறவில்லையா? இல்லை கால இடைவெளிக்குப் பின் அப்பாடல் கிடைத்து மற்ற கையறுநிலைப் பாக்களுடன் தொகுக்கப்பட்டதா? என்பது ஆராய்தற்குரியது. ஔவையாரின் பாக்கள் 87-ஆம் பாடல் தொடங்கி இடையிடையே கருத்தடிப்படையில் 392-ஆம் பாடல் வரை கோக்கப்பட்டுள்ளன. குறுநில மன்னர்களின் பாக்களின் இடையே வேந்தர்களின் பாக்கள் தொகுக்கப்பட்டதன் காரணம் புறப் பொருள் அடிப்படையேயாகும். முதல் நூறு பாக்களுக்குள் மூவேந்தர்களின் பாக்களுக்குத் தலைமை கொடுத்துப்பின்னர் இடையிடையே இடம் பெற்றிருப்பதுத்தொகுத்த பின் கிடைத்த பாக்களா? பாடல் எண்ணிக்கை இவைதானா? என்பதும் புலனாகவில்லை.

புறநானூற்றில் பெண்பாற்புலவர் ஆண்பாற் புலவர்களை விட எண்ணிக்கைக் குறைவாகப் பாடியிருக்கின்றனர். பாடிய பெண்பாற்புலவர்கள் ஆண்பாற்புலவர்களைப் போல எல்லா நிலையிலும் பாடியுள்ளனர்.

பெண்பாற் புலவர்கள் நீண்ட தூரம் செல்லாமல் அவ்வவ் நாட்டு மன்னரைப் பாடியுள்ளனர். வெண்ணி ஊரில் வாழ்ந்த குயத்தியார். அந்நாட்டையாண்ட சோழன் கரிகாற் பெருவளத்தானைப் பாடினார். பெண்பாற் புலவர்கள் சேரன், சோழமன்னர்களைப் பாடியுள்ளனர். பாண்டியர்களைப் பெண்புலவர் பாடியதாகப்படவில்லை. ஔவையார் பாடியமூவேந்தர் ஒருங்கிருந்த காட்சியைப் பாடும் போது பாண்டியமன்னன் உக்கிரமப் பெருவழுதியைப் பாடுகின்றார். இஃதன்றி வேறு எப்பாடலும் பாண்டிய மன்னர்களைப் பெண்பாற்புலவர்கள் பாடியதாகக் கிடைக்கவில்லை.

ஔவையார் புலமை சான்ற மெல்லியலார். ஔவையார் அதியமானை மிகுதியாகவும் அவன் மகன் பொகுட்டெழினியைச் சில பாடல்களிலும், நாஞ்சில் வள்ளுவன், மலையமான் திருமுடிக்காரி என்று குறுநில மன்னர்களைப் பாடியது போல் இவர் வேந்தர்களைப் பாடவில்லை. அதிகனின் ஆட்சிக்குட்பட்ட பகுதியில் வாழ்ந்து அவரை மட்டும் பாடும் எண்ணம் ஔவையார் கொண்டிருக்கிறார்.

வேந்தர்களைப் பாட விரும்பாமைக்கு ஒரு காரணம் நெடுந்தூரம் கடந்து பயணம் செய்யவிரும்பாமையாகலாம். புறநானூற்று வைப்புமுறை சங்ககாலத்தவர் புலமையைப் போற்றினார் என்பதைக் காட்டுகிறது. வேறு எப்பாகுபாடும் காட்டப்படவில்லை.

## பதிற்றுப்பத்து

பதிற்றுப்பத்து முழுவதும் சேர அரசர்களைப் பாராட்டுவது. அவ்வரசர்களிற் சிலரைப் பற்றிய செய்யுட்களும் செய்திகளும் வேறு தொகை நூல்களில் வரினும் குறிப்பிட்ட ஓர் அரசரைக் குறித்துத் தொடர்ச்சியாகப் பத்துச் செய்யுட்கள் இதிலேதான் காணப்படுகின்றன. இந்நூலில் ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் துறை, வண்ணம், தூக்கு, பெயர் என்பவற்றைப் புலப்படுத்தும் குறிப்புகள் அமைந்துள்ளன. துறையின் பெயர் புறநூல்களிலும் இருப்பினும் மற்றவை பிற தொகை நூல்களில் காணப்படவில்லை. காக்கைப் பாடினியார் நச்செள்ளையார் பதிற்றுப்பத்தில் ஆறாம் பத்தைப் பாடியவர். ஆடு கோட்பாட்டுச் சேரலாதனைப் பாடி அணிகலனுக்கென்று ஒன்பது துலாம் பொன்னும் நூறாயிரம் பொற்காசும் பரிசாகப் பெற்றார். இந்நூலில் சேர வேந்தர்களின் வீரம், கொடை, புகழ் இவை பாடப்பட்டுள்ளன. சேர வேந்தர்கள் ஒவ்வொருவரும் வாழ்ந்த காலத்தில் அந்நாட்டுப் புலமைச் செறிவு நிறைந்தவர்களை அவைக்கழைத்துப் பரிசில் வழங்கினர். குறித்த அரசனை ஒரு புலவர் பத்துப் பாக்களில் பாடியதாக அமைந்திருப்பது சங்க இலக்கிய மரபில் புதுமையுடையதாகும். ஐங்குறுநூற்றில் பத்துப் பத்துப் பாடல்களாகப் புலவர்கள் பாடியிருப்பது போல இங்குப் புறப் பொருளில் பத்துப் பாடல்களாகப் பாடல்கள் பாடப்பட்டிருக்கின்றன.

ஆடுகோட்பாட்டுச் சேரலாத மன்னனைக் காக்கைப் பாடினியார் எனும் பெண்பாற் புலவர் ஒருவரே பாடியிருக்கிறார். சங்கப் புலவர் வேறு எவரும் இவனைப் பாடவில்லை.

பதிற்றுப்பத்து மன்னர்கள் வாழ்ந்த கால முறையில் தொகுக்கப்பட்டுள்ளது. இவன் சேரவேந்தர் வழிமுறையில் ஆறாவதாக வருகின்றான் ஆதலின் அவனைப் பாடிய பாட்டுக்கள் ஆறாவதாக இடம் பெறுகின்றன. இதற்கு முன்னே பரணர்

பாடிய பாட்டுக்கள் உள்ளன. அடுத்து நச்செள்ளையார் பாக்கள் வருகின்றன. இதன்பின் கபிலர் பாடியது வருகின்றது. இவ்வாறு பரணர் கபிலர் ஆகிய இருவர் பாடிய பத்துகளுக்கிடையே இவர் பத்து வைக்கப்பட்டிருப்பது, நச்செள்ளையாரும் இவர்களைப் போலப் புலத்துறை மிக்கப் புலவர் என்பதைக் காட்டுகிறது.

பதிற்றுப்பத்தில் பெண்பாற்புலவர் பாடிய ஆறாம்பத்தைச் சேர்த்ததன் மூலம், சங்க காலத்தில் பெண்பாற்புலவர்களும் மதிக்கப் பெற்றனர் என்பதைக் கண்டுகொள்ளமுடியும். பெண் பாடிய பாட்டு என்று புறக்கணிக்கலாம், அல்லது விட்டு விடலாம். கலித்தொகை, பரிபாடலில் பெண்பாற்புலவர்களின் பாடல் இல்லாமையை ஒப்புநோக்கின் பதிற்றுப்பத்தில் நச்செள்ளையாரின் பாக்கள் இருப்பதன் சிறப்புப் புலனாம். ஒரு முழுப் பகுதியின் நடுப்பகுதியாக (10இல் 6ஆவது) இவர் பாடல் இருப்பது இவருக்குச் சிறப்புத் தருவதாகும். ஆகவே, சேர நாட்டில் பதிற்றுப்பத்துத் தொகுப்பில் பெண்களுக்கும் உரிமை கொடுத்தது வெளிப்படும்.

பெண்ணுக்குக் கருத்துரிமை இருந்தமையால் தான், உதியஞ் சேரலாதன் மரபின் இறுதிவேந்தனை நச்செள்ளையார் பாடியிருக்கிறார். ஒரு பெண்பாற் புலவர், சேர வேந்தனைப் பத்துப் பாடல்களால் பாடவாய்ப்புக் கொடுத்து அதனை அந்நாட்டின் முதன்மை இலக்கியத்தில் தொகுத்திருப்பது சேரநாட்டில் பெண்களுக்கு உரிமையிருந்தமையைக் காட்டுகிறது. சேர நாட்டில் தொகுக்கப்பெற்ற அக இலக்கியமான ஐங்குறுநூற்றில், ஐந்து புலவர்கள் பாடியுள்ளனர். ஆனால் அவர்களில் ஒருவர் கூடப் பெண்புலவர் இல்லை. சேரநாட்டுப் பெண்பாற் புலவர் அகப்பாட்டுகள் பாடாது புறப்பாட்டுகள் பாடுவதில் ஆர்வமுடையவர்களாக விளங்கினராதல் வேண்டும்.

## பத்துப்பாட்டு

சங்கநூலில் பத்துப்புலவர்கள் பாடிய பாடல்கள் தொகுக்கப்பட்டுப் பத்துப்பாட்டு என்று வழங்கப்படுகிறது. இவை நெடும்பாட்டுகள் இப்பாட்டுக்கள் ஒவ்வொன்றும் நூறு அடிகளுக்கும், எண்ணூறு அடிகளுக்குட்பட்டவை. பத்துப் பாட்டுள் முடத்தாமக்கண்ணியார் ஒருவர் பெண்பாற் புலவர். எஞ்சியோர் ஆண்பாற்புலவர்கள். பத்துப் பாட்டைப் பதிப்பித்த உ.வே.சாமிநாதஐயர்[13] இவரைப்

பெண்பாற் புலவரென்று கூறுவாரும் உளர் எனச் சுட்டுவர். இவ்வாறே அ.துரையரங்கசாமி[14] ந.சஞ்சீவியும்[15] ஆகியோரும் குறிப்பிடுவர். இவரை பெண்பாற்புலவர் என்று குறிப்பிடுவர் மா.இராசமாணிக்கனார்[16].

முடத்தாமக்கண்ணியார் பாடிய பாடல் எட்டுத் தொகை நூல்களில் இடம் பெறவில்லை. இந்நூலில் மட்டும் தொகுக்கப்பட்டுள்ளது. கரிகாலன் மீது பொருநராற்றுப்படையைப் பாடியவர். இப்பாட்டு 248 அடிகளையுடையது. பத்துப்பாட்டு அடி எண்ணிக்கையில் முதல் முல்லைப் பாட்டு (103) நெடுநல் வாடை (188) இதனையடுத்துப் பொருநராற்றுபடை (248)யுளது. இந்நூலில் 782 அடிகொண்ட மதுரைக்காஞ்சியும் உண்டு.

பொருநராற்றுப்படை, இத்தொகுப்பில் இரண்டாவதாக உள்ளது. ஒருதொகுப்பின் முதற்கண் தெய்வப்பனுவல் இருக்க வேண்டும் என்ற கருத்தால் திருமுருகாற்றுப்படை முதற்கண் நிற்கிறது. 'இது காலத்தால் பிற்பட்டது' என்பர் கலாநிதி சு.வித்தியானந்தன்[17] ஆதலின் பத்துப்பாட்டுத் தொகுப்பில் ஒருபெண்பாற் புலவர்பாடிய நூலுக்கு முதன்மை கொடுக்கப்பட்டிருக்கிறது. திருமுருகாற்றுப்படையை முன்னமைத்துத் தொகுத்த தொகுப்பு முயற்சி பிற்காலத்திய முயற்சியாகும், பதிற்றுப்பத்தை நோக்கியமைந்தது.

சோழமன்னரைப் பாடியதால் இத்தொகுப்பில் இவ்வாற்றுப்படை இடம் பெற்றது என்பதும் பொருந்தும். ஆனால் பட்டினப்பாலையும் சோழவேந்தர் பற்றியது, அஃது அகப்பாடல் என்பதால் பின்னர் வைக்கப்பட்டுள்ளது.

## ஆய்வு முடிவுகள்

சங்கப் பாடல்கள் தனிப்பாடல்களாக இருந்தன. அவற்றை ஐங்குறுநூறு, குறுந்தொகை, நற்றிணை, நெடுந்தொகை (அகநானூறு) என்று தொகுத்திருக்கின்றனர். இவை அகப்பொருள் தொகுப்பு; இதுபோலப்புறப் பொருள் பாடல்கள், புறநானூறு, பதிற்றுப்பத்து என்று தொகுக்கப்பட்டள்ளன. ஐங்குறுநூறும் பதிற்றுப்பத்தும் சேரநாட்டிலேயே முறைப்படுத்தப்பட்டுத் தொகை செய்யப்பட்டிருக்கின்றன. அங்கு ஒருவர் ஒரு பொருள் பலவகையாகப் பல பாக்கள் இயற்றும் இலக்கிய மரபு

வாழ்ந்திருக்கிறது. பத்துப் பாட்டுகள் ஒரு பொருள் பற்றியன. இந்த இலக்கிய ஆக்க மரபு சோழ பாண்டிய நாடுகளில் இல்லை; இதற்கு மாறாக நெடும் பாட்டுப் பாடும் மரபு வழங்கியிருக்கிறது. இவ்வாறு எழுந்தவையே பத்துப்பாட்டு. ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்துப் போலப் பாண்டிய சோழ நாடுகளில் இலக்கியமில்லை, பத்துப் பாட்டுப் போலச் சேரநாட்டில் இலக்கியமில்லை. தொகையாகத் தொகுக்கப்பெற்றவை அகப் பாடல்களும் புறப்பாடல்களுமேயாகும். இத்தொகுப்பு முயற்சியில் பெண்களுக்குரிய இடம் மதிப்பிடப்படுகிறது.

அகம், புறம் பாடல்களைத் தொகுத்ததில் எந்தப் பெண்பாற்புலவரும் பங்கு பெறவில்லை; பெண்கள் புரவலர்களாகவும் விளங்கிலர். தொகுத்தவர், தொகுப்பித்தோர் ஆகிய இருதிறத்தாரும் ஆடவரே.

1. பெண்பாற்புலவர்களின் எண்ணிக்கைக் காலத்திற்குக் காலம் கூட்டியும் குறைத்தும் ஆய்வாளர்களால் கணக்கிடப்பட்டுள்ளன. காலந்தோறும் பெண்பாற்புலவர்கள் பற்றிய ஆராய்ச்சி மேற்கொள்ளப்பட்டு வருவதை இது காட்டுகிறது.

2. குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு, புறநானூறு, பதிற்றுப்பத்து நூல்களில் பெண்பாற்புலவர்கள் பாடல் உண்டு. ஐங்குறுநூறு, கலித்தொகை, பரிபாடல் மூன்றிலும் பெண்பாற்புலவர்களின் பாடல்கள் இல்லை.

3. தொகைநூல் தொகுப்பு விதிகளில்பொருள் நோக்கும்யாப்பு நோக்குமே நோக்கப்பெற்றிருக்கின்றன. பாடல்களின் அடி அளவுடன் பொருளமைதியும் கருத்தில் கொண்டு குறுந்தொகை, நற்றிணை, நெடுந்தொகை என்பன தொகை செய்யப்பட்டுள்ளன. அகநானூறு, புறநானூறு என்பன பொருள் நோக்கின. ஐங்குறுநூற்று-மருதத்தின் முதற்பத்தில் 'வாழிஆதன் வாழி அவினி' என்று சேரவேந்தன்சுட்டும் அவனை வாழ்த்துதலும் வருதலின் அந்நூலில் மருதம் முதற்கண் கோக்கப்பெற்றது. இரண்டாவதில் அந்நாட்டுத் தொண்டிப்பட்டினம் தொண்டிப்பத்தில் பாடப்படுவதால் நெய்தல் இரண்டாவது கோக்கப்பெற்றது. சேரநாட்டில் அரசர் தொடர்பு கருத்தில் கொள்ளப்பெற்றுப் பாடல்கள் கோக்கப்பெற்றிருக்கின்றன. நற்றிணை பாண்டியநாட்டில் தொகுக்கப்பட்டது. முதற்பாடலிலோ அடுத்த பாடலிலோ

பாண்டியன் பற்றிய குறிப்பில்லை. நற்றிணை முதற்பாடல் கபிலர் பாட்டு; கபிலர் பாண்டிய வேந்தனைப் பாடாத புலவர். அவர் பாடல் நற்றிணையில் முதற்கண் கோக்கப்பட்டுள்ளது. தொகுப்பு முயற்சியில் புலமை மதிப்பே நோக்கப்பட்டிருக்கிறது.

4. குறுந்தொகைபாண்டிய நாட்டில் தொகுக்கப்பட்டது. இதில் இருபத்திரண்டு புலவர்கள் பெண்கள். இவர்களில் ஔவையார் மிகுதியான பாடல் பாடியவர். குறுந்தொகையில் இவர் பாடல் பதினைந்தாவதாக வைக்கப்பட்டுள்ளது. இத்தொகுப்பில் பெண்பாற்புலவர்களுள் மிகப்பழமையானவர் என்று அறிஞர்களால் கருதப்பெறும் ஆதிமந்தியார் பாடல் காணப்படுகிறது. குறுந்தொகையில் முதல் இருநூறு பாடல்களில் ஐம்பது பாடல்கள் பெண்கள் பாடியவை. முதலிருபது பாடல்களில் பதினைந்தாம் பாடல் - ஔவையார் பாடியது உளது. தொகுப்பில் மிகுதியாகப் பாடல் பாடியவர்கள் என்று கருதி அவர்கள் பாடல்களுக்கு முதன்மை வழங்கப்படவில்லை. ஒரு பாடல் பாடியவர்களின் பாடலுக்குப்பின் பலபாடல் பாடியவர்களின் பாட்டு வைக்கப்பட்டுள்ளது. இதனால் பாக்கள் எண்ணிக்கை மிகுதி, கருதித் தொகுப்பில் முதலிடம் வழங்கப்படவில்லை என்பது புலனாகும். ஒரு பாடல் பாடியோர் பாடலும் பல பாடல்கள் பாடியோரின் பாடல்களுக்கு முன்பு அமைக்கப்பட்டதைக் குறுந்தொகை காட்டுகின்றது.

5. நற்றிணை பாண்டியநாட்டில் பாண்டியர் ஆதரவால் தொகுக்கப்பட்டது; பாண்டியரைப்பாடாத கபிலர் பாட்டு இத்தொகை நூலில் முதற்கண் இடம் பெற்றிருக்கிறது. கபிலரின் புலமை காரணமாக அவர் பாட்டு முதலிடம் பெற்றிருக்கிறது. நற்றிணையில் நல்வெள்ளியார் பாடல் முதன் முதலாக ஏழாம் பாடலாக இடம் பெற்றிருக்கிறது. ஔவையார் பாடலோ நூற்றிருபத்தொன்பதாம் பாடலாக வருகிறது. குறுந்தொகை அகநானூறுகளில் வருவது போல ஈண்டு ஔவையார் பாட்டு முதற்கண் வந்திலது. நற்றிணையைத் தொகுத்தோர், தொகுப்பின் புலவர்? அவர் எந்நாட்டர்? எச்சாதியார்? என்றெண்ணாமல் புலமை ஒன்றை மட்டுமே கருத்திற்கொண்டுப் பாக்களைத் தொகுத்துள்ளனர். வேந்தர்களைப் பற்றிக்குறிப்பு வரும் பாக்களுக்குக் குறுந்தொகை, நற்றிணை, அகநாநூறு போன்ற தொகுப்புகள் முதன்மை தந்தில. ஐங்குறுநூற்றில் மட்டுமே இந்தச் சார்பு காணப்படுகின்றது.

நற்றிணையில் ஔவையார் பாடல் பின்னுக்குத் தள்ளப்பட்டிருப்பது ஏன் என்று புரியவில்லை.

6. அகப்பொருள் பாடல்களில் அகநானூறே அடி எண்ணிக்கை கூடுதலான யாப்பால் யாக்கப்பெற்றது. திணை அடிப்படையில் பாக்கள் வரிசைப்படுத்தப்பட்டிருக்கின்றன. இதனால் இத்தொகுப்பு முதற்கண் தொகுக்கப்பெற்றிருப்பின் ஏனைய தொகை நூல்கள் தொகுக்கப்பட்டிருக்கவேண்டும் என்பாரும் உளர் [18]. இத்தொகுப்பில் பதின்மூன்று மகளிர் பாடிய இருபத்து நான்குபாக்கள் காணப்படுகின்றன. இங்கு ஔவையார் பாடலே முதற்பாடலாக (11) கோக்கப்பட்டுள்ளது.

7. பெண்பாற்புலவர்கள், அடிஎண்ணிக்கை குறைந்த பாடல்களை மிகுதியாகப் பாடியுள்ளனர்; அதனால் அகநானூற்றில் அவர்கள் பாடல்கள் குறைவாகத் தொகுக்கப்பட்டுள்ளன. பெண்கள் குறைவான அடியிலேயே தங்கள் கருத்தைப் பாட விரும்பியுள்ளனர்; உரிப்பொருளுக்கு முதன்மை கொடுத்திருப்பதும் கருப்பொருளை விரிவாக வருணித்துப் பாடாதிருப்பதும் தொகுப்பு முறையால் அறியப்பெறுகிறது.

8. புறநானூற்றுப் பாடல்கள் சேரன், பாண்டியன், சோழர் என்ற வரிசை முறையில் பாடல்கள் தொகுக்கப்பட்டிருக்கின்றன. இம்முறை எண்பத்தாறாம் பாடலுக்குப் பின் மாறுகிறது. பேய்மகள் இளவெயினியார் பாடல் புறநானூற்றில் முதற்கண் இடம்பெறும் பெண்பாற்புலவர் பாடலாகும். இதனையடுத்து மாறோக்கத்து நப்பசையார் பாடல் வருகிறது. சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளி வளவனைப் பாடிய பாடல்கள் ஒருங்கு தொகுக்கப்பட்டபோது, கருத்து ஒற்றுமை கருதி இவர்பாடலும் விரவிவந்தது. சங்கப்பாக்கள் தொகுப்பில் ஆண்பெண் என்ற பால்வேற்றுமை நோக்காது பாடல் யாரைப்பற்றியன? அப்பாடலின் கருத்துயாது? பாடுபொருள் என்ன? என்று நோக்கியே மாறோக்கத்து நப்பசலையார் பாடல் புறநானூற்றில் கோக்கப்பட்டுள்ளது.

பெரும்புலவரான ஔவையார் பாடல், புறநானூற்றில் எண்பத்தேழாம் பாடலாக உள்ளது. இவருடைய பதினெட்டுப் பாடல்கள் ஒருங்கு

தொகுக்கப்பட்டிருக்கின்றன. இவர் அதியமானைப் பாடியதால் இவர் பாடல்கள் பின்னுக்குத் தள்ளப்பட்டிருக்கின்றன. இவரே சேரனையோ பிறவேந்தரையோ பாடியிருப்பின் இவர் பாடல்கள் புறனானூற்றின் முற்பகுதியில் (80க்குமுன்) - வேந்தர் வரிசையில் - இடம் பெற்றிருக்கும். புறநானூற்றுப் பாடல்கள் நிகழ்ச்சி நடந்தமுறையில் தொகுக்கப்பட்டுள்ளன. இதனைப் பெருங்கோப்பெண்டு, மதுரை ப்பேராலவாயர் பாடல் தொகுப்புகளால் தெரிந்து கொள்ளமுடிகிறது.

9. புறநானூற்றுத் தொகுப்பில் ஆண்பாற்புலவர், பெண்பாற்புலவர், இனம், எண்ணிக்கை மிகுதியாகப் பாக்கள் பாடியவர் என்ற பாகுபாடு தொகுத்தோர் நோக்கில் காணப்படவில்லை. பாடலின் பாடுபொருள் - கருத்தாய்வு - தொகுப்பில் எப்பாடல் இடம்பெற்றதோ அவ்வரிசையில் பாடல்கள் தொகுக்கப்பட்டுள்ளன. பெண்கள் தொலைதூரம் சென்று மன்னர்களைக்கண்டு பாடமுடியாமையால், அவரவர் வாழ்ந்த நிலத்துக் குறுநிலத்தலைவர்களையே பாடினராதல் வேண்டும்.

10. பாண்டிய மன்னர்களை எந்தப் பெண்புலவரும் தனித்துப் பாடவில்லை என்பது குறிக்கத்தக்கதாகும்.

11. சங்க இலக்கியங்களைத் தொகுத்தவர்கள் ஆண்பாற்புலவர்களைப் போலவே பெண்பாற்புலவரையும் மதித்திருக்கின்றனர். பெண்கள் பாடியன குறைந்த எண்ணிக்கையின. எனினும் அவர்கள் ஆண்பாற்புலவர்களை மதித்தாங்குமதித்துப் பாடல்களைத் தொகுத்திருக்கின்றனர். பெண் என்பதற்காகத் தனிச்சலுகையோ, வேறுகனிவோ காட்டப்படவில்லை. பெண்களின் அறிவு மேலாண்மையினாலேயே அவர்கள் பாடல்கள் தொகுப்பில் இடம்பெற்றிருக்கின்றன.

12. புறப்பொருள் இலக்கியத்தில் புறநானூறு பெண்பாற்புலவர்களின் பன்முகச்செவ்வியை எடுத்துக்காட்டுகிறது. ஔவையார் பரிசில் பெறுதலை மட்டும் பாடாது மைந்து பொருளாக வரும் தும்பைத் திணையையும் பாடியிருக்கிறார். அவர் அதியமானைப் பாடியவராக இருந்தாலும் அவருக்குத் தனிமதிப்புக் கொடுக்கப்பட்டிருந்தது. புறநானூற்றில் பேய்மகள் இளவெயினியார் பாடல் பதினோராம் பாடலாகத் தொகுக்கப்பட்டிருக்கிறது. ஔவையார் வேந்தர்களைப் பாடாமையால் அவர்பாடல்கள் புறநானூற்றின் பிற்பகுதியில் வருகின்றன.

பாடுபொருள் நோக்கில் ஆண்களுக்கு ஈடாகப் பெண்களும் பாப்புனைந்துள்ளனர். இதனால் ஆண்களைப்போலப் பெண்களும் கல்வித்தகுதியில் மேம்பட்டிருந்தமை வெள்ளிடைமலை.

13. பதிற்றுப்பத்து எனும் புதியவகை இலக்கியத்தில் நச்செள்ளையார் என்னும் பெண்புலவர் பாடல்கள் அமைந்துள்ளன. பெண்பாற்புலவர்களின் புறப்பொருள் அறிவுநலத்தை இப்பகுதி காட்டுகிறது. பத்துப்பாட்டு என்னும் தொகுப்பிலும் பெண்பாற்புலவர் ஒருவருக்கு இடம் கொடுக்கப்பட்டிருக்கிறது. திருமுருகாற்றுப்படைப் பிற்காலத்து இலக்கியம் என்பர்[19]. பெண்பாற் புலவரான முடத்தாமக்கண்ணியாரின் பாட்டை இத்தொகுப்பில் முதற்கண்வைத்திருக்கின்றனர். இந்தத் தொகுப்பில் பெண்ணிற்குத் தனிமதிப்புத்தரப்பட்டிருக்கின்றது புலனாம்.

14. இந்த ஆராய்ச்சிக்கு முதன்மைச்சான்றுகளாக இருக்கின்ற நூல்களின் அடிப்படையில் பெண்களுக்குத் தொகுப்புமுறையில் கொடுத்திருக்கின்ற முதன்மையை ஆராயும்போது சங்ககால மகளிர் ஆடவரைப்போல ஒத்த புலமை உடையவர்களாகவும், சமூகத்தில் செல்வாக்குடையவர்களாகவும் விளங்கியமையை தெளிவாகும். ஐந்தடிக்குக் குறைவான பாடல் பாடுதலில் பெண்பாற்புலவர்க்கு மனம் செல்லவில்லை. அதனால் தான் ஐங்குறுநூற்றில் இவர்கள் பாடலில்லை. குறுந்தொகையிலும், நற்றிணையிலும் இவர்கள் பாடல் மிகுதியாக இருப்பது, அளவாக அடிகள் அமைத்துப் பாடுவதிலேயே ஆர்வம் காட்டினர் என்பதை உணர்த்துகிறது. சங்ககாலத்தில் பெண்கள் அறிவுத்திறமை உடையவர்களாகவும் அகப்பொருளையும் புறப்பொருளையும் பாடுதற்கு வல்லமை உள்ளவர்களாக இருந்தமையையும் சங்க இலக்கியத்தொகுப்பும் பாடல் வைப்புமுறையும் உணர்த்துகின்றன.

**மேற்கோள் விளக்கம்**

1. வ.சுப. மாணிக்கம் - ***தமிழ்க்காதல்***, ப.354
2. பின்னிணைப்பு - 1இல் பார்க்க.
3. ஏ.வி.சுப்பிரமணிய அய்யர் - ***தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி*** ப.80
4. ந. சஞ்சீவி - ***சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணை***, ப.58
5. ஏ.வி. சுப்பிரமணிய அய்யர் - ***தமிழாராய்ச்சியின் வளர்ச்சி*** ,பக்.77-78
6. தாயம்மாள் அறவாணன் - **மகடூஉ முன்னிலை, பெண்பாற்புலவர் களஞ்சியம்,** ப.109
7. வ.சுப. மாணிக்கம் - ***தமிழ்க்காதல்,*** பக்.355-356
8. ஏ.வி.சுப்பிரமணிய அய்யர் - ***தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி,*** ப.78
9. பின்னிணைப்பு - 2-இல் பார்க்க
10. பத்மஜாரமேஷ் - வி.பி.புருஷோத்தமன் - ***சங்ககாலமன்னர்களின் கால நிலை,*** ப.27
11. ந.சஞ்சீவி - ***சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணை,*** ப.58
12. பத்மஜாரமேஷ்-வி.பி.புருஷோத்தமன் - ***சங்ககாலமன்னர்களின் காலநிலை,*** ப.28
13. உ.வே.சாமிநாதஅய்யர் - **பத்துப்பாட்டு மூலமும் மதுரையாசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியருரையும், ப-ii**
14. அ.துரையரங்கசாமி - ***சங்ககாலச்சிறப்புப்பெயர்கள்,*** ப.103-104
15. ந.சஞ்சீவி - ***சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணை***, ப.59
16. மா. இராசமாணிக்கனார்- ***பத்துப்பாட்டு ஆராய்ச்சி,*** ப.725
17. சு.வித்தியானந்தன் - ***தமிழர் சால்பு***, ப.5
18. தே.சொக்கலிங்கம் - கலந்துரையாடலின்போது கூறியது.
19. சு. வித்தியானந்தன் - ***தமிழர்சால்பு***, ப.5

# மூன்றாம் இயல்

## புலவர் வரலாறு

சங்க காலப் பெண்பாற்புலவர்கள் பலர். பெயர் குறிப்பிடப்பட்டுள்ள பெண்பாற்புலவர்கள் நாற்பத்தைவர். இவர்களின் வரலாற்றை ஆராய்கிறது இவ்வியல். பெண்பாற்புலவர்களின் வரலாற்றினை அவர்கள் பாடிய பாடல்கள், மற்ற புலவர்கள் பாடிய குறிப்புகள், உரையாசிரியர்கள், ஆராய்ச்சியாளர்களின் கருத்துக்கள் கொண்டு வரையறுக்கப்பட்டுள்ளன.

பெண்பாற்புலவர்களை வரிசைப்படுத்துகையில் சேரநாட்டுப்புலவர்கள், சோழநாட்டுப் புலவர்கள், பாண்டியநாட்டுப் புலவர்கள், பறம்புமலைப் புலவர்கள் கொங்குநாட்டுப் புலவர்கள், தொண்டைநாட்டுப் புலவர்கள், நன்னன்நாட்டுப் புலவர்கள் என்று பகுக்கப்பட்டுள்ளனர். இறுதியில் எந்நாடு என்றறிய இயலாத புலவர்களின் வரலாறும் தொகுக்கப்பட்டுள்ளன.

## பெண்பாற் புலவர்களும் அவர்கள் தொடர்புடைய நாடுகளும்

### 1. சேர நாட்டுப் புலவர்கள் :

1. பேய்மகள் இளவெயினியார்
2. காக்கை பாடினியார் நச்செள்ளையார்
3. குறமகள் இளவெயினியார்
4. குறமகள் குறியெயினியார்

### 2. சோழ நாட்டுப் புலவர்கள் :

1. ஆதிமந்தியார்
2. கழார்க்கீரன் எயிற்றியார்
3. காவற்பெண்டு
4. தாயங்கண்ணியார்
5. பெருங்கோழி நாய்கன் மகள் நக்கண்ணையார்
6. வெண்ணிக்குயத்தியார்
7. முடத்தாமக்கண்ணியார்

## 3. பாண்டிய நாட்டுப் புலவர்கள் :

1. அள்ளூர் நன்முல்லையார்
2. ஒக்கூர் மாசாத்தியார்
3. நல்வெள்ளியார்
4. நெட்டிமையார்
5. பூதபாண்டியன் தேவி பெருங்கோப் பெண்டு
6. பொன்முடியார்
7. மதுரை ஓலைக் கடையத்தார் நல்வெள்ளையார்
8. மாறோக்கத்து நப்பசலையார்
9. வெள்ளிவீதியார்

## 4. பறம்புமலைப் புலவர் :

1. பாரி மகளிர்

## 5. கொங்கு நாட்டுப் புலவர்கள் :

1. அஞ்சி அத்தை மகள் நாகையார்
2. அஞ்சில் அஞ்சியார்
3. ஔவையார்

## 6. தொண்டை நாட்டுப் புலவர் :

1. கச்சிப்பேட்டு நன்னாகையார்

## 7. நன்னன் நாட்டுப்புலவர் :

1. முள்ளியூர்ப் பூதியார்

## 8. நாடு தெரியாப் புலவர்கள்:

1. ஊண்பித்தையார்
2. காமக்கணி நப்பசலையார்
3. காமஞ் சேர்குளத்தார்
4. கார்க்கியார் (நெய்தற் கார்க்கியார்)
5. குன்றியனார்

6. குமுழி ஞாழலார் நப்பசலையார்

7. நன்னாகையார்

8. நெடும்பல்லியத்தையார்

9. பூங்கணுத்திரையார்

10. பொதுக்கயத்துக்கீரந்தையார்

11. பொன்மணியார்

12. பொதும்பில் புல்லாளங்கண்ணியார்

13. போந்தைப் பசலையார்

14. மாரிப்பித்தியார்

15. வருமுலையாரித்தியார்

16. வெண்பூதியார்

17. வெண்மணிப்பூதியார்

18. வெள்ளைமாளர்

19. வெறிபாடிய காமக் கண்ணியார்

## சேரநாட்டுப் புலவர்கள்:

### 1. பேய்மகள் இளவெயினியார்

சங்ககாலப் பெண்பாற் புலவரான இவர் பெயரிலுள்ள 'இளவெயினி' என்பது இயற் பெயர். குறமகள் இளவெயினி என்ற புலவரிலிருந்து வேறுபடுத்த 'பேய்மகள்' என்று சேர்த்து இவர் வழங்கப்பட்டார். இப்பேய்மகள் என்ற பெயர் தோன்றக் காரணம்,

> "பேய்மகள் கட்புலனாகாத வடிவுடையவளாதலால் கட்புலனாமாறு பெண் வடிவு கொண்டு இள்வெயினி என்னும் பெயருடன் நின்று பாடினாள் என்று இவ்வுரைகாரர் சிலர் கூறியிருக்கின்றனர்"[1]

என்பர் அறிஞர் ஔவை சு. துரைசாமிப்பிள்ளை

> "பேய்மகள் என்பது தேவராட்டி, பூசாரிச்சி, பேயினது ஆவேசமுற்றவள் என்று பொருள் பயப்பதால் இளவெயினியார்

குறிஞ்சி நிலத்தில் குறிசொல்லி வாழ்ந்தவர். அவ்வாறு தேவராட்டிகளுள் ஒருவராக வாழ்ந்ததால் பேய்மகள் என்று அழைக்கப்பட்டார்''.

என்பர் கா. கோவிந்தன்[2]. 'எயினக்குலத்தில் பிறந்த மங்கை என்பதால் எயினி எனக்குறிக்கப்பெற்றார்[3]. பேயார், பேயாழ்வார் என்ற பெயர்களை நோக்க இவர் பேய் என்ற பெண்ணின் மகளாக இருக்கலாம் என்பர்[4]. இவ்வம்மையார் பாடிய பாடல் ஒன்று. புறநானூற்றில் பதினோராம் பாடலாக இடம் பெற்றுள்ளது. இப்பாடல் சேரமான் பாலை பாடிய பெருங்கடுங்கோவைப் பாடிய பாடாண் திணைப் பாடல். இப்பாடலுக்குப் பரிசிற் கடாநிலையெனத் துறை வகுப்பர். இவர் பாடலில் பரிசில் மன்னனிடம் வேண்டியதற்கான குறிப்பில்லை. இப்பாடல் சேரனின் வீரம், கொடை இவற்றைப்பாடுகிறது. இவர் சேரமன்னனைப் பாடியதால் இவர் சேரநாட்டுப்புலவராகக் கருதப்படுகிறார்.

## 2. காக்கைபாடினியார் நச்செள்ளையார்

சங்கப் பெண்பாற் புலவரிலொருவர். இவர் பெயரில் வரும் 'நச்செள்ளை' என்ற சொல் 'தாயார்' என்ற பொருளுடையதென்றும், 'தள்ளை' என்பதன் மரூஉவாகிய 'சள்ளை' யென்பது பின்பு 'செள்ளை' என்று மாறிவிட்டது போலும் என்பர் 'உ.வே.சாமிநாதையர்[5]. இப்பெயர் போன்று சேர அரசனது பட்டத்துத் தலைவியாகிய அந்துவஞ்செள்ளை என்ற பெண்மணியும் உளர். இவர் பெயரில் 'ந' என்ற சிறப்புப் பொருளைத்தரும் இடைச்சொல்லும், 'ஆர்' என்ற விகுதியும் பெற்று நச்செள்ளையார் என்ற பெயர் அமைந்திருக்கிறது.

நச்'செள்ளை' என்ற சொல்லிலுள்ள 'செள்ளை' என்பது செவுளைக் குறிக்கும். இன்றும் சிவகங்கை மாவட்டத்தில் கோபத்தில் ஒருவனைப் பேசும் போது, 'செள்ளையைத் திருப்பி விடுவேன்' என்று பேசுவர். செள்ளை காதைக் குறிக்கும். நல்லவற்றையே கேட்கும் பெண் நச்செள்ளை எனப்பட்டாள். இப்பெயர் வழக்கு மலையாளத்திலிருந்தமையால் 'அந்துவஞ்செள்ளை' என்ற சேரப் பெண்மணியும் சுட்டப்படுகிறாள். உறுப்பால் பெயர் சுட்டும் வழக்குத் தழுவி இப்பெண்பாற்புலவர் அழைக்கப்பட்டிருக்கிறார்.

இவர் பெயர்க்கு முன்னர் காக்கை பாடினியார் என்ற சிறப்பு பெயர் வந்துள்ளது. இதற்குக் காரணம் இவர் பாடிய குறுந்தொகை பாடல் ஒன்றில் கணவன்

பொருள்வயின் பிரிந்து வருந்தியிருந்த தலைவியின் வருத்தம் நீங்கத் தலைவன் வருகையை உணர்த்திக் கரையும் காக்கைக்கு நன்றிக் கடனாக,

''பெருந்தோ ணெகிழ்த்த செல்லற்கு
விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே''

(குறுந்.210:5-6)

என்று காக்கையைச் சிறப்பித்துப் பாடியதால் இப்பெயர் பெற்றார். இவர் பெயரில் வரும் பாடினி யாழை ஏந்தியிருக்கும் பெண்ணைக் குறிப்பதாகும். இதனால் இவர் பாண்குலத்தைச் சேர்ந்த புலவர் என்றுபுலனாம். இவர் பாடியதாகக் குறுந்தொகையில் ஒன்றும் (210), புறநானூற்றில் ஒன்றும் (278); பதிற்றுப்பத்தில் ஆறாம்பத்தும் காணப்படுகின்றன.

இவர் பதிற்றுப்பத்தில் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைப் பாடி (ஆறாம்பத்து) வேந்தன் புகழோடு தன் புகழும் நிலைக்க இலக்கியம் படைத்தவர். பதிற்றுப்பத்தில் பாடிய ஒரே பெண்பாற்புலவர் என்ற தனிச்சிறப்பு இவருக்குரியது. இச்சேரமன்னனின் ஆட்சி காலத்தில் ஆண், பெண்பாற்புலவர் பலரிலும் கல்விப் புலமை பெற்றுத் திகழ்ந்தவராவர். இவர் பாடிய பாடலுக்குப் பரிசிலாகக் 'கலன் அணிக' என்று ஒன்பது துலாம் பொன்னும் நூறாயிரம் பொற்காசும் பெற்றவர். இவர் பாடிய பதிற்றுப்பத்தில் சேரனின் கொடைச்சிறப்பினை 'ஒண்ணுதல் மகளிர் துணிந்த கண்ணினும் இரவலர் புன்கண் அஞ்சுவான்' (பதிற். 57: 13,14 என்றும், அவன் வீரத்தை 'செருகளத்தில் கூற்றம் வலைவிரித்தன்ன நோக்க முடையான்' என்றும் கூறிச் சிறப்பிப்பர். (பதிற். 51: 35-37) அவன் இன்பத்துறையில் மெல்லியனாய் அவன் ஈடுபட்ட காலங்களில் இப்புலவர் குறிப்பாக அறிவுறுத்திப் பாடியவர். (பதிற். 51:19-24).

பதிற்றுப்பத்துப் பாடிய புலவர்கள் அனைவரும் சேர நாட்டில் வாழ்ந்தோ, சேர நாட்டுக்குச் சென்றோ சேர வேந்தரைப் பதிற்றுப்பத்தில் பாடியுள்ளனர், எனவே இவர் சேர நாட்டுப் புலவர் என்பதும், புறப்பொருள் பாடல்களை மிகுதியாகப் பாடியவர் என்பதும் பெறப்படும்.

## 3. குறமகள் இளவெயினியார்

இப்பெண்பாற்புலவர் புறநானூற்றில் (157) ஒருபாடல் பாடியவர். குறமகள் என்பது குறிஞ்சி நிலப் பெண்ணைச் சுட்டும். 'எயினி' என்பது எயினர் என்பதன்

பெண்பால். இப்பெண் இளமைக் காலத்திலேயே புலமைப் பெற்றுத் திகழ்ந்ததால் இப்பெயர் பெற்றார். இவர் பாடிய புறப்பாடலில் ஏறைக்கோனின் நற்பண்புகளைப் பாடும்போது 'எம்மோன்' (157:7) என்று பாராட்டி அவனைக் 'குறமகன்' என்று குறிப்பிடுவதால் இப்பாடலாசிரியர் எயினர் குடியைச் சார்ந்தவராகக் கருதலாம் என்பர்[6]. இப்பெயர் சாதியால் வந்தது என்பர் உ.வே.சாமிநாதையர்[7].

'குறமகள்' என்பதால் இப்புலவர் பழங்குடிமரபைச் சார்ந்தவராதல் வேண்டும். குறமகள், எயினி என்ற இரண்டும் மலையொடு தொடர்புடைய இனப்பெயர்கள் 'இள' என்று இளமையைக் குறிக்கும் பெயர், புலவரின் அகவையைக் குறித்தது, எனவே மலைநாட்டைச் சேர்ந்த புலவர் இவர் என்பது கருதற்பாலது.

சங்க இலக்கியப் பாடல்கள் பலவும் வாய்மொழி இலக்கியங்கள்; இவை ஒருவகை; இவையன்றி எழுத்தெண்ணிப் படித்து ஏட்டில் எழுதியவை மற்றொருவகைப் படைப்பிலக்கியங்கள். இவை கற்றவர்களுக்கே உரியன; எழுதி நூற்களைப் படித்துப்பார்த்துக் கற்கும் கல்வியே கல்வி எனப் பெற்றது, கண்ணால் கண்டவற்றையும் காதல் கேட்டவற்றையும் கற்றுக் கேள்வியால் அறிவையும் படைப்பாற்றலையும் வளர்த்துக் கொண்டு எய்தும் புலமை நெறி கேள்வி ஞானம் எனப்படும், பரஞானம் என்றும் அபரஞானம் என்றும் வழக்கும் வழக்கமும் அறியற்பாலது, கல்வி கற்றோர் எழுதப் படிக்கத் தெரிந்த படைப்பாளிகள், கேள்வி ஞானம் பெற்றோர் எழுதப்படிக்க அறியார், வாய்மொழி இலக்கியமாகப் படைக்கும் புலமையாளர். சங்க காலத்தில் இருதிறப் புலமையாளரும் வாழ்ந்துள்ளனர். குறமகள் இளவெயினி போன்ற பெண்பாற் புலவர்கள் கேள்விப் புலமைப்பெற்று வாய்மொழியிலக்கியம் படைத்தவர் ஆவார். இவர் பாடிய பாட்டும் அகப்பாடல் ஆகாது புறப் பாடலாக இருக்கிறது.

## 4. குறமகள் குறிஎயினி

சங்க காலத்தில் குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த (குறவர்) பெண்களும் பாடல் புனைவதில் வல்லமை பெற்று விளங்கினர். இதற்கு இப்புலமை சான்ற குறமகள் இளவெயினி, குறமகள் குறிஎயினி, பேய்மகள் இளவெயினி என்பார் சான்று. இவர்கள் அகப்பாடல் புனைவதிலும், புறம்பாடுவதிலும் திறன் பெற்றிருந்தனர்.

"குறமகள் குறிஎயினியாரும் குறமகள் இளவெயினியும் ஒருவர் என்றும் இளமைக்காலத்தில் பாடிய பாடல் புறப்பாடல் (157) என்றும், முதுமைக் காலத்தில்

பாடிய பாடல் அகப்பாடல் (357) என்ற கருத்துமுண்டு[8]. மெல்லியலாரின் பெயர்களைப் பாகுபடுத்தியதன் நோக்கம் வேறுவேறு புலவர்கள் என்பதை உணர்த்தவேயாம். இவ்வாறே கா.கோவிந்தனும்,

"அவ் இளவெயினியாரே இக்குறி எயினியார் என்று கொள்வது
சரியன்று புலவர் வரலாறுகளை உணர்ந்தும் கொள்ளும்
வழிவகையற்றிருக்கும் நிலையில் பலரை ஒருவராக்குவது,
ஒருவரைப் பலராக்குவது போன்ற தவறுகளைச் செய்யாது
இருப்பதே தமிழறிஞர் கடனாம் என்பர்[9]."

இக்கருத்து இப்புலவர் இருவர் என்பதை உணர்த்துகிறது. இவர் பாடிய பாடல் நற்றிணையில் 57-ஆம் பாடல். இவரின் இயற்பெயர் குறிஎயினி, இவர் பாடலில்,

"நின்குறிப் பெவனோ தோழி என்குறிப்
பென்னொடு நிலையா தாயினும் என்றும்"

(நற்.357:1-2)

என்று 'குறி' என்ற சொல்லை இருமுறை கையாண்டதால் 'குறிஎயினி' என்ற பெயர் பெற்றார். குறிஞ்சி நிலத்தில் பிறந்தவள் என்பதால் அடைச் சொல்லாகக் குறமகள் குறிஎயினி என்ற பெயருடன் வழங்கப்பட்டார்.

"இவர் குறவர் இனத்தில் குறிகூறிச் சிறப்பு எய்திய குடியிற்
பிறந்தமை பற்றிக் குறிஎயினி எனப்படுகின்றார்''.

என்றும் கூறுவர்[10]. இவர் பாடலில் தலைமகன் வரைவு நீட்டித்தவிடத்து ஆற்றுவல் என்பது படச் சொல்லியது, மனை மருண்டு வேறு பாடாயினாய் என்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியதூ உமாம் என்று துறை வகுப்பர். இவர் பாடலில்.

சேணுறத் தோன்றும் குன்றத்துக் கவாஅற்
பெயலுழந் துலறிய மணிப்பொறிக்குடுமிப்
பீலி மஞ்ஞை ஆலும் சோலை
அங்கண் அறைய அகல்வாய்ப் பைஞ்சுனை
உண்கண் ஒப்பின் நீலம் அடைச்சி
நீரலைக் கலைஇய கண்ணிச்
சாரல் நாடனொடு ஆடிய நாளே

(நற்.357:4-10)

என்று பாடலில் குறிஞ்சி நில முதற்பொருளான மலையும் அந்நிலக்கருப்பொருளாகிய, மயில், சோலை, நீலமலர் போன்றவையும் சுட்டப்படுகின்றன. எனவே இவர் குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்தவராதல் திண்ணம். பாடலில் குறிஞ்சிக்குரிய உரிப்பொருள் அமைய,

"........................................என் குறிப்பு
பென்னொடு நிலையாதாயினும் என்றும்
நெஞ்சுவடுப் படுத்துக் கெடஅறியாதே"

(நற்.357:1-3)

என்று பாடியதும் குறிஞ்சி நிலத்தூரவர் என்பதை உறுதிப்படுத்தும்.

## 2. சோழநாட்டுப் புலவர்கள் :

### 1. ஆதிமந்தியார் :

இவர் பாடிய பாடல் ஒன்று குறுந்தொகையில் 20-ஆம் பாடலாக இடம்பெற்றுள்ளது. இவர் பெயர் 'ஆதிமந்தி' என்றும், 'ஆதிமந்தியார்' என்றும் காணப்படுகிறது. ஆதிமந்தியாரின் பெயர்,

> ''ஆதிமருதியார் என்று இருந்திருக்கலாமென்றும் பிறர் கைப்பிழையால் அப்பெயர் ஆதிமந்தியார் என்று மாறியிருக்க வேண்டும்''

என்பர் உ.வே.சாமிநாதையர்[11].

> '' 'ஆதிமந்தி' என்னும் தொடரில் ஆதி மந்தி என்று இரு சொற்கள் உள, இதில் 'ஆதி' என்பது பெண்பாற் பெயர், திருவள்ளுவரின் தாய் பெயர் ஆதி என்பதும் ஈண்டு நினைக்கற்பாலது, திருக்குறளில் வரும் ஆதிபகவன் என்ற தொடரில் 'ஆதி' என்பதும் பெண்ணைக் குறிப்பதாகிறது. 'மந்தி' என்பது பெண்ணைக் குறிப்பது. இஃது இடக்கரடக்கப் பெயராகப் பெண் உறுப்பைச் சுட்டுகிறது[12]''.

ஆதலின் ஆதிமந்தி என்ற பெயர் பெண்ணைக் குறிப்பதாக விளங்கியிருக்க வேண்டும். ஆதிமந்தியார் திருமாவளவன் எனச் சிறந்து விளங்கிய கரிகாற் சோழனின் மகள் என்றும் ஆதிமந்தியாரைப் பற்றி எழுதிய உரை நூல்களும்,

ஆய்வுகளும் குறிப்பிட்டுள்ளன. ஆதிமந்தியார் மணமானவர், ஆட்டனத்தி இவள் கணவன். இவன் சேர நாட்டரசன். கழாரென்னுமூரில் ஓடிய காவிரியின் முன்துறையில் ஒரு விழாவில் அத்தியுடன் நீரில் விளையாடிக் கொண்டிருக்கையில் அவனை ஆறு அடித்துக் கொண்டு போய்விட்டது. அப்பொழுது மருதி என்பவள் கடல் வாய்ப்பட்டிருந்த ஆட்டனத்தியை இவளுக்குக் காட்டினாள் என்பதை,

"மன்னன் கரிகால் வளவன் மகள் வஞ்சிக்கோன்
தன்னைப் புனல் கொள்ளத் தான்புனலின் பின் சென்று
கன்னவி றோளாயோ வென்னக் கடல் வந்து
முன்னிறுத்திக் காட்டவவனைத் தழீஇக் கொண்டு
பொன்னங் கொடி போலப் போதந்தாள்[13]"

என்று இளங்கோவடிகள் கூறுவர். கண்ணகி வஞ்சினம் கூறுகையில் தான் பிறந்த காவிரிப்பூம்பட்டினத்திலுள்ள கற்புடை மகளிர் பெருமையைக் கூறும் முகமாக ஆதிமந்தியாரின் கற்பைச் சிறப்பித்துக் கூறுவதாக இளங்கோ பாடுகிறார். இவர் சங்க காலத்தில் வழங்கிய வாய்மொழி வரலாற்றைப் பதிவு செய்துள்ளார்.

பெண்பாற் புலவர்களில் காலமறியக்கூடிய புலவர் ஒருவருமிலர். கரிகாலனின் மகள் என்பதால் கரிகாற் பெருவளத்தான் வாழ்ந்த காலமாக,

"கி.பி.55 முதல் 95 வரையிற் கரிகாற் பெருவளவனென்று ஒருவன் இருந்தானென்று சிலாசாசன ஆராய்ச்சியாளர்கள் குறிப்பிடுகின்றனர்[14]".

அதனால் அவன் மகளாகிய இவர் காலமும் இக்காலம் என்று துணியப்படும். இவர் பாடிய பாடல் ஒன்றிலிருந்து இவர் வாழ்க்கையை அறிதல் இயலாது. இவர் பற்றியறியச் சங்கப் பாடல்களும் (அகம். 45, 76, 135, 222, 236, 276, 396), சிலப்பதிகாரமும் ஆதாரமாகின்றன.

ஆதிமந்தியார் பாடிய பாடல் அவரின் வாழ்க்கை நிகழ்ச்சியைச் சுட்டுகின்றது. இவர் பாடிய பாடல் அகப்பாடல் என்பதால்,

"தம் எழுதும் அகப்பாடல்களில் தம்மைக் காட்டார், தம் பாடல் மக்கட் பொதுமை ஆக வேண்டும் என்று தம்மை மறைத்துக் கொள்வர். ஆதிமந்தியாரும்........ அங்ஙனம் தம்மைப் புலப்படுத்தாது, புலப்படுத்தக் கூடாதென்று அகம் பாடிய பெண்பாற் புலவர்".

என்பர் முனைவர் வ.சுப.மாணிக்கம்[15]. கணவனைக் காணாது தேடிய போது,

"மள்ளர் குழீஇய விழவினானும்," (குறுந். 31:1) என்ற குறுந்தொகைப் பாடலைப் பாடியுள்ளார். இக்கருத்திற்கு வெள்ளி வீதியாரின்.

"காதலற் கெடுத்த சிறுமையொடு நோய் கூர்ந்
ஆதிமந்தி போலப் பேதுற்று
அலந்தனென் உழல்வென் கொல்லோ பொலந்தார்க்"
(அகம்.45:14-15)

என்ற பாடலடிகளில் ஆதிமந்தியின் பெயரைக் குறிப்பிட்டுப் பாடுவதால் அவர் கணவனை இழந்து தேடியது அக்காலத்தில் வாய்மொழியாக வழங்கியதை அறியமுடிகிறது. இச்செய்தி ஆதிமந்தியாரின் வாழ்க்கையைத் துணிவதற்குச் சான்றாகின்றது. தலைவனைக் காணாது வருந்திய பாடல் பல இருக்கப் புலவரின் பெயரைச் சுட்டிப் பாடுவதால் இஃது ஆதிமந்தியாரின் உண்மை வாழ்க்கை நிகழ்ச்சி என்பது புலனாகும்.

ஆதிமந்தியாரின் வாழ்க்கையைப் பற்றி முரண்பட்ட கருத்து இது வரையில்லை; தெளிந்த ஓடையான ஆதிமந்தியின் வாழ்க்கையில் புதிதாகப் பகர வாய்ப்பில்லை. இவர் அரசகுலப்பெண். கரிகாலன் மகள், ஆட்டனத்தி இவள் கணவன். இவனைக் காவிரிமுன்றுறையில் இழந்து ஆதிமந்தி தேடினாள். இவர் வெள்ளி வீதியாருக்கு முந்தியவர். எனவேதான் அவரின் வாழ்க்கை நிகழ்ச்சியை வெள்ளிவீதியார் பாடினார். ஆதிமந்தி பிறந்தது சோழ நாட்டில், மணம் செய்து கொண்டது சேர நாட்டில், கணவனை இழந்தது காவிரிமுன்றுறையில், எனவே அவர் வாழ்வும் தாழ்வும் சோழ நாட்டிலேயே நிகழ்ந்தன ஆதலின் இவர் சோழ நாட்டுப் புலவர் என்று கொள்வது சாலும்.

## 2. கழார்க் கீரன் எயிற்றியார்

இப்பெண்பாற் புலவர் குறுந்தொகையில் இரண்டும் (35, 261), நற்றிணையில் இரண்டும் (281, 312), அகநானூற்றில் நான்குமாக (163, 217, 235, 294) எட்டுப் பாடல் பாடியவர். இப்பெண்பாலரின் பெயரில் பயிலும் 'கழார்' என்பது ஊர்ப் பெயர். 'காவிரிகடலொடு கலக்குமிடத்தில் உள்ள வளமான நிலம் கழார்[16]'. அஃது இப்புலவர் பிறந்து வாழ்ந்த இடமாக இருத்தல் வேண்டும். இவர் பாடிய நற்றிணைப்

பாடலொன்றில் 'கழார்' என்ற ஊரைப் பாடியிருக்கிறார். இப்பாடல்,

"வெல்போர்ச் சோழர் கழாஅர்க் கொள்ளும்
நல்வகை மிகுபலிக் கொடையென உகுக்கும்"

(நற்.281:3-4)

என்று சோழ நாட்டிலுள்ள கழார் நகரின்கண் மக்களால் வழங்கப்பெறும் பலிச் சோற்றை நினைத்திருக்கும் காக்கை என்று பாடுவதால் இவர் சோழ நாட்டுப் புலவர் என்று அறியப்படும். இதற்கு அரணாக ஔவை சு.துரைசாமிப்பிள்ளை.

"கழார் என்னும் ஊர் சோழ நாட்டில் காவிரியின் வடகரையில் இருந்தது என்றும் ........கழார் என்ற பெயர் மாத்திரம் களார் என்று சிதைந்து அப்பகுதியிற் கிடைக்கும் கல்வெட்டுக்களில் "உலகுடை முக்கோக் கிழானடி வளநாட்டுக் களார்க் கூற்றம் என்றும்," இராசாசிராய வளநாட்டுக் கழார்க் கூற்றம் எனவும் கல் வெட்டுக்கள் ....... குறித்துள்ளன[17]".

என்பர். இதனால் இந்நல்லிசைப் புலவர் இந்நாட்டைப் பாடினார் என்றும், இவ்வூரைச் சேர்ந்தவர் என்றும் உறுதியாக வெளிப்படும். இப்புலவரின் பெயரில் வரும் 'கீரன்' என்பது இவரது கணவர் பெயர் என்று ஔவை சு.துரைசாமிப் பிள்ளையும்[18], பின்னத்தூர் நாராயணசாமி அய்யரும்[19] எழுதுவர். மொ.அ. துரையரங்கசாமி 'கீரன்' என்பது இயற்பெயராகவோ தந்தையின் பெயராகவோ இருத்தல் வேண்டும் என்பர்[20]. இவர்கள் கருத்துக்கு உறுதி செய்யப் போதிய சான்றில்லை. சங்கப் புலவர் பெயர்கள் தந்தையின் பெயருடனும் (பெருங்கோழி நாய்கன் மகள் நக்கண்ணையார்); தொழில் பெயருடனும் (மதுரை ஆசிரியர் கோடங்கொற்றனார்), வருவதால் இப்பெயர் யாரைக் குறிக்க வழங்கியது என்று அறுதியிட்டுக் கூற இயலவில்லை.

எயிற்றியார் என்பது இவரின் இயற்பெயர். எயிறு என்ற சொல் பல்லைக் குறிக்கும். இப்பெயரில் எயிற்றியனார், புல்லாற்றூர் எயிற்றியனார், கழார்க்கீரன் எயிற்றியனார் எனப் பலர் உள்ளனர். எயிற்றியார் என்பது பாலைத் திணை மக்கட்கு வழங்கும் பொதுப் பெயர். 'இப்பெயர் மக்கட்குரிய இயற்பெயராக வழங்கியது விலக்கப்படவில்லை' என்று கருத்தும் உளது[21]. இவர் பாடிய பாடலில்,

"இணரிறுபு உடையும் நெஞ்சமொடு புணர்வுவேட்டு
எயிறு தீப் பிறப்பத் திருகி
நடுங்குதும் பிரியின்யாங் கடும்பனி உழந்தே"

(அகம்.217:18-20)

என்று பாடுவதால் பாடல் சிறப்புக் கருதிப் பெற்ற பெயர் என்று கருத இடமுளதெனினும், மற்ற புலவர்களின் பெயர்கள் இக்கருத்திற்கு முரணாகின்றன. சங்க காலப் பெயர்களில் கண், காது முதலிய உறுப்புகளைப் பெயராகக் கொண்டது போல் 'எயிறு' என்ற உறுப்பையும் பெயராகக் கொண்டனர் என்பது பொருத்தமுடையதாகும்.

இவரை வாய்க்கு வெளியே நீட்டிக் கொண்டிருக்கும் பெரும் பற்களை (முன் பற்கள் நான்கு) உடையவர் என்றும், அதன் காரணமாக இவர் 'எயிற்றி' என்று பெயர் பெற்றுப் பின் புலமைத் திறத்தால் 'ஆர்' ஈறு கொடுத்து வழங்கும் உயர்வுபெற்றிருக்க வேண்டும். இன்றும் மக்களிடையே ஊரக வழக்கில் பற்கள் நீண்டவர்களைப் 'பல்லுப் பயல்' என்று பட்டப் பெயரிட்டு வழங்கும் வழக்குளது, அதனால் பெற்றோரிட்ட பெயர் மறைந்து பட்டப் பெயரால் இவர் வழங்கப்பட்டாராதல் வேண்டும்.

இம்மெல்லியலாரை "வாடை பாடிய புலவர்" என்பர் அறிஞர் வ.சுப.மாணிக்கம்[22]. இவர் பாடிய பாடலனைத்தும் அகத்துறை சார்ந்தன. களவில் ஒன்றும், கற்பில் ஏழுமாகப் பாக்கள் அமைந்துள. இவர் பாடல்களில் பாலைத் திணைப்பாக்கள் மிகுதி. அப்பாடல்களில் தலைவன் செல்லும் பாலை நிலத்தைப் பாடவில்லை. தலைவியது தனிமையையே பாடியுள்ளார்.

"பாலைப் பொருள் பாடுவதில் புதுக்கூர்மையுடையவர். பொதுவாகப் பாலைப் பொருள் பாடும் புலவர்கள் கோடைக் காலமும் பாலைச் சுரமும் பற்றிப் புனைவர், நீரும் நிழலும் இல்லாத வழியில் தலைவன் செல்லுவதை நினைத்துத் தலைவி பெருந்துயர் உறுவதாகக் காட்டுவர். அத்தகைய பொதுப் போக்கு இவரிடமில்லை. இவர் இப்புனைவுக்கு மேற் கொண்டவை மருதநிலமும் வாடைக் காலமும் ஆம்[23]"

என்று எயிற்றியாரை அறிஞர் சுப. மாணிக்கம் 'வாடைபாடிய புலவர்' என்று பெயரிட்டுக் காட்டுவர். இவர் பாடல் அனைத்தும் பெண்மையின் பிரிவுத்

துன்பத்தை வெளிப்படுத்தும் அனுபவத்தையே பாடுகின்றன. ஒரு பெண்ணாக இருந்து பெண் அனுபவித்த நிலையைப் பாடியதால் இவர் பெண்பாற் புலவர் என்பதற்கு ஐயமில்லை.

## 3. காவற் பெண்டு

புறநானூற்றில் ஒரு பாடல் (86) பாடியவர் காவற்பெண்டு. இப்பாடல் வாகைத்திணை ஏறாண்முல்லைத்துறையினது. இவர் பெயரில் பயிலும் 'பெண்டு' என்ற சொல் 'பெண்மகள்', 'மனைவி[24]' என்ற பொருள் பயக்கும். காவற்பெண்டு எனும் சொல் 'செவிலி', 'செவிலித்தாய்[25]' என்ற பொருள் குறித்தது. 'காவற்பெண்டு' பெயர் இயற்பெயரன்று, தொழிலால் பெற்ற பெயர். இக் காவற்பெண்டு என்ற சொல் மணிமேகலையில் ஆளப்பட்டிருக்கிறது. மணிமேகலையில், 'காவற்பெண்டிர் கடிபகையெறிந்து[26]' என்ற அடிக்குச் 'செவிலித்தாயர்[27]' என்றெழுதுவதால், காவற்பெண்டு செவிலித்தாய் என்பது புலனாம். சங்க மரபைத் தழுவிய சிலப்பதிகாரமும், மணிமேகலையும் காவற் பெண்டு என்று குறிப்பிடுகின்றன. இதனால் சங்க இலக்கியம் கூறும் காவற்பெண்டு தொன்று தொட்டு மரபு தழுவிக் காப்பிய காலத்திலும் செவிலித்தாயைக் குறித்தமையை அறிய முடியும். தலைவியைப் புறம் போகாது காத்த முதுபெண்டிர் செவிலி என்றும், தலைவனைப் புறம்போகாது இளமையில் காத்த பெண்டிர் காவற் பெண்டு என்றும் அழைக்கப்பெற்றனர்.

"இவர் பெயர் காவற்பெண்டா? காதற்பெண்டா? எனின் காவற்பெண்டு என்பதற்குக் காதற்பெண்டு என்ற பாடபேதமுளது[(28)]". இது பெண்மகன் மேல் அன்பு கொண்டவள் என்ற பொருள் தரும், எனினும் ஏடு பெயர்த்தெழுதுவோர் 'வகரம்' 'தகரமாக' எழுதினர். காதற்பெண்டு எனக் கொண்டால் போருக்குச் சென்றவன் கணவனாக இருந்திருக்க வேண்டும். ஏடு பெயர்த்தெழுதியோர் நக்கண்ணையார் பாட்டைத் தொடர்ந்து காவற்பெண்டு பாட்டைத் தொகுத்துள்ளனர். இப்பாட்டு, போரவைக் கோப்பெருநற்கிள்ளியைப் பற்றியதாதலாலும் இப்பாட்டைப் பாடியவர் பெண் என்பதாலும், பாடலில் 'சிற்றில் நற்றூண்' (புறம்.86:1) என்று பாடியதால், இப்பாட்டு பெருநற்கிள்ளி மீது கொண்ட காதலால் பாடியது எனக் கருதிக் 'காதற்பெண்டு' என்று தவறுதலாக எழுதிவிட்டனர். இஃது அவர்கள் "ஈன்ற வயிறோ இதுவே" (86:5) என்ற அடியை

நோக்காமையான் விளைந்த பிழையாகும். ஆகையால் 'காவற்பெண்டு' என்ற பாடமே பொருத்தமுடையதாகும்.

பதிப்பாசிரியர் உ.வே.சாமிநாதையர், 'இவர் சோழன் போரவைக் கோப்பெரு நற்கிள்ளியின் செவிலித்தாய் என்று தெரிகிறது' என்பர்[29]. அவர் எவ்வடிப்படையில் இவ்வாறு கருதினர் என்பது புலனாகவில்லை. அறிஞர் உ.வே.சாமிநாதையர் இம்முடிவுக்கு வந்தமையை ஆராய்ந்து,

"புறநானூற்றில் சில பாடல்கள் (80-85) போரவைக்
கோப்பெருநற்கிள்ளியைச் சிறப்பித்ததைக் கொண்டு ஐயரவர்கள்
இவ்வாறு கருதியிருக்கக் கூடும்"

என்று வாழ்வியற் களஞ்சியம்[30] கூறுகிறது.

பாக்கள் தொகுப்பில் குறுநில மன்னர்களின் பாக்கள் தொகுக்கப்பட்ட இடத்தில் போரவைக் கோப்பெருநற்கிள்ளியை நக்கண்ணையார் பாடிய பாடல்கள் (83, 84, 85) தொகுக்கப்பட்டுள்ளன. தொடர்ந்து காவற்பெண்டு பாடிய 86-ஆம் பாடல் தொகுக்கப்பட்டுளது. இவ்விடத்தில் சோழன் போரவைக் கோப்பெருநற்கிள்ளியின் செவிலித்தாய் இவர் என்பதால் அமைக்கப்பட்டதா? குறுநில மன்னனாக இருந்த கிள்ளியைப் பாடியமையால் ஈண்டு தொகுக்கப்பட்டது என்பதை அறியப் போதிய சான்றில்லை.

பாடலில் உன் மகன் எங்கே? என்று வினவிய போது "ஈன்ற வயிறோ விதுவே" (86:5) என்றடி, பெற்ற தாய் பேசுவதாகத் தோன்றினும், 'நற்றாய்க்கும் தனக்கும் வேறுபாடின்மையின் கூறினாள்' என்பர் உ.வே.சாமிநாதையார்[31]. 'செவிலித்தாய் என்பவள் ஐவகைத் தாயருள் வளர்த்த தாய்[32]' என்பதால் அன்பின் மிகுதியால்,

"............................என் மகன், என்றும் (86:2)
ஈன்ற வயிறோவிதுவே (86:5)

என்றும் பாடினார் எனக் கோடல் தகும்.

சங்க இலக்கியத்தில் பெண்பாற் புலவர்கள் பாக்களில் பாடியவர் வாழ்ந்த இல்லக் குறிப்பை வெளிப்படுத்தும் பாடலில் அம்மையார் பாட்டும் ஒன்று. இவர் வாழ்ந்த இடம் 'சிற்றில்' ஆகும். அங்குள்ள 'நற்றூண்' பற்றி என்று சிறுவீட்டில்

தூணைப் பற்றிக் கொண்டு நின்றார் என்பதால் இவள் செவிலித்தாயே என்பது உறுதி. அவள் தனக்குஉரிமையுள்ள சிறிய இல்லத்தில் இருந்தபோது, அவள் வளர்த்த மகனைப் பற்றிய வினாக் கேட்கப்பட்டது. வினவ வந்தோர் தூணைப்பற்றிக் கொண்டு நின்றுள்ளனர். இதனை ஓர் ஓவியம் வரைவதுபோலக் காவற்பெண்டு பாட்டைப் புனைந்திருக்கிறார்.

இப்புலவர் சோழநாட்டைச் சேர்ந்தவர். இது உ.வே.சாமிநாதய்யர் கூறும் சோழன் கோப்பெருந்றகிள்ளியின் செவிலித்தாய் இவர் என்பதால் அறியப்படுகிறது. இவர் பாடலால் இவர் பற்றி வேறு செய்திகளையறிய இயலவில்லை.

## 4. தாயங்கண்ணியார்

சங்கச் சான்றோரில் தாயங்கண்ணனார் என்ற ஆண்பாற்புலவர் போன்று தாயங்கண்ணியார் என்ற பெண்பாற் புலவரொருவர் உளர். இவர் புறநானூற்றில் 250-ஆம் பாடலைப் பாடியவர். 'கண்ணியார்' என்பது இயற்பெயர். தாயன் என்பது தந்தையின் பெயர். தந்தையின் பெயருடன் சேர்த்து அழைக்கப்பட்ட புலவர்[33].

"தாயங்கண்ணனார் என்ற பெயரில் பல புலவர்கள் வாழ்ந்ததால் அவரிலிருந்து வேறுபடுத்த எருக்காட்டூர் தாயங்கண்ணனார் என்றொரு புலவர் திகழ்ந்தார். இவ்வெருக்காட்டூர் சோழ நாட்டுத் தஞ்சை சில்லாவில் நன்னிலம் தாலுகாவிலுள்ளது[34]"

என்பர் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை.

"இவ்வூருக்கும் தாயங்கண்ணியாருக்கும் தொடர்புடையதாகக் கருதி, தாயம் என்பது உரிமை என்று பொருள்படும். எருக்காட்டூரைத் தாயமாகப் பெற்ற பெருமை மிக்கக் குடியோடு தொடர்புடையவர்"

என்பர் புலவர் கா.கோவிந்தன்[35] ந.சஞ்சீவி இவரைச் சோழ நாட்டுப் புலவர் வரிசையில் சேர்ப்பர்[36].

'தாயங்கண்ணியார்' என்ற பெயரைத் தாய், அம், கண்ணி, ஆர் என்று பிரிக்கலாம். 'தாய்' என்பது அன்னையைக் குறிக்கும். அம் சாரியை, கண்ணி மலர்க்கொத்து, இவை சேர்த்து அமைந்த பெயர் தாயங்கண்ணியார். 'தாயன்'

என்பது தந்தையின் பெயர் என்று கொள்வதைவிடப் புலவர் பெயர் என்பதே பொருத்தமாகும். 'தாயம்' என்று ஒரு சொல்லாகக் கொண்டு தாயவுரிமையுடைய கண்ணியார் என்று இவரைக் கொள்வதும் ஒவ்வும்.

இவர் பற்றியறிய இவர் பாடிய (250) புறப்பாடல் ஒன்றே உள்ளது. வேறு பாடலில் தாயங்கண்ணனார் சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவனைப் பாடியுள்ளார். தாயங்கண்ணனார் சோழ நாட்டுப்புலவர் என்பதால் தாயங்கண்ணியாரும் சோழ நாட்டுப் புலவராவர். இவர் பாடிய பாடல் பொதுவியல் திணை, தாபதநிலைத் துறையில் அமைந்தது. பாடலில், தலைமகன் இருந்தபோது புலவர்க்கீந்து வாழ்ந்த செல்வக்குடி, தலைமகன் இறந்ததால், "கூந்தல் கொய்து குறுந்தொடி நீக்கி அல்லியுணவின் மனைவியோடினியே புல்லென்றனையால் வளங்கெழுதிருநகர்" (புறம் 250:4-6) என்று பாடுவதால் தலைவன் இருந்த நிலையில் அங்குச்சென்று, பின் இறந்த நிலையில் அவ்வில்லம் சென்று அந்நிலையைப் பாடினார் என்பது பெறப்படுகிறது.

## 5. பெருங்கோழி நாய்கன் மகள் நக்கண்ணையார்

'கண்ணன்' என்பதன் பெண்பாற் பெயர் 'கண்ணை' என்பதாகும். 'ந' என்ற சிறப்புச் சொல்லும், 'ஆர்' என்ற மரியாதை விகுதியும் பெற்று நக்கண்ணையார் எனப்பட்டார். இவர் பெயர் புறநானூற்றில் பெருங்கோழி நாய்கன் மகள் நக்கண்ணையார் என்றுள்ளது. இவர் பெயர் அகநூல்களில் நக்கண்ணையார் எனச் சுட்டப்பட்டுளது, இருவரும் ஒருவர் என்ற கருத்தை உ.வே.சாமிநாதையரும்[37] ஔவை சு.துரைசாமிப்பிள்ளையும்[38], ந.சஞ்சீவி[39], தாயம்மாள் அறவாணன்[40] கருதுவர். பெ.சு.மணி இருவரையும் தனித்தனிப் புலவராகக் குறிப்பிடுவர்[41]. (பெருங்கோழி நாய்கன் மகள் நக்கண்ணையார், நக்கண்ணையார்). இவர் அகப்பாடல்களைப் பாடியவர் நக்கண்ணையார் என்றும், புறப்பாடல்களைப் பாடியவர் பெருங்கோழி நாய்கன் மகள் நக்கண்ணையார் என்றும் குறிப்பிடுவர். இவ்வாய்வு இருவரையும் ஒருவராக (பெருங்கோழி நாய்கன் மகள் நக்கண்ணையார்) கொண்டுள்ளது. இப்புலவர்,

> "இவர் உறையூரில் வாழ்ந்த வணிக மரபினர், மாநாய்கன் என்ற
> பெயர் இளங்கோவடிகளாற் கூறப்படுவதால் பெருங்கோழி
> நாய்கன் என்பது இயற்பெயராகும்"

என்பர் அறிஞர் ஒளவை சு.துரைசாமிப்பிள்ளை[42]. இவ்வூர் இன்று புதுக்கோட்டை மாவட்டத்திலுள்ள பெருங்களூரே கோழியூரான உறந்தையிலிருந்து வேறுபடுத்த இவ்வூர் பெருங்கோழியூர் எனப்பட்டது. பெருங்கோழியூரில் வாழ்ந்துவந்த பெரிய நாவாய் வணிகர் இவர். மாநாய்கன் என்பது கடல் வணிகத்தைக் குறிக்கும். "இவர் பெயரிலுள்ள 'நாய்கன்' இவர் தந்தை பெருவணிகராக இருந்தமையைச் சுட்டும்[43]" அத்தகைய வணிக மரபில் தோன்றியவர் நக்கண்ணையார்.

இவர் பாடியதாக நற்றிணையில் இரண்டும் (19,87), அகநானூற்றில் ஒன்றும் (252); புறநானூற்றில் மூன்றுமாக (83, 84, 85) ஆறுபாடல்கள் காணப்படுகின்றன.

இவர் பாடிய புறப்பாடல்கள் இவரின் வாழ்க்கையை அறிவிப்பன. உறையூரை ஆண்ட தித்தன் என்பானின் மகன் போரவைக் கோப்பெருநற்கிள்ளி. இவன் நிறைந்த வீரமும், அழகும் கொண்டு விளங்கியவன். இவன் மீது காதல் கொண்டவர் நக்கண்ணையார். அவர் கிள்ளி மீது கொண்ட காதலால் மேனி பசலை பூத்தது; வளையல் கழன்றது; அதனை ஊரார் அறிந்தும் அவனுக்கு மணம் செய்து வைக்கவில்லை (புறம்.83) என்று பாடியுள்ளார். கிள்ளியைக் குறிப்பிடும் போது என்னுடைய தலைவன் என்று குறிப்பிடுகிறார். "இதனை, என்னை புற்கையுண்டும்" (புறம்.84:1) என்பதால் அறியமுடியும். இவர் மேனி பசலை பாய்ந்திருந்ததை 'யாமே, புறஞ்சிறை இருந்தும் பொன்னன்னமே' (புறம்.84:2) என்றடிகள் உணர்த்தும். பெருநற்கிள்ளி மற்போர், விற்போரில் வெற்றி பெற்றதை நேரில் கண்டதை,

> "அஞ்சிலம் பொலிப்ப வோடி யெம்மில்
> முழாவரைப் போந்தை பொருந்திநின்
> றியான்கண் டனனவ னாடா குதலே"
>
> (புறம்,85:6-8)

என்றடிகளால் அறியமுடிகிறது. ஆனால் முடிவில் நக்கண்ணையார் போரவைப் பெருநற்கிள்ளியை மணந்தாரா? என்பது அறிய இயலவில்லை. நக்கண்ணையார் வாழ்க்கை, ஒரு காதல் கதையாக விளங்குகிறது. சோழநாட்டில் ஆதிமந்தி காதல் அவலம் போல நக்கண்ணையார் வாழ்வும் மற்றொரு காதல் கதையாகும். இவர் சோழனைப் பாடியதால் இந்நாட்டுப்புலவராகக் கருதப்படுகிறார்.

## 6. வெண்ணிக்குயத்தியார்

வெண்ணிக்குயத்தியார் புலமைசால் பெண்பாற் புலவருள் ஒருவர். இவர் பெயரில் வரும் 'வெண்ணி' என்பது ஊர்ப்பெயர். இவ்வூர் 'தஞ்சை மாவட்டத்திலுள்ளதோர் ஊர். இது வெண்ணில் என்றும் வழங்கும்[44]'. இவ்வெண்ணி என்பது,

"இக்காலத்தில் கோவிலுண்ணி என்று வழங்கப்படுகிறது.

நீடாமங்கலம் இருப்பூர்தியில் நிலையத்துக்கு மேற்கிலுள்ளது[45]".

குயத்தியார் என்பது குயச்சாதியார்[46] என்பதால் பெற்ற பெயர். இப்பெயர் மரபாற் பெற்ற பெயர்[47] என்றும் கூறுவர். 'குயம்' என்பது,

"வேட்கோவர் குடியிலே சிறந்தார்க்குக் குயம் என்று

பட்டமளித்துச் சிறப்பித்தனர். பின்னர் வேட்கோவர் என்ற

பெயர் மறைய, குயவர் என்பதே குடிப்பெயராயிற்று[48]".

என்பதால் இக்குடியில் பிறந்ததால் பெற்ற பெயர் என்பது அறியப்படும். இவர் பாடிய பாடல் புறநானூற்றில் அறுபத்தாறாம் பாடலாக உளது. இப்பாடலில் வெண்ணிப்பறந்தலையில் சோழன் கரிகாற் பெருவளத்தானுக்கும் சேரன் பெருஞ்சேரலாதனுக்கு இடையே நடந்த போரைப் பாடியதால் 'வெண்ணி' என்ற பெயர் பெற்றார் என்று கருத இடமுளது. இவர் பாடிய பாடலில் சேரன் போரில் பெற்ற தோல்வியையும், அவன் புறப்புண்ணிற்கு நாணி வடக்கிருந்த செய்தியையும் புகழ்ந்து பாடியுள்ளார். அப்பாடலில் சோழனைப்

"நளியிரு முந்நீர் நாவா யோட்டி
வளிதொழி லாண்ட வுரவோன் மருக
களியியல் யானைக் கரிகால் வளவ"

(புறம்.66:1-3)

என்று சோழனைப்புகழ்ந்து பாடித்தோற்ற சேரனையும் புகழ்ந்துப் பாடிப்புலமைக்கு மெருகேற்றியவர். இவர் வேறு பாடல்கள் பாடியிருக்கக் கூடும்; அவை கிடைக்கவில்லை. இதனை,

"..............அவர் பல பாடல் பாடியிருத்தல் வேண்டும். ஆனால்,

நம் முன்னோர்கள் கவனக்குறைவால் பல ஆயிரம் பாடல்கள்

அழிந்தனவாதலின் அவற்றில் அவருடையனவும் சில அழிந்திருக்கக் கூடும்[49]".

என்ற அ.ச. ஞானசம்பந்தத்தின் கருத்துக்காட்டும்.

'வெண்ணி' சோழ நாட்டிலுள்ள ஊர், இவர் பாடிய மன்னன் சோழன் கரிகாற் பெருவளத்தான்; ஆகையால் இவர் சோழ நாட்டில் வாழ்ந்த புலவர் என்பது உறுதி.

## 7. முடத்தாமக்கண்ணியார்

சங்ககாலப் பெண்பாற்புலவரிலொருவர். 'கண்ணி' என்ற பெயருடன் தாயக்கண்ணியார், வெறிபாடிய காமக்கண்ணியார் என்று பெண்பாற்புலவரும் உளர். அவ்வாறே 'கண்ணி' என்ற பெயருடன் முடத்தாமக்கண்ணியாரும் வழங்கப்பட்டுள்ளார். 'கண்ணி' என்ற பெயர் கொண்டு இவரின் இப்பெயர் கண் என்ற,

"உறுப்பால் பெற்ற பெயர் என்றும்
இவர் பெண்பாலர் என்றும் கூறுவார் உளர்"

என்பர் உ.வே. சாமிநாதையர்[50]. அவ்வாறே ந. சஞ்சீவியும் சுட்டுவர்[51].

நச்சினார்க் கினியரும்; 'இயற்பெயர் முன்னர் என்னும் சூத்திர உரையில் 'ஆர்'விகுதிபன்மையொடு முடிதற்கு முடத்தாமக் கண்ணியார் வந்தாரென்பது உதாரணமாகக் காட்டப்பெற்றிருத்தலால் இவர் பெயர் முடத்தாமக்கண்ணியென்று தெரிகிறது[52]".

"கண்ணி என்பதைக் கண்களை உடைய பெண் என்று கொள்ளாமல் தலையில் சூடும் மாலை என்று பொருள் கொண்டு ஆடவர் என்பர். இவ்வாறு பொருள் கொள்ளுதல் தவறு என்பதைக் கண்ணியார் என்பதற்கு முன்புள்ள 'தாமம்' என்ற சொல் தெளிவு படுத்துகிறது. 'தாமம்' என்றால் மாலை என்றே பொருள். 'முத்துத்தாமம் முறையொடு நாற்றுமின்' (மணிமேகலை; 1-49) என்றும், 'முத்துடைத்தாமம்' என்றும் (நாச்சியார் திருமொழி - வாரணைமாயிரம் - 6) வருதல் ஈண்டு எண்ணத்தக்கது. ஒரே பொருளையுடைய சொல் ஒருவர் பெயரைக்குறிக்கவந்தது

என்பது பிழை. எனவே கண்ணி என்பது இப்புலவர் தம் இயற்பெயராகும்[53]''

இப்பெயரில் வரும் முடம் என்ற சொல் வளைவு என்று பொருள். தாமம் என்னும் இடை அணியை அணிந்த அழகான கண்களையுடையவர் என்பதே முடத்தாமக்கண்ணி என்பதன் பொருளாகும். இடையின் இடையைக் குறைக்க வந்த சொல் (கொடி இடையாள்) என்பது போல வளைந்த அழகான இடைக்கு முடம் என்று பொருள் கொள்ளவும் முடியும். 'இம்முடம் என்ற சொல்லைக்கொண்டு இவர் உறுப்பால் ஊனமுடையவர் என்று கூறுவர்[54]'.

இப்புலவர் சோழ மன்னன் கரிகாற்பெருவளத்தானைப் பாட்டுத் தலைவனாகக் கொண்டு பொருநராற்றுப்படை என்ற நூலை 248 அடிகளில் இயற்றியுள்ளார். பெண்பாற்புலவரில் கூடுதலான அடிகளையுடைய பாடல் பாடியவர் இவர் என்ற பெருமைக்குரியவர். 'இவரின் சிறப்பைப் புலப்படுத்தவே 'ஆர்' என்ற விகுதி பெற்ற பல பெயர்கள் இருப்ப இவர் பெயரை உரையாசிரியர்கள் எடுத்துக்காட்டினர்'[55].

இவர் நன்கு இலக்கணப்புலமை மிக்கவர் என்பதற்கு பொருநராற்றுப்படை பாடிய விதமே எடுத்துக்காட்டும். இவர் ஆற்றுப்படையில்

"அறாஅ யாணர் அகன் தலைப் பேர் ஊர்ச்
சாறுகழி வழிநாள் சோறுநசை உறாது,
வேறு புலம் முன்னிய விரகு அறிபொருந"

(1-3)

எனப்பொருநனை அழைத்துப் பாடுகிறார். இவர் பாலையாழின் வருணணையை 19 அடிகளில் பாடியுள்ளார். பாடினியின் வருணனையை 23 அடிகளில் பாடியுள்ளார். இவ்வடிகளில் இவர் பாடினியை,

"அறல்போல் கூந்தல், பிறை போல் திருநுதல்
கொல்வில் புருவத்து கொழுங்கடை டிழைக்கண்" (25-26)

என்றடிகளில் பாடினியின் உடல் அழகினை மிக அழகாகப் பாடுகிறார். இவ்வழகிய வருணனையை ஆண்பாற்புலவர் பாடுவதை விட இவர் மெய்ப்படப்பாடுகிறார். 'விறலி ஆற்றுப்படையைப் போலப் பொருநன் இன்னொரு பொருநனை ஆற்றுப்படுத்துவதாக இந்நூல் அமைந்துள்ளது[56]'.

இதனால் இவர் பெண்பாற்புலவர் என்றும், இவர் சோழ மன்னனைப்பாடியதால் இவரும் சோழநாட்டுப்புலவர் என்றும் கொள்வதில் தவறில்லை.

## பாண்டிய நாட்டுப் புலவர்கள்

### 1. அள்ளூர் நன்முல்லையார்

சங்க காலப் புலவர் பெயர்கள் ஊராலும், தொழிலாலும், உறுப்பாலும் சுட்டப்பட்டுள்ளன. பெண்பாற் புலவர்களில் ஒக்கூர் மாசாத்தியார், கச்சிப் பேட்டுநன்னாகையார், மாறோக்கத்தது நப்பசலையார், வெண்ணிக்குயத்தியார் போன்று அள்ளூர் நன்முல்லையாரும் ஊர்ப்பெயருடன் வழங்கப்பட்ட புலவராவார்.

இவர் பெயரில் 'அள்ளூர்' என்பது ஊரின் பெயர். 'முல்லை' என்ற இயற்பெயருடன் 'நன்' என்ற அடைச் சொல் பெற்றுத் திகழ்ந்தவர். இவர் பெயரில் வரும் 'அள்ளூர்' 'பாண்டிய நாட்டிலுள்ள சிவகங்கைக் கண்ணதோர் ஊர்[57].

இவர் பாடிய பாடலில்,

"..............கொற்றச் செழியன்,
பிண்ட நெல்லின் அள்ளூ ரன்ன என்"

(அகநா.46:13-14)

என்று பாண்டியனைச் சுட்டுவதால் இவ்வூர் பாண்டிய நாட்டிலுள்ள ஊராகும். இவ்வூர் போன்று,

"தஞ்சை மாநாட்டிலுள்ள திருவாலங்காட்டிற்கும். அள்ளூரென்பது பெயரென அவ்வூர்க் கல்வெட்டு (A.R.No.79 of 1926) கூறுகிறது. திருநெல்வேலிக் கல்வெட்டொன்றில் (S.I.I.Vol.V.No.438) அள்ளூர் காணப்படுகிறது."

என்பர் ஔவை சு.துரைசாமிப் பிள்ளை[58]. இவற்றைக் கொண்டு இவர் பாண்டிய நாட்டுப் புலவர் என்பதும் பாண்டி நாட்டிலுள்ள அள்ளூர் இவர் பெயருடன் வழங்கப்பட்டது என்பதும் பெறப்படுகிறது.

இவர் பாடலாகக் குறுந்தொகையில் (32,67,68,93,96,140,157,202,237) ஒன்பது பாடல்களும். அகநானூற்றில் (46-ஆம்) ஒரு பாடலும், புறநானூற்றில் (306) ஒரு

பாடலுமாகப் பதினொரு பாடல்கள் காணப்படுகின்றன. இவருடைய அகப்பாடல்களில் மருதநிலப்புனைவு மிகுதியாதலின் 'இவர் இயல்பில் மருத நில வாழ்க்கையர்' என்பர் வ.சுப. மாணிக்கனார்[59].

புறநானூற்றில் 340-ஆம் பாடல் இவர் பாடியதாக ஔவை சு.துரைசாமிப் பிள்ளை கருதுகிறார். இருப்பினும் உரையில்

> "இப்பாட்டின் குறிப்பில் பள்ளியூர் ஆசிரியர், திரு.கிருட்டிணசாமி
> சேனை நாட்டாரது கையெழுத்துப் படியில் காணப்பட்டது.
> புறநானூற்று அச்சுப்படிகளில் காணப்படவில்லை[60]"

என்று குறிப்பிடுவர். இப்பாடலும் சிதைந்துள்ளது. இவர் பாடிய புறநானூற்றுப் பாடல் 306 மூதின் முல்லைத் துறைப்பாடல். இரு பாடல்களும் பெண்ணை மையப்படுத்திப் பாடப்பட்டுள்ளன.

இப்புலவரைப் பெண்பாற்புலவர் என்று ஔவை சு.துரைசாமிப்பிள்ளை[61], வ.சுப.மாணிக்கம்[62], கா.கோவிந்தன்[63], ஔவை து. நடராசன்[64] ஆகியோர் எழுதியுள்ளனர். ஆனால், ந.சஞ்சீவி[65] இவரை ஆண்பாற் புலவர் வரிசையில் அடக்கியுள்ளார். இதற்கான காரணங்கள் விளங்கவில்லை.

இவர் பாடலில் பூப்பைக் குறிப்பிட்டுப்பாடுவதாலும் ('குக்கூ வென்றது கோழி' (குறுந்தொகை:157)) இவர் பெயரில் 'முல்லை' என்ற இயற்பெயர் கொண்டமையாலும். இவர் புறப்பாடலில் பெண்ணின் வீரம், மகட்பாற்காஞ்சி ஆகியவற்றைப் பாடியிருப்பதும் இவர் பெண் என்பதை உறுதிப்படுத்துகின்றன. இவர் பாடலில் பாண்டிய நாட்டிலுள்ள அள்ளூரைப் பாடியதால் பாண்டிய நாட்டுப் புலவர் என்பது உறுதி.

## 2. ஒக்கூர் மாசாத்தியார்

சங்க காலப் புகழ் பெற்ற ஊர் ஒக்கூர். 'ஒக்கூர்' என்பது ஊர்ப்பெயர். 'சாத்தி' என்பது இயற்பெயர். இவர் அகம், புறம் இரண்டிலும் பாடல் புனையும் திறம் பற்றி 'மா' என்ற அடைச்சொல் பெற்று அழைக்கப்பெற்றவர். ஒக்கூர் என்ற பெயரால் பல ஊர்கள் காணப்படுகின்றன. 'பாண்டிய நாட்டில் திருக்கோட்டியூர்ப் புறத்தேயும்[66]. சிவகங்கைக்கு அருகிலும் இப்பெயரில் ஊர் உளது. இவர் இவ்வூரினர் என்றே அறிஞர் கொண்டுள்ளனர். இவ்வூரின் வழியில் சாலையின்

ஒரு புறத்தே கல்லில் மாசாத்தியாரின் பாடல் எழுதப்பட்டுளது. இதன்மூலம் ஒக்கூர் மாசாத்தியார் இவ்வூரினர் என்பதைப் பொதுப்பணித்துறை அறிவிக்கிறது.

சங்க காலத்தில் சாத்தன், சாத்தி என்ற பெயரில் பலர் வாழ்ந்துள்ளனர். இவர்களில் இவ்வூர்ப் பெயருடன் சேர்த்து ஒக்கூர் மாசாத்தனார், ஒக்கூர் மாசாத்தியார் என்று இருவர் உளர். இவர் பெயரில் வரும்

> "சாத்தன் என்பதற்கு வணிகமரபிலுள்ள ஆணுக்குச் 'சாத்தன்' என்று கூறப்பட்டது போல் பெண்ணுக்குச் 'சாத்தி' என்று பெயர் வழங்கப்பட்டது. ஒக்கூர் மாசாத்தியார் வணிக மரபில் தோன்றியவர்,[67]

சங்க நாளில் பெண் வணிகக் கூட்டத்தில் இருந்தாளா என்பது அறியயியலவில்லை. 'சாத்தன்' என்பது ஐயனாரைக் குறிக்க வழங்கிய பெயர்களில் ஒன்றெனினும் இவர் பாடிய பாடலால் வணிகரிடையே வழங்கிய பெயர் என்று துணியஇடமுளது.

அம்மையார் பாடியதாகக் குறுந்தொகையில் ஐந்து, அகநானூற்றில் இரண்டு, புறநானூற்றில் ஒன்றுமாக எட்டுப்பாடல்கள் உள்ளன. இவர் பாடிய அகப்பொருட் பாடலில் முல்லைத்திணைப் பாக்கள் ஆறு (குறுந்.126,186,220,275, அகநா.324, 384) இவர் பாடிய அகப்பாடல் அனைத்தும் முல்லைநிலம், கார்காலம், முல்லைமலர், என்று பாடல்களில் முல்லை என்ற சொல்லை மிகுதியும் பயன்படுத்தியுள்ளார். வ.சுப.மாணிக்கனார் இவரை 'முல்லைப்புலவர்[68,]' என்றுரைப்பர்.

இவர் பாடலில் தலைவி தலைவனுடன் உடனிருக்க விளையும் அன்புள்ளம் சித்தரிக்கப்படுகின்றது. பாடலில் வணிகக் குடும்பங்களில் நிகழும் பொருள் வயிற்பிரிவைப் பாடுகிறார். இவர் வணிகக் குடும்பத்தைச் சார்ந்தவர் என்பதற்கு,

> "இளமை பாரார் வளனசைஇச் சென்றோர்,
> இவணும் வாரார் எவணரோ"
>
> (குறுந்.126: 1-2)

என்றடிகளில் 'எவணர்' என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ளமை காட்டும்.

சங்க காலப் புலவர்களை நாடு வாரியாகப் பிரித்த ந.சஞ்சீவி ஒக்கூர் மாசாத்தியாரைப் பாண்டிய நாட்டுப் புலவர் பெயர்களில் சேர்த்திலர். பாண்டிய நாட்டில் காணப்படும். 'திருக்கோட்டியூர்ப் புறத்தேயுள்ள ஊரினர்[69,]' என்பதால் இவர் பாண்டிய நாட்டுப் புலவரே யாவார்.

சாத்தனார் என்ற பெயருக்குப் பெண்பாலாகச் சாத்தியார் என்ற பெயரை உருவாக்கிப் பெண்களுக்குச் சங்க கால மக்கள் இட்டிருக்கின்றனர்.

## 3. நல்வெள்ளியார்

'வெள்ளி' என்பது இயற்பெயர். இவர் 'நல்' என்ற அடைச் சொல் பெற்று வழங்கப் பெற்றவர். இவரை மதுரை நல்வெள்ளியார் என்றும் வழங்குவர். 'நல் லொளியார் என்றும் இப்பெயர் சில ஏடுகளில் காணப்படுவதாகத் தெரிகிறது[70], 'வெள்ளியார் என்னும் சுக்கிரனுக்குரிய பெயர் இவருக்காயிற்று போலும்[71], ஔவை சு.துரைசாமிப்பிள்ளை கருதுவர்[72]. 'வெள்ளி' என்ற பெயரில் வெள்ளி வீதியார் என்ற புலவரும் இருந்துள்ளார். நல்வெள்ளியார், மதுரை நல்வெள்ளியார் இருவரும் ஒருவராதலால் இவர் பாண்டிய நாட்டுப் புலவராவார்.

இவர் பாடியதாக நற்றிணையில் இரண்டும் (7,47), குறுந்தொகையில் ஒன்றும் (365), அகநானூற்றில் ஒன்றுமாக (32) நான்கு பாடலுள்ளன. இவர் பாடலில் இவர் பெயர் பற்றிய குறிப்பில்லை.

## 4. நெட்டிமையார்

பெண்பாற்புலவரில் ஒருவர்[73]. இவர் பாடியதாகப் புறநானூற்றில் மூன்று பாக்கள் (9,12, 15) உள்ளன. இப்பாடல்கள் மூன்றும் பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப்பெருவழுதியைப் பாடிய பாடல்கள். இம்மூன்றுப்பாக்களும் பாடண்திணை; இயன்மொழித்துறையன.

> ''புறநானூற்றில் இப்புலவரின் பெயரைக் குறிப்பிடும் போது
> ஆண்பாற்புலவர் பெண்பாற்புலவர் என்று கூறாது இப்பெயர்
> உறுப்பால் பெற்ற பெயர்''

என்பர் உ.வே. சாமிநாதையர்[74]. 'இவர் தம் கவிதை ஒன்றில் நீண்ட இமையை புனைந்துரைத்தமையின் இப்பெயர் பெற்றிருக்கலாம்' என்பர் மொ.அ. துரைஅரங்கசாமி[75].

> ''இமைகள், கண்கள், புருவங்கள் நீண்டு இருத்தல்
> பெண்களுக்கு அழகு சேர்ப்பன. நீண்ட இமைகள்
> உடையவர் என்று உறுப்பால் பெயர் பெற்றுள்ளார்''

என்பர் தாயம்மாள் அறவாணன்[76]. இவ்வாறு உறுப்பின் அழகு கொண்டு

பெண்களுக்குப் பெயரிடுவது இயல்பு என்பதால் நெட்டிமையார் என்பது பெண்பெயர் என்பது ஏற்கத்தகும். இவர் பாடிய பாண்டிய மன்னனைக் காரிக்கிழார் நெடும்பல்லியத்தானார் போன்ற மற்ற புலவர்களும் பாடியுள்ளனர். இவ்வம்மையார் பாடிய 'ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும், பெண்டிரும் பிணியுடையீரும்' என்ற பாடலை எடுத்துக்காட்டிப் (புறம்.9),

"போர்ப்பாடல்களில் பெண், குழந்தை, முதியோர் இவர்களுக்குப் போரில் விலக்கு வேண்டும் என்று சுட்டும் இரக்கம் பெண்ணாகிய நெட்டிமையாருக்கு உள்ளது "

என்று கூறுவர் தாயம்மாள் அறவாணன்[77]. இவர் பாடிய புறநானூறு பத்தாம்பாடலில் பாண்டியனின் வீரம், கொடைப்பண்புகளை பாடியுள்ளார். பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி யாகம் வளர்ப்பதிலும் வல்லவனாக இருந்ததை,

"அருஞ்சீர்த்திப் பெருங்கண்ணுறை
நெய்ம்மலி ஆவுதி பொங்க பன்மாண்
வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி
யூப நட்ட வியன்களம் பலகொல்
யாபல கொல்லோ பெரும வாருற்று"

(புறநா. 15: 18-22)

என்று பாடினார். இதனால் 'பல்யாக சாலை' என்ற சொல் அடையைப் பெயருடன் பெற்றார் என்பதற்கு உண்மைக்காரணம் இவர் பாடலால் அறிய முடிகிறது. இவர் பாண்டியனைப் பாடியதால் பாண்டிய நாட்டுப்புலவராகக் கருத இடமுள்ளது.

## 5. பூதபாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு

புலமைச் சிறப்புப் பெற்ற அரச குலப்பெண் பெருங்கோப்பெண்டு. இவரின் இயற்பெயர் தெரியவில்லை, அவள் பெற்றிருந்த அரச குடும்பத் தகுதிப் பெயரே பெருங்கோப்பெண்டு. இப்பெயர் 'சங்க காலத்தில் பட்டத்துத் தேவியர்[78]' என்ற பொருள் பயக்கும். பாண்டிய மன்னனான பூதபாண்டியன் மனைவி என்பதால் அடையாளம் தெரியக் கணவன் பெயருடன் சேர்த்து வழங்கப்பட்டார். இதனால் அவளுடைய இயற்பெயர் மறைந்துவிட்டது. இப்பூதபாண்டியனுக்கு ஒல்லையூர் தந்த பூதபாண்டியன் என்ற பெயருமுண்டு.

"ஒல்லையூர் பாண்டி நாட்டுக்கு வடவெல்லையாகச் சிறு மலைத் தொடரும் அதன் கண் தோன்றிக் கிழக்கு நோக்கி ஓடிக் கடலில் வீழும் வெள்ளாறும் இருந்தன. அவ்வெள்ளாற்றின் தென்கரைப் பகுதி ஒல்லையூர் நாடு. அதன் தலைநகராகிய ஒல்லையூர் ஒலிய மங்கலம் என்ற பெயருடன் விளங்குகிறது[79]"

இவ்வொல்லையூரைப் பகைவரிடமிருந்து வென்றுகைக் கொண்டதால் ஒல்லையூர் பூதபாண்டியன் என்ற பெயர் பெற்றான். 'நாஞ்சில் நாட்டில் பூதபாண்டி என்ற பெயரில் ஊர் உளது[80]' இம்மன்னன் இறந்த போது இவன் மனைவி பெருங்கோப்பெண்டு தீப்பாய கருதினாள். அப்போது இவளைச் சான்றோர் தடுத்தனர். இதனை,

"பல்சான் றீரே பல்சான் றீரே
செல்கெனச் சொல்லா தொழிகென விலக்கும்
பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான் றீரே"

(புறம்.246:1-3)

என்று பெருங்கோப்பெண்டு பாடியதால் அறியமுடிகிறது. 'உ.வே.சாமிநாதையர் மூப்புடைய மகளிர் தடுத்ததாகச் சுட்டுவர்[81]'. அவ்வாறு தடுத்தும் பெருங்கோப் பெண்டு ஏற்கவில்லை. கைம்மை நோன்பைக்கூறி உயவற் பெண்டீர் வாழ்க்கையை வெறுத்து, காளிகோயிலின் முன்பு,

"நீர்வார் கூந்த லிரும்புறந் தாழப்
பேரஞர்க் கண்ணள் பெருங்காடு நோக்கி
தெருமரு மம்ம தானேதன் கொழுநன்
முழவுகண் டுயிலாக் கடியிடை வியனகர்ச்
சிறுநனி தமிய ளாயினும்
இன்னுயிர் நடுங்குந்த ளிளமைபுறங் கொடுத்தே"

(புறம் 247:5-10)

என்று தீப்பாய்ந்தாள். அப்போது பெருந்தீயில்,

"வள்ளி தழ விழ்த்த தாமரை
நள்ளிரும் பொய்கையுந் தீயுமோ ரற்றே"

(புறம்.246:14-15)

என்று ஈமத்தீ பொய்கைபோலக் குளிர்ச்சியுடையதாக உள்ளது என்று கூறிக்

கொண்டு அவள் உயிரை மாய்த்தாள். பெருங்கோப் பெண்டின் நிலையை ஆராயும் ஆராய்ச்சியாளர்கள்,

> "உயர் குடிப் பெண்களுக்கு உயர்குடி
> விழுமியத்தின் பெயரால் இன்று உள்ளதுபோல்
> அழுத்தம் மிகுதியாக இருந்திருக்க வாய்ப்புண்டு[82]"

என்றும்,

> "கைம்மைக் கொடுமைகளைச் (புற.246) சுட்டிக்காட்டும் அவளுடைய பெண் உணர்வு மதிக்கத் தக்கது. ஆனால் உயவற் பெண்டிரேம் அல்லேம் எனும் பேச்சும் தீயைத் தாமரைப் பொய்கையாக்கலும் ஆணுயர்வுச் சமுதாயத்தின் கற்புக் கருத்தாக்கத்திற்கே அதிகம் துணை செய்கின்றன[83]"

என்றும் கருத்துக் கூறுகின்றனர். இன்றைய நிலைக் கேற்ப எழுதுவதை விடச் சங்க காலத்தில் இந்நிலை எல்லாராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒன்று அதனைத் தாழ்த்திப் பார்க்கவில்லை. பெருங்கோப் பெண்டு அக்காலப் பண்பாட்டுக்கேற்ப நடந்துகொண்டு நல்லபெண்ணாவாள். அவள் இன்றளவும் ஒரு பாடலால் உயர்ந்து விளங்குகிறாள்.

## 6. பொன்முடியார்

இவர் பாடியதாகப் புறநானூற்றில் 312-ஆம் பாடலுள்ளது, ஒரு பாடல் பாடியவர். இவர் பொன்முடியார் என்று பெயர் பெற்றதற்கு,

> "கல்விப் பெருமையும் கவிப் பெருமையையும் நோக்கி அவற்றின் அறிகுறியாக அக்காலத்திருந்த அரசர் ஒரு பொன்முடி அளித்தமையால் இவர் இக்காரணப் பெயர் பெற்றிருக்கலாம் மென்று தோன்றுகிறது."

என்பர் அறிஞர் உ.வே.சாமிநாதையர்[84]. இது பதிப்பாசிரியரின் கற்பனையே அன்றி உண்மையில்லை. இவர் பாடலில்,

> "ஈன்று புறந்தருதல் என்றலைக் கடனே"
>
> (புறம்.312:1)

என்ற அடியால் இவர் பெண்பாலர் என்பது புலனாகும். இப்பாடல்

"பல சான்றோர் கூட்டத்தில் போர் நிகழ்ச்சி பற்றியும், அதன் கண் மக்கள் ஈடுபாட்டைப் பற்றியும் பேச்சுக்கள் நிகழ்ந்த போது பாடிய பாடல் இது[85]"

என்பர். மறக்குடியில் ஒரு தாய் தன் மகனுக்கு யார் யார் என்ன பொறுப்பேற்றுக் கடமைகளை ஆற்ற வேண்டும் என்று கூறுவதாகவும் பாடல் அமைந்துள்ளது. எவ்வாறாயினும் எக்காலத்திற்கும் பொருந்தும் கடமைகளை வரையறை செய்திருப்பது இவரின் மிகச் சிறந்த கல்வியறிவைக் காட்டுகிறது. இவர் பற்றியறிய வேறு சான்றில.

## 7. மதுரை ஓலைக்கடையத்தார் நல்வெள்ளையார்

இவர் பெயர் மதுரை மேலைக் கடையத்தார் நல்வெள்ளையார் என்று காணப்படுகிறது. மேலைக் கடையம் என்பது ஊர் பெயர்.

"இவ்வூர் திருநெல்வேலி மாவட்டத்தில் காணப்படுகிறது. கல்வெட்டுக் காலத்தேயே கடையம் என்பது மேலைக் கடையம் கீழைக் கடையம் என இரண்டாகப் பிரிந்திருந்த செய்தி கல்வெட்டுக்களால் தெரிகிறது. மேலைக் கடையத்தாரான நல்வெள்ளையார் மதுரையில் தங்கி வாழ்ந்தமை பற்றி மதுரை மேலைக் கடையத்தார் நல்வெள்ளையார் எனப்படுவாராயினர்[86]."

'வெள்ளை' என்ற நிறப்பெயர் பெண்பாற் புலவராகக் கருத இடமளித்திருக்க வேண்டும். 'இவரைப் பெண்பாற் புலவரென்று ஒளவை து.நடராசன், குறிப்பிட்டதை பெ.சு.மணி ஏற்பர்[87]. ஒளவை சு.துரைசாமிப் பிள்ளை இவர் பெயரினால் இவர் பெண்பாலென்று ஊகிக்கப்படுகிறது[88]' என்பர்.

இவர் பாடியதாக நற்றிணையில் (250,369) இரண்டு பாடல் உள. இரண்டும் கற்புப் பாடல்கள். பரத்தையரிடம் சென்று வீடு திரும்பும் தலைவனைத் தலைவி ஏற்க மறுத்ததை

"நாறிருங் கதுப்பின்எங் காதலி மாறுற்று
வெரூஉம்மான் பிணையின் ஒரீஇ

யாரை யோஎன் றிகந்துநின் றதுவே"

(நற்.250:8-10)

என்று அஞ்சி ஒதுங்கும் மான் பிணை போல எம்மின் நீங்கினாள் என்று கூறும் தலைவன் கூற்றுப் பாடல் சிறப்பானதாகும்.

## 8. மாறோக்கத்து நப்பசலையார்

இவர் ஊர்ப் பெயருடன் வழங்கப்பெற்ற புலவர்.

"மாறோக்கம்-கொற்கையைச் சூழ்ந்ததொரு நாடு. இதனை
மாறோகம் என்றும் அழைப்பர். இலக்கண ஆசிரியர்
'பெண்மகன்' என்ற சொல் மாறோக்கத்தார் வழங்கிய சொல்[89]"

என்பர். இவர் அப்பகுதியில் பிறந்தவர். இவர் பாடலில் பசலைநோயைக் குறிப்பிட்டுள்ளார். பசலையாவது மகளிர் கணவனைப் பிரிந்த காலத்து அவர்க்கு முன்புள்ள நெற்றியினொளி கெட்டுக் கண்ணாடியில் வாயினாலூதியபொழுது ஆவி படர்ந்து ஒளி மழுங்குவது போல வேறுபட்டுக் காட்டுந்தன்மையே பசலையாகும். இதனை இவர்,

"மணிமிடை பொன்னின் மாமை சாயஎன்
அணிநலம் சிதைக்குமார் பசலை "

(நற்.304;6-7)

என்று பாடியதால் 'பசலை' என்ற பெயர் பெற்று 'ந' என்ற சிறப்புப் பொருளுணர்த்தும் இடைச் சொல்லும், 'ஆர்' விகுதியும் சேர்த்து மாறோக்கத்து நப்பசலையார் என்று வழங்கப்பட்டார்.

இவர் பாடியதாக எட்டுப் பாக்கள் உள்ளன. ஏழு புறநானூற்றிலும் (37, 39, 126, 174, 226, 220, 383) ஒன்று நற்றிணையிலும் (304) காணப்படுகின்றன. இவர் மூவேந்தரில் சோழரையும் வேளிருள் மலையமான் மரபினரையும் பாடியிருக்கிறார்.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை மூன்று (37,39,226) பாடல்களில் பாடியுள்ளார். சோழர் மரபின் சிறப்பு வரலாறான புறாவின் துயர் தீர்த்த வரலாற்றையும் அரண் அமைந்த மூதூரைச் சிதைக்கும் ஆற்றலும் கிள்ளி வளவன் வாய்த்தவன் (37) என்று அரசவாகைத் துறையில் சிறப்பிக்கிறார்.

இமயத்தில் இலச்சினையைப் பொறித்த இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனை அழிக்கும் வலிமையுடையவனே (39) என்றும். சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைச் (226) சாவிலும் பாடியுள்ளார். மலையமான் மறைந்ததையும் குறிப்பிடுகிறார் (280).

சோழமரபினரொடு தொடர்புடைய மாறோக்கத்து நப்பசலையார் மலையமான் மரபினருடனும் தொடர்புடையவர். கடையேழு வள்ளல்களில் ஒருவனான மலையமான் திருமுடிக்காரியை (126) இவர் பாடியுள்ளார். 'இவன் மகனாகவோ, மரபினனாகவோ கூறப்பெறுகிறான்[90]'. மலையமான் சோழிய ஏனாதி திருக்கண்ணனை (174)யும் பாடியுள்ளார். இவர் முள்ளூர் மலையையும், புதிய மலையமான் மன்னனின் மரபைப்பாடும் போது பாட்டின் இடையில், "பொய்யா நாவிற் கபிலன் பாடிய மையணி நெடுவரை" (174:10-11) என்று கபிலரைப் பாராட்டியும் தொடர்புபடுத்துகிறார்.

## 9. வெள்ளி வீதியார்

சங்க காலப் பெண்பாற்புலவரான இவர் 'வெள்ளிவீதி' என்ற இயற்பெயர் கொண்டவர். இவர் பெயரில் வரும் 'வெள்ளி' என்ற பெயருடன் வெள்ளியந்தின்னனார் என்ற ஆண்பாற்புலவர் ஒருவர் உளர். 'இப்பெயர் சங்க காலத்திலேயே வழங்கப்பட்டது[91]. வெள்ளி' என்பது கோளின் பெயர்.

> "வெள்ளி என்பது ஒருகோள். இக்கோள் செல்லும் வழி ஒன்று என்று நினைக்கிறோம். ஆனால் ஞாயிற்றுக்கு வடக்கு, தெற்கு, ஞாயிற்றின் வழி என்று மூன்று வழிகளிலும் வெள்ளி வான்மண்டலத்தில் செல்லும். இதை அறிந்த இன்பத்தால் வெள்ளிவீதி சிறப்பிக்கப்பட்டு வெள்ளி வீதியார் என்ற சங்கப் புலவர் இருந்தார்.[92]"

என்பர் சு.சௌந்தரபாண்டியன். வெள்ளி வீதியார் பாடிய பாடலில், 'தாழையின் வெள்ளிய வேரை வெள்ளிவீழ்து என்றாராக அது வெள்ளி வீதி என்று மருவியிருக்கலாம்[93]' என்ற கருத்தும் உண்டு. இவர் பாண்டிய நாட்டுப் புலவர்[94]. இவர் பெயர்

> "அச்சுப்பிரதியிலும் மதுரைத் தமிழ்ச்சங்க ஏட்டிலும் இல்லை தேவர் ஏட்டில் இவர் பெயர் வெள்ளி விடியலார் என்று காணப்படுகிறது[95]"

என்று ஔவை சு.துரைசாமிப்பிள்ளை கூறுவர். வெள்ளிவீதியார் பெண்பாற் புலவர் என்பதற்கு இவர் பாடலில்,

"ஆதிமந்தி போலப் பேதுற்றலைந்தேன்"

(அகநா. 45:14)

என்று குறிப்பிடுவது நல்லசான்றாகும். ஔவையார் பாடலில்,

"நெறிபடு கவலை நிரம்பா நீளிடை
வெள்ளி வீதியைப் போல நன்றுஞ்
செலவயர்ந் திசினால் யானே"

(அகநா.147: 8-10)

என்று "வெள்ளிவீதி"யின் பெயர் சுட்டப்படுவது கருதத்தக்கது. இவர் பெயரும் 'வெள்ளிவீதி' என்று சங்கம் தொட்டு இருந்தமை பாடலால் உறுதிப்படும்.

வெள்ளி வீதியாரின் காலம் இது என்ற அறியமுடியாமலிருப்பினும், பாடலில் ஆதிமந்தியாரின் வாழ்க்கையைக் குறிப்பிடுவதால் இருவருக்கு சமகாலத் தவராகவோ, பிந்தியவராகவோ இருக்க வேண்டும். ஔவையார் வெள்ளிவீதியாரைப் பாடுவதால் ஔவையாருக்கு முந்தியவராக வேண்டும் மூன்று பெண்பாற் புலவர்களும் ஒரு தொடர்ச்சியாக ஒருவரை ஒருவர் குறிக்கின்றமை குறிக்கத்தக்கது. வெள்ளிவீதியாரிடமும் ஔவையாரிடமும் பெண்பாற்புலவர் என்ற ஒரு தொடர்ச்சியான சிந்தனை இருக்கிறது.

இவர் பாடிய பாடல் பதின்மூன்று; அனைத்தும் அகப்பாடல்கள்; அவை குறுந்தொகையில் ஏழு (27, 44, 130, 149) நற்றிணையில் மூன்று (70, 335, 348), அகநானூற்றில் இரண்டு (45, 362) என்று தொகுக்கப்பட்டுள்ளன.

இவர் பாடிய பாடல் அனைத்தும் பிரிவுத்துன்பத்தைச் சித்திரிப்பன. தலைவன் பிரிந்து சென்றபோது தோழி தேடித்தருவேன் (குறுந்.130) என்றுகூறுகிறாள். அப்பாடலுக்கு உரையெழுதிய உ.வே.சாமிநாதையர் 'தோழி தூதுவிடுவானாகத் தலைமகள் தனது ஆற்றாமையாற் கூறியதுமாம்[(96)], என்று உரை வகுப்பர். அப்பாடல்,

"நிலந்தொட்டுப் புகாஅர் வான மேறார்
விலங்கிரு முந்நீர் காலிற் செல்லார்

நாட்டி னாட்டி னூரி னூரிற்
குடிமுறை குடிமுறை தேரிற்
கெடுநரு முளரோநம் காதலோரே."

(குறுந்.130)

என்று பாடுவர்.

"புலவாட்டி வெள்ளி வீதியும் கணவன் பிரிந்தது பொறாது
அவனிருக்கும் இடந்தேடிப் பாலை வழியில் புறப்பட்டாள்[97]"

என்று வ.சுப.மாணிக்கனார் குறிப்பிடுவர். இதனால் வெள்ளிவீதியார் தலைவனைப் பிரிந்து துன்பம் நிறைந்த வாழ்க்கை வாழும் போது பாடியதாகக் குறிப்பிட வாய்ப்புள்ளது. தலைவன் பிரிந்த நிலையில் துஞ்சாமல் வருந்தியிருந்த தலைவி நிலையையும் (அகநா.46), இவர் புனைவர், அவர்

"பிரிந்தோர் புணர்ப்போரிருந்தனர் கொல்லோ" (குறுந்146:2)
"காம நெரிதரக் கைந் நில் லாவே" (குறுந்.149:6)
"காலே பரிதப்பினவே கண்ணே
நோக்கி நோக்கி வாளிழந்தனவே" (குறுந்.44:1-2)

என்று பிரிவின் நிலையையே பாடியுள்ளார். இவரின் பாடல்களை ஆய்வு செய்த அகத்தியலிங்கம்,

"மனித வாழ்க்கையில் குறிப்பாகப் பெண்ணின் வாழ்க்கையில் காணப்படும் சில முக்கியமான கட்டங்களில், நிகழ்ச்சிகளில் அவர்கள் உள்ளத்தில் ஊறும் பல்வேறு உணர்வுகளையும், உணர்ச்சிகளையும் உரிய வேகத்துடன், உயரிய கவித்துவத்துடன் சங்க மரபுடன் கூறுவன அம்மையாரின் கவிதைகள்[98]"

என்பர். இவர் பாடல்கள் அகக்கேட்பாட்டின் படி

"மக்கள் நுதலிய அகன் ஐந்திணையும்
சுட்டி ஒருவர்ப் பெயர் கொளப்பெறாஅர்[99]"

என்ற இலக்கணத்தின் படி இவர் பாடல் அகப்பாக்களில் தொகுக்கப்பட்டுள்ளன.

## பறம்பு மலையில் வாழ்ந்த புலவர்

### 1. பாரிமகளிர்

பாரிமகளிர் பாடியது புறநானூற்றில் 112-ஆம் பாடல். பாரி மகளிர் பாரி வள்ளலின் புதல்வியர். பாண்டிய நாட்டுப் பறம்பு மலையைச் சூழ்ந்த நாட்டையுடையவர்கள். பாரி, வேளிர் குலத்தவனாதலின் வேள்பாரி என்று வழங்கப்பட்டான். பாரி கேட்பவர்க் கெல்லாம் வாரி வழங்கும் வள்ளல். மனிதர்களைப் பாடாத சுந்தரமூர்த்தி நாயனார் பிரான்மலை (கொடுங்குன்றம்) யைப் பாடும் போது 'கொடுக்கிலா தானைப் பாரியே என்று கூறினும் கொடுப்பார் இல்லை' என்று அவ்வள்ளலை நினைவிற்கொண்டு அத்தலத்தைப் பாடும் அளவிற்குப் பாரி கொடைவள்ளல். இவர் நண்பர் கபிலர். பாரியின் புகழ் நாடெங்கும் பரவியதை அறிந்த பாண்டியர்கள்,

> "பாரியின் புதல்வியை மணம் பேச எண்ணிய போது பாரி
> வள்ளல் மறுத்ததால் இவன் மேல் படையெடுத்தான்[100]"

பறம்பு மலையை முற்றுகையிட்டபோது கபிலர்,

> "ஆடினர் பாடினர் செலினே
> நாடுங் குன்றும் ஒருங்கீயும்மே"
>
> (புறநா.109:17-18)

என்று பாடினார். பாரியின் வள்ளல் தன்மையை அறிந்த மூவேந்தரும் அவன்மீது படையெடுத்தனர், சிலர் பாண்டியர்கள் மட்டுமே படையெடுத்தனர் என்பர். பறம்பு மலையை முற்றுகையிட்டுப் பாரியைக் கொன்று நாட்டைக் கைப்பற்றிக் கொண்டனர். சங்க இலக்கியத்தில் பாரி எவ்வாறு இறந்தான் என்பதற்குச் சான்றில்லை.

> "மூவேந்தரும் நடனமாடுகின்ற கூத்தர் போல வேடம் போட்டுக்
> கொண்டு பாரியிடம் வந்து கூத்தாடிப் பாரி உயிரைக்
> கவர்ந்தனர்[101]"

என்பர் அ.ச.ஞானசம்பந்தன். அவ்வாறே ஆ. சிவலிங்கனாரும்[102] கூறுவர். இவ்வாறு வஞ்சனையால் இறந்த பாரியின் புதல்வியர் பாரி மகளிர் தந்தை இறந்த நிலையில் வருந்தியிருந்த போது, முழு நிலவு அவர்களுக்கு கடந்த காலத்தை நினைவூட்டியது. இது போன்று முன் முழு நிலவில் தந்தையுடன் இருந்ததையும், நாடு தங்களிடம் பால் இருந்ததையும் எண்ணிப்புலம்பி,

"அற்றைத் திங்கள் அவ்வெண்ணிலவின்
எந்தையும் உடையேம்எம் குன்றும் பிறர்கொளார்
இற்றைத் திங்கள் இவ்வெண் நிலவின்
வென்றெறி முரசின் வேந்தரெம்
குன்றுங் கொண்டார்யா மெந்தையுமிலமே"

(புறநா.112)

என்று பாடினர்.

பாரிமகளிர் என்ற பெயர் தந்தையின் சிறப்புக் கருதிப் பெற்றபெயர். பாரிக்குப் புதல்வியர் இருவர் என்பதற்கு, பாரி வள்ளல் இறந்தபின் மகளிரைக் கபிலர் அழைத்துச் சென்ற போது,

"கோறிரண்முன் கைக் குறுந்தொடி மகளிர்
நாறிருங் கூந்தற் கிழவரைப் படர்ந்தே"

(புறநா.113;8-9)

என்றும்,

"ஆய்தொடி அரிவையர் தந்தை நாடே"

(புறநா:117;10)

"இரும்பல் கூந்தன் மடந்தையர் தந்தை"

(புறம்:120;17)

என்றும் பெண்டிரைப் பன்மையில் கபிலர் குறிப்பிடுவதால் இரு புதல்வியர் இருந்தனர் என்பது துணியப்படும். இதனால் "பாரிமகளிர்" என்ற பெயர் பெற்றனர். 'இவர்களின் பெயர்களைத் தமிழ் நாவலர் சரிதையில் 'அங்கவை சங்கவை என்று குறிப்பிடுவர்[103], இப்பெயர் சங்க காலத்தில் வழங்கிய பெயரன்று.

முனைவர் மா.ரா.போ.குருசாமி, இப்பாட்டுக் கபிலர் பாரி மகளிர் சார்பாகப் பாடியது என்ற கருத்தினர். அவர்

"வீரமும் ஈரமும் நிறைந்த தந்தையை இழந்து நிற்கும் கன்னிப் பெண்களின் உணர்ச்சிக் கொந்தளிப்பை அவலக் களஞ்சியமாச் சித்தரிக்கும் இப்பாடல் உலக இலக்கிய அரங்குக்கு உரியது. தற்செயலாகப் பாரிமகளிர் உரைத்ததைக் கேட்ட கபிலர் தாமே அக்கன்னியராகி வரைந்தன இவ்வரிகள் என்பர்[104]."

இக்கருத்து ஏற்றுக்கொள்ளத்தக்கதன்று. சங்ககாலத்தில் பெண்கள் கல்வி அறிவு பெற்றிருந்தனர். பாரி இறந்தபோது சோகத்தில் பாரிமகளிர் பாடல் பாடினர். அரசகுலப் பெண்கள் துன்பியல் பாடல்களை பாடி உள்ளனர். இதற்கு பெருங்கோப்பெண்டு கணவன் இறந்தபோது பாடியது சான்றாகும். அதுபோன்று தந்தை இழந்த சோகத்தில் பாரிமகளிர் பாடியது இப்பாட்டு.

## கொங்குநாட்டுப் புலவர்கள்

### 1. அஞ்சியத்தைமகள் நாகையார்

இவர் பாடல் அகநானூற்றில் 352-ஆம் பாடலாகும். இவர் பாடியனவாக வேறுபாடல்கள் கிட்டில. இவர் பெயர்

> "ஏடுகளில் அஞ்சியத்தை மகள் நாகையார் என்றும் அஞ்சிலாந்தை மகனார் என்றும் பலவாறாகக் காணப்படுகிறது"[105]

அஞ்சியத்தை மகள் நாகையார் என்பது இயற்பெயராயின் இப்புலவர் பெண்பாற் புலவர் என்பது திண்ணம். அஞ்சியான் அத்தை மகள் என்பது புலனாம். இவர் பெயரில் வரும் அத்தை என்ற உறவுப் பெயர் சங்கப் பாடல்களில் பயின்றில. மக்கள் உறவு முறையில் அத்தை என்ற வழக்கு இருந்திருக்க வேண்டும், ஆதலின் இவ்வுறவு முறைப் பெயரால் அமைந்த பெயர் ஒருபெண் பாற்புலவரையே சுட்டுவதாகும். இவர் பாடல் மணமனைச் சென்ற தோழியிடம் தலைவி கூறியதாகும். இப்பாடலில்,

> "கடும் பரிப்புரவி நெடுந்தேர் அஞ்சி"
>
> (அகநா.352:12)

என்று வருவதால் 'அஞ்சி' என்ற கிளவி அதியமான் நெடுமான் அஞ்சியைக் கூறுவதாகும்[106]. இங்குக் காணப்படும் அஞ்சி அதியமான் என்பதற்குப் பாடலில் சான்றில்லை. அஞ்சி என்ற பெயரில் பலர் வாழ்ந்ததை,

> "கொங்குநாட்டின் ஒரு பகுதியான தகடூரைச் சங்க காலத்தில் அதியமான் நெடுமான் அஞ்சி, அதியமான் பொகுட்டெழினி, அதியமான் அஞ்சி, அதியமான் எழினி முதலானோர் ஆண்டு வந்தனர்[107]"

என்பதால் அஞ்சி என்ற பெயரில் பல மன்னர்கள் இருந்தனர் என்பது

அறியப்படும். இப்பெயரில் அஞ்சி என்ற பெயர் அதியமான் நெடுமான் அஞ்சி, அதியமான் அஞ்சி, என்ற இருவருக்கு மட்டும் வருவதால் இருவரையும் ஒருவராகக் கருதி இவர் புனைந்து பாடியது அதியமானை என்று அறிஞர் கருதுவர். இவ்வம்மையாரின் பெயர்க் குறிப்பு அஞ்சி அத்தைமகள் நாகையார் என்றிருப்பது அஞ்சி என்ற பெயருடன் வாழ்ந்த மன்னனுடன் உறவு முறைத் தொடர்பு கொண்டவர் என்பது தெளிவு. இவர் பாடலில்,

"பாடிமிழ் அருவிப் பாறை மருங்கின்
ஆடுமயில் முன்ன தாகக் கோடியர்
விழவுகொள் மூதூர் விறலி பின்றை
முழவன் போல அகப்படத் தழீஇ"

(அக.352:3-6)

என்றும்,

நல்லிசை நிறுத்த நயவரு பனுவல்
தொல்லிசை நிறீஇய உரைசால் பாண்மகன்
எண்ணுமுறை நிறுத்த பண்ணி னுள்ளும்
புதுவது புனைந்த திறத்தினும்"

(அக.352: 14-17)

என்றும், வருவன இவரை இசையறிவு மிக்கவர் என்று காட்டுகின்றன.

'அஞ்சியத்தை மகள் நாகையார்' பாடலில் இசைபற்றியும் நடனம் பற்றியும் குறிப்புகள் உள. 'அஞ்சியின் புகழுக்குரிய செயல்களைப் பாடு பொருளாகக் கொண்டுப் புலவர் செய்யுளியற்றினார், அவற்றிற்குப் பாணர் பண்ணும் திறமுமாக இசைநூலின் எண்ணிய முறையில் இனிமையான பண்ணமைத்துப் பாடினர் (அகம் 352:12-17) என்று குறிப்பிடுவர். இதனால் நாகையார் என்பவர் ஔவையாரைப் போலப் பாண்குடியைச் சார்ந்தவர் என்பது தெளிவாகும்.

'அஞ்சி' என்ற பெயர் அம்மான் முறையாகப் பெற்று விளங்கியமையான், இவரும் அதியமான் மரபினர் ஆதரவு பெற்ற புலவர் என்றும் அப்பகுதியைச் சார்ந்தவர் என்றும் கொள்வதும் ஆராய்ச்சிக்குப் பொருத்தமானது.

## 2. அஞ்சில் அஞ்சியார்

சங்கப் பாடலில் ஒரு பாடல் பாடிய புலவரில் இவரும் ஒருவர். இவர் பாடல் நற்றிணையில் 90-ஆம் பாடலாகத் தொகுக்கப்பட்டுளது. 'அஞ்சி' என்ற பெயரில் அதியமான் நெடுமானஞ்சியும், அவ்வூருடன் தொடர்பு கொண்ட புலவராக அஞ்சிலாந்தையார், அஞ்சிலாந்தை மகனார் என்ற வேறு புலவர்களும் உளர். இப்பெயரில் பயிலும் 'அஞ்சில்' ஊர்ப் பெயர் என்று பின்னத்தூர் நாராயணசாமி ஐயர்[108] கருதுவர். 'அஞ்சில்' என்ற சொல்லை ஔவை சு.துரைசாமிப்பிள்ளை பின்வருமாறு விளக்குகிறார்.

> "அஞ்சில் என்பது இப்போது அஞ்சூர் என்றபெயருடன் தொண்டை நாட்டிலுளது. அதனைக் கல்வெட்டுக்கள் 'சயங்கொண்ட சோழமண்டலத்துக் களத்தூர்க் கோட்டத்துச் செங்குன்ற நாட்டு அஞ்சிலூர் என்றும் அஞ்சூர் உடையான் விண்டன் சாத்தராயன் என்றும் குறிக்கின்றன. அஞ்சில் இச்சான்றோரது இயற்பெயர். இவரது அஞ்சிலூர் அஞ்சியூர் என மருவிப்பின் அஞ்சூர் எனத் திரிந்தது போலும்[109].

இவ்வஞ்சில் அதியரைக் குறிக்க வழங்கிய பெயராதலால் இப்பெண்பாற்புலவர் இக்குடியில் பிறந்தவர் என்பது துணியப்படும்.

> இவர் பாடலில் 'அஞ்சி லோதி' என்ற தொடர் பயிலுகின்றது. இத்தொடரைப் பாடலில் கையாண்டமையால் இவர் பெயர் 'அஞ்சில்' எனப் பெற்றார்.

என்பர் முன்னவர் மொ.அ. துரையரங்கனார்[110]. இவரைப் பேராசிரியர் எஸ்.வையாபுரிப் பிள்ளை[111], ஔவை து.நடராசன்[112] இருவரும் பெண்பாற் புலவராகக் கருதுவர். புலவர் கா.கோவிந்தன்[113], ஔவை சு.துரைசாமிப் பிள்ளையும்[114] இவரைப் பெண்பாற் புலவரென்று சுட்டவில்லை.

இவர் எந்நாட்டினர் என்பதற்குச் சான்று இல்லை, எனினும் இவர் அஞ்சியார் என்று பெயர் பெற்றமையான் இவரும் அதியமான் சார்பு பெற்ற புலவர் என்று கருதல் பிழையாகாது.

## ஔவையார்

சங்க காலப் பெண்பாற்புலவர்களில் தலைசிறந்தவர் ஔவையார். இவரை 'ஒருவர் என்றும், இருவர் என்றும் பலர் எனவும் பல கருத்துக்கள் நிலவுகின்றன[115]'. இவ்வாய்வில் சங்கப் பாக்கள் பாடிய ஔவையார் ஒருவரே ஆராயப் பெறுகிறார்.

ஔவை என்பதற்குத் தாய் என்பது பொருள். 'ஆர்' என்பது சிறப்பை உணர்த்தும் விகுதி. 'இப்பெயரை இயற்பெயரென்றும், காரணப்பெயர் என்றும் கருதுவர்[116].' ஔவை என்பது 'தவப்பெண், தாய், திருவள்ளுவர் சகோதரி' எனவும், ஔவையார் என்பது 'ஔவை, பழைய பெண்பாற் புலவருள் ஒருவர், அவ்வையார்[117]' என்றும் பேரகராதி பொருள் உணர்த்தும். இவற்றில் 'ஔவை' என்பதற்குத் தாய் என்று கொள்வது பொருத்தமானதாகும். இஃது இயற்பெயரா? காரணப் பெயரா? என்பது அறியமுடியவில்லை.

> "ஔவை என்பதற்கு அம்மை என்னும் சொல் அவ்வை எனத்
> திரிந்து, பின் ஆர் விகுதி பெற்று ஔவையாராகியது என்ற
> கருத்தும் உண்டு[118]"

சங்கப் புலவர்களின் காலம் இதுவென்று அறுதியிட்டுக் கூற முடியவில்லை. ஔவையாரைக் 'கடைச் சங்க காலப் புலவர்[119]', கி.பி.இரண்டாம் நூற்றாண்டில் (கடைச் சங்க காலம்) வாழ்ந்தவர் என்ற கருத்தும் உண்டு[120]" இவ்வாறு கருத நத்தத்தனார் சிறுபாணாற்றுப்படையில்,

> "கமழ்பூஞ் சாரல் கவினிய நெல்லி அமிழ்து
> விளைத் தீங்கனி ஔவைக்கு ஈந்த...... அதிகனும்"
>
> (சிறுபாண்)

என்னும் அடிகளால் அதியனிடம் ஔவையார் நெல்லிக் கனி பெற்ற செய்தியைக் கூறும். அந்நூல் கடைச் சங்க காலத்தில் தோன்றியது. அதனால் ஔவையார் சிறுபாணாற்றுப்படை பாடப் பட்ட சங்ககாலத்துக்கு முன் வாழ்ந்த புலவர் என்பது பொருத்தமுடையதாகும்.

இவர் பாடியதாகக் குறுந்தொகையில் பதினைந்து பாடல்களும், நற்றிணையில் ஏழும், அகநானூற்றில் நான்கும், புறநானூற்றில் முப்பத்து மூன்றுமாக ஐம்பத்தொன்பது பாக்கள் உள்ளன. இவர் பெண்பாற் புலவர்களில் அதிக எண்ணிக்கையில் பாக்கள் பாடியவர் என்ற பெருமைக்குரியவர்.

ஒளவையார் வாழ்ந்த காலத்தில் பெருஞ்சித்திரனார், அரிசில்கிழார், பரணர், கபிலர், மோசிகீரனார், மருதன் இளநாகனார், வெள்ளிவீதியார் போன்றோர் வாழ்ந்துள்ளனர். ஒளவையார், அதியமான் கோவலூரெறிந்ததனைப் பரணர் பாடியதையும் (புறநா.96); அகத்தில் தம் கணவரது பிரிவாற்றாது வருந்திய வெள்ளி வீதியைக் குறிப்பிட்டும் (அகநா.147); பாடுவது அவர்காலத்தில் வாழ்ந்ததை அறிவிக்கின்றது. வள்ளலைப் (அதியமான்) பாடியதாலும், ஒளவையார் பாடியவர்களை மற்றபுலவர்கள் பாடியிருப்பதாலும் ஒளவையார் அவர்களுக்குச் சமகாலத்தவராகவோ, பிற்பட்டு வாழ்ந்தவராகவோ இருந்திருக்க வேண்டும் என்பது புலனாம்.

"இவர் சிவனை வழிபடு கடவுளாகக் கொண்டார், வைதீகச் சமயச்
சார்புடையவர் என்று கொள்ளுதல் பொருந்தும்[121]"

என்று கருதுவர். பாடல்களில் பயின்றுள்ள கருத்தினைக் கொண்டு அவரின் வாழ்க்கையை வரையறை செய்து எழுதமுடியாது. எச்சமயத்தார் என்பது புலப்படவில்லை. ஒளவையார் பாணர் குலத்தவர் என்று கருதுவர்[122]

"இழையணிப் பொலிந்த ஏந்து கோட்டல்குல்,
மடவரல் உண்கண் வாணுதல் விறலி"

(புறம்.89:1-2)

என்றடிகளைச் சான்றாக்குவர். இதனை மறுத்துரைப்பவர்

"கிணையர் கூற்றில் பாடுதல் கவிமரபு பாதலின், அங்ஙனம் பாடியது கொண்டு பாண்குடியினர் என்பது பொருந்தாது என்று மறுத்தும் உரைப்பர்[123]".

இக்கருத்துக்களை ஏற்கவும், மறுத்துரைக்கவும் ஒளவையார் பாடல்களைச் சான்றாக்க இயலவில்லை.

"அதியமான் ஒளவையாரிடம் கொடுத்த நெல்லிக்கனியை உண்டதால் அதிக நாள் வாழ்ந்தார் என்ற கருத்து அறிஞர்களிடம் உண்டு[124]".

இக்கருத்து எந்தளவு உண்மையானது என்பது அறிய இயலவில்லை. சங்க காலத்தில் வழி நடையாக நெடுந்தூரம் செல்ல வேண்டியிருக்கும். அவ்வாறு ஒளவையார் அதியமானைச் சந்திக்க நெடுந்தூரம் நடந்து வந்ததால் சோர்வுற்ற

நிலையில் அதியமானைப் பாலைச்சுரத்தில் சந்தித்த போது ஔவையின் சோர்வறிந்து அதியமான் கையில் இருந்த நெல்லிக் கனியைக் கொடுத்தான். உடனே ஔவையார் முகமறிந்து தான் உண்ண வைத்திருந்த நெல்லிக் கனியை வறண்ட நாவுடன் வந்த ஔவைக்குக் கொடுத்து அப்போது உயிரூட்டியதால் ஔவை காலத்தினால் செய்த நன்றியைக் கருதி,

"நீல மணிமிட றொருவன் போல
மன்னுக பெரும நீயே......"

(புறநா.91:6-7)

என்று அதியமானைப் பாடினார் என்று கொள்வது ஏற்கத்தக்கது.

ஔவையார் பாடிய புறப்பாடல்களில் இருபத்து மூன்றுபாடல்கள் அதியமானைப் பற்றியன. அகப்பாடல்களைப் பாடும் போதும் அதியமானைக் குறிப்பிட்டுப் பாடியுள்ளார். இவர் பாடல்களால் அதியமான் கரும்பு கொணர்ந்ததை,

"அரும்பெறல் மரபிற் கரும்பிவட் டந்தும்
நீரக விருக்கை யாழி சூட்டிய"

(புறநா. 99:2)

என்ற அடிகளாலும், அதியமானின் கொடைச் சிறப்பை,

"ஒருநாட் செல்லலம் இருநாள் செல்லலம்
பலநாள் பயின்று பலரொடு செல்லினும்
தலைநாட் போன்ற விருப்பினன் மாதோ"

(புறநா.101:1-3)

என்றடிகளாலுணர்ந்துவர், அதியமான் செல்வமிருந்தபோதும் இல்லாதபோதும் விருந்தோம்பியதை,

"உண்டாயிற் பதங்கொடுத்து
இல்லாயின் உடனுண்ணும்
இல்லோர் ஒக்கல் தலைவன்"

(புறநா.95:6-8)

என்றடிகளாலும், அதியமானின் வீரத்தை,

"எண்டேர் செய்யுந் தச்சன்
திங்கள் வலித்த காலன்னோனே"

(புறநா.87: 3-4)

என்றடிகளாலும், ஔவையார் அதியமானுக்காகத் தொண்டைமானிடம் தூதுசென்றபோது,

"இவ்வே, பீலியணிந்து மாலைசூட்டி"

(புறநா. 95:1)

என்று அதியமானின் போர்கருவிகள் போரிட்டதால் மழுங்கி கொல்லுளையில் இருப்பதாகக் கூறி அதியமானை இகழ்வது போல அவன் வீரத்தைப் புகழ்ந்து பாடியவர். அதியமான் என்ற குறுநில மன்னன் ஔவையார் பாடிய பாக்களால் அவன் வாழ்க்கையைத் தமிழுலகம் அறியத் துணை செய்த பெருமைக்குரியவர்.

ஔவையார் அதியமானைப் பாடியதோடன்றி அவன் மகன் பொகுட்டெழினி, நாஞ்சில் வள்ளுவன், சேரமான் மாரி வெண்கோவும், பாண்டியன் கானப்பேர் தந்த உக்கிரப்பெருவழுதி, சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி என்ற மூவேந்தரும் ஒருங்கிருந்த நிலைகண்டும் பாடியுள்ளார். ஔவையார் அகத்துறையில் ஐந்திணையிலும் பாடல் பாடியுள்ளார். இப்பாடல்கள் பாடல் ஆய்வில் ஆராயப்பட்டுள்ளன.

## தொண்டை நாட்டுப் புலவர்

### 1. கச்சிப் பேட்டு நன்னாகையார்

சங்கச் சான்றோரில் ஊர்ப் பெயருடன் காணப்படும் புலவரில் இவரும் ஒருவர். இவர் பெயரில் 'கச்சிப் பேடு' என்பது இடத்தின் பெயர், 'நாகை' என்பது இயற்பெயர். இவர் 'நல்' என்ற அடையும் 'ஆர்' என்ற பால்காட்டும் ஈறும் பெற்று அழைக்கப்பட்டவர்.

சங்கப் புலவரில் கச்சிப்பேட்டு நன்னாகையார், நன்னாகையர் என்ற புலவர் இருவர். இவ்விருவரையும் ஒருவராகக் கருதுவர் கா.கோவிந்தனும் ந.சஞ்சீவியும். இருவரையும் குறிப்பிடும் போது கா.கோவிந்தன் 'கச்சிப்பேட்டு நன்னாகையார்[125] என்று குறிப்பிடுவர். ந.சஞ்சீவி நன்னாகையார் என்று குறிப்பிடுவர்[126].

உ.வே.சாமிநாதையர் கச்சிப்பேட்டு நன்னாகையார், நன்னாகையார் என்று இருவகையும் வேறு வேறாகக் குறிப்பிடுவர்[127]. அவ்வாறே பெ.சு.மணியும் சுட்டுவர்[128]. உ.வே.சாமிநாதையார் கச்சிப்பேட்டு நன்னாகையார் பாடிய பாடலாக (குறுந்.30, 172, 180, 192, 197, 287) ஆறு பாடலைக் குறிப்பிடுவர். நன்னாகையார் பாடியதாக (குறுந்.118,325) இரண்டைச் சுட்டுவர். கச்சிப்பேடு என்பது நாகையார்

பெயருடன் வழங்குவதால் இருவரும் ஒருவரா? இருவரா? என்ற வினா எழுந்துள்ளது. இவ்வாய்வில் உ.வே.சாமிநாதைரின் கருத்து ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது.

இக்கச்சிப்பேடு என்ற ஊர் "காஞ்சிபுரத்தைச் சார்ந்த ஊர்[129]" என்று கருதுவர். 'கச்சிப்பேட்டு' என்று ஊர்ப் பெயருடன் வழங்கப்பட்ட ஆண்பாற் புலவரான கச்சிப்பேடு இளந்தச்சனாரைத் தொண்டை நாட்டுப் புலவராகக் கருதுவர். ந.சஞ்சீவி இவ்வரிசையில் இப்பெண்பாற் புலவரைச் சேர்க்காதது இவர் 'நன்னாகையார்' என்று குறிப்பிட்டதுதான்.

கச்சிப்பேட்டு நன்னாகையார் என்பது இவர் பெயராகக் கொண்டதால் இவர் தொண்டைநாட்டுப் புலவராவர். இவர் பாடிய பாடல்கள் கற்புக் காலத்தில் தலைவன் பொருள் பிரிவில் பிரிந்து செல்ல அக்காலத்தில் தலைவி வருந்தியிருக்கும் நிலையைச் சித்தரிப்பனவாகவுள்ளன.

## 2. முள்ளியூர்ப் பூதியார்

சங்க காலத்தில் 'பூதன்' ஆண்பெயராகவும் (காவன் முல்லைப்பூதனார்) 'பூதி' பெண்பெயராகவும் வழங்கப்பட்டது. சங்க பெண்பாற் புலவரில் வெண்பூதியார், வெண்மணிப்பூதியாரும் உளர். இவர் 'பூதி' என்பது இயற்பெயராகவும், 'முள்ளி' என்பது ஊர் பெயராகும் ஆக, இரண்டும் சேர்த்து வழங்கப்பட்டவர். இவரைப் பெண்பாற் புலவராக ஔவை து.நடராசனும், பெ.சு.மணியும் சுட்டுவர்[130]. உரையாசிரியரிடையே இப்புலவர் பெண்பாற் புலவர் என்ற கருத்தில்லை.

இவர் பாடியதாக அகநானூற்றில் (173) ஒருபாடலுளது. அப்பாடல் பாலைத்திணை, தோழி கூற்றாக அமைந்துள்ளது. பாடலில் "அறம் தலைப்பிரியாது ஒழுகலும், சிறந்த கேளிர் கேடு பல ஊன்றலும், நாளும் வருந்தா உள்ளமொடு இருந்தோர்க்கு இல் செய்வினை பிரிந்த நெஞ்சினர்" (1-4) என்ற தலைவனின் பண்பு மிக அழகாகப் பாடப்பட்டுளது. நன்னனைப் பற்றிய குறிப்புளது.

## நாடு தெரியாப் புலவர்கள்

### 1. ஊண்பித்தியார்

ஒரு பாட்டுப் பாடிய அகப்புலவரில் இவரும் ஒருவர். இவர் பாட்டுக் குறுந்தொகையில் 232-ஆம் பாடலாகக் கோக்கப்பட்டுளது. ஊண்பித்தியாரின்

பெயர், 'ஊண்பித்தி' என்றும், ஊண்பித்தை என்றும் காணப்படுகிறது. ஊண் என்பது இரை, உண்டி, சோறு, ஆகாரம், உணவு[131] என்று பல பொருளைக் குறிக்கும் சொல். அதுபோன்று 'பித்தி' என்பது ஒதுக்கிடம், சுவர், துண்டு, பங்கு, பிற்றி, வெடிப்பு, சிறுசெண்பகம், பித்தம் பிடித்தவர்[132] என்றும், 'பித்தை' என்பது ஆண்மயிர், முடி[133] என்ற பொருளும் உணத்துகின்றன.

அம்மையாரின் பெயர் ஊண்பித்தி என்று அமைந்ததையறியச் சான்றில்லை. இவர் பாடிய பாடல் பாலைத்திணை. இது பிரிவிடைத்தோழி வற்புறுத்துவதாக அமைந்த பாடல். இப்பாடலில் பாலை நிலத்தில் பொருள் வயின் பிரிந்த தலைவன் நினைப்பாரா என்று வினவிய போது தோழி,

"மரற்புகா அருந்திய மாவெருத் திரலை
உரற்காலி யானை யொடித்துண் டெஞ்சிய
யாஅ வரி நிழற் றுஞ்சும்"

(குறுந்.232: 2-4)

என்றடிகளில் உணவினை உண்டபிடரியையுடைய மான் என்று குறிப்பிடுவதால் பாடல் பொருள் நோக்கி அமைந்த பெயர் என்று கொள்ளத்துணை நிற்கிறது. கா.கோவிந்தன் இவர் பற்றிக் குறிப்பிடுகையில்,

"மாற்பித்தியார் என்ற புறநானூற்றில் இடம் பெறும் புலவரிலிருந்து இவரை வேறுபடுத்த இவர் பெயர் முன் ஊண் என்பதையும், அவர் பெயர் முன் 'மால்' என்பதையும் சேர்த்தனர்[134]".

என்று இவர் குறித்து எழுதுவர். இக்கருத்து ஏற்புடையதாயினும் அம்மையாரின் பாடல் பொருள் கருதிச் சூட்டப்பட்டதென்பதற்கே பொருத்தம் மிகுதி. ஊண் என்பது உணவாம், பிச்சையார் பித்தியார் என்றாகியது. வல்லண்ண ஒலியாக (Palatal) இருந்த சகரம், பல்லொலியாக (Dental) மாறி ஒலிக்கின்றது. பல்லின ஒலி, அண்ணவியல் பெறுவது பழக்கம். இங்கே பல்லின ஒலி எவ்வகை மாற்றமும் பெறவில்லை. ஊண்பித்தையார் என்ற பெயர் 'ஊண்பிச்சையார்' என்ற பொருளினது. தமிழர் தொன்று தொட்டுப் பிச்சை என்று பெயரிடும் வழக்கத்தையும் நினைத்துப் பார்க்கவும். எனவே உணவைப் பிச்சையேற்று வாழ்ந்த ஒருவன் துறவியாக இருந்ததால் இப்பெயர் பெற்றான். இவர் இரந்துண்ணும் வாழ்வினர்.

ஊண்பித்தியாரைப் பெண்பாற் புலவராக உ.வே.சாமிநாதையர்[135], கா.கோவிந்தன்[136], ஔ.து.நடராசன்[137] ஆகியோர் கருதுவர்.

## 2. காமக்கணி நப்பசலையார்

இவர் நற்றிணையில் 243-ஆம் பாடலைப் பாடியவர். 'இவர் மதுரைக் காமக்கணி நப்பசலையார் எனவும், நப்பசலையார் எனவும் வழங்கப் பெறுவர்[138]'. காமக்கணி என்பது காமாட்சி என்ற வடசொல்லின் மொழிபெயர்ப்பு, இப்புல்வர் மகளிர்க்குண்டாம் பசலையைப் பாராட்டிப் பாடியமையால் இப்பெயர் பெற்றவர். அத்தகைய பாடல் இப்பொழுது கிடைக்கவில்லை என்று பின்னத்தூர் நாராயணசாமி அய்யர் கூறுவர்[139]. இக்காமக்கணி நப்பசலையாரைப் பற்றிக் கூறும்போது ஔவை சு. துரைசாமி பிள்ளை,

> "காமக்காணி என்ற இச்சிறப்புப் பெயர் சங்க காலத்தேயன்றி இடைக் காலச் சோழ பாண்டியர் அரசிலும் பிற்காலத்தும் வழக்கில் இருந்துள்ளது. இச்சிறப்புப் பெற்றோர் வழிவழியாகத் தம்மைக் காமக்காணி என்று கூறுவது கல்வெட்டுக்களாலும் செப்பேடுகளாலும் நன்கு விளங்குகிறது[140]".

என்று காமக்காணி என்ற சொல் பின்னாளில் காமக்கணி என்று வழங்கியதாகக் கூறுவர். இவர் பெயரில் பயிலும் 'நப்பசலை' என்பது இயற்பெயர். சங்க காலத்தில் குமுழி ஞாழலார் நப்பசலையார், மாறோக்கத்து நப்பசலையார் என வேறு பெண்பாற் புலவர்களும் உளர். நப்பசலை என்ற பெயர் பெண்பாலற்கேச் சூட்டப்பட்டமை இதனால் அறிய முடிகிறது.

காமக்கணி நப்பசலையார் பாடலில் (நற்.243) பசலை நோய் பற்றிய குறிப்பில்லை.

## 3. காமம் சேர் குளத்தார்

இவர் பெண்பாற் புலவர்களில் ஒருவர்[141]. இவர் பாடிய பாடல் ஒன்று இப்பாடல் குறுந்தொகையில் நான்காம் பாடலாக இடம் பெற்றுள்ளது. குறுத்தொகை பதிப்பித்த உ.வே. சாமிநாதையர் இவரை ஆண் என்றோ பெண்ணென்றோ சுட்டிலர்[142]. இவரை ந. சஞ்சீவி[143] ஆண்பாற்புலவராகக் குறிப்பிடுவர். இப்பாடல் களவுக் காலத்தில் தலைவனைப்பிரிந்திருந்த தலைவி,

> "நோமென் னெஞ்சே நோமென் னெஞ்சே

இமைதீய்ப் பன்ன கண்ணீர் தாங்கி
அமைதற் கமைந்தநங் காதலர்
அமைவில ராகுத னோமென் னெஞ்சே''

(குறுந் 4)

என்று வருந்திப்பாடும் பாடல். இப்பாடல் 'பிரிவிடை ஆற்றாளெனக்கவன்ற தோழிக்குக் கிழத்தியுரைத்தது என்று துறைவகுப்பர்[144]'. இப்பாடலில் தலைவி, தலைவன் பிரிவினால் கண்கள் அழ நெஞ்சம் வருந்தாதிரு என்று கூறுவதாக அமைந்துள்ளது. இப்பாடலை

''முனிவுமெய்ந்நிறுத்தலென்னும் மெய்ப்பாட்டியல் சூத்திரத்திற்கு உதாரணமாகக் காட்டுவர் இளம்பூரணர். முனிவு மெய்ந் நிறுத்தலாவது - களவு ஒழுக்கத்தான் வந்த துன்பத்தைப் பிறருக்குப் புலனாகாமை மெய்யின் கண் நிறுத்தலாகும்''

என்பர் இளம்பூரணர்[145],, காமம் சேர் குளத்தார் பாடிய பாடலில் தலைவன் பிரிவினால் தலைவி அழுக அதனால் இமை கண்ணீரின் சூட்டில் கருகியதாகப் பாடுகிறார். இவ்வாறு தலைவன் பிரிவில் தலைவி அழுததாக உள்ள பாடல் அகநானூற்றில் பொருந்தில் இளங்கீரனர் 'தலைவன் பிரிவினால் தலைவி அழுததால் கண்கள் சிவந்தன' (அகநா.19:9-14) என்று பாடுகிறார். அவர் பாடும் போது பிரிவில் தலைவி அழுததால் கண் சிவந்தன என்று இயல்பாகப் பாடினார். இக்கருத்தை பெண்பாற்புலவர் என்பதால் பெண்களுக்குக் களவில் தலைவன் பிரிவு எந்தளவுக்குப் பாதிப்பை ஏற்படுத்தும் என்ற உளவியல் அடிப்படையில் பாடியுள்ளார். நாட்டு வழக்கில் 'ஒரு பெண்ணின் துன்பம் ஒரு பெண்ணுக்குத்தான் தெரியும்' என்பர். அதனை இப்பாடலால் அறியமுடியும். நான்கடியில் உள்ள பாடலில் 'நோமென்நெஞ்சே' என்ற வார்த்தையை மூன்று இடங்களில் பயன்படுத்துகிறார். இவ்வாறே ஔவையார் ஒரு பாடலில்'' .........பாடுக பாட்டே, இன்னும் பாடுக பாட்டே அவர், நன்னெடுங்குன்றம் பாடிய பாட்டே என்று பலமுறை ஒரு பெண் மனம் விரும்பிய ஆடவனின் குன்றினைப் பாடுமாறு வேண்டுவதாகப் பாடுவார். இவ்வாறு

''ஒரு தொடரை உணர்வு மயக்கத்தில் மீண்டும் மீண்டும்
புலம்புவது பெண்டிரின் இயல்பாகும்''

என்ற தாயம்மாள் அறவாணன்[146] இக்கருத்து ஈண்டு நினைக்கத்தக்கதாகும். இதனால் நோமென்னெஞ்சே என்று பாடிய புலவர் பெண்பாலர் என்று அறியப்படும். இவர் பெயரில் காமம் சேர்குளத்தார் என்ற பெயர் எவ்வாறு அமைந்தது என்பதற்கு இப்பாட்டில் சான்றில்லை. இப்பெயர் அவர் பாடிய பாடலால் பெற்ற பெயர் போல் உள்ளது. அப்பாடல் கிடைக்கவில்லை.

**4. கார்க்கியார் (நெய்தற்கார்க்கியார்)**

சங்ககாலப் பெண்பாற்புலவரில் ஒருவர்.[147] இவர் பாடியதாக குறுந்தொகையில் (55, 212) இரண்டு பாடலுள்ளது. இவ்விரு பாடலிலும் 212 ஆம் பாடலின் ஆசிரியர் நெய்தற்கார்க்கியன் என்றும், 55ஆம் பாடலின் ஆசிரியர் நெய்தற்கார்க்கியார் என்றும் குறிப்பிடுவர் உ.வே. சாமிநாதையர். இவர் ஆண்பாற் புலவரென்றோ பெண்பாற்புலவரென்றோ குறிப்பிடவில்லை[148]. மொ. அ. துரை அரங்கசாமி இவரை ஐந்திணை அடைபெற்ற சிறப்புப்பெயர்களில் நெய்தல் திணையை அடைச்சொல்லாகப் பெற்றவர் எனக்குறிப்பிடுவர்[149]. நெய்தல் என்ற திணைப்பெயருடன் நெய்தல் தத்தனார் என்று புலவர் உளர். இவர் பெயருக்கு முன்பு நெய்தல் என்ற திணைப்பெயர் சேரப் பலர் கார்க்கியார் என்ற பெயரில் இருந்ததால் இவரை அவரினின்று வேறுபடுத்த நெய்தல் என்ற திணை அடைச்சொல் பெற்றிருக்க வேண்டும். இக்கார்க்கி என்ற பெயர் இவரது இயற்பெயர்.

> "இப்பெயர் உபநிடதங்களில் சிறப்பாக வழங்கும் ஒரு (பெண்பால்) பெயராகும். சங்ககாலத்தில் வாழ்ந்த இந்துக்கள் உபநிடதங்களிலும் புராணங்களிலும் புகழ்பெற்று விளங்கும் பெயர்களைத்தம் மக்களுக்கு விருப்பத்தோடு இட்டனர் என்பது இதனால் விளங்கும்[150]"

என்பர் மொ.அ. துரைஅரங்கசாமி. இக்கருத்தும். ,

> "கார்க்கி எனும் சொல்லுக்கு பொருத்தமான தமிழ் வேர்ச்சொல் பொருளைக் காணுதல் எளிதாக இல்லை. மாறாக, கார்க்கி எனும் பெண்பாற்புலவர் வடமொழி இலக்கியத்தில் பேசப்பெறுகிறார் என்றும் சங்ககாலப்புலவர்களுள் வடமொழி சார்ந்து பெயர் வைத்துக்கொண்டோரும் உள்ளனர்....... யாக் ஞவல்கியர்

காலத்துப்புகழ் பெற்று விளங்கிய பெண் அறிஞர் பெயரைத் தமிழகத்துச்சங்கப்புலவர் ஒருவர் பெற்று இருந்தனர் ஆதல் வேண்டும். அப்பெயரே கார்க்கியார் என்பதாகும்[151]"

என்பர் தாயம்மாள் அறவாணன். இக்கருத்துக்களால் கார்க்கியார் என்பது பெண் பெயர் என்பதும் இப்பெயர் வடமொழிசார்ந்த பெயர் என்பதும் அறியப்படும்.

இவர் பாடிய பாடல் இரண்டும் களவுப்பாடல்கள்; நெய்தல் திணையில் அமைந்த தோழி கூற்றுப்பாடல்கள்; இப்பாடல்களில் தலைவியை விரைவில் வரைந்து கொள்ள வராவிட்டால் தலைவி இறந்து படுவாள் என்று சிறைப்புறமாகத் தலைவன் இருக்கத் தோழி கூறுவதாகும். (குறுந்.55) இது தலைவியைச் சந்திக்க வரும்தலைவன் காதலுடன் வந்து பெயர்கின்றான் என்று தலைவிக்குத் தோழி குறைநயப்பாக கூறியதாக அமைந்த பாடல். (குறுந்.212)

**5. குன்றியனார்**

உ.வே.சாமிநாதையர், ஔவை.சு.துரைசாமிபிள்ளையும் குன்றியனாரை பெண்பாற் புலவராகக் குறிப்பிடவில்லை. ஔவை து. நடராசன், பெ.சு. மணி ஆகியோர் இவரைப் பெண்பாற் புலவர் என்பர்.

"இவர் தொண்டை நகரைப் பாடலில் குறிப்பதனால் இவர் சேரநாட்டுப் பொறை நாட்டவராகக் கருதப்படுகின்றார். ஆயினும், மாலை மறையும் ஞாயிற்றை "ஞான்ற ஞாயிறு குடமலை மறைய" எனவும் "செல்சுடர் மழுங்கச் சிவந்து வாங்கு மண்டிலம் கல்சேர்பு நண்ணி" எனவும் கூறுதலை நோக்கின் இவர் சேரநாட்டார் அல்லர் என்பதே தெளிவாகிறது[(152)]"

என்பர் ஔவை சு.துரைசாமிப் பிள்ளை.

இவர் பாடிய பாடல் (குறுந்.6, நற்.2, அகநா.2) பத்து. இவர் பாடிய பத்துப்பாடல்களிலும் அகநானூற்றுப் பாலைத்திணையில் அமைந்த தலைவன் கூற்றுப்பாடலைத் (அகநா.41) தவிர மற்ற ஒன்பது பாடல்களும் பெண் கூற்றில் பாடியிருப்பது இவரைப் பெண்பாற்புலவராகக் கருத வைக்கிறது.

அகத்துறையில் அனைத்துப் பாடல்களும் அமைந்துள. "வரைவு மலிவுக்கு இவர் கூறும் மாலை வருணனை சிறப்பாக அமைந்துள்ளது.

இவர் பாடல்களால் குன்றியனார் புலமைச் சிறப்புடையவர் என்பதை அறிய முடிகிறது. இவர் பாடல்களில் தொண்டியைக் குறிப்பதால் (குறுந்தொகை 238) இவர் சேரநாட்டுப்புலவராதல் கூடும் என்றும் இவர் நெய்தல் திணைப்பாடல்களைச் சிறப்பாகப் பாடியிருப்பதால் 'தொண்டி துறைமுகத்தைச் சார்ந்தவர் என்பதும் மேலும் உறுதியாகின்றது[153,]

## 6. குமுழி ஞாழலார் நப்பசலையார்

இவர் சங்க காலப் பெண்பாற் புலவரில் ஒருவர். இவர் அகநானூற்றில் 160-ஆம் பாடலைப் பாடியவர். இப்பாடலைக் காமக்கணி நப்பசலையர் பாடியதாகப் பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் கொள்வர். நப்பசலை என்பது இயற்பெயர். 'குமுழி ஞாழல்' என்பதை ஊர் பெயராகக் கருதுவர்[153].

சங்க இலக்கியங்களில் பசலை என்ற இயற்பெயர் கொண்ட புலவர் நால்வர் உளர். 'பசலை' என்ற நோய் பெண்களுக்கே உரிய நோய். களவு வாழ்வில் ஈடுபட்ட தலைவி தலைவன் பிரிவினால் ஏற்படும் உடல் மாறுபாட்டில் பசலை நோயும் ஒன்று. அதுவே, பெண்பாலாரின் பெயராகவும் அமைந்தது. புலவரை வேறுபடுத்த பெயர்முன் அடைச் சொல்லாகக் காமக்கணி நப்பசலையர் போந்தைப் பசலையார், மாறோக்கத்து நப்பசலையார், குமுழி ஞாழல் நப்பசலையார் என்று இட்டு வழங்கினர்.

இவர் பாடல் தோழி வரைவு மலிந்து கூறியதாகும். இப்பாடலில் இதுகாறும் இரவில் வந்த தலைவனது தேர் இன்று ஆராவாரம் மிக்க இளையரோடு அலர் கூறும் ஊர்ப் பெண்டிர் பலரும் காண வெளிப்படையாக வந்தமை கண்டு என் நெஞ்சம் நடுங்குகிறது என்று தலைவி கூறுவதாக அமைந்துள்ளது. களவைக் கற்பாக்கத் தலைவன் உறவொடு வரைவு மலிந்தமையை இவ்வாறு இவர் பாடுகிறார். இவர் எந்நாட்டினர் என்றறியப் போதிய சான்றில்லை. இவர் நெய்தல் நிலத்தைச் சார்ந்தவர்

'தேக்கடிக்கருகில் குமுழி என்றோர் காட்டுப்பகுதி உள்ளது. இங்குக் கூறப்படும் ஊர் அவ்வூராகலாம்[155,].

## 7. நன்னாகையார்

இவர் சங்க காலப் பெண்பாற் புலவரில் 'நாகையார்' என்ற இயற்பெயருடையர். 'நன்' என்ற அடை பெற்றவர். இவர் குறுந்தொகையில்

இரண்டு (118,325) பாடல்கள் பாடியவர். இரண்டும் நெய்தல் திணைப் பாடல்கள். இரண்டு பாடல்களும் வரைவு நீட்டித்த வழித் தலைமகள் பொழுது கண்டு தோழிக்குச் சொல்லியது, பிரிவிடை ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி மெலிந்து உரைத்தது எனும் துறைகளைக் கொண்டவை. இவர் பாடல் தமிழரின் விருந்தோம்பல் பண்பைக் காட்டுகிறது.

## 8. நெடும் பல்லியத்தையார்

இவர் பாடியதாகக் குறுந்தொகையில் இரண்டு பாடல் (178,203) காணப்படுகிறது. நெடும் பல்லியத்தை என்ற பெண்பாற் பெயர் போன்று நெடும் பல்லியத்தனார் என்ற ஆண்பாற் புலவருமுளர். 'இப்புலவர் இருவரும் உடன் பிறந்தவரோ என்று ஊகிக்கப்படுவதாக' டாக்டர் உ.வே.சாமிநாதையர் குறிப்பிடுவர்[156].

'அத்தை' என்ற சொல் பெயரில் இடம் பெற்று வருவது 'தத்தை' என்று பெண்மையைக் குறிக்க வழங்கிய பெயர். நெடும்பல்லியத்தனார் என்ற ஆண்பாற்புலவரிலிருந்து வேறுபடுத்த நெடும் பல்லியத்தை என்று பெயரிட்டனர். 'பல்லியம்' என்பது பலவாத்தியங்களைக் குறிக்கும். 'நெடிய பலவாத்தியங்களை உடைமையின் இவருக்கு இப்பெயர் அமைந்திருக்கலாம்' என்ற கருத்துளது[157].

நெடும் பல்லியத்தனாரின் புறப்பாடலில்,

"நல்யாழ் ஆகுளி பதலையொடு சுருக்கிச்
செல்லா மோதில் சில்வளை விறலி"

(புறநா.64;1-2)

என்ற பாடலால் இவர் பல வாத்தியங்களைப் பெற்றிருந்தமையால் பெற்ற பெயர் என்பது அறியப்படும். பல்லியக்குழுவைச் சார்ந்திருந்த புலவர் ஆதலின் இப்பெயர் பெற்றார்.

## 9. பூங்கண் உத்திரையார்

பூங்கணுத்திரையார் குறுந்தொகையில் (48, 171) இரண்டு பாடல்களும் புறநானூற்றில் 277-ஆம் பாடலையும் பாடியவர். இவரின் இயற்பெயர் 'உத்திரையார்.' இப்பெயர் உத்திரை நன்னாளில் பிறந்ததால் பெற்ற பெயர்[158]. மகாபாரதம் விராடபருவத்தில் வரும் விவிடமன்னன் மகள் பெயர் 'உத்திரை' என்பதும் இங்கு நினைக்கத்தக்கது. பூங்கண் என்பது இப்பெண்பாற் புலவரின்

கண்களின் அழகுடைமைப் பற்றித் தோன்றிய பெயர். இரண்டும் சேர்த்துப் 'பூங்கண் உத்திரையார்' எனப் பெயர் பெற்றார். இவர் பெயரில் வரும்

> "'பூங்கண்' என்பது ஊர்ப் பெயர் என்றும் இப்பெயரில் காவிரியின் வடகரையிலுள்ள ஊர் எனக் கல்வெட்டுக்களால் அறியமுடிகிறது[159]"

என்பர் ஔவை.சு.துரைசாமிபிள்ளை. இப்பெண்பாற் புலவரின் பெயர் பூங்கண் உத்திரையார்[160] என்றும் பூங்கணுத்திரையார்[161] என்றும் நூல்களில் காணப்படுகிறது. இவர் பாடிய அகப்பாடல், களவுப் பாடல் களவுக் காதலொழுக்கம் மேற்கொண்ட தலைமகள் வரைவு நீட்டித்தபோது தலைவி பிரிவாற்றாது வருந்திப் பாடிய பாடல்கள். புறப்பாடல் (227) வீரனொருவன் போர்புரிந்து வீரமரணம் எய்திய போது அது கேட்ட தாய் மகிழ்ச்சி யடைவதாகப் பாடிய வீர உணர்வு மிக்க புறப்பாட்டுச் சிறப்புடையது.

> "இவர் பாடலில் அலைகளின் மேல் நீண்டதொரு கம்பம் (உத்திரம்) போலவும் அலைகளுக்கு இடையே யமைந்த கணுக்கள் (முட்டுக்கள்) போலவும் பூக்கள் மிதந்து செல்வதைப் பாடினமையின். இவர் இப்பெயர் பெற்றிருக்கலாம்[162]"

என்பர். துரையரங்கசாமி. இவ்வாறு முடிவு செய்ய போதிய சான்றில்லை.

## 10. பொன்மணியார்

இவரைப் பெண்பாற் புலவரென்று உ.வே.சாமிநாதையர்[163], ஔவை து. நடராசன் பெ.சு.மணியும் ஆகியோர் கணக்கிட்டுள்ளனர்[164]. ஔவை. சு.துரைசாமிப் பிள்ளை, ந.சஞ்சீவி போன்றோர் இவரைப் பெண்பாலராகக் கருதிலர், 'பொன்மணி' என்ற இயற்பெயர் பெற்றதற்கான சான்று இவர் பாடிய பாடலால் கிட்டிலது. இப்பாடல் குறுந்தொகையில் 391-ஆம் பாடல்.

> "இவர் பெயர் பாடலின் அடிகளால் பெற்ற பெயர் என்றும், ஆசிரியர் பெயர் காண நற்றிணை (166-1) பாடலில் 'பொன்னும் மணியும்' என்ற தொடர் காணப்படுகிறது. ஆங்குத் தலைவியின் உடலுக்குப் பொன்னும் அவளது கருங்கூந்தலுக்கு மணியும் உவமையாகின்றன. அப்பாடலின் ஆசிரியர்

பொன்மணியார்தாமோ? என்றும், அச்சொற்றொடரைப் பயன்படுத்தியமை யாலேயே இவருக்குப் பொன்மணியார் என்ற பெயர் அமைந்தது போலும்[165]"

என்பர் துரைஅரங்கசாமி. சங்க காலத்தில் பெண்கள் பலருக்கு இப்பெயர் சூட்டியிருக்க வேண்டும். புலவர்களுக்குப் பாடிய பாடலால் மட்டும் பெயர் குறிப்பிட வேண்டும் என்பதில்லை. இப்பெயர் இவர்க்குள்ள இயற்பெயராக அமைந்தாகும். இவர் பாடிய பாடல் முல்லைத் திணையில் தலைவி கூற்றாகும். கார் காலத்தின் வருகையும், அக்காலத்தில் மயில்கள் கூவுவதும் தலைவிக்கு வருத்ததை உண்டுபண்ணுவதாகப் பாடியுள்ளார்.

## 11. பொதும்பிற்புல்லாளங் கண்ணியார்

சங்க நாளில் ஊர்ப் பெயருடன் சேர்த்து வழங்கப்பட்ட புலவர் பலர். இப் புலவரின் பெயரில் பயிலும் 'பொதும்பில்' என்பதும் ஊர்ப் பெயர். இவ்வூரினராக 'பொதும்பில் கிழார்', பொதும்பில் கிழார் மகனார் வெண்கண்ணியார் போன்றோருமுளர். இவ்வூரில் பிறந்தவரில் புல்லாளங்கண்ணியாரும் ஒருவர். 'கண்ணி' என்பதால் 'பெண்பாற் புலவர் என்று ஔவை து.நடராசனும், பெ.சு.மணியும் கருதுகின்றனர்[166].

உ.வே.சாமிநாதையர், ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை போன்றவர்கள் இவரைப் பெண்பாற் புலவராகக் குறிப்பிடவில்லை. 'கண்ணி' என்று சொல் இவர் பெயரில் பயிலுவது இவரைப் பெண்பாற் புலவர் என்று காட்டுகிறது. ஆதலின் இவரை பெண்பாற்புரவர் வரிசையில் இணைத்து ஆராயப்பட்டுள்ளது. இவர் பாடல் வினைமுற்றி மீளும் தலைவன் தேர்ப்பாகனுக்குக் கூறுவதாய் உளது. அதில்

"ஒடுபரி மெலியாக் கொய்சுவற் புரவித்
தாள்தாழ் தார்மணி தயங்குபு இயம்ப
ஊர்மதி வலவதரே சீர்மிகுபு
நம்வயிற் புரிந்த கொள்கை
அம்மா அரிவையைத் துன்னகம் விரைந்தே"

(அகநா.154:11-15)

என்றடிகள். அம்மையாரின் புலமைச் சிறப்பை உணர்த்தும்.

## 12. பொதுக்கயத்துக்கீரந்தையார்

இவர் பெண்பாற்புலவர்களில் ஒருவர்[167]. இவர் பாடியதாகக் குறுந்தொகையில் (337) ஒரு பாடல் உள்ளது. இப்பாடல் தோழியை இரந்து பின்னின்ற கிழவன், தனது குறையறியக் கூறியது. களவுகாலப்பாடல். இவரின் பெயரில் வரும் 'பொதுக்கயம்' என்பது ஊர்ப்பெயர்[168]. இவ்வூரினர் ஆதலால் ஊர்பெயருடன் வழங்கப்பட்டார். இவரின் இயற்பெயர் கீரந்தை.

"இப்பெயர் பெண்பாற் பெயராக இருக்கும் என்பதை
நெடும் பல்லியத்தை ஊண்பித்தை என்னும் ஏனைய
பெண்பாற் பெயர்களும் உறுதி செய்கின்றன[169]"

என்பர் தாயம்மாள் அறவாணன். இவர் பாடிய பாடலில் பருவம் எய்திய பெண்ணின் உடல் தோற்றத்தை வருணிப்பதாக அமைந்துள்ளது. இப்பாடலின்

"முலையே முகிழ்முகிழ்த் தனவே தலையே
கிளைஇய மெனகுரல் கிழக்குவீழ்ந் தனவே
செறிமுறை வெண்பலும் பறிமுறை நிரம்பின
சுணங்கும் சிலதோன் றினவே அணங்கென
யான் தன் அறிவல் தான் அறியலளே
யாங்கு ஆகுவள்கொல் தானே
பெருமுது செல்வர் ஒரு மட மகளே"

(குறுந் 337)

என்று பாடுவது 'ஒரு பெண் புலவர் அறிந்து உரைத்தார் என்று செல்வதே முறையாக இருக்கும் என்று கூறுவர்[170]. இவர் பெயர் பற்றியறியச் சான்றுகள் இல்லை.

## 13. போந்தைப் பசலையார்

போந்தை சேர மன்னரின் பூ. போந்தை என்பது பனங்குருத்து. பசலை என்பது பெண்கள் காதல் வயப்பட்டு தலைவனைப்பிரியும் போது உடலில் ஏற்படும் ஒருவித மாறுபாடு பசலை. இப்பெயரைக் கொண்டிருப்பது இவர் பெண்பாலர் என்பதை உறுதிப்படுத்தும். இவர் பாடிய பாடல் அகநானூற்றில் (110) இடம் பெற்றுள்ளது. இவர் பாடலில் புகார் தெய்வம் குறிக்கப்படுகிறது. இதனை,

"கொடுஞ்சுழிப் புகார் அத் தெய்வம் நோக்கிக்"

(அகம்.110:4)

என்பதால் அறியமுடியும். இப்பாடலில் நாவாய் குறிப்பிடப்படுகிறது. இதனை,

'நெடுங்கொடி நுடங்கும் நாவாய் தோன்றுவ'

(அகம்.110:18)

என்றடி உணர்த்தும். சங்க காலத்தில் தெய்வத்திடம் சூளுரைப்பது குறிப்பிடப்பட்டுள்ளது. இதனை,

'கொடுஞ்சுழிப் புகார்அத் தெய்வம் நோக்கிக்
கடுஞ்சூள் தருகுவள் நினக்கே'

(அகம்.110:4-5)

என்றதால் அறியப்படும். போந்தை என்ற பூவினைப் பெயராகக் கொண்டதால் சேர நாட்டவராகக்கொள்ள இடமுண்டு.

### 14. *மாரிப்பித்தியார்*

இப்பெண்பாற் புலவரின் பெயர் மாற்பித்தியார், மரற்பித்தியார் என்றும் காணப்படுகிறது. 'பித்தி' என்ற இயற்பெயர் கொண்டவரில் இவரும் ஒருவர்.

"மாரிக் காலத்து மலரும் பித்திகத்தைப் பொற்புறத்
தொடுத்துப் பாடிய சிறப்புக் குறித்துப் பெற்ற பெயர்"

என்பர் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை[171]. இவ்வாறு இவர் பாடிய பாடலில. இவர் பாடிய பாடல் இரண்டு, புறநானூற்றில் 251, 252ஆம் பாடலாக இடம்பெற்றுள்ளன. இப்பாக்கள் வாகைத்திணை, தாபத வாகைத் துறையின. இப்பாடல் இல்லறத்தில், இளமை அழகுடன் கண்டவர் விரும்ப வாழ்ந்த ஒரு தலைமகன், தவம் மேற்கொண்டு காட்டகத்துத் தங்கி, அருவியாடி, சடைபுனைந்து செந்தீ வளர்த்து, புல்லரிசி உணவுண்டு துறவுவாழ்க்கை வாழ்ந்ததைக் கண்ட மாரிப்பித்தியார்

"ஓவத்தன்ன இடனுடை வரைப்பில்
பாவையன்ன குறுந்தொடி மகளிர்
இழைநிலை நெகிழ்த்த மள்ளர் காண்டிகும்"

(புறம்.251:1-3)

என்றுபாடுகிறார். இப்பாட்டு இவரின் வாழ்க்கை நிகழ்ச்சி என்பர் கா.கோவிந்தன். இதனை,

"இவர் வாழ்க்கையைப் பற்றியது. இல்லறம் துறந்து துறவறம் மேற்கொண்ட கொடுங்காட்சியைக் கண்டு அவன் மனைவி அழுது அரற்றியதையே பாட்டின் பொருளாகக் கொண்டு அவ்வாறு அழும் மனைவி மாற்பித்தியாரே. துறந்து காடு சென்று விட்டவன் மாற்பித்தியார் கணவனே[172]"

என்றதால் புலப்படும். இதற்கான குறிப்புப் பாடலில்லை. இப்பாடலுக்கு,

"மாரிப்பித்தியார் என்ற பெண்பாற் புலவர் அவருக்கு நண்பராய் அமைந்திருந்தார். இச்செல்வரும் அப்புலவரும் ஏறத்தாழச் சம வயதுடையவர்கள். செல்வர்தம் இளமைக்காலந் தொட்டே புலவரை நன்கு அறிந்தவர்.[173]"

என்று அ.ச.ஞானசம்பந்தன் சுட்டுவர். இதற்கும் சான்றில்லை. மாரிப்பித்தியார் துறவைப் பாடினார் என்று கொள்வதுப் பொருத்தமுடையது. அவர் எடுத்துக் கொண்டபாடுபொருள். சொந்த வாழ்க்கையாக அமைய வேண்டும் என்பது இல்லை. இவர் பெயரை உ.வே. சாமிநாதையர் 'மாற்பித்தியார்'[174] என்றார்.

## 15. வருமுலையாரித்தியார்

சங்கப் புலவர்களின் பெயர்களில் உறுப்புக்களைப் பெயர்களாகக் கொண்ட நெட்டிமையார், பூங்கண்ணன், முடத்தாமக்கண்ணியார் போன்று வருமுலையாரித்தியாரும் ஒருவர். உ.வே.சாமிநாதையர்[175], ஔவை து. நடராசன்[176], ந.சஞ்சீவி[177] போன்றோர். இப்புலவரைப் பெண்பாற் புலவர் என்று குறிப்பிடுவர். கா.கோவிந்தன்[178] இவரைப் பெண்பாற் புலவராகச் சேர்க்கவில்லை.

வருமுலை + ஆர்த்தி + ஆர் என்ற பகுப்பில் பெண்பாலரின் உறுப்புக்களில் ஒன்றான மார்பகத்தைப் பெயராகக் கொண்டிருப்பது பெண்பாற் புலவர் எனக் கொள்ள இடம் தருகிறது. 'ஆர்த்தி' என்பது ஒலித்தல் எனப்பொருள் பயக்கும். இச்சொல் இவர் பெயரில் சேர்ந்திருப்பது இவர் பாடிய குறுந்தொகைப் (176) பாடலில்,

"ஏறுடை மழையிற் கலிழும் என்னெஞ்சே

(குறுந்.176: 7)

என்றடியில் கலிழும் என்பது ஒலித்தல் எனப் பொருள் பயப்பதைக் கொண்டு ‘ஆர்த்தி’ என்ற சொல் பெயருடன் சேர்த்து வழங்கப்பட்டார். இவர் பாடியது இப்பாடல் ஒன்றுதான். வேறு இல்லை.

### 16. *வெண்பூதியார்*

சங்க இலக்கியத்தில் பூதன் என்ற ஆண்பாற் பெயரில் பதினொரு பெயர்கள் உள. இப்பெயருக்கு முன் அடைச் சொல் பயின்று வருகிறது. ‘பூதன்’ என்பதன் பெண்பால் ‘பூதி’; இப்பெயரில் வெண்பூதியார், வெண்மணிப்பூதியார் என்ற இருவர் உளர். வெண்பூதனார் என்ற ஆண்புலவரைப் போல் வெண்பூதியார் என்ற பெண்புலவர் இவர். ‘பூதன் பூதி’ தெய்வப் பெயர்கள் என்பர் ந.சஞ்சீவி[179].

இவரைப் பெண்பாற் புலவராக சங்க இலக்கியத் தொகுப்பிலும், ஒளவை து.நடராசன், பெ.சு.மணி[180], ந.சஞ்சீவி[181] ஆகியோர் தம் நூலில் கொள்வர். கா.கோவிந்தன் இவரைப் பெண்பாற் புலவர் வரிசையில் சேர்க்கவில்லை.

> ”வெண்பூதியார், இவர் வெள்ளூர்கிழார் மகனார் எனவுங்கருதப் பெறுகிறார். வெண்பூதியென்பது இவரைச் சைவரென எண்ண இடந்தருகிறது[182]„

என்று கலைக் களஞ்சியம் குறிப்பிடுகிறது. வெண்பூதியாரை ஆண்பாற் புலவராகவும் கருதுவர்[183].

இவர் பாடிய மூன்று பாடலும் குறுந்தொகையில் 97,174,219 ஆம் பாடலாக இடம் பெற்றுள்ளன. இவை தலைவி கூற்றுப் பாக்கள். களவு, கற்பு வாழ்வில் தலைவனைப் பிரிந்த நிலையில் வருந்திப் பாடுவன.

இவர் பெண்பாற் புலவரென்பதற்கு ஆண்பாற்புலவர் என்பதற்கும் உறுதிப்பட நிறுவச் சான்றில. ‘பூதி’ என்பதைப் பெண்பெயராகக் கொண்டு இப்புலவரைப் பெண்பாற் புலவரென்று இவ்வாய்வில் கொள்ளப்பட்டுள்ளது.

### 17. *வெண்மணிப்பூதியார்*

வெண்பூதியார் என்ற பெண்பாற் புலவரிலிருந்து வேறுபடுத்த வெண்மணிப்பூதியார் எனப்பட்டார். வெண்மணி என்பது ஊர் பெயர்[184], இவரைப் பெண்பாற் புலவரென்று உ.வே.சாமிநாதையர்[185], ந.சஞ்சீவி[186], து.நடராசன்[187] போன்றோர் குறிப்பிட்டுள்ளனர். கா.கோவிந்தன் இவரைப் பெண்பாற் புலவராகக் கருதவில்லை.

இவர் பாடியதாகக் குறுந்தொகையில் 299-ஆம் பாடலுளது. வேறு பாடலில்லை. இப்பாடலில் தலைவனும், தலைவியும் கண்டு, கேட்டு, இணைந்ததால் மேனி அழகுற்றது என்று மணி போன்ற கருத்துக்களைச் சிறப்புறப் பாடியதனால் பெற்ற பெயராகவும் கொள்ள இயலும். இப்பாடல்

"புணர்குறி வாய்த்த ஞான்றைக் கொண்கற்
கண்டன மன்னெங் கண்ணே யவன்சொற்
கோட்டன மன்னெம் செவியே மற்றவன்
மணப்பின் மாணல மெய்த்த்
தணப்பின் நெகிழ்பவெம் தடமென் றோளே.

(குறுந் 299:4-8)

என்று நெய்தல் நிலத்தலைவி வரைவு கடாய நிலையில் பாடியதாக உள்ளது.

**18. வெள்ளைமாளர்**

சங்கப் பெண்பாற் புலவர் என்று கருதுவோரில் இவரும் ஒருவர். இவர் பெயர் வெள்ளைமாளர் என்றும் 'வெள்ளைமாறனார்' என்றும் காணப்படுகிறது. வெள்ளைமாறனார் என்ற பெயர் வெள்ளைமாளர் என்று காணப்படுகிறது என்பர் ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை[188]. இவர் பெயரை வெள்ளைமாளர் என்று உ.வே.சாமிநாதையர்[189], ந.சஞ்சீவி[190] போன்றோர் கொண்டனர்.

ஔவை து.நடராசன் பெண்பாற் புலவர் என்று குறிப்பிட்டதை பெ.சு.மணி[191] ஏற்பர். வேறு உரையாசிரியர் எவரும் இவரைப் பெண்பாற் புலவரென்று கருதிலர்.

புறநானூற்றில் இவர் பாடிய பாடல் ஒன்று (296). இப்பாடலில் அற்றை நாளில் போரில் புண்பட்டு வந்த வீரர்களுக்கு வேப்பிலை கொண்டு புண்ணை ஆற்றியும் காஞ்சிப்பண் பாடி வெண் சிறு கடுகு கொண்டு புகை போட்டு பெண்கள் வீரரின் விழுப்புண்ணை ஆற்றியதையும் பாடியுள்ளார். 'இவர் பாடிய ஏறாண் முல்லைத் துறைப்பாடல் மிக்க பொருள் நயம் உடையது' என்பர் உ.வே.சாமிநாதையர்[192]. இவர் பாடிய புறநானூறு 296ஆம் பாடலில் போருக்குச் சென்ற வீரர் பலரும் இல்லம் திரும்ப தன் மகன் சென்றதேர் வராததற்கு காரணம் போர் இன்னும் முடியவில்லை. முடிந்தபின் வருவான் என்மகன் என்று ஒரு தாய் கூறுவதாய் அமைந்த பாடல். இப்பாட்டு தாய் கூற்றாக வருதல் கொண்டு இவரைப் பெண்ணாகக் கருத வாய்ப்புளது. 'இத்தாயின் உவகையைக் கண்ட

ஆசிரியர்... இப்பாட்டின்கண் அவள் கூற்றினைத் தாம் கொண்டு பாடினார்' என்பர்[193].

## 19. வெறிபாடியக் காமக்கண்ணியார்

சங்க காலத்தில் புலவர் பெயர்கள் பாடலில் பயிலும் சீரிய கருத்து நோக்கிச் சூட்டப்பட்டன. மடல் பாடிய மாதங்கீரனார், காக்கைப் பாடினியார் நச்செள்ளையார் போன்று இவர் வெறியாடலை மட்டும் பாடியதால் வெறிபாடிய காமக்கண்ணியார் என்ற பெயர் பெற்றார். இப்பெயர் வெறியாடிய காமக்கண்ணியார் எனவும் காணப்படுகிறது. காமக்கண்ணி என்பது காமக்காணி, காமக்கணி என்றுமைந்துள்ளது.

"இவர் பெயர் காமக்காணி... இக்காமக்காணி ஏடு
எழுதியோரால் காமக்கணி, காமக்கண்ணி என்று
பிழையாக எழுதி விட்டதாகக் கருதுவர்"

ஔவை சு.துரைசாமிப்பிள்ளை[194]. இவ்வாறு பின்னத்தூர் நாராயணசாமி அய்யரும்[195] குறிப்பிடுவர்.

"காமக்கண்ணி என்பது காமாட்சி யம்மையாரின் தெய்வப்பெயர்[196]" என்று விளங்கும். அம்மையார் பெயர் காமக்கண்ணி என்றாலும், காமக்கண்ணி எனினும் ஏற்றுக் கொள்ளவோ மறுக்கவோ சான்றில்லை, பழமை தழுவி இப்பெயரையே கொள்ளல் வேண்டும்.

இவர் பாடல் நற்றிணையில் ஒன்றும் (268), அகநானூற்றில் இரண்டும் (22, 98), புறநானூற்றில் இரண்டுமாக (271, 302) ஐந்து பாடல்கள் உள்ளன. இவர் பாடிய அகப்பாடல் மூன்றிலும் வெறியாடல் புனைவு காணப்படுகிறது. பாடலில்

"பெய்ம் மணல் முற்றம் கடிகொண்டு
மெய்ம்கலி கழங்கின் வேலற் றந்தே"

(நற்.268:8-9)

என்றும்,

"களநன் கிழைத்துக் கண்ணி சூட்டி
வளநகர் சிலம்பப் பாடிப் பலிகொடுத்
துருவச் செந்தினை குருதியொடு தூஉய்
முருகாற்றுப் படுத்த உருகொழு நடுநாள்"

(அகநா.22:8-11)

என்றும்,

"கூடுகொள இன்னியம் கறங்கக் களன்இழைத்
தாடணி அயர்ந்த அகன்பெரும் பந்தர்
வெண்போழ் கடம்பொடு சூடி இன்சீர்
ஐதமை பாணி இரீஇக்கை பெயராச்
செல்வன் பெரும்பெயர் ஏத்தி வேலன்
வெறியயர் வியன்களம் பொற்ப வல்லோன்"

(அகநா.98:14-20)

என்று களவுக்காலத்தில் மகளிர் வரைவு நீட்டித்த போது மேனி வேறு பாடெய்தி வருந்துவதை முருகனால் ஏற்பட்டது என்றெண்ணி வெறியாடல் நிகழ்ந்ததை விரித்து அகப்பாடல் மூன்றிலும் பாடியதால் (வெறிபாடிய என்ற சிறப்புப் பெயர் பெற்றார்.

**இவ்வியலில் கூறப்பெற்ற ஆய்வு முடிவுகள்**

1. சங்க காலப் பெண்பாற் புலவர்களைக் கணக்கிடுவதில் தமிழறிஞர் ஒவ்வொருவரும் வேறுபடுகின்றனர். குறுந்தொகைக்கு உரை எழுதிய உ.வே.சாமிநாதையர் தம்மாராய்ச்சியான் பெண்பாற் புலவர்களைக் கண்டெழுதினார், தொடர்ந்து பலரும் முயன்று அவர் கருத்தை ஆராய்ந்தும் சங்கப் பாடல்கள் கொண்டும் பெண்பாற் புலவர்களை அடையாளங் கண்டனர். இதனால் பெண்பாற் புலவர்களின் எண்ணிக்கையில் மாறுபாடு எழுந்தது. புலவர்களின் பெயர்கள், ஆணா, பெண்ணா என்ற வேறுபாட்டைத் தெளிவாகக் காட்டவில்லை. பாடல்களைத் தொகுத்தோர், தொகுக்கும் போது ஆண்பாற் புலவர் என்றோ பெண்பாற் புலவர் என்றோ பாகுபடுத்திப் பாடல்களைத்தொகுத்திலர்; பெண்பாற் புலவர் என்று அறியத் தனி அடையாளம் எதையும் ஏடுகளில் அவர்கள் பொறிக்கவில்லை. தொகுத்த காலத்தில் ஆண் பெண் வேற்றுமை இன்றியே தொகுத்தோர் பாடல்களைத் தொகுத்திருக்கின்றனர். பெண்பாற் புலவர் பாடல்களுக்குத் தனித்தொகுப்பு என்பது சங்க காலத்திலில்லை. ஆண், பெண் இருவருக்கும் புலமை நிலையில் ஒத்த மதிப்பே வழங்கப்பட்டிருக்கிறது. இதனையே சங்க இலக்கியத் தொகுப்பு மரபுணர்த்துகிறது. பாடல்களின் தகுதியே நோக்கப்பட்டுள்ளது, பாடியவரின் பால் நோக்கப்படவில்லை.

2. பெண்பாற் புலவர் அனைவருக்கும் முறையான விரிவான வரலாறு

இல்லை. அவர்கள் வரலாற்றை அறிந்து கொள்ளத் தேவையான ஆவணங்களும் கிட்டில. சங்கப் பாடல்களைக் கொண்டு ஒரு முழுமையான வரலாற்றைத் தெரிந்து கொள்ளவோ உருவாக்கி எழுதவோ போதிய கருத்துக்கள் கிட்டில. ஆதிமந்தி, வெள்ளிவீதி, ஔவையார் போன்றவர்களுக்குச் சற்றுக் கூடுதலான வரலாற்றுக் கருத்துக்கள் கிட்டுகின்றன. ஔவையார் பற்றிப் பிற்காலத்தோர் எடுத்துக்கட்டி எழுதிய புனைந்துரையை மெய்யென்று கொண்டு சங்க கால ஔவையார் வரலாறும் எழுதப் பெற்றிருக்கிறது.

3. ஆதிமந்தி என்ற பெண்பாற் புலவர் பாடிய பாடல் ஒன்றே. அதனால் அவர் வரலாறு ஒன்றும் விரிவாகப் புலனாகவில்லை. ஆனால் அவரைப் பற்றிய ஊரக வழக்குச் செய்திகளை வெள்ளிவீதியார், ஔவையார் போன்றவர்கள் தங்கள் பாடல்களில் பதிவு செய்திருக்கின்றனர். தொடர்ந்து இளங்கோவடிகளும் அவரைச் சுட்டுகின்றார்.

4. கபிலரின் புலமையைப் பாராட்டி ‘செறுத்த செய்யுட் செய்செந் நாவின் வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன்’ (புறம்.153:11-12) என்று பொருந்தி லிளங்கீரனாரும்.

"மறம்புரி கொள்கை வயங்குசெந் நாவின்
உவலை கூராக் கவலையி னெஞ்சின்
நனவிற் பாடிய நல்லிசைக்
கபிலன் பெற்ற வூரினும் பலவே"

(பதி.85:10-14)

என்று பெருங்குன்றூர்க் கிழாரும் பாடினார். கபிலரின் புலமையையும் அவர் கொடை பெற்ற திறத்தையும் அப்புலவர்கள் போற்றிப் பாடினர். ஆண்பாற் புலவர்களின் புலமைச் சிறப்பைப் பாராட்டியது போலப் பெண்பாற் புலவர்களின் புலமைத் திறத்தைப் பெண்பாற் புலவர்களே பாடவில்லை. ஆதிமந்தி என்ற பெண்பாற் புலவரைப் பரணர் தான் பாடிய பாடலில்

"ஏற்றியல் எழினடைப் பொலிந்த மொய்ம்பின்
தோட்டிருஞ் சுரியல் மணந்த பித்தை
ஆட்டன் அத்தியைக் காணீ ரோவென
நாட்டின் நாட்டின் ஊரின் ஊரின்

கடல்கொண் டன்றெனப் புனலொளித் தன்றெனக்
கலுழ்ந்த கண்ணன் காதலற் கெடுத்த
ஆதி மந்தி போல ஏதஞ் சொல்லிப் பேதுபெரி துறவே"

(அகம்.236:14-21)

என்று கூறுகிறார். ஆடவராதலின் பல இடங்களுக்குச் செல்லும் வாய்ப்பு மிகுதியால் அவர் வரலாற்றை முழுமையாக அறிந்து பேசுகிறார். ஈண்டு பரணர் ஆதிமந்தியின் புலமைத் திறத்தையோ அறிவாற்றலையோ பெற்ற கொடையையோ கூறாது காதலனை இழந்த செய்தியைக் கூறுகிறார்.

5. ஔவையார் என்ற பெண்பாற் புலவர், தன் பாடலில் வெள்ளிவீதியாரைச் சார்த்து வகையாக (உவமையாக)க் கூறுகிறார்.

"ஓங்குமலைச் சிலம்பில் பிடவுடன் மலர்ந்த
வேங்கை வெறித்தழை வேறுவகுத் தன்ன
ஊன்பொதி அவிழாக் கோட்டுகிர்க் குருளை
மூன்றுடன் ஈன்ற முடங்கர் நிழத்த
துறுகல் விடரளைப் பிணவுப்பசி கூர்ந்தெனப்
பொறிகிளர் உழுவைப் போழ்வாய் ஏற்றை
அறுகோட்டு உழைமான் ஆண்குரல் ஓர்க்கும்
நெறிபடு கவலை நிரம்பா நீளிடை
வெள்ளி வீதியைப் போல நன்றுஞ்
செலவயர்ந் திசினால் யானே........"

(அகம்.147:1-10)

என்ற பகுதி வெள்ளிவீதி தேடிச் சென்ற பாதையின் கொடுமையை விரித்துப் புனைகின்றது. ஒரு பெண்பாற்புலவர் மற்றொரு பெண்பாற் புலவரின் காதற் களவைப் பாடுகிறார், அவர் புலமையைப் பாராட்டிய ஒரு சிறு சொல்கூடப் பாடலிலில்லை.

6. ஔவையார் சுட்டிய வெள்ளிவீதியார் தன் பாடலில் இன்னொரு பெண்பாற் புலவரைச் சுட்டுகிறார், அவரே ஆதிமந்தியார்

"............................... யானே
காதலற் கெடுத்த சிறுமையொடு நோய்கூர்ந்

தாதி மந்தி போலப் பேதுற்று

அலந்தனென் உழல்வென் கொல்லோ......"

(அகம்.45:13-16)

என்ற பகுதியால் ஆதிமந்தி காதலனைக் காணாது தவித்தாள் என்றுணர முடிகிறது. ஆதிமந்தி - வெள்ளிவீதி - ஔவையார் என்ற மூவரும் பெண்பாற் புலவர். ஒருபெண் காதலனை இழந்து இடர்ப்பட்டமையை வெள்ளிவீதி ஔவையார் பாட்டுகளுமுணர்த்துகின்றன. ஆதிமந்தி வெள்ளிவீதி ஆகியோரின் சொந்த வாழ்க்கையே இந்த அவலத்துக்கு ஆளானது. ஆனால் வெள்ளிவீதியாரோ ஔவையாரோ (பரணரோ) ஆதிமந்தியின் அறிவுத் திறனையோ புலமையையோ பாராட்டிப் பாடலில் சுட்டவில்லை. கபிலரின் புலமை பாராட்டப்பட ஆதிமந்தி புலமை பாராட்டப்படவில்லை, அவள் வாழ்க்கையின் காதல் சோகமே நினைவு கூரப்பட்டிருக்கிறது.

7. எட்டுத் தொகையிலும் பத்துப் பாட்டிலும் பெண்பாற் புலவர்களின் பாடல்கள் மிகக்குறைவு, பெண்களில் ஒருபாட்டுப் பாடியவரும், இரண்டு பாட்டுப் பாடியவருமே மிகுதி. பெண்களில் கூடுதலாகப் பாட்டுப் பாடியவர் ஔவையார் ஒருவரே. ஆண்பாற் புலவர்களை நோக்க இவருடைய பாடல்களின் எண்ணிக்கையும் கூடக் குறைவேயாகும். பெண்பாற் புலவர் பாடிய அகப்பொருள் பாடலொன்றைக் கொண்டு, அப்புலவரின் வரலாற்றையோ அவர் ஆளுமையையோ முழுமையாக அறிய இயலுவதில்லை. பிற ஆண்பாற் புலவர்களும், பெண்பாற் புலவர்கள் பற்றிப் பாடவோ வரலாறுகளைக் சுட்டவோவில்லை. பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்

'ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி

மாங்குடி மருதன் றலைவ னாக

உலகமொடு நிலைஇய பலர்புகழ்

சிறப்பிற் புலவர் பாடாது வரைகவென் னிலவரை'

(புறம்.72:13-16)

என்று பாடியது போலப் பெண்பாற் புலவர் எவரையும் வேந்தர் சுட்டிப் பாடிலர். ஆதலால்தான் சங்கப் பெண்பாற் புலவர்கள் பற்றிய கருத்துகள் முழுமையாகவும் நிரலாகவும் கிடைக்காது போயிற்று. உடைந்து போன கப்பலை மீண்டும்

உருவாக்குவது போல ஒரு வடிவத்தை ஆய்வால் உருவாக்க முடிகிறதேயன்றி முழுமையான உண்மை வடிவத்தைத் திரும்ப முன்னிருந்தவாறு படைக்க முடியவில்லை.

8. சங்க காலப் பெண்பாற் புலவர்களின் வரலாற்றை நோக்குழி எந்தப் பெண்பாற் புலவரின் குடும்ப வரலாறும் தெளிவாகத் தெரியவில்லை. ஆதிமந்தி மன்னர்குலத் தொடர்புடையவள் என்பதால் அவள் கொழுநன் ஆட்டனத்தி குறிக்கப் பெறுக்கின்றான். அதுபோல நக்கண்ணையார் காதலன் யார் என்பதும் அறியப்படுகிறது. வெள்ளிவீதியாரின் கணவன் அல்லது காதலன் யார் என்பதும் தெரியவில்லை. பெண்பாற் புலவர்கள் கன்னியரா? இல்லறத்தாரா? துறவறத்தாரா? என்று உண்மையையும் அறியமுடியவில்லை. பெயர்களை ஏடுகளில் பதிவு செய்தோரும் பெண்பாற் புலவர்களின் பெயர்களை விளக்குவோரும் அப்பெண்களின் கணவர் பற்றியாதும் குறிப்பெழுதிலர். பெண்பாற் புலவர்களின் பெயரிலுள்ள ஆண் பெயர்களைத் தந்தை பெயராகவே தமிழுலகம் விளக்குகிறது. இக்காலம் போலக் கணவன் பெயருடன் விளங்கும் பெண்பாற் புலவர் எவருமிலர். பேய்மகள் இளவெயினி என்ற பெயர் தாயின் பெயருடன் விளங்குகிறது. ஏன் தாயின் பெயர் கொள்ளப்பட்டது என்பதும் சிந்திக்கவைக்கிறது. பரத்தையருடைய மக்களுக்கே தாயின் பெயரையோ முதல் எழுத்தையோ சேர்ப்பது மரபு.

பெண்பாற் புலவர்களின் பெயர்கள், அவர்கள் பெண்களா? ஆண்களா? என்று காட்டுமாறு இல்லை. இருபாற் பெயர்களிலும் மரியாதை காட்டும் ஆர் விகுதி இருப்பதால் பால் அறியப்பட்டிலது. இவ்விகுதியை நீக்கிவிடின் இகர ஈறே மிகுதியாகக் காணப்படுகிறது.

| **இகர பெயர்** | **ஐகார ஈறு** | **அர் ஆர் ஈறு** |
|---|---|---|
| இளவெயினி | நன்னாகை | குன்றியன் |
| குறிஎயினி | நெடும் பல்லி யத்தை | **அன் அர் ஈறு** |
| தாயங்கண்ணி | நப்பசலை | காமஞ்சேர்குளத்தார் |
| நல்வெள்ளி | உத்திரை | வெள்ளைமாளர் |
| புல்லாளங்கண்ணி | நக்கண்ணை | கார்க்கியார்(நெய்தல்) |
| பொன்மணி | நல்வெள்ளை | |
| பொன்முடி | பொதுக்கயத்துக்கீரந்தை | |
| முடத்தாமக்கண்ணி | ஔவை | |

மாரிப்பித்தி

வருமுலை ஆரித்தி

வெண்பூதி

வெண்ணிக்குயத்தி

வெள்ளிவீதி

காமக்கண்ணி

குன்றி

9. பெண்பாற் புலவர்கள் அனைவரும் பெண்டிர் என்பதாலேயே ஒருங்கு வரிசைப்படுத்தப்பட்டிருக்கின்றனர். எல்லாரும் ஓரினத்தைச் சேர்ந்தவர்கள் அல்லர், குறமகள் என்றும் குயத்தி என்றும் அரசி என்றும் பல்வேறு இனத்து மகளிர் பாடல் பாடியுள்ளனர். ஆனால் அனைவரும் தமிழினத்தைச் சேர்ந்தவர்கள். ஒரு காலத்தில் ஒருங்கு வாழ்ந்தவர்கள் அல்லர், வெவ்வேறு காலத்தில் வெவ்வேறு நிலத்தில் இவர்கள் வாழ்ந்திருக்க வேண்டும். ஆதிமந்தியாரைச் சுட்டும் வெள்ளிவீதியார் அவர் காலத்தில் வாழ்ந்தவரல்லர், அவருக்குப் பின் வாழ்ந்தவர். வெள்ளிவீதியாரைக் குறிக்கும் ஔவையார் அவர் காலத்திற்குப் பிந்தியவராவார், எனவே பெண்பாற் புலவர்கள் வெவ்வேறு காலத்தில் வாழ்ந்தவர்கள் என்பதே உண்மை. உறுதியாகவும் உண்மையாகவும் யாருக்குப்பின் யார் வாழ்ந்தனர் என்று உறுதியாக இவர்கள் வரையறுக்கப்படவில்லை.

10. சங்க காலத்தில் சேர சோழ பாண்டிய நாடுகள் என்று தமிழகம் மூன்று நாடுகளாகப் பிரிந்திருந்தது, இடையிடையே உள்ள நிலப்பகுதிகளில் பல்வேறு குறுநிலத் தலைவர்கள் ஆண்டனர். பாரியைப் பாடிய கபிலர், பாரியின் பகைவரான பாண்டியரைப் பாடவில்லை, ஔவையாரும் அதியமானையே மிகுதியாகப் பாடினார். எனவே ஒருநாட்டுக்கும் இன்னொரு நாட்டுக்குமிடையே பெருந்தொடர்பில்லை. பெண்பாற் புலவர்கள் ஒவ்வொருவரும் எந்த நாட்டைச் சேர்ந்தவர்கள் என்று தெற்றெனப் புலனாகவில்லை, ஔவையார், ஆதிமந்தியார், வெண்ணிக் குயத்தியார் போன்ற புலவர்களின் தொடர்புடைய மன்னர்கள் அறியப் பெறுகின்றனர். இதனால் நாடு அறியப் பெறுகிறது. வேறுபலருக்கு விவரங்கள் கிட்டில. பெண்பாற் புலவர் ஆராய்ச்சியில் இது குறிக்கத்தக்கது.

பெண்பாற் புலவர்களை ஆதரித்த மன்னர்கள் மிகக் குறைவே. ஔவையார் ஒருவரே அதியமானால் ஆதரிக்கப் பெற்றார். காக்கைப் பாடினியார்

நச்செள்ளையாரை ஆடு கோட்பாட்டு நெடுஞ் சேரலாதன் ஆதரித்தான். அவன் இன்பத் துறையில் மெல்லியனாய் அவன் ஈடுபட்ட காலங்களில் இவர்

"நனையுறு நறவி னாகுடன் கமழச்
சுடர்நுதன் மடநோக்கின்
வாணகை யிலங்கெயிற்
றமிழ்துபொதி துவர்வாய் யசைநடை விறலியர்
பாடல் சான்று நீடினை யுறைதலின்
வெள்வே லண்ணன் மெல்லியன் போன்மென
உள்ளுவர் சொல்லோநின் னுணரா தோரே"

(பதி.51:18-25)

என்று குறிப்பாக அறிவு கொளுத்தியமையை அறிய முடிகிறது. முடிகெழு வேந்தர் மூவரில் சேரன் ஆதரவு பெற்றவர் இவர் ஒருவரே, ஆதிமந்தி மன்னர்குல மகள், நக்கண்ணை மன்னர் குலத்தானைக் காதலித்தவள். ஏனைய பெண்பாற் புலவர்கள் எவரும் வேறு மன்னர்களின் ஆதரவு பெற்றதாகத் தெரியவில்லை. பெண்பாற் புலவர்களைச் சங்க கால வேந்தர்களும் குறுநில மன்னர்களும் தனி உரிமை நல்கி ஆதரிக்கவில்லை.

11. சங்க இலக்கிய ஆய்வாளர்கள், அகப்பாடல்களைப் புலவர்களின் வரலாற்றுடன் பொருத்தி ஆராய்தல் கூடாது என்று வலியுறுத்துவர். தொல்காப்பியர் அகப் பொருட்பாடலில் இயற்பெயர் சுட்டப்படக் கூடாது என்று நூற்பா (54)ச் செய்தார். இதற்கு உரை எழுதவந்த நச்சினார்க் கினியர் "மள்ளர் குழீஇய விழவினானும்........மாண்தக்கோனே" (குறு.31) இது காதலற் கெடுத்த ஆதிமந்தி பாட்டு, இவைதத்தம் பெயர் கூறிற் புறமாமென்று அஞ்சிவாளாது கூறினார். ஆதிமந்தி தன் பெயரானும் தம் காதலனாகிய ஆட்டனத்தி பெயரானும் கூறிற் காஞ்சிப் பாற்படும். ஆதிமந்தி போல, ஏதஞ்சொல்லிப் பேதுபிறி துறவேயெனவும், வெள்ளிவீதியைப் போல நன்றும், செலவயர்ந்திசினால் யானேயெனவும் அகத்திணைக்கண் சார்த்து வகையான் வந்தன வன்றித் தலைமை வகையான் வந்திலவென்பது

மக்கள் நுதலிய அகனைந்திணையும்,
சுட்டி ஒருவர் பெயர் கொளப் பெறார்.[197]

என்று எழுதுவர். பெயர் சுட்டுவதால் அகப்பாட்டு, புறப்பாட்டாதலை நச்சினார்க்கினியர் நுட்பமாக விளக்கினார். பாடலுக்குள் இயற்பெயர் பயின்றால்

தான் புறமாகும், இவ்வாறு வருவன அகத்திணைக்கட் சார்த்து வகையான வந்தன வன்றித் தலைமை வகையாக வந்தில என்பதாம் ஈண்டு, உரிப்பொருட் பெயரைத் தன்னொடு சார்த்திக் கூறும் வகையான் வரவில்லை.

> அகப் பொருளாராய்ச்சி அறிஞர் வ.சுப.மாணிக்கம், இவ்வாறு பெயர் வருதல் அகப்பாடல் நயத்தை அழித்துவிடும் என்பர். அவர் கூறுவதாவது. "பெயர்சுட்டிக் காதற் செய்கைகளை உவமையாகவோ பிறவாகவோ அகப்பாட்டில் வருவிப்பின், பரணர் ஔவையார் வெள்ளிவீதியார் அறிந்தோ அறியாதோ செய்த குற்றங்கட்கு இடனுண்டு. ஒருவர் சுட்டிய வரலாற்றுக் குறிப்பினால் சிலர் பாடிய அகம் அகத்தன்மையிழத்தலும் உண்டு. புலமையில்லாதாரின் காதல் நிகழ்ச்சிகளைக் குறிப்பிட்டிருந்தாற் கூடப் புலமை மாந்தராகவும் ஆதிமந்தி வெள்ளிவீதியைப் போல அகம்பாடும் புலவோராகவும் இருந்து விட்டால் இலக்கியம் இழுக்கப்படும். ஆதலின் அகப்பாட்டில் பிறர்தம் காதற்குறிப்பு வாராமை நல்லிணக்கமாம் என்பது என்துணிவு[198]"

இவ்வாறு தமிழ்ப்புலவோர், அகப்பாடல் பாடியோர் வரலாறுகள் தெரிந்தும் அதனைப்பதிவு செய்யாது விடுத்தனர், எனவே தான் பெண்பாற் புலவர் வரலாறுகள் தொடர்ந்து தமிழிலக்கிய உலகிற்குக் கிடைக்கவில்லை. ஆதலால் சங்க காலத்தில் வாழ்ந்த பெண்பாற் புலவர்களின் வரலாற்றை ஒரு தொடர்ச்சியாகவும் கோவையாகவும் எழுதமுடியவில்லை. இஃது அகப்பாடல் பாடிய எல்லாப் புலவர்களுக்கும் பொருந்தும்.

## மேற்கோள் விளக்கம்

1. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை - **புறநானூறு (மு.ப)** ப. 33
2. கா. கோவிந்தன் - ***சங்கத்தமிழ்ப்புலவர் வரிசை V பெண்பாற் புலவர்கள்*** ப. 74
3. தாயம்மாள் அறவாணன் - **மகடூ 2 முன்னிலை பெண்புலவர் *களஞ்சியம்,*** ப. 171.
4. தே. சொக்கலிங்கம் - கலந்துரையாடலின் போது
5. உ.வே. சாமிநாதையர் - ***சங்கத்தமிழும் பிற்காலத்தமிழும்*** ப. 86.
6. கா.கோவிந்தன் - ***சங்கத்தமிழ்புலவர் வரிசை V பெண்பாற்புலவர்*** ப. 23.
7. உ.வே. சாமிநாதையர் - **புறநானூறு (மு.ப)** ப. 401.
8. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை - **புறநானூறு மூலமும் உரையும்** ப. 331
9. கா. கோவிந்தன் - ***சங்கத்தமிழ்ப்புலவர் வரிசை V பெண்பாற்புலவர்கள்,*** ப. 47.
10. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை - ***நற்றிணை மூலமும் விளக்கவுரையும்,*** ப. 1356
11. உ.வே. சாமிநாதையர் - ***சங்கத்தமிழும் பிற்காலத்தமிழும்*** ப.86
12. மயிலை நாதர் உரை -**நன்னூல் சொல்லதிகாரம்** - ப.
13. ந.மு.வேங்கடசாமி நாட்டார் - ***சிலப்பதிகாரம் மூலமும் உரையும்*** 21 : 1-5
14. உ.வே. சாமிநாதையர் - ***சங்கத்தமிழும் பிற்காலத்தமிழும்*** ப. 87
15. வ.சுப. மாணிக்கம் - ***தமிழ்க்காதல்,*** ப. 347
16. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை - ***நற்றிணை மூலமும் விளக்க உரையும்*** ப. 1096
17. மேலது
18. மேலது

19. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் - **நற்றிணை நானூறு மூலமும் உரையும்** ப.15.

20. மொ.அ. துரைஅரங்கசாமி - **சங்ககாலச்சிறப்பு பெயர்கள்**, ப.63.

21. மேலது ப. 62

22. வ.சுப. மாணிக்கம் - **தமிழ்க்காதல்,** ப.422

23. மேலது, ப.420

24. **மதுரைத் தமிழ்ப்பேரகராதி**, இரண்டாம் பாகம், ப.28.

25. மதுரைத்தமிழ்ப்பேரகராதி முதற்பாகம் ப.105.

26. உ.வே.சாமிநாதையர் - **மணிமேகலை மூலமும் உரையும்** 7:58

27. மேலது. ப.89

28. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை - **புறநானூறு (மு.ப) 1-200)**, ப.207.

29. உ.வே. சாமிநாதையர் - **புறநானூறு மூலமும் உரையும்**, ப. 39.

30. நா.பாலுசாமி (பதி.) - **வாழ்வியற் களஞ்சியம்**, தொகுதி. ஏழு, அ.மா.பரிமனம் - காவற்பெண்டு ப. 270

31. உ.வே. சாமிநாதையர் - **புறநானூறு மூலமும் உரையும்**, ப.193.

32. **மதுரைத்தமிழ்ப்பேரகராதி**, முதற்பாகம், ப.1015

33. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை - **புறநானூறு (விளக்கவுரையுடன் 201-400),** ப.105.

34. மேலது ப. 453.

35. கா. கோவிந்தன் - **சங்கத்தமிழ்ப்புலவர் வரிசை V பெண்பாற்புலவர்கள்,** ப.49.

36. ந.சஞ்சீவி - **சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள்**, ப. 37.

37. உ.வே. சாமிநாதையர் - **புறநானூறு மூலமும் உரையும்**, ப.51.

38. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை - **புறநானூறு (மு.ப) 1-200 பாட்டுக்கள்**, ப. 203.

39. ந.சஞ்சீவி - **சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள்** ப. 57.

40. தாயம்மாள் அறவாணன் - **மகடூஉ முன்னிலை - பெண்புலவர் களஞ்சியம்** ப. 139

41. பெ.சு. மணி - **சங்ககால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும்**, ப.202)

42. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை - **புறநானூறு (மு.ப. 1-200 பாட்டுக்கள்)** ப.203

43. இரா. வடிவேலன் - **இலக்கிய வரலாற்றுச்சான்றுகள்,** ப.145

44. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை - **புறநானூறு மூலமும் உரையும்**, ப.169.

45. உ.வே. சாமிநாதையர் - **சங்கத்தமிழும் பிற்காலத்தமிழும்**,ப. 87-88.

46. மேலது ப. 88

47. ந. சஞ்சீவி - **சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள்**, ப. 32.

48. கா. கோவிந்தன் - **சங்கத்தமிழ்ப்புலவர் வரிசை V பெண்பாற்புலவர்கள்** ப.98

49. அ.ச. ஞானசம்பந்தன் - **மகளிர் வளர்த்த தமிழ்,** ப. 58.

50. உ.வே. சாமிநாதையர் - **பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியர் உரையும்**, ப.11

51. ந.சஞ்சீவி - **சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள்,** ப. 21.

52. தொல். சொல். இடை. சூத்.22 நச்.

53. தாயம்மாள் அறவாணன் - **மகடூஉ முன்னிலை பெண்புலவர் களஞ்சியம்** ப. 220.

54. பொ.வே. சோமசுந்தரனார் உரை - **பத்துப்பாட்டு மூலமும் உரையும்,** ப.4.

55. உ.வே.சாமிநாதையர் - **பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியர் உரை.** ப. 11.

56. தாயம்மாள் அறவாணன் - **மகடூஉ முன்னிலை பெண்புலவர் களஞ்சியம்**, ப.225

57. உ.வே. சாமிநாதையர் - **புறநானூறு மூலமும் உரையும்**,,ப.16

58. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை - **புறநானூறு மூலமும் உரையும் (201-400)**, ப.210

59. வ.சுப. மாணிக்கம் - **தமிழ்க்காதல்** ப.371.

60. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை - **புறநானூறு மூலமும் உரையும் (201-400)**, ப.279.

61. மேலது ப.210

62. வ.சுப. மாணிக்கம் - **தமிழ்க்காதல்** ப.370.

63. கா. கோவிந்தன் - **சங்கத்தமிழ்ப்புலவர் வரிசை V பெண்பாற்புலவர்கள்** ப.1.

64. பெ.சு. மணி - **சங்க கால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும்** ப.191.

65. ந.சஞ்சீவி - **சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள்** ப.130

66. உ.வே. சாமிநாதையர் - **புறநானூறு மூலமும் உரையும்** ப.30.

67. நா. பாலுசாமி (பதிப்)- **வாழ்வியற் களஞ்சியம்** தொகுதி ஆறு (ந.மெய்பொருள் - ஒக்கூர் மாசாத்தியார் ப.188.)

68 .வ.சுப. மாணிக்கம் - **தமிழ்க்காதல்,** ப. 385

69. ந.சஞ்சீவி - **சங்கஇலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள்** ப.43.

70. நா. பாலுசாமி (பதிப்) - **வாழ்வியற் களஞ்சியம்**, தொகுதி பதினொன்று ப.790.

71. உ.வே. சாமிநாதையர் - **குறுந்தொகை மூலமும்** உரையும், ப-**clvi,**

72. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை - **நற்றிணை நானூறு மூலமும் உரையும்,** ப.31.

73. கலைக்களஞ்சியம், தொகுதி.ஆறு.ப-158

74. உ.வே. சாமிநாதையர் - **புறநானூறு மூலமும் உரையும்,** ப.46.

75. மொ.அ. துரைஅரங்கசாமி - ***சங்க காலச்சிறப்புப்பெயர்கள்*** ப.101.

76. தாயம்மாள் அறவாணன் - **மகடூஉ முன்னிலை, பெண்புலவர் களஞ்சியம்**, ப.162.

77. மேலது

78. உ.வே. சாமிநாதையர் - **புறநானூறு மூலமும் உரையும்** ப.50

79. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை - **பெருந்தகைப்பெண்டிர்,** ப.1

80. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை - **புறநானூறு மூலமும் உரையும் (201-400)**, ப.98

81. உ.வே. சாமிநாதையர் - **சங்கத்தமிழும் பிற்காலத்தமிழும்** ப.86.

82. பக்தவத்சல பாரதி & இரா. சம்பத் - **பெண்ணிய ஆய்வுகள்** ப.80.

83. மேலது ப.81.

84. உ.வே. சாமிநாதையர் - **சங்கத்தமிழும் பிற்காலத்தமிழும்,** ப.85.

85. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை - **புறநானூறு விளக்கவுரையுடன் (201-400)** ப.220

86. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை - **நற்றிணைமூலமும் விளக்கவுரையும்** ப.981

87. பெ.சு. மணி - **சங்க கால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும்**, ப.

88. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை - **நற்றிணைமூலமும் விளக்கவுரையும்** ப.981

89. ம. இராமநாதன் - **பைந்தமிழ்ப்பாவையர்** ப. 26

90. மேலது ப.28

91. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை - **நற்றிணைமூலமும் விளக்கவுரையும்** ப.275

92. சு. சௌந்தரபாண்டியன் - **தமிழ்மாருதம், தமிழர் கண்ட கோள்கள்** ப.14.

93. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை - **நற்றிணைமூலமும் விளக்கவுரையும்** ப:275

94. ந.சஞ்சீவி - **சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள்** ப.34

95. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை - **நற்றிணைமூலமும் விளக்கவுரையும்** ப.923

96. உ.வே. சாமிநாதையர் - **குறுந்தொகை மூலமும் உரையும்** ப.253

97. வ.சுப. மாணிக்கம் - **தமிழ்க்காதல்,** ப.347

98. க.அகத்தியலிங்கம் - **வெள்ளி வீதியாரின் கவிதைகள் உள்ளடக்கமும் உருவஆக்கமும்**, ப.6

99. தொல்.பொருள், அகத். சூத். 54

100 ஔவை சு. துரைசாமிப்பிள்ளை - **புறநானூறு மூலமும் விளக்கவுரையும்** ப.243

101. அ.ச. ஞானசம்பந்தன் - **மகளிர் வளர்த்ததமிழ்,** ப.5

102. ஆ. சிவலிங்கனார் - **பாரியைக்கொன்றவர் யார்?** பக்4-5

103. ம. இராமநாதன் - **பைந்தமிழ்ப்பாவையர்,** ப.73.

104. ம.ரா.பே. குருசாமி - **கபிலம்** ப.382

105. நா.பாலுசாமி (பதிப்) - **வாழ்வியற் களஞ்சியம்**, தொகுதி ஒன்று ப.165

106. பெ.சு. மணி - **சங்க கால ஔவையாரும் உலகப் பெண் பாற் புலவர்களும்,** ப.211

107. நா.பாலுசாமி (பதிப்) - **வாழ்வியற் களஞ்சியம்**, தொகுதி ஒன்று......... அஞ்சியத்தை மகள் நாகையார் ப.326

108. அ. நாராயணசாமி ஐயர் - **நற்றிணை மூலமும் உரையும்**, ப.5

109. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை - **நற்றிணைமூலமும் விளக்கவுரையும்** ப.350

110. அ. துரையரங்கசாமி - **சங்க காலச் சிறப்புப்பெயர்கள்,** ப.125

111. எஸ், வையாபுரிப்பிள்ளை (பதிப்) - **சங்க இலக்கியம்** ப.430

112. பெ.சு. மணி - **சங்ககால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும்** ப.214

113. கா. கோவிந்தன், **சங்கத்தமிழ்புலவர் வரிசை V பெண்பாற்புலவர்கள்** ப.1

114. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை - **நற்றிணைமூலமும் விளக்கவுரையும்** ப.350

115. நா.பாலுசாமி (பதிப்) - **வாழ்வியற் களஞ்சியம்**, தொகுதி ஆறு க.பெருமாள் - ஔவையார் ப.433

116. ம. இராமநாதன் - **பைந்தமிழ்ப்பாவையர்**, ப.3-4

117. **மதுரைத்தமிழ்ப்பேரகராதி** முதல் பாகம் ப.456

118. இரா. சாரங்கபாணி - **சங்கச்சான்றோர்கள்** ப.24.

119. மா.பொ. சிவஞானம் - **ஔவை-யார்?** ப.18

120. ம. இராமநாதன் - **பைந்தமிழ்ப்பாவையர்**,ப.5

121. மேலது ப.4.

122. மா.பொ. சிவஞானம் - **ஔவையார்?** ப.20

123. இரா. சாரங்கபாணி - **சங்கச்சான்றோர்கள்** ப.24

124. உ.வே.சாமிநாதையர் - **சங்கத்தமிழும் பிற்காலத்தமிழும்** ப.89

125. கா.கோவிந்தன் - **சங்கத்தமிழப்புலவர் வரிசை V பெண் பாற் புலவர்கள்** ப.21

126. ந.சஞ்சீவி - **சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள்** ப.58

127. உ.வே.சாமிநாதையர் - **குறுந்தொகை மூலமும் உரையும்,ப-cxxiv-cxliv**

128. பெ.சு. மணி - **சங்க கால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும்** ப.44

129. மேலது ப.36

130. பெ.சு. மணி - **சங்ககால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும்** ப.211

131. **மதுரைத்தமிழ்ப்பேரகராதி**, முதல்பாகம் ப.379

132. **மதுரைத்தமிழ்ப்பேரகராதி**, இரண்டாம் பாகம் ப.209

133. மேலது

134. கா. கோவிந்தன் - **சங்கத்தமிழ்ப்புலவர் வரிசை V| பெண் பாற் புலவர்கள்** ப.14

135. உ.வே. சாமிநாதையர்- **குறுந்தொகை மூலமும் உரையும்** U.CXX

136. கா. கோவிந்தன் - **சங்கத்தமிழ்ப்புலவர் வரிசை V பெண் பாற் புலவர்கள்**, ப.14

137. பெ.சு. மணி - **சங்ககால ஔவையாரும் உலகப்பெண்பாற் புலவர்களும்.** ப.11

138. நா.பாலுசாமி (பதிப்) - **வாழ்வியற் களஞ்சியம்**, தொகுதி ஏழு இரா. சாராங்கபாணி - காமக்கணிப் பசலையார் ப.143

139. பி.நாராயணசாமி அய்யர் - **நற்றிணைமூலமும் விளக்கவுரையும்** ப.954

140. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை - **நற்றிணைமூலமும் விளக்கவுரையும்** ப.954

141. தாயம்மாள் அறவாணன் - **மகடூஉ முன்னிலை - பெண்பாற்புலவர் களஞ்சியம்** ப.111

142. உ.வே. சாமிநாதையர் - **குறுந்தொகை மூலமும் உரையும்** CXXXi

143. ந.சஞ்சீவி - **சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள்** ப.78

144. உ.வே. சாமிநாதையர் - **குறுந்தொகை மூலமும் உரையும்** ப.13

145. தொல்.பொருள். மெய்ப். 20 இளம்

146. தாயம்மாள் அறவாணன் - **மகடூஉ முன்னிலை பெண்பாற்புலவர் களஞ்சியம்** ப.112

147. மேலது ப. 113

148. உ.வே. சாமிநாதையர் - **குறுந்தொகை மூலமும் உரையும்** ப. CXIV

149. மொ.அ. துரைஅரங்கசாமி - **சங்ககாலச்சிறப்புப்பெயர்கள்** ப.170

150. மேலது

151. தாயம்மாள் அறவாணன், **மகடூஉ முன்னிலை - பெண் புலவர் களஞ்சியம்** ப.114-115

152. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை - **நற்றிணைமூலமும் விளக்கவுரையும்** ப.450-451

153. தாயம்மாள் அறவாணன் - **மகடூஉ முன்னிலை - பெண்பாற்புலவர் களஞ்சியம்** பக. 125-126

154. நா.பாலுசாமி (பதிப்) - **வாழ்வியற்களஞ்சியம்**, தொகுதி - ஏழு

இரா.சாரங்கபாணி - குமுழிஞாழலார் நப்பசலையார் ப.665

155. தேக்கடிக்கருகில் குமுழி என்றோர் காட்டுப்பகுதி உள்ளது. இங்கு கூறப்படும் உள்ள அவ்வூராகலாம்.

156. உ.வே. சாமிநாதையர் - **குறுந்தொகை மூலமும் உரையும்** ப. cxiv

157. நா.பாலுசாமி (பதிப்) - **வாழ்வியற் களஞ்சியம்**, தொகுதி பதினொன்று ப.790

158. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை - **புறநானூறு மூலமும் உரையும் (201-400)** ப.153

159. மேலது

160. மேலது

161. உ.வே. சாமிநாதையர் - **குறுந்தொகை மூலமும் உரையும்** ப. Cl

162. மொ.அ. துரை அரங்கசாமி - **சங்க காலச்சிறப்புப்பெயர்கள்** ப. 102-103

163. உ.வே. சாமிநாதையர் - **குறுந்தொகை மூலமும் உரையும்** ப. Cliii

164. பெ.சு. மணி - **சங்ககால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும்,** ப.213

165. மொ.அ. துரைஅரங்கசாமி - **சங்ககாலச் சிறப்புப்பெயர்கள்** ப.96

166. பெ.சு.மணி - **சங்ககால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும்**. ப.211

167. தாயம்மாள் அறவாணன் - **மகடூஉ முன்னிலை பெண் புலவர் களஞ்சியம்**, ப.173

168. உ.வே. சாமிநாதையர் - **குறுந்தொகை மூலமும் உரையும்** CLiii

169. தாயம்மாள் அறவாணன் - **மகடூஉ முன்னிலை - பெண்பாற்புலவர் களஞ்சியம்** ப.173

170. மேலது

171. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை - **புறநானூறு மூலமும் உரையும்** ப.107.

172. கா.கோவிந்தன் - **சங்கத்தமிழ்புலவர் வரிசை V பெண்பாற்புலவர்கள்** ப.84

173. அ.ச.ஞானசாம்பந்தன் - **மகளிர் வளர்த்த தமிழ்**, ப.35

174. உ.வே. சாமிநாதையர் - **புறநானூறு மூலமும் உரையும்** ப.58

175. உ.வே. சாமிநாதையர் - **குறுந்தொகை மூலமும் உரையும்** ClXiV

176. பெ.சு. மணி - **சங்ககால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்கள்**,ப.213

177. ந.சஞ்சீவி - **சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள்,** ப.47

178. கா. கோவிந்தன் **சங்கத்தமிழ்ப்புலவர் வரிசை V பெண்பாற்புலவர்கள்** ப.1.

179. ந.சஞ்சீவி - **சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள்** ப.45

180. பெ.சு. மணி - **சங்க கால ஔவையாரும் உலகப் பெண்பாற்புலவர்களும்** ப.201

181. ந. சஞ்சீவி - **சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள்**, ப.47

182. **கலைக்களஞ்சியம்**, தொகுதி ஒன்பது ப.465

183. மேலது ப.466

பூதி என்னும் பெயர் ஆண்பாலருக்கும் வைப்பதுண்டு என்பதை வெண்பூதியார் என்ற பெயர் சுட்டுகிறது.

184. மேலது ப.466

185. உ.வே. சாமிநாதையர் **குறுந்தொகை மூலமும் உரையும்** CLXVi

186. ந. சஞ்சீவி - **சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள்** ப.32.

187. பெ.சு. மணி - **சங்க கால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும்** ப.213

188. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை - **புறநானூறு மூலமும் உரையும் (201-400)** ப.192

189. உ.வே. சாமிநாதையர் - **புறநானூறு மூலமும் உரையும்** ப.61

190. ந. சஞ்சீவி - **சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள்,** ப.128

191. பெ.சு. மணி - **சங்க காலஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும்** ப.209

192. உ.வே. சாமிநாதையர் - **புறநானூறு மூலமும் உரையும்** ப.61

193. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை - **புறநானூறு மூலமும் உரையும் (201-400)** ப.192

194. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை - **நற்றிணைமூலமும்விளக்கவுரையும்** ப.954

195. அ. நாராயணசாமி ஐயர் - **நற்றிணை மூலமும் உரையும்** ப.50

196. **மதுரைத்தமிழ் பேரகராதி** முதற்பாகம் ப.594

197. தொல். அகத். சூத். 54

198. வ.சுப. மாணிக்கம், **தமிழ்க்காதல்,** ப.324

## நான்காமியல்

## அகப்பாடல்களின் திணைக் கூற்றாய்வு

" வாய்மொழி இலக்கியம் (Folk Literature) மக்களிடையே வழங்கிய பிறகே, எழுத்திலக்கியம் தோன்றியது"[1] அகம், புறம் என்ற இருவகையிலும் வாய்மொழிப்பாடல்கள் பிறந்தன. அகத்தில் வாய்மொழிப்பாடல்கள் பாடும் போது காதலைப் பொருளாகக் கொண்டு பாடினர். இவ்வாறு பாடும்போது சுற்றுப்புறச்சூழலும், பொழுதும் பாடலில் பாடுபெற்றன. 'மக்களால் பாடப்பட்ட வாய்மொழி இலக்கியம் எழுத்திலக்கியமாக உருவான போது பழைய பொருளைத்தழுவி இயல்பாகத் தோன்றியன'[2]. தமிழலக்கியங்களைக் கொண்டு இலக்கணம் எழுதிய தொல்காப்பியர் அந்நாளில் தமிழகத்தில் நிலம் பிரிவுபட்டுக்கிடந்த மரபை அறிந்து, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தலென,[3] நிலத்தை வரையறுத்தார்.

சங்க இலக்கியமாகப்போற்றப் பெறுவன எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும். இந்நூலில் ஆண்பாற்புலவரும், பெண்பாற்புலவரும் பாக்கள் பாடியுள்ளனர். ஆண்பாற்புலவர்கள் மிகுதியாகப் பாடியுள்ளனர். பெண்பாற்புலவர்களின் எண்ணிக்கை ஆண்புலவர்களின் எண்ணிக்கையைவிடக் குறைவு. மகளிர் பாடிய பாக்களின் எண்ணிக்கையும் குறைவு. அகப்பாடல்களைப் பாடும் போது,

> "கணவனும் மனைவியும் ஊடல் கொண்டு பிணங்குவதைப் பாட விரும்பினால் புலவர் அதற்குஏற்ற வயல்சார்ந்த மருத நிலத்தையும், அந்நிலத்து இயற்கைப் பொருள்களையுமே அமைத்துப்பாட வேண்டியிருந்தது. மலையையோ, காட்டையோ அமைத்துப் பாடுவதற்கு அந்த மரபு இடம் தரவில்லை"[4].

இவ்வாறு இருந்த மரபு அகப்பாடல்களில் இயல்பாகப் பதிந்தது. பெண்பாற்புலவர்களின் அகப்பாடல்களில் திணையும், கூற்றும் அமைந்தவகையை இவ்வியல் ஆராய்கிறது.

### பெண்பாற்புலவர்களின் அகப்பாடல்கள்

சங்கப் பெண்பாற்புலவர்களில் முப்பத்துமூவர் அகத்தில் பாடியுள்ளனர்.

இவர்கள் பாடிய பாடல் நூற்றிருபது. இத்துறையில் மிகுதியாகப்பாடியவர் ஔவையார். இவர் இருபத்தாறுபாக்கள் பாடியுள்ளார். வெள்ளிவீதியார் பதின்மூன்று பாடல்களும், அள்ளூர் நன்முல்லையார், குன்றியனார் முறையே பத்துப்பத்துப் பாடல்களும், பத்து என்ற எண்ணிக்கைக்குக் குறைவாக கழார்க்கீரனெயிற்றியார் எட்டுப்பாட்டும், ஒக்கூர் மாசாத்தியார் ஏழும், கச்சிப்பேட்டு நன்னாகையார் ஆறும், நல்வெள்ளியார் நான்கும், வெறிபாடிய காமக்கண்ணியார், வெண்பூதியார், நக்கண்ணையார் முறையே மூன்றும், பூங்கணுத்திரையார், நெடும்பல்லியத்தையார், மதுரை ஓலைக்கடையத்தார் நல்வெள்ளையார், நன்னாகையார், கார்க்கியார், போன்றோர் முறையே இரண்டு பாடல்களும், அஞ்சில் அஞ்சியார், அஞ்சி அத்தைமகள் நாகையார், ஊண்பித்தையார், காக்கை பாடினியார் நச்செள்ளையார், காமஞ்சேர் குளத்தார், காமக்கணி நப்பசலையார், குமுழி ஞாழலார் நப்பசலையார் குறமகள் குறிஎயினியார், பொதும்பிற்புல்லாளங்கண்ணியார், பொன்மணியார், மாறோக்கத்து நப்பசலையார், முள்ளியூர்ப்பூதியார், பொதுக்கயத்துக்கீரந்தையார், வருமுலையாரித்தியார், வெண்பூதியார், வெண்மணிப்பூதியார் போன்றோர் முறையே ஒரு பாடலும் பாடியவர்கள்[5].

அகத்துறையில் பெண்பாற்புலவர்களில் ஒருபாடல் பாடியோர் பதினெட்டுப்பேர். பத்துக்குள் பாடியோர் என்ற எண்ணிக்கையில் பதினொருவரும், பத்துக்குமேல் பாடியோர் என்ற எண்ணிக்கையில் நால்வரும் உள்ளனர்[6]. இவ்வெண்ணிக்கை வரையறை பெண்பாலரில் ஔவையார், வெள்ளிவீதியார், அள்ளூர் நன்முல்லையார், குன்றியனார் என்ற நால்வர் மிகுதியாகப்பாடியவர் என்பதை அறியமுடிகிறது. தவிர ஏனையோர் பாடியபாக்கள் தொகுப்பின்போது கிடைக்காமலும், பெண்கள் அதிகம் பாட விரும்பாமையாலும் பாடல்கள் குறைந்திருக்க காரணமாகும்.

பெண்பாற்புலவரின் அகப்பாடல்கள் ஐவகைத்திணையிலும் இடம் பெற்றுள்ளன[7]. இவற்றில் பாலைத்திணைப்பாக்கள் மிகுதியாக உள்ளன. இத்திணையில் முப்பத்து இரண்டு பாடல்கள் இடம்பெற்றுள்ளன. நெய்தல் திணையில் இருபத்தாறும், குறிஞ்சித்திணையில் இருபத்தைந்தும், மருதத்திணையில் இருபதும், முல்லைத்திணையில் பதினேழுமாகப் பாக்கள் காணப்படுகின்றன. இத்திணை

எண்ணிக்கையைக் கொண்டு சங்ககாலப் பெண்புலவர்களைப் பிரிவாகிய பாலையே பெரிதும் பாடமனங்கவர்ந்திருக்கிறது என்பது புலனாம். தலைவனைப்பிரிந்திருக்கும் நிலை குறித்தே அவர்கள் கலங்கியிருக்கின்றனர். அதுபோலக் கணவனைப்பிரிந்து மனையில் இருத்தலை அவர்கள் விரும்பிலர். அதனாலேயே அத்திணையில் பாக்கள் மிகுதியாகப் பாடவில்லை என்பதும் பெறப்படும்.

### பாலைத்திணை

தொல்காப்பியர் வகுத்த குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற ஐவகைத்திணையிலும், குறிஞ்சி நிலத்திற்கு மலையும் மலைசார்ந்த இடமும், முல்லை காடும் காடுசார்ந்த இடமும், நெய்தல் மணலும் மணல்சார்ந்த நிலமும், மருதம் வயலும் வயல் சார்ந்த நிலமும் என்று திணைகளை வரையறுத்தார். ஆனால் பாலைநிலம் தமிழகத்தின்மை கருதி,

"நடுவண் ஐந்திணை நடுவண தொழியப்
படுதிரை வையம் பாத்தியப் பண்பே"[8]

என்று கூறினார். ஆனால், பாலைக்குரிய பொழுதினை வரையறுக்கும் போது,

நடுவு நிலைத்திணையே நண்பகல் வேனிலோடு
முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே[9]

என்று பாலையின் சிறுபொழுது நண்பகல் என்றும், பெரும்பொழுது இளவேனில் முதுவேனில் என்றும் வரையறுப்பர். இதனால் தனிநிலம் என்று பாலைக்கு நிலமில்லை. குறிஞ்சி முதலான நால்வகை நிலமும் இயல்பாக வளமையுடன் செழிப்புற்றிருப்பதும், (செழிப்புறுதல் தண்ணீர் உள்ளதால்) அவ்வாறு செழிப்பின்றி இருக்கும் காலமும் உண்டு. (மழையின்றி வாடியிருத்தல்) அவ்வாறு மழையின்றி அந்நிலம் வெப்பத்தால் காய்ந்து கிடப்பதுப் பாலைநிலமாகக்கருதப்பட்டது. அந்நால்வகை நிலத்திலும் மழையின்றி வாடுவது நெய்தல் மருத நிலங்களைக்காட்டிலும் குறிஞ்சியும், முல்லையும் மிகுதியும் வாட்டமுறும். ஆதலால் அறிந்தோர் பாலைநிலமாக முல்லையும், குறிஞ்சியும் மழையின்றி வாடியிருந்த காலத்தைப்பாலையாகக் கொண்டனர். இதனை இளங்கோவடிகள்,

"முல்லையுங் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து
நல்லியல் பிழந்து நடுங்குதுயர் உறுத்துப்
பாலை என்பதோர் படிவங்கொள்ளும்"[10]

என்று குறிப்பிட்டார். இதனை வ.சுப. மாணிக்கனார்,

"தமிழ்நாட்டில் நிலத்தாற் பாலை இலதேனும் காலத்தாற் பாலையுண்டு, நிலையான சுரம் இன்றேனும் வந்துபோம் சுரமுண்டு. கோடை என்னும் காலப்பாலைகுறிஞ்சி முல்லைப் பகுதிகளை ஓரிரு திங்கள் நீரற்ற களமாக, வெப்பம் வீசும் சுரமாக, யாதுந் தோன்றாப் பாலை நிலமாகக் கடுங்கதிர் ஞாயிற்றின் விருந்தில்லா மாறிவிடுகின்றது"[11]

என்று குறிப்பிடுவதும், பாலைக்கென்று தனிநிலமில்லை, முல்லை குறிஞ்சி நிலம் வறட்சியால் பாலைநிலமாகக் கருதப்பட்டதை அறியமுடிகிறது.

சங்கப்பெண்புலவர்கள் இப்பாலைத்திணையைப் பாடும்போது களவில் உடன்போக்காகத் தலைவன், தலைவி சென்றதையும், வரைபொருள் பெறல் வேண்டித் தலைவன் சென்றதையும் குறிப்பிடுவர். கற்புவாழ்வில் தலைவன் தலைவனைப் பிரிந்து வினைவயிற் பிரிவு, பொருள்வயின் பிரிவு மேற்கொள்வதையும், அக்காலங்களில் பெண்கள் வருந்தியிருப்பதையும், தலைவன் வினைமுற்றி மீண்டுவருதலையும் பாடிப் பிரிவைப் பாடலில் உரிப்பொருளாக்குவர். அப்பாலைப்பாடல்களில் பாலைநிலப்புனைவு, கருப்பொருள் புனைவுகளும் இடம்பெறும். இத்திணைப்பாடலில் பிரிவில் தலைவியும், தோழியும்,செவிலியும், தலைவனும், பிறரும் கூற்று நிகழ்த்துவனவாம்.

### பாலைத்திணைப்பாக்கள் எண்ணிக்கை

பெண்பாற்புலவர்களில் பன்னிருவர் இத்திணையில் பாடியுள்ளனர். இப்பாடல்களில் குறுந்தொகையில் பதினெட்டும், நற்றிணையில் எட்டும், அகநானூற்றில் நான்குமாக இடம் பெற்றுள்ளன. ஔவையார் பாலைத்திணையில் ஒன்பது பாடல் பாடியவர். இவரே மிகுதியும் பாடியவர். கழார்க்கீரனெயிற்றியார், வெள்ளிவீதியார் இருவரும் முறையே ஐந்துபாக்களும், அள்ளூர் நன்முல்லையார்,

கச்சிப்பேட்டு நன்னாகையார், இருவரும் முறையே மூன்று பாக்களும், ஊண்பித்தையார், காமக்கணிநப்பசலையார், குன்றியனார், நல்வெள்ளியார், பூங்கணுத்திரையார், முள்ளியூர்ப்பூதியார், வெண்பூதியார் இவர்கள் முறையே ஒரு பாடலும் பாடியவர்கள்.

இவர்கள் பாடிய பாலைப்பாடலில் தலைவி கூற்றுப் பாக்கள் மிகுதி. இதில் இருப்பது பாடல்கள் உள்ளன. தோழி கூற்றில் ஏழு பாடல்களும், தலைவன் கூற்றில் மூன்றும், செவிலி கூற்றில் இரண்டுமாக இடம் பெற்றுள்ளன[12]. பெண்பாற்புலவர்கள் பாடல்களில் பெண்கள் கூற்று மிகுந்திருப்பது பெண்கள் பெண்களைப்பாட விரும்பியதைக்காட்டும், ஒத்த பாலில் பாடும் போது உரிப்பொருளின் நிலை தெற்றெனப் புரிந்து நன்குணர்ந்து மிகுதியாகப் பாடமுடிந்ததைப் பெண்கூற்றுக்கள் காட்டுகின்றன. பாம்பின் கால்பாம்பறியும் என்றாங்குப்பெண்களின் உணர்ச்சியைப் பெண்களே அறிவர். பெண்பாற்புலவர்களின் பாலைத்திணைப்பாக்களை 1. உடன்போக்குப்பாலை 2. பிரிவுப்பாலை என்று இரண்டாகப் பிரித்துப்பார்க்க வேண்டும்.

## 1. உடன்போக்குப்பாலை

தலைவன் தலைவியை உடன் அழைத்துச்சென்று மணம் செய்து கொள்வது உடன்போக்காகும். பெண்பாற்புலவரின் பாலைப் பாடலில் மூன்று பாக்கள் இப்பொருளில் உள்ளன. இவற்றில் ஔவையார் இரண்டு பாக்களும் (குறுந். 15,388), வெள்ளிவீதியார் (குறுந் 149) ஒரு பாடலும் பாடியுள்ளனர். இம்மூன்று பாடலில் ஔவையார் பாடிய குறுந்தொகைப் பதினைந்தாம் பாடலில் தலைவன் தலைவியை உடன்போக்காக அழைத்துச்சென்று அவனூரில் மணந்து கொண்டதை அறிந்த செவிலித்தாய் நற்றாய்க்குக் கூறி அறத்தொடு நிற்பதாக அமைந்துள்ளது. மற்ற இரு பாடல்களிலும் உடன்போக்கு நிகழவில்லை. ஆனால் தலைவி நாணத்தால் இதுவரை அவ்வாறு நிகழவில்லை, இப்போது நாணம் நெடுங்காலம் நிலைத்திருக்காது என்று நாணழிவைக் கூறி உடன்போக்கிற்கு இசையும் பொருளில் (குறுந். 149) அமைந்துள்ளது. குறுந்தொகை 388 ஆம் பாடலில் தோழி தலைவனிடம் தலைவியை உடன் அழைத்துச்செல் உன்னுடன் அவள் வந்தால் 'கானமும் இனிமையுடையதாகும்' என்று கூறுவதாயுள்ளது.

இம்மூன்று பாடல்களிலும் ஔவையார் பாடிய (குறுந் 15) பாடலான செவிலி கூற்றுப்பாடல் உடன்போக்கு நிகழ்ந்ததையும், ஔவையார் (குறுந் 388), வெள்ளிவீதியார் (குறுந் 149) பாடிய இரண்டு பாடல்களிலும் உடன்போக்கு நிகழ்ந்தால் தலைவி பிரிவுத் துயரின்றி இனிதிருப்பாள் என்று கூறுவதாகவும் அமைந்துள்ளது. இப்பாடலில் ஔவையார் பாடிய,

"பறைப்படப் பணிலம் ஆர்ப்ப இறைகொள்பு
தொன்மூ தாலத்துப் பொதியில் தோன்றிய
நாலூர்க் கோசர் நன்மொழி போல
வாயாகின்றே தோழி ஆய்கழல்
சேயிலை வெள்வேல் விடலையொடு
தொகுவளை முன்கை மடந்தை நட்பே "

(குறுந் 15)

என்ற பாடல் செவிலித்தாய் கூற்று. தலைவி தலைவனுடன் சென்று, அவன் ஊரில் திருமணம் செய்து கொண்டான் என்பது இப்பாடலின் கருத்து. தலைவன் தலைவி மணத்தை இவர் "மடந்தை நட்பே" என்றார். இதுவே மணம். இது வாய்மொழிக்கோசர் நன்மொழி போல உண்மையாயிற்று. தலைவன் தலைவியை உடன் கூட்டிச் சென்று அவனூரிலுள்ள தொன்மூதாலமரத்தடியில் பறைஒலிக்கச்சங்கு முழங்க மணம் செய்து கொண்டதைப் பாட்டுரைக்கின்றது. இதனால், இஃது உடன்போக்கு நிகழ்ந்ததையும், மணம்நடைபெற்றதையும் அறிவிக்கின்றது. தொல்காப்பியர் பாலைத் திணையைக் கூறும்போது

"கொண்டுதலைக் கழிதலும் பிரிந்தவண் இரங்கலும்
உண்டென மொழிப ஓரிடத்தான்"[13]

என்பாராதலின் இது பாலை உரிப்பொருளாயிற்று. தலைவன் தலைவியை அவள் பெற்றோரை விடுத்து உடன்கொண்டு போய் மணத்தலின் பிரிதலாயிற்று.

இப்பாடலில் பாலைக்குரிய முதற்பொருள் புனைவில்லை. "ஆலமரம்" மட்டும் சுட்டப்படுகிறது. "ஆலமரம்" சுட்டப்படுவதும் தலைவன் "விடலை" என்று குறிக்கப்படுவதும் பாலைத்திணையாயிற்று. தொகுவளை முன்கை மடந்தையாகிய தலைவி, தலைவனுடன் சென்று மணம் புணர்ந்தாள் என்பதைச் செவிலி நற்றாயிடம்

கூறுகின்றாள். தோழி செவிலிக்குச் சொல்லச் செவிலி நற்றாய்க்கு உரைக்கின்றாள். இது பெண்களுக்குள் செய்தி பரிமாற்றம் நடக்கும் முறை.

தோழி, செவிலித் தாய்க்குத் தலைவி உடன் சென்றமையைப் பற்றிக் கூறியதாய் பாடலில் கருத்தில்லை. ஔவையார் தலைவன் தலைவி காதல் நட்பு (மணம்) உறுதியானதை 'நான்மொழிக் கோசர் வாய்மொழிபோல' என்று உவமித்துரைத்தார். தலைவி தலைவனைக் களவில் திருமணம் செய்து கொள்ள விரும்பலைத் தோழியிடமே உரைப்பாள் என்பது அகப்பொருள் மரபு, தோழி அதனைத்தன் தாயான செவிலியிடமே கூறுவாள். செவிலித்தாய் அதனை நற்றாயிடம் கூறுவாள். இஃதே அறத்தொடு நிற்றல். இவ்வாறு நற்றாயிடம் கூறுவதால் மணவாழ்க்கையில் இணைந்த இருவரையும் பிரிக்காமல் காப்பது இதன் நோக்கம். இஃது அறத்தொடு நிற்கும் முறை. அதனையேற்று இப்பாட்டிற்கு உடன்போன பின்றைத்தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றாள், நிற்பச் செவிலித்தாய் நற்றாய்க்கு அறத்தொடு நின்றது" என்று கூற்று எழுதினர். இவ்வாறு அறத்தொடு நிற்றலின் இது செவிலித்தாய் கூற்றாயிற்று, செவிலித்தாய் கூறியதை நற்றாய் கேட்டாள் என்பதால் கேட்போர் நற்றாய் ஆகிறாள்.

இப்பாட்டில் செவிலி, நற்றாயை "வாயாகின்றே தோழி" (குறுந் 15;4) என்று கூறுவதாக வருவது யாண்டும் காணமுடியாப் புதுமையாகும். ஔவையார் பாடலிலேயே காணப்படுவதாகும். உடன் போக்குணர்த்தும் பொருளில் அமைந்த மற்றொரு பாடலான,

"நீர்கால் யாத்த நிரையிதழ்க் குவளை
கோடை யொற்றினும் வாடா தாகும்
கவணை யன்ன பூட்டுப்பொரு தசாஅ
உமணெருத் தொழுகைத் தோடுநிரைத் தன்ன
முளிசினை பிளக்கும் முன்பின் மையின்
யானை கைம்மடித் துயவும்
கானமும் இனியது நும்மொடுவரினே"

(குறுந் 388)

என்ற பாடல் தோழி கூற்று. 'தலைமகள் உடன் போக்கு நேர்ந்தமையுணர்ந்த தலைமகன், சுரத்து வெம்மையும், தலைமகள் மென்மையும் குறித்துச் செலவு அழுங்கலுறுவானைத் தோழி அழுங்காமற் கூறியது'. இப்பாடலில் தலைவனின் பிரிவு சுட்டப்படவில்லை. பாடலில் தலைவன் பிரிந்தால் தலைவி வருந்துவாள் உடன் அழைத்துச் சென்றால் 'கானம் இனிமையுடையதாகும்' என்று பிரிவுப்பொருள் சுட்டப்பட்டதால் பாலையாகியது.

இப்பாடலில் பாலைநிலத்தில் வெப்பமிக்கக்காற்று வீசுவதை "கோடையொற்றினும்" என்றும், 'உமணெருத்து ஒழுகைத்தோடு நிரைத்தன்ன' என்று, உமணர் 'உப்புப்பார மேற்றிய வண்டியைப்பாலைநிலத்தில் கொண்டு செல்வர்'[14] என்பதால் இந்நிலம் பாலை என்பது பெறப்படுகிறது. மழையின்மையால் வருந்தியிருக்கும் யானை மரங்களைப்பிளந்து உண்ணுவதற்கு வலிமையிழந்து கையை மடித்துக்கொண்டு வாட்டமுடன் படுத்திருக்கும் கானம் என்று வெம்மையைக் குறிப்பிடுகிறார். இது பாலைநிலம். இப்பாடலில் கோடை யொற்றினும் என்பது வெப்பக்காற்று வீசும் நண்பகலைக்காட்டும் இது பாலையின் பொழுது. மிக்க வெப்பத்தோடும் அங்கு வாழும் உயிரினங்கள் வெப்பம் தாழாமல் வருந்தும் என்றதால் 'கோடை' என்று ஆசிரியர் குறிப்பிட்டார். இப்பாடலில் பாலையின் நிலமும் பொழுதும் புனையப்பட்டுள்ளன. அந்நிலக்கருப்பொருளாக யானை, குவளைமலர் போன்றவையும் சுட்டப்பட்டுள்ளன. இப்பாடலில் "கானம்" என்றது முல்லை நிலம். அந்நிலம் மழையின்றி வெப்பத்தால் வாடியிருக்கும் போதும் பாலை நிலமாகும். அதனால் முல்லை திரிந்த பாலைநிலமாகும்.

உடன்போக்குப் பொருளில் அமைந்த வெள்ளிவீதியாரின்,

"அளிதோ, தானே நாணே நம்மொடு
நனிநீ டுழந்தன்று மன்னே யினியே
வான்பூங் கரும்பி னோங்கு மணற் சிறுசிறை
தீம்புன னெரிதர வீய்ந்துக்கா அங்குத்
தாங்கு மளவைத் தாங்கிக்
காம நெரிதரக் கைந்நில் லாதே"

(குறுந் 149)

இது தலைவி கூற்று 'உடன்போக்குணர்த்திய தோழிக்குத்தலைவி சொல்லியது'. இப்பாடலில் பாலையின் முதற்கருப்பொருள் புனையப்படவில்லை. தலைவி காமத்தின் அளவைத் தாங்க இயலாது வருந்துகின்றாள். இதற்குத் தலைவனின் பிரிவே காரணமாதலால் பிரிவுப்பொருள் குறித்துப்பாலையாகியது. தொல்காப்பியர் தலைவி கூற்றில் இது 'நொதுமலர் வரைவின்கண் தலைவி நாணழிபிரங்கிக் கூறியது' என்பதாகும். இப்பாடலில் தலைவி தோழியிடம் காமத்தின் அளவைக்கூறி, நாணம் இனி நில்லாது என்று வருந்துகிறாள். இது தலைவன் வரைந்துகொள்ள வேண்டும் என்ற குறிப்புப்பொருள் வெளிப்படக் கூறுவதாகும். தலைவி தன் எண்ணங்களைத் தோழியிடமே கூறுவாள் என்ற அகமரபுப்படி அமைந்துள்ளது. இக்களவுப்பாட்டு தலைவி கூறத்தோழி கேட்டதாக அமைந்துள்ளது.

## 2. பிரிவுப்பாடல்

பெண்பாற்புலவரின் பாலைப் பாடல்களில் பிரிவுப்பொருளில் அமைந்த பாடல் இருபத்தொன்பது. இதில் தலைவி கூற்றுப்பாடல் பத்தொன்பது. இத்தலைவி கூற்றில் களவுப்பாடல்கள் இரண்டு (குறுந். 28,30), கற்புப்பாடல்கள் பதினேழு (குறுந். 27, 39, 43, 67, 140, 174, 192), (அகம். 11, 45, 147, 163, 217, 235, 273, 303, நற் 243, 281) பாடல்கள் இடம்பெற்றுள்ளன. தோழி கூற்றுப்பாடல் ஆறு. இதில் களவுப்பாடல் இரண்டு (குறுந். 48, நற்.7); கற்புப்பாடல் நான்கு (குறுந். 130, 180, 232, அகநா.173); தலைவன் கூற்றுப்பாடல் மூன்று (குறுந். 237, நற். 312 அகநா. 41); செவிலி கூற்று களவுப்பாடல் (குறுந். 44);

## 1. களவுப்பாடல்கள்

பாலைப்பாடலில் பெண் கூற்றுப்பாக்கள் மிகுந்துள்ளன. களவில் தலைவி பேசுவதாக இரண்டும், தோழி பேசுவதாக இரண்டும், செவிலி பேசுவதாக ஒன்றும் அமைந்துள்ளன.

## 1. தலைவி கூற்று

தலைவி கூற்றிலமைந்த இரண்டு பாடல்களில் ஒன்று ஔவையார் (குறுந். 28) பாடியது. மற்றொன்று கச்சிப்பேட்டு நன்னாகையார் பாடியது. (குறுந்.30) ஔவையார்,

"முட்டு வேன் கொல் தாக்கு வேன்கொல்
ஓரேன் யானுமோர் பெற்றிமேலிட்
டாஅ வொல்லெனக் கூவு வேன்கொல்
அலமரல் அசைவளி யலைப்பவென்
உயவு நோயறியாது துஞ்சு மூர்க்கே

(குறுந் 28)

என்ற இப்பாட்டு பாலைத்திணைப்பாட்டு. இஃது ஐந்தடிகளையுடைய குறுந்தொகைப்பாட்டு. இப்பாடலில் இயற்கைப்புனைவில்லை. உரிப்பொருள் முதன்மை பெற்றுள்ளது. தலைவி 'என்னுடைய நோயைத் தாயார் முதலியோர் அறியாமையால் யான் ஆற்றாமல் வருந்துகின்றேன்' என்று இப்பாடலில் பிரிவைப்பேசுகிறார். பிரிவாகிய உரிப்பொருள் பேசப்படுவதால் இப்பாட்டுப்பாலைத்திணையாகியது. ஔவையார் முதற்பொருளையோ, கருப்பொருளையோ பாடலில் சுட்டவில்லை. உரிப்பொருளாலேயே இப்பாட்டுப் பாலையாகிறது. இப்பாடலில் திணையை நிருணயிப்பது உரிப்பொருள்.

இப்பாட்டு தலைவி கூற்றுத்தோழி கேட்பதாக அமைந்த பாடல். தலைவி காதலால் உண்டான துயரைத் தோழியிடம் கூறுகிறாள். ஒரு பெண் தன் காதல் துயரைத் தன்னனைய தோழியிடமே உரைப்பாள். இப்பாட்டில் தோழியை விளிக்குஞ் சொல் பாடலில்லை. பாடுபெருளாலும், பாட்டின் கருத்தோட்டத்தாலும் தலைவி தோழிக்குக் கூறியது என்று கொள்ளப்பெறுகிறது. இப்பாடலில் தலைவி என் துயரை அறியாமல் துஞ்சுவதாகக் கூறுவது தோழியை ஆம். காதலனைப் பிரிந்திருப்பதால் தலைவி உறங்கவில்லை. மனம்பிரிவினால் வேதனைப்படுகிறது. பிரிவில் துணையானவள் தோழி.

"தோழி என்ன தான் துணையானாலும் யாமத்தே தன்னை மறந்து சற்றே உறங்குகிறாள்; அது பொறுக்கவில்லை தலைவிக்கு; என்னை வருத்தும் துயரை அறியாத இந்த ஊரார் இப்படித்தான் தூங்குவார்கள் அவர்களுக்கு என்ன கவலை என்பதுபோல் தலைவி ஊர் மேல் வைத்துத்தோழியைக் கடிகின்றாள்[15]

இப்பாடலில் யாரிடம் கூறுகின்றாள் என்றில்லாமையால், இது தோழியைப்பார்த்துக் கூறியது எனக்கொள்வது பொருந்தும்

இப்பாட்டுக்குக் கூற்று, 'தோழிக்குக் கிழத்தி உரைத்தது' என்று எழுதினால் போதும். அவ்வாறு எழுதின், கைகோளோடு பிறவோடு புலப்படாததால் 'வரைவிடை ஆற்றாளாய்க் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது'[16]. என்று கூற்று வகுத்தனர்.

களவில், தலைவன் தலைவியைப் பிரிந்துபோவது, தலைவியின் பெற்றோருக்கு முலைவிலை கொடுப்பதற்குப் பொருளீட்டுவதற்கேயாகும். அதனால் 'வரைவிடை' என்பது கூற்றில் இடம் பெறுகிறது. களவில் தலைவனின் பிரிவை ஆற்றமுடியாத தலைவி முட்டுவேன்கொல்? தாக்குவேன் கொல்? என்று ஆற்றாமையை வெளிப்படுத்துகின்றாள். காதலனாகிய தலைவன் பற்றிய குறிப்பில்லை. ஊர் துயிலுதலும் அவளுடைய நோயும் அவள் துயிலாமையுமே பேசப்படுகின்றன. சங்கப் பாடல்களில் " ஊர்துயில்கிறது " என்பது தலைவிக்கு மணம் ஆகாது வருந்துகிறாள் என்பதைக் குறிப்பால் சுட்டுவது. இவ்வாறு இப்பாட்டுக் களவெனும் கைகோளுக்குரியதாயிற்று.

## 2. தோழி கூற்றுப் பாக்கள்

பெண்பாற்புலவர்களின் தோழி கூற்றுப்பாடலில் களவில் இரண்டு பாடல்கள் அமைந்துள. இப்பாடலை பூங்கணுத்திரையாரும் (குறுந். 48); ஒன்றை நல்வெள்ளியாரும் (நற். 7) பாடியுள்ளனர். பூங்கணுத்திரையார் பாடிய களவு காலத்தோழி கூற்றுப்பாடலான,

"தாதிற் செய்த தண்பனிப் பாவை
காலை வருந்துங் கையா றோம்பென
ஓரை யாயங் கூறக் கேட்டும்
இன்ன பண்பி னினை பெரி துழக்கும்
நன்னுதல் பசலை நீங்க வன்ன
நசையாகு பண்பி னொருசொல்
இசையாது கொல்லோ காதலர் தமக்கே"

(குறுந். 48)

என்ற இப்பாட்டு தலைவி கூற்று. பாடலில் தலைவன் மீது கொண்ட களவுக் காதலால்

தலைவி ஆயத்தாருடன் விளையாடாமல் தனித்து இருக்கின்றாள். அதனைப் பார்த்துத் தோழி இவள் பசலை நீங்குமாறு தலைவன் ஒரு சொல் சொல்லல் இயலாதோ! என்று கூறுகின்றாள்.

இப்பாட்டில் நிலப்புனைவில்லை; களவில் தலைவன் தலைவியைச் சந்தித்துப் பிரிகின்றான். உடனே அவள் மேனி பிரிவு பொறாது பசலை பாய்கிறது. இதனை திருவள்ளுவர், தலைவன் தலைவியின் மெய்தீண்ட நீங்கிய இந்நோய் கையை எடுத்தவுடன் ஊருணியின் பாசி படர்வது போலப் படர்ந்ததாகக் கூறுவர். அதுபோலப் பகற்குறியில் காணும் பொழுதினும் காணாமிப்பொழுது பெரிதாகலின்'[17]. வேறுபட்ட கிழத்தியது வேறுபாடு கண்டு தோழி சொல்லியதாகும். களவில் ஏற்பட்ட பிரிவில் தலைவி வருந்தியதை 'நன்னுதல்பசலை' பாய்ந்தமைப்பாடப்பட்டதால் புலனாகிறது. இதனால் இது பிரிவால் பாலையாகிறது.

நல்வெள்ளியார் பாடிய பாலைப்பாடலான, "சூருடை நனந்தலைச் சுனை நீர் மல்க" என்ற பாடலில் வெம்மையால் வாடிய காடு, மழைபெய்ததால் சுனைகளில் நீர் நிரம்பி, அருவிகளில் நீர் வழிந்துவர, கார்காலம் துவங்கியதால் மேகம் இடியுடன் மழை பொழியத் துவங்கியது. காட்டில் யானை மூங்கிலின் வெந்நெல்லை உண்டு சந்தன மரத்தினடியில் துஞ்சியது என்பது பாட்டு. இப்பாட்டில் உரிப்பொருள் வெளிப்படையாகப் பாடப்படவில்லை. ஆனால் "வாடிய பெருங்காட்டே" என்று மழையின்றி வாடியிருந்த காடு குறிக்கப்படுகிறது. இப்பாடலில் வாடியிருந்த காடு செழிக்க மழைப் பெய்தது என்பதால் கார்காலம் துவங்கியது என்பதுப் புலப்படும். இதனை,

"கழைமாய் நீத்தங் காடலை யலைப்பத்
தழங்குகுர லேறொரு முழங்கி வானம்
இன்னே பெய்ய மின்னுமால்"

(நற்.7;4-6)

என்றடிகளால், கார்காலம், வந்ததைச் சுட்டித்தலைவன் வந்துவிடுவான். மழைபெய்ததால் மூங்கிலின் வென் நெல்லையுண்டு யானை வருத்தமின்றித்துஞ்சியது போல நீயும் தலைவன் வந்து வரைந்து கொண்டு இனிது வாழப்பெறுவாய் என்ற குறிப்புப் பொருள் கொண்டு, தலைவி பிரிவு உணர்த்தியமையால் உரிப்பொருளால்

பாலையாகியது. குறிஞ்சி நிலம் வெம்மையால் பாலை நிலமாகியது. இந்நிலத்தில் யானை, சந்தனமரம், மூங்கில் போன்றன சுட்டப்பட்டிருப்பது இந்நிலக்கருப்பொருள்களாகும்.

இப்பாட்டில் "மின்னுமால் தோழி" என விளிப்பவள் தோழி. களவு வெளிப்பட்டதால் 'பட்டபின்றை வரையாது கிழவோன் நெட்டிடைக்கழித்து பொருள் வயிற்பிரிய, ஆற்றாளாய தலைவிக்குத் தோழி சொல்லியது'[18] என்றும் கூற்று. களவு எனும் கைகோளாயிற்று.

பெண்பாற்புலவர்கள் களவில் பாடும் போது தலைவி "உயவு நோயறியாது "என்றும்" காமம் வருத்துவதாகப் பாடுவார். இது பாலைத்திணையில் தலைவி வரைவு நீட்டித்தலால் படும் துன்பத்தைக்குறிப்பாகச் சுட்டுவனவாய் அமைகின்றன. தோழி கூற்றுப் பாக்கள் தலைவன் விரைந்து தலைவியை மணம் செய்து கொள்ள வேண்டும் என்று அமைந்துள்ளன.

பெண்பாற்புலவர்களின் களவுப் பாடல்களைக் கொண்டு பெண்கள் களவு வாழ்க்கையில் காலம் கடத்த விரும்பவில்லை என்றும் விரைவில் வரைவு மேற்கொண்டு கற்பு வாழ்க்கை வாழ விரும்பினர் என்றும் தெரிகிறது.

## 2. கற்புப் பாடல்கள்

பாலைப் பாடல்களில் கற்புப்பாடல்கள் இருபத்து நான்கு. தலைவி கூற்றில் பதினேழு பாடல்களும், தோழி கூற்றில் நான்கும், தலைவன் கூற்றில் மூன்றுமாக அமைந்துள்ளன. இவ்வெண்ணிக்கையும் பெண்கள் கற்பு வாழ்க்கையைப் பெரிதும் விரும்பியதைக் காட்டுவன. கற்பில் பிரிவு அதிகம் நிகழ்ந்தது, தலைவி பிரிவாற்றாது வருந்துவாள், தோழி தலைவன் விரைந்து வருவான் என்று ஆற்றுவிப்பாள், தலைவன் வினைமுடித்து வரும்போது தேர்ப்பாகனிடம் விரைந்து தேரைச் செலுத்துக என்று வேண்டுவதும், தலைவன் பிரிவில் தலைவியை எண்ணியதுமாகப் பாடல்கள் அமைந்துள்ளன.

### 1. தலைவி கூற்றுப்பாக்கள்

தலைவி கூற்றுப் பாக்களில் குறுந்தொகையில் ஏழு பாடல்கள்

அமைந்துள்ளன. (27, 39, 43, 67, 140, 174, 192) அகநானூற்றில் எட்டுப்பாடல்களும் (11, 45, 147, 163, 217, 235, 303), நற்றிணையில் இரண்டு பாடல்களும் அமைந்துள்ளன. இப்பாடல்களில் ஔவையார் பாடிய பாடல்கள் ஆறு. கழார்க்கீரனெயிற்றியார் நான்கு; அள்ளூர் நன்முல்லையார் இரண்டும்; வெள்ளிவீதியார் இரண்டும்; கச்சிப்பேட்டு நன்னாகையார் ஒன்றும்; வெண்பூதியார் ஒன்றும்; காமக்கணிநப்பசலையார் ஒன்றும் எனப்பாடியுள்ளனர். இப்பாடல்களில் பிரிவு என்ற பொருளில் பல பாடல்கள் உள்ளன. ஔவையாரின் பாடல் அனைத்தும் பிரிவுப்பொருள் பற்றியன. ஆனால் பிரிவுக்கான காரணம் குறிப்பிடப்படவில்லை. கழார்க்கீரனெயிற்றியாரும் வெண்பூதியாரும் பொருள் பிரிவைப்பாடியுள்ளனர். கழார்க் கீரனையிற்றியார் (அகநா 163) வினைப்பிரிவையும் குறிப்பிட்டுள்ளார். இவ்வடிப்படையில் கற்பில் அமைந்த தலைவி கூற்றுப்பாடல்களை, 1. பிறபிரிவு 2. பொருள் பிரிவு 3. வினைப்பிரிவு (பிரிவுப்பாலை) என்று பாகுபடுத்திக்காணமுடிகிறது.

1. பிரிவுப்பொருளில் அமைந்த தலைவி கூற்றுப்பாக்கள்

## 1. பிரிவுப்பாலை

பெண்பாற்புலவர்களின் பாலைப் பாடல்கள் தலைவியைத் தலைவன் பிரிந்து சென்ற போது பாலையின் கொடுமையை நினைத்து வருந்துவதாகவும், காலம் வந்தும் தலைவன் வராததால் வருந்துவதாகவும் அமைந்துள்ளன. ஔவையார் பாடிய

"வெந்திறற் கடுவளி பொங்காப் போந்தென
நெற்றுவிளை உழிஞ்சில் வற்ற லார்க்கும்
மலையுடை யருஞ்சுர மென்பநம்
முலையிடை முனிவர் சென்ற வாளே "

(குறுந் 39)

இப்பாட்டு, தலைவி கூற்று. தலைவி 'தலைவன் பிரிந்து சென்ற வழி பாலைநிலம். அந்நிலத்தில் வெப்பக்காற்றுவீச உழிஞ்சிலின் நெற்றுக்கள் அலைப்ப, மலைகளையுடை கடத்தற்கரிய சுரத்தில் சென்றார்' என்கிறாள். இப்பாட்டு நான்கடி கொண்டது. மூன்றடியில் பாலைநிலம் புனையப்பட்டுள்ளது. உழிஞ்சிலின் நெற்றுகள் வெப்பக்காற்று வீசுதலால் அலைப்பவும் என்பதால் பாலையின் வேனிற் காலமும்,

புனையப்பட்டது. இது குறிஞ்சி திரிந்த பாலைநிலம். 'மலையுடை யருஞ்சுரமென்ப' என்பதாலும் உறுதிப்படும். கருப்பொருளாக, வாடிய உழிஞ்சில இடம்பெறுகிறது.

இப்பாடலில் தலைவன் பிரிந்து சென்றதை 'முலையிடை முனிவர் சென்ற வாறே'(4) என்ற அடியால் அறியமுடிகிறது. பிரிவுணர்த்தி உரிப்பொருளாலும் பாலையாகிறது. இப்பாட்டு 'பிரிவிடை ஆற்றல் வேண்டும்' என்ற தோழிக்கு 'யாங்ஙனம் ஆற்றுவேன்' எனத் தன் ஆற்றாமை மிகுதி தோன்றத்தலைமகள் கூறியது'[19] இப்பாட்டில் தலைவன் கற்புவாழ்க்கையில் ஈடுபட்டுச்சென்றதை 'முலையிடைமுனிவர்' என்றடி உணர்த்தும். இதனால் இப்பாட்டு கற்பென்னும் கைகோளுக்குரியதாயிற்று. தலைவி தோழியிடமே கூறுவாள் என்ற அகமரபுப்படி தோழி கேட்பத்தலைவி கூறிய பாடல். தொல்காப்பியர் வழியருமை கேட்டவழி தலைவி கூறுவது கற்பில் உண்டெனக் காட்டுவர். இப்பாடலை இக்கூற்றுக்கு மேற்கோளாக நச்சினார்க்கினியர் காட்டுவார்[20].

"பாலைப் பிரிவுப் பொருளில் அமைந்த
செல்வா ரல்லரென் றியானிகழந் தனனே
ஒல்வா ளல்லளென் றவரிகழ்ந் தனரே
ஆயிடை, இருபேராண்மை செய்த பூசல்
நல்லாரக் கதுவி யாங்கென்
அல்ல னெஞ்ச மலமலக் குறுமே"

(குறுந். 431)

என்ற பாட்டு ஔவையார் பாடியது. இப்பாட்டு தலைவி கூற்று. பிரிவிடைமெலிந்த கிழத்தி சொல்லியது. இப்பாட்டில் நிலப்புனைவில்லை. தலைவன் தலைவியிடம் கூறாமல் சென்றுவிட்டான். அதனால் வருந்துகிறாள். இதனை 'அல்லனெஞ்ச மலமலக்குறுமே'(5) என்றடி உணர்த்துகிறது. பிரிவு உணர்த்தியமையின் இஃது உரிப்பொருளால் பாலையாகியது. இப்பாட்டில் தோழி என்று விளிக்கும் சொல்லில்லை. ஆயினும், இப்பாட்டு தலைவி தலைவன் நீங்கிச் சென்றதும், தோழியிடம் தலைவன் சொல்லாமல் சென்றுவிட்டான் என்று கூறுகிறாள். இது கற்பு வாழ்க்கையில் நிகழும் பிரிவு. இப்பாட்டு கற்பென்றும் கைகோளுக்குரியது. தலைவி கூறத்தோழி கேட்பதாகவும் பாடல் அமைகிறது. தொல்காப்பியர் 'தலைவன்

தலைவியைப் பிரிந்தத் தனிமை பெரிதாகையால். மனச்சுழற்சி பொருந்திய அன்பின் மிகுதிக் கண்ணும்[21] என்றதால், தலைவன் மீதுகொண்ட அன்பினால் தலைவி பிரிவில் வருந்திக்கூறுவது உண்டு. இதனால் இப்பாடல் தலைவி கூற்றாவதற்கும் பொருந்தும்.

ஔவையார் பாடிய,

"வானம் ஊர்ந்த வயங்கொளி மணடிலம்
நெரும்பெனச் சிவந்த உருப்புஅவிர் அங்காட்டு"

(அகம்.11)

என்ற பாடலில் பாலை நிலத்தைப் புனைந்துள்ளார். "தலைவன் வெப்பம் மிகுதியாகின்ற தீயெனச் சினந்த பொழுதில், வெம்மையால் இலவமரங்கள் இலை நீங்கி வேனிற்காலத்தில் மலரும் பூக்கள் மலரக் குளங்கள் நீரற்றுத் துகள்பட்டிருக்கும் வளம் தப்பிய காட்டில் நம் தலைவர் தம்மை உடன்கொண்டுக் கழிந்தாராயின் மெய்கள் ஒன்றின் ஒன்று புகுவதான முயக்கம் பெறுவர். அதனால் என் கண்களும் நீர் சொரிதலன்றித் துயிலப்பெறும் என்கின்றாள். இப்பாடல் 'தலைமகன் பொருள் வயிற்பிரிந்த விடத்து ஆற்றளாய தலைமகள் வேறுபாடு கண்டு ஆற்றாளாய தோழிக்குத் தலைமகள் ஆற்றுவல் என்பது படச்சொல்லியது'[22]. இப்பாட்டில் பாலை நிலத்தை

"வானம் ஊர்ந்த வயங்கொளி மண்டிலம்
நெருப்பெனச் சிவந்த உருப்பவர் அம்காட்
டிலையில மலர்ந்த முகையில் இலவம்
..............................................................
..............................................................
கயந்துகள் ஆகிய பயந்தபு கானம் "

(அகம் 113;1-6)

என்று பாடுகிறார். "பயந்தபு கானம்" காடுசார்ந்த முல்லைநிலம்; இது வெம்மையால் வாடியிருப்பதும், குளங்கள் நீரற்றிருப்பதும். பாடுபெற்றிருப்பதால் இப்பாட்டு, முல்லை திரிந்த பாலையாகியது. பாலையின் பெரும் பொழுதான வேனில் காலத்தை

“வானம் ஊர்ந்த வயங்கொளி மண்டிலம் நெருப்பெனச் சிவந்த” என்று காட்டுகிறார். பாலையின் கருப்பொருளாக இலை உதிர்ந்த இலவமரம் குறிக்கப்பட்டுள்ளது.

இப்பாட்டில் தலைவன் தலைவியை நீங்கிப் பிரிந்த காலத்தில் பிரிவாற்றாமல் வருந்தும் தலைவி கண்ணீர் சிந்துகின்றாள். இதனை,

“நீர்வார் நிகர் மலர் கடுப்ப ஓமறந்” (12)

என்றடி அறிவிக்கின்றது. பிரிவைப் பாடினமையின் உரிப்பொருளால் பாலையாகியது.

இப்பாடலில் உடன் அழைத்துச்சென்றால் ‘அங்குக் கைகவர் முயக்கம் பெறுவர். நானும் அழாமல் இருப்பேன்’ என்று தலைவி கூறுவதால் இப்போது முயக்கமின்றித் தனித்து வருந்தியிருப்பது அறியப்படும். கற்பில் நிகழும் நிகழ்ச்சியாதலின் இப்பாட்டுக் கற்பென்னும் கைகோளாயிற்று.

ஔவையார் பாடிய பாடலில் “தலைவனைப் பிரிந்த தலைவி இரங்கியிருந்து உண்ணாமையால் உடல் மெலிந்து, தோளும் அழகு கெட, நாள்தோறும் அவன் பிரிவிற்கு எண்ணி வருந்தியிருந்தாள். அத்துன்பம் அவனன்றி நீங்காது. ஆதலால் உயர்ந்த மலையில் பிடவுடன் மலர்ந்த வேங்கை மரங்கள் நிறைந்த காட்டில் பெண் புலிகுட்டிகளுடன் குகைக்குள் தங்கியிருக்கப் பசித்த ஆண்புலி மானின் குரல் கேட்கும் காட்டுவழியில், வெள்ளி வீதியைப்போல நாளும் தேடுதலை மேற்கொள்வேன்” (அகம் 147) என்கின்றாள்.

இப்பாட்டு, தலைவி கூற்று. இப்பாடலில் பாலை நிலத்தை ‘நெறி படுகவலை நிரம்பா நீளிடை’ என்று கடத்தற்கரிய காடென்றார். இந்நிலம் குறிஞ்சி. இதனை ‘ஓங்குமலைச் சிலம்பு’ என்ற தொடர் காட்டும். குறிஞ்சி நிலம் வாடிவறண்டு பாலை நிலமாகியது. அந்நிலத்தில் பசித்த பெண்புலி குட்டியுடன் குகையில் தங்க ஆண்புலி மானின் குரலைக்கேட்டு நிற்கின்றது. இவ்வாறு புனைவுகள் மூலம் குறிஞ்சிகாட்டப்படுகிறது. இப்பாடலில்,

“பிரிந்தோர் பெயர்வுக் கிரங்கி
மருந்துபிறி தின்மையின் இருந்துவினை இலனே”

(அகநா.147;13-14)

என்றடிகள் தலைவனைப் பிரிந்து தலைவி இரங்கியிருந்தாள் என்ற பிரிவுப்பொருள்

சுட்டப்பட்டது. இஃது உரிப்பொருளால் பாலையாகியது. பாலையின் கருப்பொருளாக, வேங்கை, பிடவு, புலி, போன்றவை இடம்பெறுகின்றன.

இப்பாடல் "செலவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொல்லியதாகும்" வெள்ளிவீதி போலத்தேடிச்செல்வேன் என்பதால் கற்பு வாழ்க்கையில் ஈடுபட்டுப்பிரிந்த தலைவன் வராததால் அவனைத்தேடிச் சென்றதுபோல நானும் அலைவேன் என்பதால் கற்பெனும் கைகோளாயிற்று.

பாலைப் பொருளில் அமைந்த ஔவையாரின் பாடலில், 'வாடைக் காற்றுவீசும் இக்காலத்திலும் தலைவன் வராததால் வேட்கை நோய்மிக, ஊரில் எழுந்த அம்பல் பெரிய மரமாகிக் கிளைகளாகப் பரவி, காதல் என்ற தளிராகத் தளிர்விட்டுப் புலவரால் புகழப்பெற்ற நாணம் இல்லாதபெரிய மரமாகி, நிலத்தின் எல்லையெல்லாம் கவிந்து அலர் ஆகிய மலர்களைச் சொரியவும் அவர் வாராராயினர். அங்ஙனம் வாராத நம் தலைவர், பனிக்காலத்தில் அவரின் நினைவினால் பசலை நம்மை வருத்தவும் அதனால் நாம் எய்தும் துயரினை அறிந்திலரோ; நம்மனம் போன்ற மென்மை அவர் மனத்தின்மையின் "நம்முடைய பெண்டிர் உலகம் அறிந்தனர் கொல்லோ" (அகநா.273) என்ற பாடலில் பாலைநிலப் புனைவில்லை.

இப்பாட்டு தலைவி கூற்று வாடைக்காலம் வந்தும் தலைவன் வாராமையால் பிரிந்திருந்து வருந்தும் தலைவி என்பதால் உரிப்பொருளால் பாலைத்திணையாகியது. இதனை,

> "நிலவரை யெல்லாம் நிழற்றி
> அலரரும்பு ஊழ்ப்பவும் வாரா தோரே"
>
> (அகநா.273:16 -17)

என்றடியால் அலர் தூற்றியும் இன்னும் தலைவர் வரவில்லை என்பதை அறியமுடியும். அலர் களவு, கற்பு இரண்டிலும் உண்டென்பதை,

> "களவும் கற்பும் அலர் வரைவு இன்றே"[23]

என்பதால் பெறப்படும். இப்பாடலில் தலைவியின் மெலிவும், ஊரில் ஏற்பட்ட அலரும், வாடையால் தலைவி வருத்தமும் சுட்டப்பட்டுள்ளன. இப்பாடல் உரிப்பொருளால் திணையானது. இப்பாடலில் பசலை உண்டாகியதாகவும்,

முலையிடைத் தோன்றிய நோய் வளர்ந்ததாகவும் கூறுவது, அலர் கற்புக் காலத்திலும் உண்டாகும் என்பதை உணர்த்தும். இப்பாட்டுக் கற்பெனும் கைகோளாயிற்று.

ஔவையார் பாடிய பாலை பாடலில் "நம்மிடை நிகழ்ந்தனவற்றைப் பிறர் அறிதலை அஞ்சி, பேய் தான் கண்ட கனவினைக் கூறாதது போன்ற மறையினை வெளிப்படுத்தாது அடக்குதலால், பல மாண்புடன் கூடி நுட்பமாகப் பொருந்திய நம்காதலானது. பொறையனது மலை உச்சியில் மழை பெய்து ஒலித்துவரும் அருவிபோல அலர் பரவ நம் தலைவர் பிரிந்து சென்றார். பாரியின் பறம்பு மலையில் குருவிக் கூட்டம் வேற்றிடம் சென்று தினைகளைக் கவர்ந்து மாலைப்பொழுதில் பறம்பு மலை வந்துசேரும்; அதுபோலத் தலைவன் மாலைப் பொழுதில் வருவார் என்று கூறுகின்றாய். அவர் வாரார். அவர் சென்ற இடம் நோக்கிச் சொல்லுவோம் என்கிறாள். இதனை,

"வறன்மரம் பொருந்திய சிள்வீடுமணா
கணநிரை மணியினார்க்குந் சூரனிறந்து
அழிநீர் மீன் பெயர்ந் தாங்கவர்
வலிநடைச் சேறல் வலித்திசின் யானே"

(அகநா.303;7-10)

என்றடிகள் உணர்த்தும். இப்பாடலில் பாலையில் மழையின்றி வருந்திய மரமும், பாலை வழியில் செல்லும் உமணர் தொழுகையும் கூறப்பட்டதால் பாலையாயிற்று. தலைவன் வராமையால் செல்லத் துணிந்த தலைவியின் பிரிவுத்துன்பம் பாடப்பட்டதால் பிரிவு உரிப்பொருள் பாலையாகியது.

கற்பில் அலர்தோன்றும் என்பதை " அலர் எழ " என்றதாலும், தலைவன் பொருட்பிரிவு வெளிப்படையாகச் சுட்டப்படாமல் குறிப்பாகப் " பாரியின் பறம்பு மலையில் கிளிகள் தினை கவர்ந்து 'மலைப்பொழுதில் வருவது போலத் தலைவன் பொருளீட்டுக் கொண்டு குறித்தபொழுதில் வருவார் என்பது குறிப்பால் பெறப்படும்' இப்பாடலில் பொருட்பிரிவு என்பதற்குக் குறிப்பில்லை. இப்பாடலில் வருவரென்றுணர்ந்த மடங்கெழுநெஞ்சம் "(15) என்றடியால்" தலைமகன் பிரிவின் கண் வேட்கை மீதூர்ந்த தலைமகள் தன் நெஞ்சிற்குச் சொல்லியதாகும்.

தலைவன் களவில் வரை பொருளீட்டப்பிரிவான். இப்பாடலில் அவ்வாறு சென்றதற்குக் குறிப்பின்மையால் கற்புக்கைகோளுக்குரியதாய் கொள்ளப்பெற்றது.

ஔவையார் பாடிய தலைவி கூற்றுப் பாலைப்பாடல்களில், தலைவன் சென்ற பாலை வழியருமை எண்ணித்தலைவி வருந்துகிறாள். ஊரில் அலர் எழுந்தும், தலைவன் வராமை வருத்தப்படுத்துகின்றன. ஔவையார் பாடிய கற்புத் தலைவி, வெள்ளிவீதியைப் போலப் பாலை வழியில் தலைவனைத் தேடிச் செல்லத்துணிந்தவளாகப் படைக்கப்பட்டுள்ளாள். தலைவி பிரிவால் வாடுகின்றாள். இப்பாடலில் தலைவன் பிரிவிற்கான காரணம் சுட்டப்பட்டிலது. தலைவி தலைவனைத் தேடத்துணிவதும் உடன் தலைவியைக் கொண்டு சென்றால் முயக்கம் பெறுவார் என்பதும் இப்பாட்டு. இது பொருட்பிரிவு குறித்தது என்று கொள்ளப்படுகிறது.

வெள்ளிவீதியார் பாடிய,

“கன்றும் உண்ணாது கலத்தினும் படாது
நல்லான் தீம்பால் நிலத்துக் காஅங்
கெனக்கு மாகா தென்னைக்கு முதவாது
பசலை யுணீஇயர் வேண்டும்
திதிலை யல்குல்லென் மாமைக் கவினே ”

(குறுந். 27)

எனும்பாட்டு தலைவி கூற்று. பாடலில் நிலப்புனைவில்லை. பாடலில் தலைவன் பிரிவினால் மேனியில் பசலை பாய்ந்தமையால் பிரிவுணர்த்திப் பாலையாகியது. இப்பாட்டு, ‘பிரிவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக்கிழத்தி உரைத்தது’[25] பாடலில் தோழி என்று விளிக்கும் சொல்லில்லை. தலைவி அகமரபுப்படித் தோழியிடம் கூறுவாள் என்பதால் தலைவி கூறத்தோழி கேட்பவளாகின்றாள்.

இப்பாடலில் பசலை தலைவியின் மேனியை உண்டதாகவும், மாமைநிறம் ஏற்பட்டதாகவும் பாடப்பட்டதால் கற்பு வாழ்க்கையில் நிகழும் பிரிவைக் குறித்தது. இப்பாடல் கற்பெனும் கைகோளுக்குரியதாயிற்று. இப்பாடலிலும் எப்பிரிவு என்று கூறப்படவில்லை.

வெள்ளிவீதியார் பாடிய பாடலில், 'தலைமகன்' பாலைவழியில் பிரிந்து சென்றான். அதனால், பசலை தலைவியின் மேனியில் படர்ந்தது. ஊரில் அலர் எழுந்தது. ஆதிமந்தி போல பேதுற்று அலந்தனென் உழல்வேன். நான் துயிலும் துறந்தேன் என்கிறாள். (அகம்;45). இப்பாட்டு தலைவி கூற்று வற்புறுத்துந்தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

பாலை நிலத்தில் மழையில்லாததால் உழிஞ்சில் மரங்கள் வாடியிருப்பதாகவும், குளங்கள் நீரற்று இருப்பதாகவும் பாடுகிறார். இதனை,

"வாடல் உழிஞ்சில் விளை நெற்றந்துணர்
ஆடுகளப் பறையின் அரிப்பன வாலிப்பக
கோடை நீடிய அகன் பெருங்குன்றத்து
நீரிலார் ஆற்று நிவப்பன".......

(அகம்.45:1-4)

என்ற அடிகள் உணர்த்தும். அவன் "சென்றவழி குறிஞ்சி திரிந்த பாலை என்பதைப் பெருங்குன்றம்" என்றது உணர்த்தும். கருப்பொருளாக வாடிய உழிஞ்சில் சுட்டப்பட்டுள்ளது. இப்பாடலில் "அலந்தனென் உழல்வென்கொல்லே" என்றதால் தலைவன் பிரிவும், அதனால் தலைவியின் வருத்தமும் கூறப்பட்டதை அறியமுடியும். இப்பாடல் பிரிவுணர்த்தியதால் பாலையாகியது. இப்பாடலில் தலைவி பிரிவு தாங்காமல், ஆதிமந்தி போலக் கணவனைத் தேடிச்செல்வேன் என்கிறாள். இதனை,

"காதலற் கெடுத்த சிறுமையொடு நோய்கூர்ந்
தாதிமந்தி போலப் பேதுற்று
அலந்தனென் உழல்வென் கொல்லே "

(அகம்:45:13-15)

என்ற அடிகள் உணர்த்தும். இப்பாடலிலும், அலர் எழுவதும். பசலை உண்டாவதும் பாடப்பட்டுள்ளது. தலைவி தலைவனைத்தேடிச் செல்லுவதைத் தொல்காப்பியர் குறித்திலர். இவ்வாறு தலைவனைத் தேடிய குறிப்பு, பெண்கள் வாழ்க்கையில் நிகழ்ந்ததை, ஆதிமந்தி, வெள்ளிவீதி, ஔவையார் பாடலால் அறியமுடிகிறது. தொல்காப்பிய மரபுக்கு மாறாகத்தலைவி தலைவனைத்தேடிச்செல்லுதல் உலகியல்

மரபு தழுவியதாகல் வேண்டும். தொல்காப்பியர் பெண்மைக்குமாறானது என்று கருதி இதனை விதியாக்காது புறக்கணித்திருக்கிறார்.

வெள்ளிவீதியார் பாடிய தலைவி கூற்றுப்பாடல் இரண்டிலும் தலைவன் பிரிவு வினைக்காகவா? பொருள் தேடவா? என்பது சுட்டப்படவில்லை.

அள்ளூர் நன்முல்லையார் பாடிய பாலைப்பாடலில் தலைவி தோழியிடம் உள்ளார்சொல்லோ தோழி என்று வினவி, வேப்பம்பழம் பழுத்து உதிரும் காலம் வந்தும் வரவில்லை (குறுந்.67) என்கிறாள். இப்பாடலில், "நிலங்கள் கள்ளியங்காடிறந்தோரே" (4) என்றதால் முல்லை நிலம் மழையின்றிப் பாலையாகியதைச் சுட்டும். அந்நிலத்துக்கருப்பொருளாக வேம்பும் கள்ளியும் ஆகின. இப்பாடலில் "காடிறந்தோரே" என்று பிரிதலாகிய உரிப்பொருளால் பாலைத்திணையாயிற்று. "தோழி" என்ற விளிக்கும் சொல் பாடலில் பயின்றுள்ளதால் தலைவி கூறத் தோழி கேட்பதாயிற்று. இது கற்பெனும் கைகோள்.

## 2. பொருள்வயிற் பிரிவு

பெண்பாற்புலவர்களின் பாலைப்பாடலில் கற்பில் தலைவன் பொருள் தேடற்குப் பிரிவு நிகழ்வதாகக் கூறும் பாடல் கழார்க்கீர னெயிற்றியார், வெண்பூதியார் ஆகியோர் இருவர் பாடல்களிலும் குறிப்புளது.

கழார்க்கீரனெயிற்றியார் பாடிய பாடல்கள் இரண்டில் பொருள்வயிற் பிரிவு பாடப்பட்டிருக்கிறது. இவர் பாடிய அகநானூறு 217-ஆம் பாடல் தலைவி கூற்றுப்பாட்டு; இப்பாடலில் அற்சிரம் வந்தன்று எப்பொருள் பெறினும் பிரியேன் என்றவர் பிரிந்து சென்றார். என்மேனி கடும் பனி தாழாது உழந்து நடுங்குகிறது என்றகருத்துளது.

இப்பாட்டில் அற்சிரப் பருவத்தைப் பாடுகிறார். இப்பாடலில் தலைவன் பொருட்பிரிவு சுட்டப்பட்டதால் உரிப்பொருளால் பாலைத்திணையாகியது. இதனை,

"எப்பொருள் பெறினும் பிரியன்மி னோவெனச்
செப்புவல் வாழியோ துணையுடை யீர்க்கென
நல்காக் காதலர் நலனுண்டு துறந்த
பாழ்படுமேனி நோக்கி நோய்பொர "

(அகம்:217;14-17)

என்றடிகளால் தலைவனுடைய பொருள்வயிற் பிரிவு சுட்டப்படுகிறது. பாலையின் பொழுதினை வரையறை செய்யும்போது "பின்பனிதானும் உரித்தென மொழிப"[26] என்றார் தொல்காப்பியர். இப்பாடலில் 'அற்சிரம்' என்பது பின்பனிகாலம்; இது பாலைப் பொழுதாகியது. இதனை,

"அகன்றுறை மகளிர் அணிதுறந்து நடுங்க
அற்சிரம் வந்தன்ற மைந்தன் றிதுவென "

(அகம்:217;13 - 14)

என்றடிகள் அறிவிக்கின்றன.

கழார்க்கீரனெயிற்றியார் பாடிய பாடல் தலைவி கூற்று. தலைமகன் பிரிவின் கண் வேறுபட்ட தலைமகள் ஆற்றாமை மீதூரத் தோழிக்குச் சொல்லியது. இப்பாடலில் பாலைப் புனைவில்லை. இப்பாடலில் தலைவனின் பொருள்வயிற் பிரிவு சுட்டப்பட்டதால் உரிப்பொருளால் பாலைத்திணையாகியது. இதனை,

"........................................பொருள் புரிந்து
உள்ளார் கொல்லோ காதல ருள்ளியுஞ்
சிறந்த செய்தியின் மறந்தனர் கொல்லோ"

(அகம்.235;1 - 3)

என்றடிகளால் உணர்த்தும். இப்பாடலில் மழைத் துளிகள் பெய்ய, வாடைக்காற்று வீசும் இப்பருவத்திலும் வரவில்லை என்று தலைவி "அம்ம வாழி தோழி", என அழைத்துக்கூறுகிறாள். இதனை இப்பாட்டு, தலைவி கூறத்தோழி கேட்பதாயிற்று. பொருள்வயிற் பிரிவு கற்பில் நிகழும். ஆதலால் இப்பாட்டு கற்பெனும் கைகோளுக்குரியதாயிற்று.

கழார்க்கீரனெயிற்றியாரின் பாலைப்பாடல்களில் பாலைநிலப் புனைவில்லை. இவரின் பாலைப்பாடல்களை ஆய்ந்த வ.சுப. மாணிக்கனார்,

> "பாலைத்திணை பாடுவதில் புதுக் கூர்மையுடையவர். பொதுவாகப் பாலைப்பொருள் பாடும் புலவர்கள் கோடைக்காலமும் பாலைச் சுரமும் பற்றிப்புனைவர், நீரும் நிழலும் இல்லாத வழியில் தலைவன் செல்லுவதை நினைத்துக் தலைவி பெருந்துயர் கூறுவதாகக் காட்டுவர். அத்தகைய பொதுப்போக்கு இப்புலவர்க்கில்லை.

பாலைப்புனைவுக்கு இவர் மேற்கொண்டவை மருதநிலமும் வாடைக்காலமும் ஆம். இப்பாட்டுக்கள் உரிப்பொருளாற் பாலையே அன்றி முதல் கருப்பொருள்களால் அல்ல. தலைவன் செல்லும் வழியைப் பாடாது தலைவியது தனிமையுணர்ச்சியையே பாடுவர். பச்சென்ற இயற்கைச் செழிப்பும் வாடைக் குளிரும் முன்பனியும் அவளை வருத்துவதாகப் பாடியவர்[27].

என்பர். இம்மதிப்பீடு கழார்க்கீரனெயிற்றியாரின் பாடல் புனைதிறத்தையும் அகப்பொருள் வளத்தையும் வெளிப்படுத்துவதாகும்.

வெண்பூதியார் பாடிய பாடல் பாலைத்திணைத் தலைவி கூற்றுப்பாடலில் பாலை நிலத்தை,

"பெயன்மழை துறந்த புலம்புறு கடத்துக்
கவைமுட் கள்ளிக் காய்விடு கடுநொடி
துதைமென் றூவித் துணைப்புற விரிக்கும்
அத்த மரிய வென்னார் நத்துறந்து "

(குறுந்.174)

என்று மழையின்றி வாடிய காட்டில் கள்ளிச்செடி முளைத்தப் பாலை நிலமென்றார். இப்பாடலில் பொருள் பிரிவும் பாடப்படுகிறது. இது பாலையின் உரிப்பொருளாகியது. இதனை,

"பொருள்வயிற் பிரிவா ராயினிவ்; வுலகத்துப்
பொருளே மன்ற பொருளே
அருளே மன்ற வாருமில்லதுவே "

(குறுந்.174;5-7)

என்றடிகளால் அறியமுடிகிறது. பாடலிலேயேப் பொருள்வயிற்பிரிவு என்பது பயிலுகிறது. இப்பாட்டு கற்பெனும் கைகோளாளுக்குரியது. இப்பாட்டு பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொல்லியது. இப்பாடலில் தோழி என்ற விளிச்சொல்லை அகமரபுப்படித் தலைவி தோழியிடமே தன் துன்பத்தை உரைப்பாள். அதனால் தலைவி கூறத் தோழி கேட்பாளாயினள்.

### 3. வினைவயிற்பிரிவு

கழார்க்கீரனெயிற்றியாரின், பாட்டு. தலைவி கூற்று. இப்பாடலில் பாலைநிலப்புனைவில்லை. வாடைக்காலத்தைப் புனைகிறார். இப்பாடலில் தலைவன் பிரிவை,

"இனையை யாகிச் சென்மதி
வினைவிதுப் புறுநர் உள்ளலும் உண்டே "

(அகம்.163:13-14)

என்றார். இப்பாடலில் வினை என்று கூறப்பட்டமையால் வினைவயிற் பிரிவு என்று கருத இடமுண்டு. இப்பாட்டுக்கு உரையாசிரியர் 'பொருளீட்டும் தொழிலிற் பெருவேட்கை யுடையார்'[28] என்று எழுதுவர். இப்பாட்டு வினை என்று குறித்தமையின் வினைவயிற்பிரிவு என்று கருதப்பட்டுள்ளது. ஆனால் உரையாசிரியர் வினை என்பதுப் பொருள் தேடும் வினை என்று கொண்டார்.

பெண்பாற்புலவர்களின் பாலைத்திணைப் பாக்களில் தலைவனைப்பிரிந்த தலைவியின் பிரிவுத் துன்பம் அனைத்துப்பாடல்களிலும் மையக்கருவாகப் பாடப்பட்டுள்ளது.

### 4. பிரிவுத்தலைவன்

தலைவன் கூற்றில் அமைந்த பெண்பாற்புலவர் பாடல்கள் மூன்றும் கற்புக்குரியன. இப்பாடலில் அள்ளூர்நன்முல்லையார் ஒன்றும், (குறுந்.237) கழார்க்கீரனெயிற்றியார் ஒன்றும் (நற்.312) குன்றியனார் ஒன்றுமாகப் (அகநா.41) பாடியுள்ளனர். அள்ளூர் நன்முல்லையார் பாட்டு.

"அஞ்சுவ தறியா தமர்துணை தழீஇய
நெஞ்சுநப் பிரிந்தன் றாயினு மெஞ்சிய
கைப்பிணி நெகிழினஃ தெவனோ நன்றும்
சேய வம்ம விருவா மிடையே
மாக்கடற் றிரையின் முழங்கி வலனேர்பு
கோட்புலி வழங்குஞ் சோலை
எனைத்தென் றெண்ணுகோ முயக்கிடைமலையே "

(குறுந்.237)

என்ற பாட்டு தலைவன் கூற்று. பொருள் முற்றி மீள்வான், தேர்ப்பாகனுக்குரைத்தது. (உரைப்பானாய்த்தன் நெஞ்சிற் குரைத்தது) வினைமுடிந்து தேரில் வரும் தலைவன் தலைவியைச் சந்திக்க இன்னும் நெடுந்தூரம் இருந்தும், என் நெஞ்சம் தலைவியிடம் சென்றது. ஆனால் அவளை அணைக்கும் கைகள் இங்குள்ளன, கையாற்றழுவுதல் இல்லாமல் நெஞ்சம் சென்றதில் என்ன பயன் என்கிறான். இப்பாடலில் தலைவன் பல காட்டையும் கடந்து வருகின்றான். இப்பாடலில் ஒருவனின் பயணம் குறிப்பிட்டுப் பாடுவதால் குறிப்பிட்ட நிலத்திற்குரிய தலைவன் என்றுபாடஇயலாது. மிக அழகாக அள்ளூர் நன்முல்லையார், இருவருக்குமிடையே புலிகள் வாழும் பல சோலைகளைக் கடந்து செல்ல வேண்டும் என்று குறிப்பிடுகிறார். இப்பாடலில் தலைவன் எப்பிரிவை மேற்கொண்டான் என்ற குறிப்பில்லை. கற்பில் வினை, பொருள் இரண்டனுக்காகவும் பிரியநேரும். இப்பாடல் இரண்டிற்கும் ஒக்கும். இப்பாடல் பிரிவு உணர்த்தியமையின் பாலையாகியது. இப்பாடல் தலைவன் வருகையைப் பாடினாலும் இன்னும் இருவரும் இணையவில்லை. அதனால் பிரிவுப்பொருள் உணர்த்திப் பாலையாகியது. இருவரும் பிரிந்திருப்பதை,

"அஞ்சுவதறியா தமர் துணைதழீகிய
நெஞ்சுநப் பிரிந்தன் றாயினு மெஞ்சிய
கைபிணி நெகிழினஃதெவனோ நன்றும்
சேய உம்ம இருவரு மிடையே"

(குறுந்.237:1-4)

என்றடிகளால் அறியமுடிகின்றது. இப்பாடல் உரிப்பொருளால் பாலையாகியது. கற்பில் பொருள் பிரிவுச் சுட்டப்பட்டதால் இப்பாடல் கற்பெனும் கைகோளுக் குரியது. இவ்வாறு தலைவன் விரைந்து தலைவியைச் சேரக்கருதுவான் என்பது அகமரபு. இதனை தொல்காப்பியர்,

"வினைவயின் பிரிந்தோன் மீண்டு வருகாலை
இடைச் சுரமருங்கில் தவிர்தல் இல்லை
உள்ளம் போல உற்றுழி உதவும்
புள்இயல் கலிமா உடைமையான"[29]

என்பர். இப்பாடலில் தலைவனின் நெஞ்சம் விரைந்து செல்ல, இன்னும் உடல் மட்டும் இங்கிருக்கிறது அதுகடக்க வேண்டிய தூரம் இன்னும் உள்ளது என்று விரைந்து தேரைச் செலுத்துக என்று குறிப்புப்பொருள் கொள்ளக்கூறியதாக உள்ளது. பாடலில் பாகன் பற்றிய குறிப்பில்லை. தேர்ப்பாகனிடம் தலைவன் பேசுவான் என்பதை "பேர் இசை ஊர்திப்பாகர் பங்கினும்"[30] என்றுகுறிப்பிட்டார். தலைவன் தேரைச் செலுத்தி வரும்போது தன்மனத்துள் விரைந்து செல்லவேண்டும் என்ற எண்ணத்தில் கூறியபாட்டு எனக்கொள்ளல்தகும்.

கழார்க் கீரனெயிற்றியார் பாட்டு தலைவன் கூற்று. இப்பாடலில் தலைவி கோடை காலத்தில் நான் உடனிருந்தும் நடுங்குவாள். இப்பனிக்காலத்தில் என்னபாடு படுவாளோ என்று நெஞ்சிடம் கூறியதாக உள்ளது. இப்பாட்டு, பிரிவு வலித்த தலைமகன் நெஞ்சினை நெருங்கிச் சொல்லியது. இப்பாட்டு பாலைப்பாட்டு. இப்பாட்டில் பாலைநிலப் புனைவில்லை. தலைவனைப் பிரிந்த தலைவியின் நிலையைத் தலைவன் எண்ணிவருந்துவதாக அமைந்துள்ளது. தலைவி பிரிவைத் தாங்காள் என்று தலைவன் வருந்துவதை,

"எதிர்த்த தித்தி முற்றா முலையள்
கோடைத் திங்கணிற் பனிப்போள்
வாடைப் பெரும்பனிக் கென்னள்கொல் எனவே"

(நற்.312:7-9)

என்றடிகளால் அறியமுடிகின்றது. பிரிவுப் பொருளால் பாலையாகியது. இவ்வாறு தலைவியின் நிலையை எண்ணித் தலைவன் வருந்துவது அகமரபாகும். இதனைத் தொல்காப்பியர் கற்பில் தலைவன் கூற்றுக்களை வரையறுக்கும் போது,

"நின்றுநனி பிரிவின் அஞ்சிய பையுளும்"[31]

என்றார். இதனால் இக்காலங்களில் தலைவன் கூற்று நிகழ்த்துவான்.

## பொருள்வயிற் பிரிவு

குன்றியனார் பாடியது.பாடலில் தலைவன் தலைவியின் மாமை நிறத்தின் அழகையும், மருதநில வயல்களில் உழவுத்தொழில் செய்ய எருமைகளைப் பூட்டி உழும் இக்காலத்தில், மழைபெய்ததால் காடும் கவினுறத் தோன்றும் பொழுதில் நம்

பிரிவினை அறியாமல் நலமுடன் வாழ்ந்த தலைவி நம் பிரிவினால் நலம் சாய வருந்துவாளே என்கிறான். இது தலைவன் கூற்று. கற்புப்பாட்டு. இப்பாடலில் வயலில் உழவுத் தொழில் செய்வதும், எருமைகள் கொண்டு உழுவதும் குறிப்பிடப்பட்டுள்ளது. இதனை,

"வைகுபுலர் விடியல் மைபுலம் பரப்பக்
கருநனை அவிழ்ந்த ஊழுறு முருக்கின்
எரிமருள் பூஞ்சினை இனச்சிதர் ஆர்ப்ப
நெருநெல் அடைச்சிய கழனியேர் புகுத்துக்
குடுமிக் கட்டிய படப்பையொடு மிளிர
அரிகால் போழ்ந்த தெரிபகட் டுழவர்
ஓதைத் தெள்விளி புலந்தொறு பரப்பக்"

(அகம்.41:1-7)

என்ற பாட்டுஉணர்த்தும். இப்பாடலில் மருதநிலப் புனைவுச் சுட்டப்பட்டாலும் உரிப்பொருள் தலைவியைப் பிரிந்த தலைவன் வருத்தம் கூறப்பட்டதால், பிரிவு எனும் பாலையின் உரிப்பொருளால் பாலைத்திணையாகியது, தலைவன் வருந்தியதை,

"நம்பிரி புலம்பின் நலஞ்செலச் சாஅய்
நம்பிரி பறியா நலனொடு சிறந்த
நற்றோள் நெகிழ வருந்தினள் கொல்லோ"

(அகம்.41:10-12)

என்றடிகள் உணர்த்துகின்றன.

## நெய்தல் திணைப்பாக்கள்

பெண்பாற்புலவர்களின் அகப்பாக்களில் பாலைத் திணையை அடுத்து நெய்தல் திணையில் இருபத்தாறு பாடல்கள் உள்ளன. இத்திணையில் ஔவையார் நான்கு பாக்களும் (குறுந்.102,200,நற்.187,295); குன்றியனார் ஐந்துபாக்களும் (குறுந்.51,117, நற்.117,239); வெள்ளிவீதியார் மூன்று பாக்களும் (குறுந்.386, நற்.335, 348); கச்சிப்பேட்டு நன்னாகையார் (குறுந்.172,197); கார்க்கியார் (நெய்தற்கார்க்கியார்) (குறுந்.55,212); நக்கண்ணையார் (நற்.19,87) நன்னாகையார்

(குறுந்.118, 325) வெண்பூதியார் (குறுந்.97, 219) ஆகியோர் முறையே இரண்டு பாடல்களும், குமுழிஞாழலார் நப்பசலையார் (அகநா.160) போந்தைப்பசலையார் (அகநா.110), மதுரை ஓலைக்கடையத்தார் நல்வெள்ளையார் (நற்.369). வெண்மணிப்பூதியார் (குறுந்.299) ஆகியோர் முறையே ஒருபாடலும் பாடியுள்ளனர்.

இத்திணையில் பெண்பாற்புலவர்கள் ஒவ்வொருவரும் ஐந்து என்ற எண்ணிக்கைக்கு குறைவாகப் பாடல்கள் பாடியுள்ளனர்[32].

## நெய்தல் திணை

கடலும் கடல் சார்ந்த நிலமும் நெய்தலாகும். தொல்காப்பியர் இதனை "வருணன் மேய பெருமணல் உலகமும்"[33] என்று குறிப்பிடுவர். நெய்தலின் பொழுது எற்படு பொழுதான சாயுங்காலம் இதனை,

"................... எற்பாடு

நெய்தலாதல் மெய்பெறத் தோன்றும்"[34]

என்பர் தொல்காப்பியர். இந்நிலக் கடவுள் வருணன்.[35] இந்நிலத்திலுள்ள தெய்வம் முதலானவை இந்நிலக்கருப்பொருள்கள். உரிப்பொருளாக "காதலன் பிரிவினால் காதலி நைந்து ஏங்குதலான இரங்கலைக்"[36] குறிப்பிடுவர்.

பெண்பாற்புலவர்களின் நெய்தல் திணைப்பாக்களில் நெய்தலின் முதல், கரு உரிப்பொருள்கள் குறிப்பிட்டுப் பாடப்பட்டுள்ளன. இப்பாடல்களில் தலைவி, தோழி கூற்றில் பாக்கள் இடம் பெற்றுள்ளன[37]. பெண்பாற்புலவர்களின் நெய்தல் பாடல்கள் 1. களவுப் பாடல், 2. கற்புப்பாடல் என்று இருவகைப்படுத்தப்பட்டுள்ளன.

### 1. களவுப் பாடல்கள்

களவுப் பாடல்கள் நெய்தல் திணையில் மிகுதியாகும். களவில் தலைவிகூற்றும், தோழி கூற்றும் உள்ளன. இதில் அகப் பொருளில் கூற்று நிகழ்த்தும் தலைவன் முதலான ஏனையோர் கூற்று இடம் பெறாதது குறிப்பிடத்தக்கது. இப்பாடல்கள் அனைத்தும் பெண்டிர் கூற்றாகவே உள்ளன, பெண்பாற்புலவர்கள் ஒருபெண்ணாக நின்று தங்கள் உணர்ச்சிகளை இப்பாடல்களின் மூலம் நன்குணர்த்துகின்றன.

## 1. களவுத் தலைவி

களவில் நெய்தல் நிலத்தலைவி வரைவு விரைந்து வேண்டுபவளாக உள்ளாள். ஔவையார் பாடிய நற்றிணை 187ஆம் பாட்டில், நெய்தல் நிலத் தலைவியைப் பகற்குறியில் சந்தித்த தலைவன் பொழுது சாயவும் தேரைப் பூட்டிக் கொண்டு செல்லுகின்றான். தலைவி மனத்துள் தலைவன் சென்றபின் இருவரும் விளையாடிய சோலை இனி எவ்வண்ணம் அமையுமோ என்று இரங்குகிறாள் (நற்.187). இப்பாட்டுத்தலைவி கூற்று. தலைமகன் பகற்குறிவந்து மீள்வானது செலவுநோக்கித் தலைமகள் தன்னுள்ளே சொல்லுவாளாய்ச் சொல்லியது.

இப்பாடலில் நெய்தல் நிலத்தில் நெய்தல்மலர் மாலைப் பொழுதில் குவிய, பலவாகிய மலர்களை உடைய கடற்கரைச் சோலை என்று நெய்தல் புனையப்படுகிறது. இதனை,

> "நெய்தல் கூம்ப நிழல்குணக் தொழுகக்
> கல்சேர் மண்டிலஞ் சிவந்துநிலந் தணியப்
> பல்பூங்கானலும் அல்கின்றன்றே"
>
> (நற்.187:1-3)

நெய்தல் நிலத்தைப் புனைந்து பாடினார் ஔவையார். இப்பாட்டில் நெய்தலின் பொழுதான எற்பாடு (சாயுங்காலம்) பொழுதை, "கல்சேர்மண்டிலஞ் சிவந்து நிலந்தணியப்" (2) என்று கதிரவனின் சிவந்தநிற முற்றும் மறைதல் கூறப்பட்டுள்ளது. இப்பாடலில் நெய்தல் நிலத்தலைவனைத் "கொண்கன்" (9) என்று குறிப்பிடப்பட்டுள்ளது. நுளையர், பரதவர், வலைஞர் போன்று இக்கொண்கன் என்ற பெயர் நெய்தல் தலைவனைக் குறிக்கவந்தது. இப்பாடலில் தலைவி தலைவனுடன் ஆடிய இச்சோலை இனி எவ்வாறு அமையுமோ? என்று அவற்றைக் காணுந்தோறும் யாங்காவது கொலெனத் தானுய்யாமை கூறியிரங்கியதால் நெய்தலின் உரிப்பொருளாகியது. இதனை,

> "இன்னகை மேவநாம் ஆடிய பொழிலே"
>
> (நற்.187-10)

என்று இரங்கற் குறிப்பாகப் பாடுகின்றார் ஆசிரியர். களவில் தலைவன் தேரில்

வருவான் என்பதை,

> "தேரும் யானையும் குதிரையும் பிறவும்
> ஊர்ந்தனர் இயங்கலும் உரியர் என்ப"[38]

என்பர் தொல்காப்பியர். இவ்வாறு நெய்தல் நிலத்தலைவன் தேரில் வந்ததை,

> "இனமணி யொலிப்பப் பொழுதுபடப் பூட்டி
> மெய்ம்மலி காமத்து யாந்தொழுது ஒழியத்
> தேருஞ் செல்புறம் மறையும் ஊரொடு"
>
> (4-6)

என்றதால் மணிகள் ஒலிப்பத்தேரில் தலைவன் வந்ததை அறியமுடிகின்றது. இவ்வாறு வந்து சந்தித்துப்போவது களவில் 'பகற்குறி' எனப்படும். இவ்வாறான சந்திப்பு உண்டென்பதை,

> "குறியெனப்படுவது இரவினும் பகலினும்
> அறியத்தோன்றும் ஆற்றது என்ப"[39]

என்பர் தொல்காப்பியர். இப்பாடலில் பகற்குறி நிகழ்ந்ததையும், நெய்தல் தலைவன் பகலில் சந்தித்து மாலையில் புறப்பட்டான் என்பதையும் பாடல் உணர்த்துகிறது. இதனை,

> "கல்சேர் மண்டிலஞ் சிவந்துநிலந் தணியப்
> ............................................
> இனமணி யொலிப்பப் பொழுதுபடப் பூட்டி"
>
> (நற்.187;2-4)

என்ற அடிகள் சுட்டும்.

இப்பாடலில் தோழி என்று விளிக்குஞ் சொல்லில்லை. இப்பாடலில் தலைவி தலைவன் சந்தித்து மீண்டவுடன் பொழிலைக் கண்டு தன்னுள்ளே சொல்லுவாளாய்ச் சொல்லிய பாட்டாகும். இப்பாட்டுக் களவு என்றும் கைகோளுக்குரியது. ஔவையார் இப்பாட்டில்நெய்தல் நிலத்தைப் புனைந்து, உரிப்பொருள் விளங்கச் சிறப்பாகப் பாடியுள்ளார்.

குன்றியனார் பாடிய தலைவிக் கூற்றுப்பாட்டு, களவில் ஈடுபட்ட தலைவி வரைவுநீட்டித்ததால் வருந்துகின்றாள். மாலைப்பொழுது துன்பம் மிகுவிக்கின்றது. ஊரிலும் அலர் எழுகின்றது. இனி உயிர்வாழ்தலரிது என்கிறாள் தலைவி. (நற்.117); இப்பாட்டு வரைவுநீட ஆற்றாளாய தலைவி வன்பொறை யெதிரழிந்து சொல்லியதும், 'சிறைப்புறத்தானாக அவன் கேட்டு விரைவிலே வரையும் வண்ணம் முன்னே கூறியபடி கூறாநிற்பதுமாம்'[40]. இப்பாட்டில் நெய்தல் நிலத்தையும், பொழுதையும் கருப்பொருள்களையும் சுட்டியுள்ளார். நெய்தல் நிலம் கடலும், கடல்சார்ந்த இடமும். ஆதலால், கடல் முழங்கவும் அந்நிலத்திலுள்ள மலர்கள் மலர்வதும் இயற்கை இப்பாடலின் தலைவி கடலின் அலைகள் படுமாறு கடலருகில் உள்ள மனையில் வாழ்பவள். அந்நிலத்தில் மாலையில் நெய்தல் மலர் குவிகின்றது. பறவைகள் மாலை நேரத்தில் கூடுகளில் சென்று தங்குகின்றன என்று நெய்தல் நிலத்தின் மாலைக் காட்சியைப் படைக்கின்றார். இதனை,

"பெருங்கடல் முழங்கக் கானல் மலர
இருங்கழி ஓதம் இல்லிறந்து மலிர
வள்ளிதழ் நெய்தல் கூம்பப் புள்ளுடன்
கமழ்பூம் பொதும்பர்க் கட்சிசேரச்
செல்சுடர் மழுங்கச் சிவந்து வாங்குமண்டிலம் "

(நற்.117:1-5)

என்ற பகுதிகாட்டும். இப்பாடலில் நெய்தலின் கருப்பொருளான, நெய்தல்மலர், பறவை ஆகியன சுட்டப்பட்டுள்ளன. நெய்தலின் பொழுதான எற்படு பொழுதை, "புலம்பொடு வந்த புன்கண்மாலை" (நற்.117;7) என்று ஆசிரியர் சுட்டுகிறார். தலைவன் உடனில்லாததால் தலைவிக்கு மாலைப் பொழுது துன்பம் தருகிறது. இதனால் 'புன்கண் மாலை' என்றார். இப்பாட்டில் தலைவி தலைவன் பிரிவினால் வருந்தி இனி வாழ்வது இயலாது என்றிரங்குவதால் நெய்தலின் உரிப்பொருளாகியது. இதனை,

"அன்னார் உன்னார் கழியிற் பன்னாள்
வாழலென் வாழிதோழி யென்கண்
துனி பிறி தாகக் கூறிற்

பிணிபிறி தாகல் பண்புமார் அன்றே''

(நற்.117;8-11)

என்ற அடிகள் சுட்டும். இப்பாட்டில் 'வாழி தோழி' என்ற விளிக்குஞ்சொல் உள்ளது. இதனால் தலைவி கூறத்தோழி கேட்பதாக அமைந்தபாட்டு. நெய்தல் நிலத்தலைவன் பணி பனிக்கடலில் மீன்பிடிப்பதும் முத்தெடுப்பதுமாக அமைவது. இப்பணி உயிருக்கு உத்தரவாதமில்லை. உயிருடன் வந்தால் தான் உறுதி. இந்நிலத்தலைவி முல்லை நிலத்தலைவி போன்று ஆற்றியிராமல், வருந்தி உழந்து இரங்குவதற்கும் இதுவே காரணம். அதனால் களவு நீட்டிக்கும் போது தலைவிக்குத் தலைவனின் சிறுபிரிவும் பெருந்துன்பத்தைத் தரும். அதனால் வரைவு வேண்டும் என்ற எண்ணமே மிகஇருக்கும். அதனால் அந்நிலப்பாடலில் உணர்வின் உச்சமான இம்மனப் போராட்டத்தைப் படைப்பாளர்களான புலவர்கள் எடுத்துக்கொண்டனர். இப்பாடலில் குன்றியனார் ஒருதலைவியின் மாலைக்காலத்துன்பத்தைப் படைத்துக் காட்டுகிறார். இப்பாடலின் பயன் தலைவியின் நிலையைத் தோழி கேட்டுத்தலைவனுக்கு கூறவேண்டுவதும், தலைவன் சிறைப்புறமாக நிற்கத் தோழிக் கூறுவதுபோல் தலைவன் கேட்கச் சொல்லியதும் என்ற அகமரபுப்படி இரண்டுக்கும் பொருந்தும். தொல்காப்பியர் களவில் தலைவி தலைவனைப் பிரிந்த போது வருந்துவாள். அப்போதுப் பேசுவாள் என்பதால் 'பிரிந்த வழிக்கலங்கினும்[41] குறிப்பிட்டார். இதனால் களவில் தலைவி இவ்வாறு வருந்துவது உண்டென்பது அறியப்படும். இப்பாட்டு களவெனும் கைகோளுக்குரியது.

நக்கண்ணையார் பாடிய நற்றிணை 87ஆம் பாட்டு நெய்தற்திணைப்பாட்டு. இப்பாட்டில் தலைவனைப் பிரிந்த தலைவி தலைவனைப் புணர்ந்ததாகக் கனவுகண்டு விழித்து அது கனவென்று இரங்குதல் ஆகிறது. இது தலைவிகூற்று. வரைவிடைவைத்துப் பிரிய ஆற்றாளாய தலைவி கனாக்கண்டுத் தோழிக்குரைத்தது. இப்பாட்டில் நெய்தல் நிலத்திலுள்ள புன்னைமரம், பரதவர், குளிர்ச்சி மிகுந்த கடற்கரைச் சோலைக்கானல் ஆகியவற்றைக் கூறுகின்றார் நக்கண்ணையார்.

இப்பாடலில் நெய்தல் நிலத்தை, 'பெருந்தண் கானலும்' என்றும், அந்நிலக் கருப்பொருளான புன்னை, சிப்பிப் போன்றவையையும் குறிப்பிட்டுள்ளார். உரிப்பொருளாகத் தலைவி கனவுகண்டு அது நீங்கியவுடன் பிரிவிற்காக இரங்கி,

‘அது கழிந்தன்றே’ என்று வருந்துவதால் நெய்தலின் உரிப்பொருளாகியது. இப்பாட்டு ‘அதுகாழிந்தன்றே தோழி’ என்பதால் தலைவி கூறத் தோழி கேட்பதாக அமைந்தபாட்டு. இப்பாட்டில் தலைவி கனவு கண்டாள் என்று சுட்டியுள்ளார். தலைவனும் தலைவியும் அன்பின் மிகுதியால் கனவு கர்ண்பது உண்டு. இதனைத் தொல்காப்பியர்,

“கனவும் உரித்தால் அவ்விடத்தான்”[42]

என்பர். இப்பாடலிலும் அகமரபுப்படித் தலைவி களவில் கனவு காண்கின்றாள் என்று அமைந்திருக்கிறது. இதனை,

“உள்ளூர் மாஅத்த முள்ளெயிற்று வாவல்
ஓங்கல் அஞ்சினைத் தூங்குதுயில் பொழுதின்
வெல்போர்ச்சோழர் அழிசியம் பெருங்காட்டு
நெல்லியம் புளிச் சுவைக் கனவியாஅங்கு
அது கழிந்தன்றே................................”

(நற்.87;1-5)

என்றதால்அறியமுடியும். இப்பாட்டு களவு எனும் கைகோளுக்குரியது. இதனைத் தலைவி தலைவனின் நாட்டைக் கூறும்போது,

“. . . . . . . . . . . . . . அவர் நாட்டுப்
பனியரும்பு உடைந்த பெருந்தாள் புன்னை
துறைமேய் இப்பி ஈர்ம்புறத்து உறைக்குஞ்
சிறுகுடிப் பரதவர் மகிழ்ச்சியும்
பெருந்தண் கானலும் நினைத்தவப் பகலே”

(நற்.87;5-9)

என்றதில் ‘அவர் நாட்டு’ என்றதால் இன்னும் மணம்புகவில்லை என்பது அறியப்படும். காமஞ்சேர்குளத்தார் பாடிய,

“நோமென் நெஞ்சே நோமென் னெஞ்சே
இமைதீய்ப் பன்ன கண்ணீர் தாங்கி
அமைதற் கமைந்த நங்காதலர்
அமைவிலராகுதல் நோமென் னெஞ்சே ”

(குறுந்.4)

என்ற பாட்டு தலைவி கூற்று. பிரிவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது. இப்பாட்டில்நெய்தல் நிலப்புனைவில்லை. பாடலில் தலைவி தலைவன் பிரிவினால் ஆற்றாமல் அழுகின்றாள் என்ற இரங்கற் பொருளால் உரிப்பொருளால் திணையாகியது. தொல்காப்பியர் இவ்வாறு தலைவி அழுது நெஞ்சில் துன்பத்தை மறைத்தல் களவில் உண்டென்பர். இதனை 'முனிவுமெய் நிறுத்தல்[43] உணர்த்தும். இதற்கு இளம் புரனர் இப்பாட்டையே மேற்கோளாக்குவர். இப்பாடலில் தலைவி தொடர்ந்து அழுவதால் கண்ணீரின் சூட்டில் இமைகள் சுடுகிறது என்று தலைவியின் துன்பமிகுதியைப் பாடுகிறார் புலவர்.

வெண்மணிப்பூதியார் பாடியது நெய்தல் திணைப்பாட்டு,

"இது மற்றெவனோ தோழி முதுநீர்ப்
புணரி திளைக்கும் புள்ளிமிழ் கானல்
இணரவிழ்புன்னை யெக்கர் நீழற்
புணர்குறி வாய்த்த ஞான்றைக் கொண்கற்
கண்டன மன்னேங் கண்ணே யவன் சொற்
கேட்டன மன்னெஞ் செவியே மற்றவன்
மணப்பின் மாணல மெய்தித்
தணப்பின் நெகிழ்பவெந் தடமென்தோளே"

(குறு.299)

இப்பாட்டு தலைவி கூற்று. சிறைப்புறமாகத் தோழிக்குக் கிழத்தி உரைத்தது. இப்பாட்டில் நெய்தல் நிலத்தைப் புனைந்துள்ளார். கடற்கரைச் சோலையைக் கானல் என்கிறார். இதனை,

"..........................................முதுநீர்ப்
புணரி திளைக்கும் புள்ளிமிழ் கானல்"

(குறுந்.299;1-2)

என்றதால் பெறப்படும். அந்நிலக்கருப்பொருள்களாக, 'புன்னை' குறிப்பிடப்பட்டுள்ளது. இப்பாடலில், தலைவி தலைவன் உடனிருக்கும்போது இன்பமுடன் வாழ்ந்து, பிரிந்தபோது வருந்துகிறேன் என்று இரங்குகிறாள். இதனை,

“மணப்பின் மாணல மெய்தித்

தணப்பின்நெகிழ்பவெந் தடமென்றோனே”

(குறுந்.299:1-2)

என்றடிகாட்டும். இவ்வாறு வருத்த மிகுதி சுட்டப்பட்டதால் நெய்தலின் உரிப்பொருளாகியது.

இப்பாட்டு முதற்பொருளாலும் உரிப்பொருளாலும் நெய்தல் திணையாகியது. இப்பாட்டில் தலைவனைக் கண்கள் கண்டன, அவன் சொல்லைச் செவிகள் கேட்டன என்றதால் களவு நிகழ்வும், மேனி மெலிவதும் உள்ளம் வருந்துவதையும் கூறி வரைவு வேண்டுவதைக் குறிப்பால் உணர்த்துகிறாள் தலைவி. இதனால் களவெனும் கைகோளாயிற்று. இவ்வாறு தலைவி கூறத் தோழி கேட்டதை ‘இதுமற்றெவனோ தோழி’ (1) என்றதால் அறியமுடிகிறது.

மதுரை ஓலைக் கடையத்தார் நல்வெள்ளையார் நற்றிணையில் பாடிய 369ஆம் பாட்டு தலைமகன் கூற்று. இப்பாடல் ‘பட்டபின்றைவரையாது பொருள் வயிற்பிரிந்து ஆற்றாளாகிய தலைமகள் வன்பொறை எதிரழிந்தது‘. இப்பாட்டில் நேற்று வந்த மாலைப்பொழுது இன்றும் வருவதாயின் எனக்குண்டாகும் காமவெள்ளம் நீந்தும் நெறியறியேனென்று அழிந்து கூறியது.

இப்பாட்டில் நெய்தல் நிலப்புனைவில்லை. மாலை நேரத்தில் சூரியன் சினம் தணிந்து குன்றின் கண்மறைகிறது. மாலைநேரத்தில் முல்லையும் மலர்கின்றது என்று குறிஞ்சி நிலமும் குன்றஞ்சேர என்று, முல்லை மலர் மலர்ந்ததையும் குறிப்பிடுகின்றார்.

இப்பாடலில் தலைவி காமத்தின் மிகுதி கூறி அது தங்காது இரங்குகிறாள். இதனால் உரிப்பொருளால் நெய்தலாகியது. இதனை,

“கங்கையம் பேர் யாற்றுக் கரையிறந்திழிதருஞ்

சிறையடு கடும்புனல் அன்னவென்

நிறையடு காமம் நீந்துமாறே”

(நற்.369;9-11)

என்றதால் அறியமுடிகின்றது. இவ்வாறான பிரிவு களவில் வரைபொருள் கருதி அமையும், இப்பாடல் குறிஞ்சி நிலத்தது. தலைவியைத் தலைவன் பிரிகின்றான்

அவள் மாலைப்பொழுது வரவும் வருவான் என்று பார்த்து வருந்துகிறாள். இப்பாடலில் தலைவி ஆற்றியிராமல் காமம் நிறையைக் கடந்ததாக கூறி இரங்குவதால் உரிப்பொருளால் நெய்தலாகியது.

பெண்பாற்புலவரின் நெய்தல் திணைப் பாடலில் வரைபொருளுக்காகத் தலைவன் பிரிந்தான் என்பது சுட்டப்படவில்லை.

## களவில் தோழி கூற்று

ஔவையார் படைத்த நெய்தல் நிலத்தோழி கூற்றுப்பாட்டான நற்றிணை 295ஆம் பாடலில், நெய்தல் நிலத்துத் தலைவனும் தலைவியும் காதல் கொண்டு களவொழுக்கத்தில் ஈடுபட்டனர். அதைத் தாய் அறிந்து தலைவியை இல்லில் காவல் செய்வாளாயினாள். அதனால் தலைவியை கள்ளின் சாடி அன்ன இளமை நலம் கெடும்படி மனையகத்து வைத்துக் காப்புச் செய்தனர். அப்போது தோழி இத்தகைய துன்பம் கொடுத்து நீ வாழ்வாயாக என்று தலைவன் அறியும்படி கூறிய பாட்டு. இப்பாடல் தோழி செறிப்பறிவுறீஇ வரைவுகடாயதும் ஆகும். தலைவன் சிறைப்புறத்தானாக அவன் கேட்பக்கூறியதுமாம். இப்பாடலில் நெய்தல் நிலம் புனையப் பட்டுள்ளது. இதனை,

............................................ எந்தை
வேற்று நாட்டிற் கால்தரவந்த
பலவினை நாவாய் தோன்றும் பெருந்துறைக்"

(நற்.295;4-6)

என்றதால் தலைவி நெய்தல் நிலத்தவள் என்பது பெறப்படும்.

இப்பாட்டில் தோழி, தலைவனிடம், தலைவியை இல்லில் தாய் வைத்துக் காப்பதால் அவள் இனி நீ பார்ப்பது கடினம். நீ வரைந்து கொள்ள முயன்றாலன்றி அவள் அழகுகெட்டு 'முதிர்கம்யாமே' என்று தோழி இரங்கிக் கூறியதால் உரிப்பொருளால் நெய்தலாயின. இப்பாட்டில் 'அருங்கடி அயர்ந்தனள் காப்பே'(4) என்று இற்செறித்தலால் களவு எனும் கைகோளாயிற்று. இப்பாட்டு தோழி கூறத்தலைவன் சிறைப் புறமாகவோ நேரிலோ நின்று கேட்பதாக அமைந்தது. இப்பாட்டில் ஔவையார் தந்தை, தாய், தலைவி, தலைவியின் சுற்றம் இவற்றைக்

கூறியுள்ளார். இப்பாட்டு முதற்பொருளாலும் உரிப்பொருளாலும் நெய்தல்திணையாகியது.

குன்றியனார் பாடிய பாடல்களில் களவுப் பாடல் மிகுதி. இவர் பாடிய குறுந்தொகை 51ஆம் பாட்டு,

"கூன்முண்முண்டகக் கூர்ம்பனி மாமலர்
நூலறுமுத்திற் காலொடு பாறித்
துறைதொறும் பரக்குந் தூமணற் சேர்ப்பனை
யானுங் காதலென் யாயுநனி வெய்யாள்
எந்தையுங் கொடீஇயர் வேண்டும்
அப்ப லூருமெ வனொடு மொழிமே"

(குறுந்.51)

என்றபாட்டு தோழி கூற்று. வரைவிடை நீட்டித்தவிடத்து ஆற்றாளாகிய தலைமகட்குத்தோழி வரைவு மலிவு கூறியது.

இப்பாட்டில் நெய்தல் நிலப்புனைவுள்ளது. நெய்தல் நிலத்தில் மலர் 'கூன்முண்முண்டக' மலர் மலர்ந்துள்ளது. நெய்தல் நிலமும் மணற்பரப்பையுடையது. நெய்தல் நிலப்பெயர் கொண்டுத் தலைவனைச்சேர்ப்பன் என்று குறிப்பிட்டுள்ளார். இதனை, 'தூமணற் சேர்ப்பன்' என்றடி சுட்டும். இப்பாட்டு நெய்தல் நிலத்தில் நடக்கும் களவினைக் காட்டுகிறது. தலைவி வரைவு நடக்குமா? என்று எண்ண தோழி மிகஅழகாக குடும்பத்திலுள்ள தலைவியின் பெற்றோரான தாயும் வெறுக்கமாட்டாள், தந்தையும் அவனுக்கே மணம் செய்ய எண்ணுவர். இவ்வூரும் தலைவனுடன் அலர்தூற்றுகிறது. இதனால் மணம் செய்து கொள்ளுதற்குரிய முயற்சிகள் மிகுதியாக உள்ளன என்கிறாள். இதனை,

"யானுங் காதலென் யாயுநனி வெய்யள்
எந்தையுங் கொடீஇயர் வேண்டும்
அம்பலூரு மவனொடு மொழிமே"

(4-6)

என்ற அடிகளால் அறியமுடியும். இப்பாடலில்தலைவி வருத்தம் சுட்டப்படவில்லை. தோழி, தாய், தந்தை, ஊர் என்று திருமணத்திற்கு யார் தடையும் இருக்காது என்பதால்

நீ வருந்தாமல்இரு என்று கூறுகிறாள். இப்பாடல் நெய்தல் நிலப்புனைவு சுட்டுவதும். அந்நிலத்தலைவன் தலைவியர் காதலை மொழிவதும், திருமணம் யாவரும் இசையநடக்கும் என்பதும், தலைவியின் வருத்தம் நீங்கும் என்றும் கூறித் தலைவியின் இரங்கற்குறிப்பு வெளிப்படுத்துவதால் உரிப்பொருளாலும் இப்பாட்டு நெய்தலாகியது.

இவ்வாறு தோழி திருமணத்திற்கு முன்பு தலைவியை வரைவு காரணமாக வற்புறுத்த கூறும்கூற்று நிகழும் என்பர் தொல்காப்பியர். அதற்குத் தமர் வரவுடன் பட்ட தன்மையினால் தலைவியை வற்புறுத்தற்கான தோழிக்கூற்று நிகழ்ந்தது[44] என்பதற்கு இளம் பூரணர் இப்பாட்டை உதாரணமாக்குவர். நச்சினார்க்கினியவர் 'தோழி வரைவுகடாயவழி அவ்வரைந்து கோடல் மெய்யாயினமையின் வரைவு முடியுமளவும் ஆற்றும்படி தோழி வற்புறுத்திக் கூறியது'[45] என்பதற்கு இப்பாடலைக் காட்டுவர். இப்பாட்டு வரைவுக்கு முந்திய களவுக்காலம் சுட்டியதால் களவெனும் கைகோளாயிற்று.

குன்றியனார், தொல்காப்பியர்க்கூற்று மரபில் தோழி பேசியதாகப் பாடியுள்ளார். இப்பாடலில் அந்நாளில் களவு கற்பாவதற்குத் தாயும், தந்தையும், ஊரும் இசைவுகொடுத்த இதன் மூலம் அறியமுடிகிறது.

குன்றியனார் பாடிய

"மாரி யாம்பலன்ன கொக்கின்
பார்வ லஞ்சிய பருவரலீர் ஞெண்டு
கண்டல் வேரளைச் செலீஇய ரண்டர்
கயிறரி யெருத்திற் கதழுந் துறைவன்
வாரா தமையினு மமைக
சிறியவு முளவீண்டு விலைஞர்கை வளையே "

(குறுந்.117)

என்ற பாட்டுத் தோழி கூற்று. வரைவு நீட்டித்த விடத்துத் தலைமகட்குத்தோழி சொல்லியது. இப்பாட்டில் நெய்தல் நிலத்தலைவனான துறைவன் மீது தலைவி கொண்ட காதலால் தலைவி, வரைவுக்குக் காலம் நீட்டித்ததால் ஏற்கின்றாள். பிரிவினால் வளைகழன்றோடுகிறது. இதனைப் பார்த்ததும் தோழி தலைவன் பாராமல்

இருந்தாலும் பரவாயில்லை, நீ வளைகளில் சிறியனஉள அதனை அணிந்துகொள் என்கிறாள். இப்பாட்டில் நெய்தல் தலைவனைத் திணைப் பெயரிலேயே துறைவன் என்று குறிப்பிடுகிறார். இதனை, "..............................கதழுந் துறைவன்" (குறுந்.117:4) என்றடியால் அறியமுடியும். இப்பாட்டில் நெய்தலின் கருப்பொருளாக நண்டு, கொக்கு போன்றன சுட்டப்படுகின்றன. உரிப்பொருளாக, தலைவி தலைவனின் வரைவு நீட்டித்தால் நைந்து மெலிகின்றார். இதனை 'சிறிய வுமுள வீண்டு விலைஞர் கைவளையே' என்றடி சுட்டும். இப்பாட்டில் வரைவு மலிவு சுட்டப்பட்டதால் இது களவெனும் கைகோளுக்குரியதாயிற்று. அகப்பொருள் மரபில் அலரும் உண்டு. அவ்வலர் களவிலும் கற்பிலும் தோன்றும். இதனால் தலைவன், தலைவியரின் அன்புமிகுதியாகும். தொல்காப்பியர் அலர், களவு கற்பு வாழ்க்கையில் நிகழ்வதை,

"களவும் கற்பும் அலர் வரைவின்றே"[46]

"அலரின் தோன்றும் காமத்தின் சிறப்பே"[47]

என்பர். இப்பாட்டில் களவில்அலர் எழுகின்றது. அதனைத் தோழி அந்நிலத்தில் நடக்கும் நிகழ்ச்சியைக் கொண்டு புனைகிறார். இதனை,

"மாரியாம் பலன்ன கொக்கின்
பார்வலஞ்சிய பருவர லீர்கொண்டு
கண்டல் வேரளைச் செலீகியரண்டர்"

(குறுந்.117;1-3)

என்று நெய்தல் நிலத்தில் கொக்கின் பார்வைக் கஞ்சி நண்டு தன் வளையிலே சென்று தங்கும். அதுபோலத் தலைவன் ஊரின் அலர்க்கஞ்சி விரைந்து இல்லறத்தில் இணைப்பான் என்றதுபாடலின் குறிப்புப்பொருள். குன்றியனார் நெய்தல் நிலத்தில் நடக்கும் நிகழ்ச்சியைத் தம் பாடல்களில் புனைந்திருப்பது அவரின் புனைத்திறத்தை உணர்த்தும். இப்பாடலுக்கு உரையெழுதும் போது உ.வே.சாமிநாதையர் தலைவன் 'சிறைப்புறத்தானாகத் தோழி தலைவிக்குக் கூறியதென்று தோன்றுகின்றது'[48] என்பர். இப்பாடலின் கருத்துத் தலைவியின் உடல்மெலிவையும், ஊரின் அலரையும் தலைவனுக்குக் கூறப்பாடப்பட்டது. இதனால் இச்செய்தி தலைவனுக்கு கிட்டினால்தான் பயன். அதனால் உ.வே.சாமிநாதையர் கூறும் கூற்றுப் பொருத்தமாக அமையும்.

குன்றியனார் பாடிய நெய்தல் திணை. களவுப்பாடலில் 'சேர்ப்பனுக்குப் பொருந்தி நடந்து கொண்டோமில்லை. அங்ஙனமாக, இப்பொழுதே எம்மை நோக்கி அக்காதலனையணைத்து முயங்குவாய் என்று கூறுகின்ற இவ்வூர்யாம் ஏதாவது களவொழுக்கத்துக்கு உரியதைச் செய்துவிட்டால் இனி என்ன பாடுபடுமோ வென்று நொந்து கூறுவது'.(நற்.239)

இப்பாட்டு தோழி தலைமகன் சிறைப்புறமாகச் சொல்லியது. இப்பாடலில் நெய்தல் நிலத்தையும், அந்நிலத்தில் வாழும் பரதவரையும், அந்நிலத்தலைவனான சேர்ப்பனையும், அந்நிலத்தில் மலரும் நெய்தல் பூவையும், கடலில் வாழும் நண்டையும், பெருமீனையும், அந்நிலப்பொழுதையும்
குறிப்பிட்டுள்ளார். இதனை,

"ஞான்ற ஞாயிறு குடமலை மறைய
மான்ற மாலை மகிழ்ந்த பரதவர்
இனிதுபெறு பெருமீன் எளிதினின் மாறி
அலவன் ஆடிய புலவுமணல் முன்றில்
கானலஞ் சிறுகுடிச் செல்நெறி வழியின்
ஆய்மணி பொதிய வாழ்ந்தாங்கு நெய்தற்
புல்லிதழ் பொதிந்த பூத்தப மிதிக்கும்
மல்லல் இருங்கழி மலிநீர்ச் சேர்ப்பதற்கு"

(நற்.239;1-8)

என்ற பாட்டு உணர்த்தும். இப்பாடலில் நெய்தலின் மணற் சார்ந்த நிலத்தை "அலவன் ஆடிய புலவு மணல் முன்றில்" என்பதாலும், நெய்தலின் பொழுதை "ஞான்ற ஞாயிறு குடமலை மறைய" என்று எற்படு பொழுதையும் குறிப்பிட்டுள்ளார். அந்நிலக் கருப்பொருள்களாக மீன், நண்டு, நெய்தல் மலர் போன்றனவும் சுட்டப்பட்டுள்ளன. இப்பாடலில் தலைவன் சேர்ப்பன் என்ற பெயரால் குறிக்கப்பட்டுள்ளான். இதனை, "மலிநீர்ச் சேர்ப்பன்" என்பதால் அறியமுடியும்.

இப்பாடலில் தோழி "தலைவனுடன் முயங்குக" எனக் கூறிய இவ்வூர் இனி அவனுக்கு அமைய நடக்கவல்ல வேறொரு காரியத்தைச் செய்துவிட்டால் என்ன பாடுபடுமோ. அதனால் இனி வரையாது கால தாழ்த்தினால் தலைவி இறப்பதைத்

தவிர வேறில்லை என்று தலைவியின் நிலைக்கு இரங்குவதால் நெய்தலின் உரிப்பொருளாயிற்று. இதனை,

"முயங்கல் மொழியும் இவ்வூர்

எற்றாவது கொல்யாம் மற்றொன்று செயினே"

(நற்.239;11-12)

என்றடிகளால் அறியமுடியும். களவு வாழ்க்கையைப் பாடுவதால் களவெனும் கைகோளாயிற்று. தோழி முயற்சியினால் தலைவனுடன் தலைவியை இணைப்பாள். அதற்கே தொல்காப்பியர்,

"முயற்சிக் காலத்து அதர்ப்பட நாடிப்

புணர்த்தல் ஆற்றலும் அவள் வயினான"[49]

என்றார். இதனால் இக்கூற்றில் தோழி தலைவியைத் தலைவன் வரைந்து கொள்ளாவிட்டால் தலைவி வாழாள் என்று கூறி விரைவில் மணந்துகொள் என்கிறாள். நெய்தற்காக்கியாரின்

"மாக்கழி மணிப்பூக் கூம்பத்தூத்திரைப்

பொங்குபிதிர்த் துவலையொடு மங்குல் தைஇக்

கையற வந்த தைவர லூதையொ

டின்னா வுறையுட் டாகும்

சின்னாட் டம்மவிச் சிறுநல் லூரே"

(குறுந் 55)

என்ற பாட்டு தோழி கூற்று. வரைவொடு புகவில்லையாயின் இவள் இறந்துபடுவாள் எனத் தோழி, தலைமகன் சிறைப்புறத்தானாகச் சொல்லியது.

இப்பாட்டில் நெய்தல் நிலத்தைப்புனைந்துள்ளார். நெய்தற்கரிய கழியினிடத்திலேயுள்ள நீலமணி போன்ற பூக்கள் கூம்பத்தூய அலையிடத்துப் பொங்கிய பிசிராகிய துளியோடு மேகத்தைப் பொருந்தி இருக்கும் கடலைக்குறிப்பிடுகின்றார். இப்பாடலில் வாடைக்காற்று வருவதால் பிரிந்தோர் செயலறும்படி சில நாள்களே வாழமுடியும் அதனால் தலைவன் பிரிவினால் இனி உயிர் வாழாள் என்பதால் உரிப்பொருளால் நெய்தலாகியது.

தலைவன் களவில் தலைவியைச் சிறுபொழுது பிரியினும் தாங்காள் அத்துடன் வாடைக்காலமும் வந்தது விரைந்து வரைந்து கொள்வது நல்லது என்கிறாள் தோழி.

கார்க்கியார் பாடிய நெய்தற்பாட்டான

"கொண்க னூர்ந்த கொடுஞ்சி நெடுந்தேர்
தெண்கட லடைகரைத் தெளிமணி யொலிப்பக்
காணவந்து நாணப்பெயரும்
அளிதோ தானே காமம்
விளிவது மன்ற நோகோ யானே"

(குறுந் 212)

என்ற பாட்டு தோழி கூற்று குறை நேர்ந்த தோழிக் குறைநயப்பக கூறியது. களவுப்பாட்டு இப்பாடலில் 'தலைவனின் தேர் வந்து பெயர்கின்றது. அவன் விருப்பம் கழிந்தது. அதுகருதி வருந்துகிறேன்' என்கிறாள். இப்பாட்டில் தலைவனின் தேர் கடற்கரையில் மணி ஒலிப்பச்சென்றது என்று கடல் சார்ந்த நெய்தலைப்புனைகின்றார். இதனைத் 'தெண்கடலடைகரைத் தெளிமணியொலிப்ப' என்றடி உணர்த்தும். இப்பாடலில் தலைவிக்குக் காமம் இரங்கத்தக்கது அதற்காக நான் வருந்துகிறேன் என்கிறாள். இதனை,

"அளிதே தானே காமம்
விளிவது மன்ற நோகோ யானே"

(குறுந்.217;4-5)

என்று இரங்கிக் கூறுவதால் உரிப்பொருளால் நெய்தலாகியது. இப்பாட்டுக்களவெனும் கைகோளுக்குரியது. இதனைக் 'காணவந்து நாணப்பெயரும்' என்பது தலைவன் களவில் சந்தித்து மீண்டான் என்பதை உணர்த்தும்.

நக்கண்ணையார் பாடிய நற்றிணை 19ஆம் பாட்டு நெய்தல் திணைப்பாட்டு இப்பாடலில் தலைவியைப்பகற்குறியில் சந்தித்து மீள்கிறான் தலைவன். அப்போது இவ்வாறு பிரியின் சில நாளளவும் உயிர் வாழாள் என்று கூறுகின்றாள் தோழி. பாடலில் நெய்தல் நிலத்தில் மலரும் தாழையையும், கடலில் வாழும் சுறா மீனையும், குறிப்பிடுகின்றார். இது இந்நிலக் கருப்பொருளாகும். நெய்தல் நிலமான கடலையும்,

அந்நிலத்தலைவனைச் சேர்ப்பன் என்றும் குறிப்பிடுகிறார். இதனை 'விழவுக்கமழும் உரவுநீர்ச் சேர்ப்ப' (5) என்றதால் அறியமுடிகிறது. தலைவியைச் சந்திக்கத் தலைவன் தேரில் வந்ததை

"இனமணி நெடுந்தேர் பாகனியக்கச்
செலீஇய சேறி யாயின்"

(குறுந்.212;6-7)

என்பதால் அறியமுடியும். தலைவனுக்குத் துணையாகத் தேரைப்பாகன் தேரைச் செலுத்தி வந்ததைச் சுட்டுகிறார். இப்பாட்டில் தலைவி தலைவன் பிரியின் உயிர் வாழாள் என்றதால் இரங்கற் பொருளுணர்த்தி நெய்தலின் உரிப்பொருளாகியது. இதனை,

"வருவையாகிய சின்னாள்
வாழா ளாதல் நற் கறிந்தனை சென்மே"

(குறுந்.212;8-9)

என்றடிகள் சுட்டுகிறது. களவில் தலைவனும் தலைவியும் பகலில் குறித்த இடத்தில் சந்திப்பர். இதனைத்தொல்காப்பியமும்,

"குறியெனப்படுவது இரவினும் பகலினும்
அறியத் தோன்றும் ஆற்றது என்ப"[50]

எனச்சுட்டுவர். இப்பாடலில் நெய்தல் நிலத்தலைவன் நிலச்சூழல் கருதி பகலில் சந்தித்து மீள்வான். இரவுக்குறி பெரும்பாலும் குறிஞ்சி நிலத்தில் நிகழும் நெய்தல் நிலத்தலைவன் பகலில் சந்தித்து மாலையின் தேரில் மீள்வான். இதனால் இது பகற்குறியாயிற்று. இப்பாட்டு களவு எனும் கைகோளுக்குரியது.

## 2. கற்புப் பாடல்கள்

### 1. தலைவி கூற்றுப்பாக்கள்

கற்பில் தலைவன் பொருள், வினை காரணமாகப் பிரிவது இயல்பு. அக்காலங்களில் தலைவன் வராது காலம் நீட்டித்தால் தலைவி வருந்துவாள். அவ்வாறு வருந்தும் தலைவி ஒருத்தி கூறுவதாக ஔவையார்,

"உள்ளினுள்ளம் வேமேயுள்ளா
திருப்பினெம் மளவைத் தன்றே வருத்தி
வான்றோய் வற்றே காமம்
சான்றோ ரல்லர் யாமரீஇ யோரே"

(குறுந் 102)

இப்பாட்டு தலைவி கூற்று. 'ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி, யான் யாங்ஙனம் ஆற்றுவேன்' என்றது. இப்பாட்டு நெய்தல் திணைப்பாட்டு. பாட்டில் நெய்தல் நிலப்புனைவில்லை. உரிப்பொருளாகத் தலைவன் பிரிவை ஆற்றாத தலைவி, ஆற்ற இயலாத காமத்தின் தன்மையை வெளிப்படக் கூறித் தன்னிலைக்கிரங்குகிறாள். இதனை, 'வான்றோய்வற்றே காமம்' என்றடி உணர்த்தும் இவ்விரங்கற் பொருள் வெளிப்பட்டதால் உரிப்பொருளால் நெய்தல் திணையாகியது.

இப்பாட்டு கற்பெனும் கைகோள். இப்பாடலில் தலைவி, தலைவனைச் சான்றோரல்லர் என்கிறாள். இதற்கு 'இல்லறம் நிகழ்த்துவோர் உரிய காலத்தே தலைவியருடன் இருந்து இன்புறும் உலகியலை மறந்தமையால் ஒப்புரவின்மையையும் ........................சான்றோரல்லர் எனக்கூறினாள்'[51]. என்று உ.வே.சாமிநாதையர் இப்பாட்டுக்கு உரை வகுப்பர். சங்க அகப்பொருள் மரபுப் படிதலைவன் வரைபொருளீட்ட மட்டுமே தலைவியைக் களவில் பிரிவான். இப்பாடலில் வரை பொருளீட்டச் சென்றான் என்ற குறிப்பின்மையாலும் இப்பாட்டு கற்பாயிற்று. இப்பாட்டில் தோழி என்று விளிக்கும் சொல் இல்லை. அகமரபுப்படித் தலைவி தோழியிடம் கூறுவாள். ஆதலால் இப்பாட்டு தலைவி கூறத் தோழி கேட்பதாயிற்று.

குறுந்தொகையில் இதனைக்களவுப் பாடலாகக் கொண்டுத் துறை எழுதியுள்ளனர், எனினும் பேராசிரியர் "காதல் கைம்மில்" என்னும் மெய்ப்பாட்டுக்குரிய இடத்தில் எடுத்துக்காட்டி "வரைந்து எய்துங்கூட்டத்திற்கு ஏதுவாம்[52]. எனக்கொள்ளுவர். நச்சினார்க்கினியரும்" வழிபாடு மறுத்தற்கு[53] இப்பாட்டை உதாரணங்காட்டுவர். இப்பாட்டு களவிற்றலைவி கூற்றாதற்குரியது.

வெள்ளிவீதியார் பாடிய பாடலில் தலைவன் மீது காமவேட்கை மிக்கதனாலாகிய தலைமகள் "திங்கள் விளங்குகின்றது. கடல் ஓசையடங்கியது

இல்லை. அன்றிலும் ஒலிக்கின்றது. யாழும் இசைக்கின்றது. அவற்றைக் கேட்டால் எனக்குண்டாகிய காமமோ பெரியதாய் இருக்கின்றது. இதனை ஒழிக்கவல்ல காதலா் அருகிலில்லாது ஒழிந்தனர். இனியான் எவ்வாறு உய்வேனென அழிந்து கூறிய பாட்டு (நற்.335).

இப்பாட்டு தலைவி கூற்று. 'காமமிக்க கழிபடர் கிளவிமீதூர்ந்து தலைமகள் சொல்லியது'. இப்பாடலில் நெய்தல் நிலம் புனையப்பட்டுள்ளது. நெய்தல் நிலமான கடல், கடல் சார்ந்த பகுதியும், அந்நிலத்துத் தாழை மலரும், அந்நிலத்தில் வாழும் பறவையான அன்றிலும், அந்நிலத்தில் இசைக்கப்படும் யாழும் கூறப்பட்டுள்ளன. இதனை,

"திங்களுந் திகழ்வான் ஏர்தரும் இளநீர்ப்
பொங்குதிரைப்புணரியும் பாடோ வாதே
ஒலிசிறந்து ஓதமும் பெயரும் மலிபுனப்
பல்பூங்கானல் முள்ளிலைத்தாழை
சோறுசொரி குடவயின் கூம்புமுகை அவிழ
வளிபரந்து ஊட்டும் விளிவில் நாற்றமொடு
மையிரும் பனைமிசைப் பைதல் உயவும்
அன்றிலும் என்புறம் நரலும் அன்றி
விரல் கவர்ந்து உழந்த கவர்வின் நல்யாழ்"

(நற் 335)

என்று ஒன்பது அடிகளில் நெய்தல் நிலமான கடற்பரப்பையும், அங்கு வாழும் அன்றில், தாழைமடல், அந்நிலமக்கள், வாசிக்கும் யாழ் முதலியவற்றையும் பாடியுள்ளார். இப்பாடல் முதற்பொருளால் நெய்தல் திணையுணர்த்துவது போல,

"யாமம் உய்யாமை நின்றது
காமம் பெரிதே களைஞரோ இவரே"

என்று காமத்தின் அளவினைக்கூறி ஆற்ற இயலாத தன்மையைக் கூறியிரங்குவதால் உரிப்பொருளாலும் நெய்தல் திணையாகியது.

நெய்தல் திணையில் வெள்ளிவீதியார் பாடிய பாடலில்

"வெண்மணல் விரிந்த வீததை கானற்
றண்ணந் துறைவன் றணவா லூங்கே
வாலிழை மகளிர் விழவணி கூட்டும்
மாலையோ வறிவேன் மன்னே மாலை
நிலம் பரந்தன்ன புன்கணொடு
புலம்புடைத் தாகுத லறியேன் யானே"

(குறுந் 386)

என்ற பாட்டு தலைவிகூற்று, "வரைவிடை வற்புறுத்தும் தோழிக்குக்கிழத்தி" கூறியது. இப்பாடலில் மணற்பரப்பையுடைய நெய்தல் நிலமும், அந்நிலத்தலைவனான துறைவனையும் குறிப்பிட்டுள்ளார். இதனை, 'வெண்மணல் விரிந்த வீததை கானற், றண்ணந் துறைவன்' என்றடிகள் உணர்த்தும்.

இப்பாடலில் மாலைக்காலம் வந்தது, தலைவிக்குத் தலைவனைப்பிரிந்த துன்பம் மிகுதியால் இரங்கிக் கூறுகின்றாள். இதனை,

"மாலையோ வறிவேன் மன்னே மாலை
நிலம்பரந் தன்ன புன்கணொடு
புலம்படைத்தாகு தறியேன் யானே"

(குறுந்.386;4-6)

என்று தலைவி புலம்புகின்ற தனிமைத்துயரத்திலிருந்து செய்வதறியுது இரங்குதலால், இப்பாடல் நெய்தலின் உரிப்பொருள் விளங்கநெய்தல் திணையாகியது.

இப்பாட்டில் கருப்பொருளாக "வீவிதை கானல்" என்று நெய்தல் நில மலர்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. இப்பாட்டு முதற்பொருளாலும்,உரிப்பொருளாலும் நெய்தல். இப்பாட்டில் தோழி என்று விளிக்கப்படவில்லை. இருந்தும் "வாலிழை மகளிர் விழவணிகூட்டும் மாலையோ" என்று பாடலில் குறிப்பிடுவதால் மாலைப்பொழுதில் அணிகலன் அணிந்து விழா அயர்ந்ததும், தலைவன் பிரிவினால் அணிகள் அணியாமல் வருந்தியிருக்கிறாள் தலைவி. அந்நிலைகண்டு தோழி, வருந்தாமல் இரு என்று கூறுகிறாள். அதற்குத் தலைவி மாலைப்பொழுது தலைவன் இல்லாமையால் துன்பம் செய்கிறது. இதனை மாற்ற வழியில்லை என்பதால் வன்புறை எதிரழிதலாகித் தலைவி கூற்றாகிறது. கேட்பவள் தோழியாகிறாள். தலைவன்

தலைவி இணைந்து இல்லற வாழ்வில் ஈடுபட்டு வாழ்ந்ததால் மாலைப்பொழுதும் அறியாமல்,தலைவி இன்பமுடன் வாழ்ந்தாள். தற்போதுப் பிரிந்து வருந்துகின்றாள் என்பதால் கற்பெனும் கைகோளாயிற்று.

வெள்ளிவீதியார் பாடிய 'நிலவு பரந்தது; ஊர் திருவிழா அயர்கின்றது; கானத்தில் வண்டொலி செய்கின்றது. இவ்விரவில் யான் கண்ணுறங்கிலேனே, அதனால் என்னொடு இவ்வுலகு போர் செய்யுமோ ''அன்றேல் இவ்வுலகொடு என்நெஞ்சு போர் செய்யுமோ'' ஒன்றுந் தோன்றவில்லையே என்று புலம்பாநிற்பது'' (நற்.348)

இப்பாட்டு தலைவி கூற்று 'வேட்கைபெருகத் தாங்களாய் ஆற்றாமை மீதூர்கின்றாள் சொல்லியது'. இப்பாட்டில் நெய்தல் நிலப்புனைவில்லை. பாடலில் தலைவி தலைவனின் பிரிவினால் தலைவி உறக்கமின்றி அவலமுறு நெஞ்சுடன் தலைவி இரங்கிக் கூறுவதால் உரிப்பொருளால் நெய்தல் திணையாகியது. இதனை,

''கனையிருங் கங்குலுங் கண்படைஇலனே
அதனால், என்னொடு பொருங்கொல் இவ்வுலகம்
உலகத்தொடு பொருங்கொல் என் அவலமுறு நெஞ்சே''

(நற்.348;9-10)

என்றஅடிகளால் அறியமுடியும்.

காதலில் கேட்குந போலவும் கிளக்குந போலவும் கூறுவது இலக்கிய இயல்பு. தலைவி அறிவுமயங்கி வேட்கைமீதூர உலகம் இவளுடன் போர் செய்வதாகப்பாடுகிறாள். கற்பில் தலைவன் பிரிவான்; தலைவி வருந்துவாள். அதனால்கற்பெனும் கைகோளாயிற்று'' கச்சிப்பேட்டு நன்னாகையார் பாடிய குறுந்தொகைப் பாட்டில்,

''யாதுசெய் வாங்கொ றோழி நோதக
நீரெதிர் கருவிய காரெதிர் கிளைமழை
ஊதையங் குளிரொடு பேதுற்று மயங்கிய
கூதிர் குருவிற் கூற்றம்
காதலர்ப் பிரிந்த வெற்குறித்து வருமே''

(குறுந். 197)

என்ற பாட்டு தலைவி கூற்று. பருவ வரவின்கண் வற்புறுத்தும் தோழிக்குக்கிழத்தி உரைத்தது. கற்புப்பாடல். இப்பாட்டில் நெய்தல் திணைப்புனைவில்லை. தலைவி, தலைவன் பிரிந்து இருக்கும்போது கார்காலம் என் உயிரைக் கொல்லவருவது போல வருகிறது என்கிறாள். இப்பாடலில் தலைவி தலைவன் பிரிவிற்கு இரங்கி வாடுவதால் உரிப்பொருளால் நெய்தலாகியது. தலைவி இரங்கியதை,

"ஊதையங் குளிரொடு பேதுற்று மயங்கிய
கூதிருவிற் கூற்று
காதலர்ப் பிரிந்த வெற்குறித்து வருமே"

(குறுந்.197;3-5)

என்றடியால் அறிய முடிகின்றது. இப்பாட்டில் தலைவி பிரிவில் நைந்து ஏங்குகிறாள். ஆற்றுவதற்கு வழியில்லை. கூதிர் காலத்தும் தலைவன் வரவில்லை எனில் உயிர் வாழேன் என்று இரங்குவதால் நெய்தலின் உரிப்பொருளாகியது. இப்பாட்டில் "யாது செய்வாங்கோ/றோழி" என்றதால் தலைவி கூறத் தோழி கேட்பதாயிற்று கற்பில் தலைவன் வினை, பொருள் என்று பிரிவான், இப்பாடலில் எப்பிரிவு என்று குறிப்பிடவில்லை. தலைவி அன்பின் மிகுதியால் வருத்தம் மிகுத்து இரங்கிக் கூறப்பட்டதால் உரிப்பொருளால் நெய்தலாயிற்று.

ஔவையார் ஐந்திணைப் புலமையும் பெற்றவர். நெய்தல் பாட்டுப்பாடும் போது நெய்தல் நிலத்தைப் புனைந்துள்ளார். நெய்தல் மலர் கூம்புவதும், கானற்சோலையும், இவர் நெய்தல் பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளன. (நற். 187). இவர் பாடலில் நெய்தல் நிலத்தில் கப்பல்கள் செலுத்தப்பட்டதைப் (நற். 245) பாடல் குறிப்பிடுகின்றது. இவர் பாடலில் களவு வாழ்க்கையைத் தாய், தந்தை, ஊர் இவை ஏற்றலைக் கூறுவதாகக் காட்டுகிறார். இவர் பாடிய நெய்தற் பாட்டில் இரண்டு களவுப்பாட்டு. ஒன்று கற்புப்பாட்டு. தலைவி கூற்றில் (நற். 187) களவில் ஒன்றும், கற்பில் ஒன்றும் (நற். 245), தோழி கூற்றில் களவில் ஒரு பாடலும் (குறுந். 102) இவர் பாடியன. இவர் பாட்டில் நெய்தல் தலைவி வான்றோயும் அளவு காமம் மிகுந்ததாகவும் (குறுந் 102), களவில் தலைவன் பகற்குறி சந்தித்து மீண்டவுடன்

அச்சோலை துன்பம் பயப்பதாகவும் (நற். 187) பாடியுள்ளார். இவர் பாடிய தோழி கூற்றுப்பாடல் வருந்தாமல் இரு தாய், தந்தை, ஊர், நானும் தலைவனை வெறுக்கவில்லை நீ விரும்பும் தலைவனுடன் சேர்வாய் என்கிறாள். இதனால் ஔவையார் எல்லாரும் சேர்ந்து நிகழ்த்தும் மணத்தையே விரும்பினார் என்பது பெறப்படும்.

வெள்ளிவீதியார் பாடிய இத்திணையிலமைந்த மூன்று பாட்டும் தலைவி கூற்றுப்பாக்கள். இவர் பாடலில் நெய்தல் நிலமான கடலும் கடல்சார்ந்த நிலத்தையும் அந்நிலத்தில் வாழும் அன்றில், தாழைமடல், அந்நிலமக்கள் பயன்படுத்தும் யாழ் என்ற இசைக்கருவி (நற். 335) போன்றவற்றைக் குறிப்பிட்டுள்ளார். இவர் பாடலில்,

"யாமம் உய்யாமை நின்றது
காமம் பெரிதே களைஞரோ் இலரே"

(நற். 335, 10-11)

என்றும்

"புலம்புடைத் தாகுதலறியேன் யானே" (குறுந். 386;6)

என்றும்

"......................................என்னொடு பொருங்கொல் இவ்வுலகம்
உலகத்தொடு பொருங்கொல் என் அவல முறுநெஞ்சே"

(நற். 348;9-10)

என்று துன்ப மிகுதியால் இரங்கும் தலைவியின் நிலையைப் பாடியுள்ளார்.

குன்றியனார் இத்திணையில் பாடிய களவுப்பாக்களில்; தோழி கூற்று முதன்மை பெற்றுள்ளது. நெய்தல் நிலத்தைப் புனையும் போது, நெய்தல் நிலத்தலைவனைச் 'சேர்ப்பன்' (குறுந். 51; நற். 239); 'துறைவன்' (குறுந். 117) என்று நிலப்பெயரைச்சுட்டிப் பாடியுள்ளார். இவர் பாடலில் நெய்தல் நிலத்தில் மலரும் மலர்கள் (குறுந். 51), பரதவர் (நற். 239), மீன், நண்டு, நெய்தற்பூ போன்ற நெய்தலின் கருப்பொருள்களைச் சுட்டியுள்ளார்.

இவர் பாடலில் தோழி தலைவியைத் தேற்றுகிறாள். அவள் தாயும், தந்தையும், ஊரும் தலைவனுடன் அலர்தூற்றுவதால் அவனுடன் உனக்குத்திருமணம் நடக்கும்

என்று (குறு. 51) ஆற்றுவிப்பவளாகவும் திகழ்கிறாள். களவினை மறைத்து ஆற்றியிரு என்று கூறித்தலைவன் விரைந்து வந்து மணப்பான் (குறுந். 117), என்றும் பாடுகிறார். இவர் பாடிய தலைவி, தலைவன் மணம் புரியத்தாமதமானால் ‘பன்னாள் வாழ்வேன்’ என்று கூறுகிறாள் (நற்.117)

குன்றியனார் பாடல்கள் அனைத்திலும் நெய்தல் நிலம்புனையப்படுகிறது. தலைவியின் அன்பின்மிகுதியும்,தோழி வரைவை விரைந்து தூண்டும் நுட்பங்களைத் தலைவனுக்குச் சுட்டுபவளாக கவிதைப் படைத்துள்ளார்.

நெய்தல் கார்க்கியார் என்றபெயர் நெய்தல் திணையைச் சிறப்பாகப் பாடியதால் பெற்ற பெயர். இவர் பாடிய இத்திணையில் அமைந்த பலபாடல்கள் கிடைக்கவில்லை. இவர் பாடிய இரண்டு பாடலிலும், நெய்தலின் கழியையும், அலைகள் அடிக்கும் போது சிதறும் நீர்த்திவலைகளையும் (குறுந். 55) குறிப்பிட்டுள்ளார். இவர் பாடல் இரண்டும் களவில் அமைந்த தோழி கூற்றுப்பாக்கள். தலைவன் வரைவு நீட்டித்தால் தலைவி உயிர் வாழாள் (குறுந். 55) என்றும், காமத்தின் துன்பம் தாங்காமல் தலைவி வருந்துவாள் என்றும் (குறுந். 212) குறிப்பிடுவன.

நக்கண்ணையார் நெய்தலில் இரண்டு பாக்கள் பாடியவர். இரண்டும் களவுப் பாட்டு. ஒன்று தோழி கூற்று (நற். 19); ஒன்று தலைவி கூற்று (நற் 87). இவ்விரு பாடலும் வரைவை வேண்டுவன. இவர் பாடலில் தலைவி கனவில் தலைவனுடன் முயங்கியதாகப் பாடுகிறார். (நற். 87) தோழி பகற்குறியில் சந்தித்து மீண்டதலைவனிடம் விரைந்து மணந்துகொள், இல்லை எனில் உயிர்வாழாள் என்கிறாள் (நற். 19)

காமஞ்சேர்குளத்தார் இத்திணையில் ஒரு பாட்டுப்பாடியவர். இவர் பாடலில் நெய்தல் நிலப்புனைவில்லை. இவர் பாடிய தலைவி, தலைவன் பிரிவினால் அழுவதால் இமை நெருப்புப்பற்றுமாறு கண்ணீர் வடிப்பதாகப் பாடுகிறார் (குறுந்.4).

வெண்மணிப்பூதியார் ஒரு பாட்டுப் பாடியவர். இவர் நெய்தலைப் புனைந்துள்ளார். கடற்கரைச் சோலை (குறுந். 299); புன்னைமரம் இவற்றைக் குறிப்பிட்டுள்ளார். இவர் பாடிய தலைவி, தலைவன் பிரிவினால் மெலிந்து வருந்துகிறாள்.

மதுரை ஓலைக் கடையத்தார் நல்வெள்ளையார், பாட்டு தலைவி கூற்றாகும். (நற். 369). இவர் பாட்டும் உரிப்பொருளால் நெய்தலாகியது. இப்பாடலில் தலைவி,

"சிறையடு கடும் புனல் அன்னவென்
நிறையடு காமம் நீந்துமாறே"

(நற்.9-10)

என்று வருந்துவதாகிறது. .

பெண்பாற் புலவர்களின் நெய்தல் திணைப்பாடலில் நெய்தல் புனைவு அடி எண்ணிக்கைக் குறைவான குறுந்தொகையில் குறைவாகவே உள்ளன. அகநானூறு நற்றிணை அடி எண்ணிக்கை மிகுதியால் அப்பாக்களில் குறுந்தொகையைவிட அதிகமாக நிலப்புனைவு இடம்பெற்றுள்ளன. நிலப்புனைவு குறைவாயினும் குறுந்தொகைப்பாட்டு உரிப்பொருளால் திணையாகியுள்ளன. (குறுந்தொகையிலும் சில பாடல்களில் நெய்தல் புனைவுள்ளது).

நற்றிணையில் அகநானூறு போன்ற நூல்களில் பாக்களின் அடி எண்ணிக்கை மிகுதி. இவற்றில் நிலம், கருப்பொருள் நன்கு சுட்டப்பட்டுள்ளன. நெய்தலில் களவுப்பாடல்கள் மிகுந்துள்ளன. நெய்தலில் பகற்குறிச்சந்திப்பும், தலைவன் விரைந்து மணம் முடிக்க வேண்டும் என்ற எண்ணமும் பெண்களுக்கு மிகுந்திருந்ததைக் காட்டுகிறது. இந்நிலத்தலைவன் கடலில் சென்று மீன் பிடித்தொழிலையுடையவன். அவன் உயிருடன் வந்தால்தான் உறுதி. நிச்சயமற்ற சூழலில் வாழும் தலைவி, அவள் விரும்பிய தலைவனுடன் விரைவில் மணம் நடக்க வேண்டும் என்று விரும்புகிறாள். அகப்பொருள் மரபுப்படி ஆற்றியிருத்தல் வேண்டும் நெய்தல் நிலப்பெண்களுக்கு இயற்கைச்சூழலால் துன்பம் மிகுகின்றது. இதனால் தலைவன் வரவைக்கண்டு காலதாமதமானால் அழத்தொடங்குகிறாள். இவ்வாறு அழுவது இல்லறப்பெண்களுக்கு இருத்தலாகாது. இதனால் இந்நிலத்தில் களவு வொழுக்கத்தைப் பெண்பாற்புலவர்கள் புனைந்துள்ளனர். மற்ற நிலத்தில் வாழும் பெண்களும் பிரிவில் ஆற்றியிராமல் அழுதால் அப்பாடல்களும் உரிப்பொருளால் நெய்தல் திணையாகக் கருதப்பட்டன.

## பெண்பாற்புலவர்களும் குறிஞ்சித்திணையும்

இத்திணையில் பதின்மூன்றுபேர். இருபத்தைந்து பாடல்கள் பாடியுள்ளனர். இப்பாடல்கள் குறுந்தொகையில் பதினான்கும், அகநானூற்றில் ஆறும், நற்றிணையில் ஐந்துமாகும். ஔவையார் பாடிய பாடலில் நான்கு இத்திணையின. அள்ளூர் நன்முல்லையார், நல்வெள்ளியார், வெள்ளிவீதியார், வெறிபாடியகாமக்கண்ணியார் போன்றோர் முறையே மூன்று பாடல் பாடியுள்ளனர். குன்றிய்னார், இரண்டு பாடலும், அஞ்சி அத்தை மகள் நாகையார், கழார்க்கீரனெயிற்றியார், குறமகள் குறிஎயினியார், நக்கண்ணையார், பொதுக்கயத்துக்கீரந்தையார், மாறோக்கத்து நப்பசலையார், வருமுலையாரித்தியார் முறையே ஒரு பாடலும் பாடியுள்ளனர்[54].

## குறிஞ்சித்திணை

குறிஞ்சிநிலம் மலையும், மலைசார்ந்த பகுதியுமாகும். தொல்காப்பியர்

"சேயோன் மேய மைவரை உலகமும்"[55]

என்று சுட்டுவர். குறிஞ்சியின் பெரும் பொழுது கூதிர், முன்பனிக்காலம் சிறுபொழுதாக யாமம் இதனை,

"....................................குறிஞ்சி
கூதிர் யாமம் என்மனார் புலவர்"[56]
"பனி எதிர் பருவமும் உரித்தென மொழிப"[57]

எனக்குறிப்பிடுவர் தொல்காப்பியர். புணர்தல்[58] இந்நிலஉரிப்பொருள். இப்புணர்தல் என்பது பெரும்பாலும் திருமணத்துக்கு முந்திய களவு வாழ்க்கை[59]. இந்நில கருப்பொருள் கடவுளாகிய முருகன் (தெய்வம்......... யாழ்) தொடங்கி அந்நிலவாழ் உயிர்களும், இசைக்கப்படும் குறிஞ்சிப்பண், குறிஞ்சியாழ் இவையுமாகும்.

பெண்பாற்புலவர்களின் குறிஞ்சித் திணைப் பாடல்களில் முதல், கரு, உரிப்பொருள்கள் பயில்கின்றன. இவர்கள் பாடிய பாடல்களில் தலைவன் கூற்றில் நான்கு பாடல்களும், தலைவி கூற்றில் எட்டுப்பாக்களும், தோழி கூற்றில் ஒன்பதுபாக்களும் இடம் பெற்றுள்ளன[60].

## களவுப்பாக்கள்

பெண்பாற்புலவர்களின் குறிஞ்சிப்பாக்களில் களவுப்பாக்கள் மிகுதி. மற்ற திணைப்பாக்களில் இடம்பெற்ற தலைவன் கூற்றுப்பாக்களைவிட இத்திணையில் நான்கு பாக்கள் இடம் பெற்றுள்ளன.

### 1. தலைவன் கூற்று

தலைவன் கூற்றுப்பாடல்களை ஔவையார், (குறுந். 29); வெள்ளிவீதியார் (குறுந். 55); அள்ளூர் நன்முல்லையார் (குறுந். 32); பொதுக்கயத்துக்கீரந்தையார் (குறுந்.337) ஆகியோர் பாடியுள்ளனர். இந்நான்கு பாடல்களும் குறுந்தொகையில் உள.

ஔவையார் பாடிய பாடலில், களவில் இரவுக்குறி வேண்டும் தலைவன், நெஞ்சிடம் கூறுவதாக அமைந்துள்ளது. "நெஞ்சே நல்ல சொற்களை நீக்கிப் பயனற்ற சொற்களைப் பெற்றதால் பெய்தலை உடைய மழைநீரை ஏற்றுக்கொண்ட பசுமட்கலம் போல உள்ளம் பொறுக்க முடியாது. ஆசை வெள்ளத்தால் நீந்திச் சென்று பெறுதற்கரியதை பெறவிரும்பினை, இச்செயல் உயர்ந்த மரக்கிளையில் குட்டியைத் தழுவிக் கொண்ட குரங்குபோல, நின்கருத்தைத் தழுவிக் கொண்டு நின்குறையை நிறைவேற்றுவாரைப் பெறுவாயாயின் உனது போராட்டம் மிகவும் பெருமை உடையது" என்கிறான் தலைவன். இப்பாட்டு 'இரவுக்குறி மறுக்கப்பட்ட தலைமகன் இவர் எம்மை மறுத்தார் என்று வரைந்து கொள்ள நினையாது பின்னுங்கூடுதற்கு அவாவுற்ற நெஞ்சினை நோக்கிக் கூறியது'[61].

இப்பாடலில் மலையில் வாழும் குரங்கு சுட்டப்பட்டுள்ளது. இதனை, 'மகவுடைய மந்தி போல .............. உயிர்கோட்டு' (5-6) என்றடியால் அறிய முடியும். இப்பாடல் களவு காலத்தில் இரவுக் குறி விரும்பும் தலைவன் பாடல். இக்களவு திருமணத்திற்கு முந்தைய புணர்ச்சி குறித்த நிகழ்ச்சியைச் சுட்டுவதால் குறிஞ்சியின் உரிப்பொருளாகியது. களவுக் காலத்தில் தலைவன் பேசுவான் தொல்காப்பியர். களவுத் தலைவன் கூற்றை வகுக்கும் போது,

"வரைதல் வேண்டித் தோழி செப்பிய
புரைதீர் கிளவி புல்லிய எதிரும்"[62]

என்பர். இது தோழி வரைவு வேண்டிநிற்பத்தலைவன் தன்னியல்பைக் கூறுவான் என்பதாகும். இவ்வாறு தலைவன் பேசுவது களவு வேண்டி என்பதை "பின்னுங்களவொழுக்கம் வேண்டிக கூறுதல்"[63] என்ற இளம் பூரணர் உரையால் அறியப்படும். இதற்கு இப்பாட்டை அவர் உதாரணமாக்குவர். இவ்வாறு தலைவன் பேசுவான் என்ற அகமரபுப்படிப்பாடப்பட்டுள்ள பாடல். இதனால் ஔவையார் ஆண்களின் களவு மனத்தைப்பாடுவதில் வல்லமை பெற்றவர் என்பது அறியப்படும்.

வெள்ளிவீதியார் பாடிய, இடிக்கும் கேளிர் நுங்குறையாக (குறுந். 58) என்ற பாடலில் "இடித்துரைக்கும் நண்பரே உனது செயலால் எனது காமநோயை நிறுத்தலைச் செய்தால் மிக நன்று. எனது விருப்பம் அது. ஆனால், எனக்குண்டான காமநோயோ, வெம்மையையுடைய பாறையினிடத்தே கையில்லாத ஊமையன் தன் கண்ணிலே காக்கமுயலுகின்ற, உருகிய வெண்ணையைப்போல என்பாலுண்டான இக்காமநோய் பரவியது, பொறுத்துக்கொண்டு நீக்குதற்கு அரிதாயிருக்கின்றது" என்று பாடுவர்.

இப்பாடலில் குறிஞ்சிநிலப்பொழுது புனைவில்லை. இப்பாடல் களவுக் காலத்தில் தலைவன் தலைவியை எண்ணிக் காமநோயால் படும் துன்பத்தைக் கண்டு பாங்கன் இடித்துரைக்க அதனை மறுத்துரைக்கும் தலைவன் கூற்று. இப்பாடலில் உவமையாக 'ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கில்' என்று குறிஞ்சிநிலம் புனையப்பட்டுள்ளது. இப்பாடல் களவுகாலப்புணர்ச்சிப்பாடல். அதனால், இவ்வுவமையும் குறிஞ்சி நிலத்தில் நடைபெற்றதாகும்.

இப்பாடல் தலைவன் கூற்றுப்பாடல் வெள்ளிவீதியாரின் பாடல்களை ஆய்வு செய்யும் போது இப்பாடலைத்தலைவி கூற்றாகக் கொள்ளமுடியும் என்பர்.[64] உரையாசிரியர் தொல்காப்பியர் சுட்டிய "தலைவன் நிகழ்பவை உரைத்தது"[65] என்பதற்கு இளம்பூரணர் இப்பாட்டைக் காட்டுவர். "பாங்கன் கழறியவற்றை மறுத்துத்தன் நெஞ்சில் நிகழும் வருத்தங்களைப் பாங்கற்குக் கூறுதற்கண் தலைவனுக்குக் கூற்று நிகழ்ந்தது"[66] என்பதற்கு நச்சினார்க்கினியர் இப்பாட்டைக் காட்டுவர். இப்பாடலில் "இடிக்கும் கேளிர்" என்பது இடித்துரைக்கும் நண்பன் எனவும், கையில் ஊமன்" என்பது ஊமனாகிய ஆண்மகனைக் குறிக்கும் என்பதால் இப்பாட்டு தலைவன் கூற்றாகும்.

அள்ளூர் நன்முல்லையார் பாடிய தலைவன் கூற்றுப்பாடலில், காலை, பகல், மாலை, யாமம், விடியல் என்று பொழுது தெரியின் அத்தகைய காமம் பொய்யானது. மடல் ஏறின் பழி நேரும் தலைவியின் பிரிவினால் வாழ்தலும் பழி என்கிறான். இப்பாடலில் குறிஞ்சிப்புனைவில்லை. தலைவியை பிரிந்து வாழ்வது அரிது என்கிறான் தலைவன். களவில் தலைவன் மடலேறுவேன் என்கிறான். இவ்வாறு மடலேறுவது உண்டு என்பதை,

"மடன் மா கூறும் இடனுமார் உண்டே"[67]

என்ற தொல்காப்பியர் கூற்றால் அறியமுடியும். இது களவுக்காலத்தில் தலைவன் தலைவியை அடைதல் வேண்டிய எண்ணம் வெளிப்படுவதால் இப்பாடல் குறிஞ்சித்திணையாகியது. பொதுக்கயத்துக் கீரந்தையார் பாடிய தலைவன் கூற்றுப்பாடலில்,

"முலையே முகிழ்முகிழ்த் தனவே தலையே
கிளைஇய மென்குரல் கிழக்கு வீழ்ந்தனவே
செறிநிரை வெண்பலும் பறிமுறை நிரம்பின
சுணங்குஞ் சிலதோன் றினவே யணங்குதற்
கியான்ற னறிவலே தானறியலளே
யாங்கா குவள்கொ றானே
பெருமுது செல்வரொரு மட மகளே"

(குறுந் 337)

இப்பாடல் தோழியை இரந்து பின்னின்ற கிழவன், தனது குறையறியக் கூறியது. இப்பாடலில் குறிஞ்சிப்புனைவில்லை. இப்பாட்டு களவுக்காலப்பாட்டு. தலைவன் தலைவியின் பருவம் வாய்த்தமையைக்கூறி வருந்துகின்றான். திருமணத்திற்கு முந்திய களவுப்பாட்டாதலால் குறிஞ்சித்திணையாகியது.

பெண்புலவர்கள் ஆண் கூற்றுக்களைப் பாடியுள்ளனர். ஔவையார், வெள்ளிவீதியார், அள்ளூர் நன்முல்லையார், பொதுக்கயத்துக்கீரந்தையார் போன்றோர் பாடியுள்ளனர். இப்பாடல்களில் தலைவன் களவு வாழ்க்கையை விரும்பி, இரவுக்குறி விரும்பினான்.(குறுந். 29) ஆனால், தலைவி களவுவாழ்க்கையைவிட கற்புவாழ்க்கையை விரும்பியுள்ளாள். அள்ளூர் நன்முல்லையார் பாடலில் தலைவன்

மடல் ஏறித் தலைவியைப் பெறுவேன் என்கிறான். இப்பாடலில் அந்நாளில் தலைவன் மடலேறுவான் என்ற செய்தியும், அச்செயல் பெண்ணிற்குப் பழிச் சொல்லாகியதை (குறுந். 32) அறிந்து இவ்வம்மையார் பாடியுள்ளார். வெள்ளிவீதியார் பாடலில் தலைவன் நண்பன் கூறியதை மறுத்துக் கூறுவதாகப் பாடுகிறார். இப்பாடலில் "கையில் ஊமன் கண்ணில் காக்கும் வெண்ணெய் உணங்கல் போல" என்ற உவமை ஒருவனின் மனம் படும் வேதனையைக் குறிப்பிடுகின்றது. பெண்புலவர்கள் பாடிய குறிஞ்சித்தலைவன் கூற்றுப்பாக்கள் தலைவன் தலைவியைச் சேர இயலாமல் வருந்துவதாக உள்ளன.

## 2. தலைவி கூற்று

குறிஞ்சித்திணைப் பாக்களில் தலைவி கூற்றில் ஒன்பது பாடல்கள்உள. எட்டுப்பாடல்களிலும் தலைவி வரைவை விரைவில் வேண்டுவன.

ஔவையார் பாடிய, "நெடுவரை மருங்கிற் பாம்பு பட விடிக்கும்" எனத் தொடங்கும் (குறுந்தொகை 158) பாடலில் உயர்ந்த மலையின் பக்கத்திலுள்ள பாம்புகள் இறந்து படும்படி இடியேற்றினது இடிக்கும் முழக்கத்தோடு கலந்து காற்றோடு வந்த நிறைந்த நீராகிய தலையுடைய பெரிய மழையே, இயல்பாகவே நின்பால் நிறைந்த இரக்கத்தை நீ இப்பொழுது பெறவில்லையோ பெரிய புகழையுடைய இமய மலையையும் அசைக்கின்ற தன்ன உடையாய், உன்னால் அலைக்கப்படும் மகளிர் துணை வரைப் பெற்றிலர். ஆதலின் இரங்கத்தக்கவர் அங்ஙனம் இருப்ப இங்ஙனம் நீ பெய்து அலைத்தல் எதன் பொருட்டு? என்று தலைவி "தலைவன் இரவுக்குறி வந்துழி" அவன் கேட்பத் தோழிக்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.

இப்பாடலில் குறிஞ்சி நிலம் "நெடுவரை மருங்கிற" (1) என்று மலையும், இரவுப்பொழுதும் புனைவுப் பெறுகின்றன. துணையில ரளியர் பெண்டிரி ஃ தெவனே" என்று பெண்கள் துணையின்றி உள்ளனர் அவர்கள் இரங்கத் தக்கவர்கள் என்று வருந்துருகிறாள். இப்பாட்டில் தலைவி பெருமழைப் பெய்ததற்கு வருந்துகிறாள். கற்பு வாழ்க்கையில் இம்மழை துன்பம் செய்யாது, களவில் தலைவி கூதிர் பருவம் வந்தும் தலைவன் வரவில்லையே என்று எண்ணியே வருந்துவாள். இப்பாடலுக்கு உ.வே. சாமிநாதையர் தலைவன் இரவுக் காலத்தில் வந்து அளவளாவுங்

காலத்து ஒரு நாள் பெருமழை உண்டாயிற்றதாக, அவனது வரவுக்குத் தடை நிகழுமோவென அஞ்சிய தலைவி அவ்வச்சத்தைத் தலைவன் வந்தபின்னர் அம்மழையை நோக்கிக் கூறுவாளாய் அவன் கேட்பக் கூறியது என்றெழுதுவர்[68]. இப்பாட்டு களவில் நிகழும் இரவுக்குறி பெருமழையால் தடைபடுமோ என்று வருந்துவதால் இப்பாட்டு குறிஞ்சித்திணையாகியது. அள்ளூர் நன்முல்லையார் பாடிய தலைவி கூற்றுப்பாடலில்,

"அருவி வேங்கைப் பெருமலை நாடற்
கியானெவன் செய்கோ வென்றி யானது
நகையென வுணரே னாயின்
என்னா குவை கொனன்னுதனீயே"

(குறுந் 96)

இப்பாட்டில் "அருவி வேங்கைப்பெருமலை நாடற்கு" (1) என்று குறிஞ்சி நிலம் சுட்டப்பட்டுள்ளது. இப்பாடலில் களவில் தலைவனின் இயல்பைப்பழித்துக்கூறிய தோழியிடம், தலைவி நீ அவ்வாறு தலைவனைக் கூறியதை,

"நகையென வுணரே னாயின்
என்னா குவை கொ னன்னுதனீயே"

(குறுந்.96;3-4)

என்று சினந்து கூறுகிறாள். இது களவுக்கால நிகழ்ச்சி குறித்தமையானும், பாடலில் குறிஞ்சி நிலம் சுட்டப்பட்டமையாலும் குறிஞ்சித்திணையாகியது. இப்பாட்டு 'தலைமகன் வரையாது வந்து ஒழுகிய காலத்தில் அவனைத்தோழி இயற்பழித்தாளாக அது கேட்ட தலைவி தோழியைச் சினந்து கூறியதாகும்'[69]. கழார்க்கீரனெயிற்றியார் பாடிய குறிஞ்சிப்பாடலில்,

"பழமழை பொழிந்தெனப் பதனழிந்துருகிய
சிதட்டுக்கா யெண்ணின் சில்பெயற் கடைநாட்
சேற்று நிலை முனைகிய செங்கட் காரான்
நள்ளென் யாமத் தையெனக் கரையும்
அஞ்சுவரு பொழுதினானு மென்கண்

துஞ்சா வாழி தோழி காவலர்
கணக்காய் வகையின் வருந்தியென்
நெஞ்சுபுண் ணுற்ற விழுமத்தானே"

(குறுந். 261)

என்ற பாட்டு "இரவுக் குறிக்கண் தலைமகன் சிறைப்புறமாகத் தோழிக்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது[70].

இப்பாட்டில் "நள்ளென்யாம" என்று குறிஞ்சியின் சிறுபொழுதான யாமம் சுட்டப்பட்டுள்ளது. இப்பாட்டில் களவுக்காலத்தில் தலைவி இரவுக் குறியில் தலைவனைச் சந்திக்க வேண்டித் துயிலின்றி இருந்ததைத் தோழியிடம் " துஞ்சாவாழி தோழி" (6) என அழைத்துக் கூறுகின்றாள். இவ்வாறு வருந்துவது தலைவன் வரைவு வேண்டியமைவதாகும். இப்பாட்டு, களவில் தோன்றும் இரவுக் குறி சுட்டினமையான் உரிப்பொருளால் குறிஞ்சித்திணையாகியது.

குன்றியனார் பாடிய குறிஞ்சிப்பாட்டில் 'முழவினைப்போன்ற அடி மரத்தையுடைய பனையினது ஓலையில் சிறிய சுள்ளிகளால் அமைத்த கூட்டில் கரிய காலையுடைய அன்றிலினது விருப்பத்தையுடைய முதல் சூலினால் உண்டான நோயையுடைய பெண்பறவை ஆண்பறவையை அழைக்கின்ற பாதி இரவில் தனது சக்கரத்தால் மன்றத்தைப் பிளந்து கொண்டு மணிகள் கட்டப்பட்ட தேர் வராதாயினும், வருவது போலக் காதினிடத்து ஒலிக்கும் ஒலியினால் என்னுடைய கண்கள் தூக்கத்தை மறந்தன என்கிறாள் தலைவி. இப்பாட்டில் குறிஞ்சிநிலப்புனைவும் புனையப்படவில்லை. இரவுப் பொழுதைப்'பானாள் கங்குல்'என்று குறிப்பிட்டுள்ளார். யாமம் குறிஞ்சியின் சிறுபொழுதாகும். இப்பாட்டு தலைவி தலைவனின் வரவை எதிர்பார்த்துத் துயின்றிலேன் என்று வருந்தும் தலைவியின் பாட்டு. இப்பாட்டில் 'கங்குலில் தலைவனது தேர் வருவதை முன்னம் அறிந்தவளாதலின் அப்பழக்கத்தாலும் நினைவாலும் தேர்மணியின் ஒலிகேட்பதாகத்தோற்றியது'[71]. இப்பாட்டை நச்சினார்க்கினியர் இரவுக்குறி பிழைத்த விடத்துத் தலைவி கூறியது என்றெழுதுவர்[72]. இப்பாடலிலும் தலைவி வரைவு வேண்டுவது நோக்கமாக அமைகின்றது.

நக்கண்ணையார் பாடிய தலைவி கூற்றுப் பாடலில், இடம் படுபு அறியா வலம்படு வேட்டத்து (அகம்.252-1) என்ற பாடலில் குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த தலைவன் தலைவியைச் சந்திக்க இரவுக் குறிறியல் வருகிறான். அப்போது மேகம் நீர்த்துளிகளை வீசத் தாயும் துயிலாது இருக்கின்றாள் என்கிறாள் தலைவி. இதனை,

"துய்யவிழ் பனிமலர் உதிர வீசித்
தொழின் மழை பொழிந்த பானாட்கங்குல்
எறிதிரைத் திவலை தூ உஞ்சிறு கோட்டுப
பெருங்குளங் காவலன் போல
அருங்கடி அன்னையும் துயின் மறந்தனளே"

(அகம். 252 : 10-14)

என்ற பாடலடி உணர்த்தும். இதனால் இரவுக்குறியில் சந்திக்க இயலாது இனி மணப்பதுதான் சரி என்று கூறுவதாக அமைகிறது.

இப்பாட்டில் குறிஞ்சி நிலத்தில் வாழும் விலங்கான புலி, யானை இவற்றைக் குறிப்பிட்டுள்ளார் நக்கண்ணையார். இதனை,

"இடம் படுபு அறியா வலம்படு வேட்டத்து
வாள் வரி நடுங்கப் புகல் வந்து ஆளி
உயர்நுதல் யானைப் புகர் முகந் தோற்றி
வெண்கோடு புய்க்குந் தண் கமழ் சோலைப்"

(அகம். 252 : 1-4)

என்றதால் அறியமுடியும். குறிஞ்சியின் பொழுதான யாமத்தை "பானாட்கங்குல்" என்கிறார். இப்பாடலில் தலைவி இரவுக்குறியில் நிகழும் இடையூற்றைப் பாடுவதுடன், குறிப்பினால் இரவுக்குறியைத்தாய் அறிந்ததால் துயில் மறந்தனள், அதனால் வரைவு மேற்கொள்வாயாக என்று கூறும் பொருளில் அமைந்துள்ளது.

இப்பாட்டில் களவுக் காலத்து இரவுக்குறிக் கூறப்பட்டதால் களவுப்புணர்ச்சி சுட்டிக் குறிஞ்சித்திணையாகியது. தலைவி இரவுக் குறிக்குத் தடை ஏற்படும் போது பேசுவாள் என்பது அகமரபு. இதனைத் தலைவி கூற்றில் 'இருவகைக்குறி பிழைப்பாகிய இடத்தும்'[73] என்ற சூத்திரத்தால் அறியமுடியும். இப்பாடலில் தலைவியும் தலைவனும் சந்திக்க இடையூராக மழை பெய்வதும் தாய் துயிலாமல்

இருப்பதையும் குறிப்பிட்டுள்ளார்.

மாறோக்கத்து நப்பசலையார் பாடிய நற்றிணை 304 ஆம் பாட்டில் தலைவி, "கிளிகள் தினைக்கதிர்களைக் கொய்து வரும் மலைநாட்டுத்தலைவன் என்னைப் புணர்ந்த காலமெல்லாம் எனக்கு நல்ல அழகு உண்டாகின்றது. அவன் என்னைப் பிரிந்த போது நீலமணியிடைப்பட்ட பொன்போல என்மேனியின் நிறம் கெட்டுப் பசலை தோன்றுகின்றது. ஆதலினால் தலைவனின் மார்பு இசையறி விலங்காகிய அசுணமானைக் கொல்பவருடைய கையைப் போல இன்பமும் துன்பமும் உடையதாயிருக்கின்றது (நற்.304). " இப்பாட்டு வரையாது நெடுங்காலம் வந்தொழுக ஆற்றாளாகிய தலைமகள் வன்புறை எதிர்மொழிந்தது"[74].

இப்பாட்டில் குறிஞ்சி நிலமான மலையும், அந்நிலத்தில் கிளிகள் தினைகளைக் கொய்து தின்னும் கிளிகளின் செயலும் இப்பாட்டில் குறிப்பிடப்பட்டுள்ளன. இதனை,

"வாரன் மென்தினைப் புலவுக்குரல் மாந்திச்
சாரல் வரைய கிளையுடன் குழீஇ
வளியெறி வயிரின் கிளிவிளி பயிற்றும்
நளியிருஞ் சிலம்பின் நன்மலை நாடன்"

(நற். 304: 1-4)

என்றடிகளால் அறியமுடியும். இப்பாட்டில் குறிஞ்சித்திணையில் நிகழும் களவுப் புணர்ச்சி சுட்டப்பட்டுள்ளது. இதனை,

"புணரிற் புணருமார் எழிலோ பிரியின்
.............................
.............................
இன்பமும் துன்பமும் உடைத்தே
தன்கமழ் நறுந்தார் விறலோன் மார்பே"

(நற்.304;5-10)

என்ற பாடலடிகள் உணர்த்தும். களவுப் புணர்ச்சி சுட்டியமையால் உரிப்பொருளாலும் குறிஞ்சித்திணையாகியது. இவ்வாறு களவில் தலைவி பிரிவில் வருந்துவதை,

"பெற்றவழி மகிழ்ச்சியும் பிரிந்தவழிக் கலங்கலும்"[75]

என்ற தொல்காப்பியர் கூற்றால் அறியமுடியும். இவ்வாறு களவுப் புணர்ச்சியில் பிரியும் போது தலைவி வருந்துவாள் என்ற அகமரபுப்படி மாறோக்கத்து நப்பசலையார் இப்பாட்டை யாத்துள்ளார்.

### 3. தோழி கூற்று

குறிஞ்சித்திணையில் தோழி கூற்றில் பதினொரு பாடல்கள் அமைந்துள்ளன. களவுக் காலத்தில் தோழி, தலைவன் இரவு, பகற்குறி சந்திப்பின் ஏதம் கூறி வரைவு வேண்டுவதும், தாயிடம் அறத்தொடு நிற்பதும், தலைவன் வரைவு நீட்டித்த போது தலைவியிடம் வரைந்து கொள்வான் என்று கூறும் போதும், வெறியாடலின் போதும் தோழி பேசுவதாக அமைத்துப் பெண்புலவர்கள் பாடியுள்ளனர்.

ஔவையார் பாடிய பாட்டு. இப்பாட்டில் தோழி தலைவியை 'பெருநகை கேளாய் தோழி' என அழைத்து தலைவன் ஒரு நாள் பிரிந்தாலும் உயிரின் தன்மை வேறுபடும். காதலர் நம்மை இங்கே கைவிட்டுத்தமியராய் வினை வயிற்செல்வாரெனவும் மீண்டு வருமளவும் நாம் நம்மனைக்கண் இருக்க வேண்டும் என்கிறாள். இப்பாட்டு "பிரிவுணர்த்தப்பட்ட தோழி, தலைமகளை முகம்புக்கதாகும்"[76].

இப்பாட்டில் குறிஞ்சியின் சிறுபொழுதான யாமம் குறிப்பிடப்பட்டுள்ளது. இதனை,

"............................ அரவுத் தலைபனிப்பப்
படுமழை உருமின் உரற்றுகுரல்
நடுநாள் யாமத்துந் தமியங் கேட்டே"

(நற் 129 : 7-9)

என்றடிகள் உணர்த்தும். இப்பாட்டில் தலைவன் வினை காரணமாகப் பிரிவதாக உள்ளது. களவில் வரைபொருள் வேண்டிப் பிரியும் பிரிவு ஒன்றே நிகழும். இப்பாடலிலும் தலைவன் வரை பொருளீட்டிவரும் வினையே குறிப்பிடப்பட்டுள்ளது. தலைவன் வரும் வரை "நம்மனை வாழ்தும் என்ப" என்பது தலைவியின் இல்லத்தைக்குறிப்பதாகும். இப்பாட்டில் தலைவியை நீங்கித் தலைவன் இன்னும் செல்லவில்லை. செல்வதாகக் கூறியுள்ளான். அதற்குத் தோழி,

"ஒருநாள் கழியினும் உயிர் வேறு படூஉம்
பொம்மல் ஓதி நம்மிவண் ஒழியச்
செல்ப என்ப தாமே சென்று
தம்வினைமுற்றி வரூஉம் வரை நம்மனை
வாழ்த்தும் என்ப........................"

(நற்.129;2-6)

என்று பிரிந்திருக்க இயலாது என்கிறாள். இப்பாட்டு களவுக் காலத்தில் தலைவியைத் தலைவன் பிரிவதாகக் கூறும் பாடலாதலால் குறிஞ்சித்திணையாகியது. இப்பாட்டில் யாமம் குறிப்பிட்டுள்ளது. குறிஞ்சிநிலப்புனைவில்லை. வெள்ளிவீதியார் பாடிய தோழி கூற்றுப்பாடலில்

"அம்மவாழி தோழி நம்மூர்ப்
பிரிந்தோர்ப் புணர்ப்போ ரிருந்தனர் கொல்லோ
தண்டுடைக் கையர் வெண்டலைச் சிதவலர்
நன்று நன்றென்னு மாக்களோ
டின்று பெரிதென்னு மாங்கண தவையே"

(குறுந். 146)

என்பதால் தலைவன் வரைவை நமர் ஏற்றுக் கொண்டனர் என்பதை அறியமுடிகிறது. இப்பாடலில் குறிஞ்சிநிலப்புனைவில்லை. இப்பாடல் வரைவுக்கு முந்தைய களவுக் கால நிகழ்ச்சி குறித்ததால் இப்பாட்டு களவுப் புணர்ச்சி குறித்து உரிப்பொருளால் குறிஞ்சியாகியது. களவில் சந்தித்த தலைவனின் வரைவை மூத்தோர் ஏற்றுக்கொண்டதை,

"தண்டுடைக் கையர் வெண்டலைச் சிதவலர்
நன்று நன் றென்னு மாக்களே"

(குறுந்.146;3-4)

என்றடிகள் உணர்த்தும். இவ்வாறு களவில் தோழி பேசுவது அகமரபு. இப்பாடலை, "தமர் வரைவு மறுப்பரோ வெனக் கவன்றாட்குத் தோழி கூறியது" என்று தொல்காப்பியச் சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியார் இப்பாட்டை உதாரணமாக்குவர்[77]. வெள்ளிவீதியார் பாடிய அகநானூறு 362 ஆம் பாடலில் குறிஞ்சி நிலத்தலைவி

ஒருத்தி தலைவன் இரவுக்குறியில் இன்று வந்து கூடாது மீண்டால் உயிர் வாழேன் என்று கூறிய தலைவியின் நிலையைத் தோழி தலைவன் சிறைப்புறமாக நிற்கக் கூறுகிறாள். இப்பாடலில் குறிஞ்சி நிலத்தைப் புனைந்துள்ளார். மலையிலிருந்து விழும் அருவி, அந்நிலத்தில் வாழும் யானை, புலி அவற்றைக் குறிப்பிடுகின்றார். இதனை,

"பாம்புடை விடர பனிநீர் இட்டுத் துறைத்
தேங்கலந் தொழுக யாறுநிறைந் தனவே
வெண்கோட் டியானை பொருத புண்கூர்ந்து
பைங்கண் வல்லியம் கல்லளைச் செறிய
முருக்கரும்பன்ன வள்ளுகிர் வயப்பிணவு
கடிகொள வழங்கார் ஆறே"

(அகம்.362:1-6)

என்றடிகள் உணர்த்தும். குறிஞ்சிநிலத்தை "சிலம்பு நீடு சோலை" (அகநா.362:13) என்கிறார். குறிஞ்சி நிலத்தலைவன் இரவுக் குறியில் தலைவியைச் சந்திக்க வேலினைக் கையில் ஏந்திவருவான். இதனை,

"எல்லிற் றென்னான் வென்வேல் ஏந்தி
நசை வரவந்த நன்ன ராளன்"

(அகம்.362;7-8)

என்பதால் அறியமுடியும். இப்பாடல் இரவுக்குறிச் சுட்டியதை, தலைவன் 'எல்லிற்' என்று இராப்பொழுதில் வருவதும், அவ்வாறு வந்த தலைவன் தலைவியுடன் களவுப்புணர்ச்சி நிகழாது சென்றதால் வருந்தியுள்ளான். இதனை,

"நெஞ்சுபழு தாக வறுவியன் பெயரின்
இன்றிப் பொழுதும் யான் வாழலனே"

(அகம்.362;10-11)

என்றடி சுட்டும். இப்பாட்டு "வாழி தோழி" என தோழி தலைவியைத் தோழி என்று அழைத்துக் கூறியதாகும். இவ்வாறு தோழி பேசுவது தலைவன் தலைவியின் நிலை அறிய வேண்டும் என்பதற்காகவும், அறிந்து அவளை விரைந்து வரைவு மேற்கொள்ள

வேண்டும் என்பதற்காகவும் கூறியது. இப்பாட்டில் குறிஞ்சி நிலப்புனைவும், பொழுதான "இரவு"ம் குறிஞ்சியில் நடக்கும் இரவுக்குறியும் குறிப்பிடப்பட்டுள்ளன. இது களவுப் புணர்ச்சி சுட்டியதால் உரிப்பொருளால் குறிஞ்சித்திணையாகியது.

நல்வெள்ளியார் பாடிய குறிஞ்சித்திணையிலமைந்த பாடல் மூன்றும் களவு காலத்தோழி கூற்றுப்பாடல்கள் இப்பாடலில் குறுந்தொகைப் பாடலான,

"கோடீ ரிலங்குவளை நெகிழ நாளும்
பாடில கலிழ்ந்து பனியா னாவே
துன்னுரு நெடுவரைத் ததும்பிய வருவி
தண்ணென் முரசி னிமிழிசை காட்டும்
மருங்கிற் கொண்ட பலவிற்
பெருங்க னாடநீ நயந்தோள் கண்ணே "

(குறுந். 365)

என்ற பாடல் "யான் வரையுந்துணையும் ஆற்றவல்லளோ?" என்று வினாய கிழவற்குத் தோழி சொல்லியது[78]. இப்பாட்டில் தலைவனை, "பெருங்கல்நாடன்" என்று விளிக்கின்றாள் தலைவி. அவன் வாழும் குறிஞ்சிநிலத்தை,

"துன்னரு நெடுவரைத் ததும்பிய அருவி
தண்ணென் முரசினிமிழிசை காட்டும்" (குறுந்.365;3-4)

என்று மலையையும், அம்மலையிலிருந்து விழுகின்ற அருவியையும் புனைந்துள்ளார். இப்பாடல் களவுக் கால வாழ்க்கையைச் சுட்டுவன. தலைவனை நயந்த தலைவி தலைவனைப் பிரிந்து வாழுதல் இயலாது என்று, அவள் வளை நெகிழ்ந்து, தலைவன் பிரிவினால் அழுவாள் என்பதை,

"கோடீ ரிலங்குவளை நெகிழ நாளும்
பாடில கலிழ்ந்து பனியானாவே "

(குறுந்.365;1-2)

என்றடிகளால் அறியமுடியும். இப்பாட்டு களவு நிகழ்வினைச் சுட்டுவதால் உரிப்பொருளாலும், குறிஞ்சி நிலம் சுட்டி முதற்பொருளாலும் குறிஞ்சியாகியது. களவுக் காலத்தில் தலைவன் நான் வரும்வரை ஆற்றுவாளா? எனக் கேட்பதும், தோழி

ஆற்றாள் எனக் கூறுவதும் அகமரபு. தொல்காப்பியத்தில், "யான் வரையுந்துணையும் ஆற்றுவளோ வென்ற தலைமகற்குத் தோழி ஆற்றாளென்று கூறியது"[79] என்பதற்கு நச்சினார்க்கினியர் இப்பாட்டை காட்டுவர்.

இவர் பாடிய நற்றிணைப் பாட்டில் "தலைவியின் மேனி வேறுபாட்டை அறிந்து தெய்வத்தான் வந்ததென்று வெறியாட்டு நிகழ்த்த, தோழி இந்நோய் கானக நாடனால் உண்டானதை அவனிடம் கூறினால் குற்றம் உண்டாகுமோ என்று தலைமகளிடம் கூறுகின்றாள் (நற். 47). இப்பாட்டில் தலைவனைக் "கானக நாடன்" (6) என்று விளிக்கின்றாள். மலையில் வாழும் களிறு, புலி போன்றவை இப்பாடலில் சுட்டப்படுகின்றன. இதனை, 'பெருங்களிறு உழுவை அட்டென இரும்பிடி' (1) என்றடி உணர்த்தும். இப்பாடல் களவுக்காலத்தில் தலைவனைக் காண இயலாத தலைவியின் உடல் மாறுபடும் போது அம்மாறுபாடு தெய்வத்தான் வந்ததென்று வெறியாட்டு நிகழ்த்துவர். இப்பாடலின் தலைவிக்கும் வெறியாட்டு நிகழ்த்தப்பெறுகின்றது. இதனை,

"வெறியென உணர்ந்த உள்ளமொடு மறியறுத்து
அன்னை அயரும் முருகுநின்
பொன்னேர் பசலைக் குதவா மாறே "

(நற். 47 : 9-11)

என்றடி உணர்த்தும். இதுகளவுக் கால நிகழ்ச்சி. தலைவனின் களவுப் புணர்ச்சியின்மையால் தலைவிக்கு உண்டான நோயைத்தீர்க்க வெறியாடல் நிகழும். இது குறிஞ்சி நிலத்தில் நடக்கும் நிகழ்ச்சி. இப்பாட்டு களவுப் புணர்ச்சி சுட்டியதால் குறிஞ்சித்திணையாகியது.

வெறிபாடிய காமக் கண்ணியார் பாடிய குறிஞ்சித்திணைப் பாடலில் "குளிர் வாய்ந்த மலையினது உயர்ந்த வளம் பொருந்திய பக்க மலையிடத்து, நம் தலைவர், வெறுப்பில்லாத கொள்கையுடன் நமக்கு உவந்தளித்த அவரது இனிய உள்ளம் இன்னாவாயினமையின் வெறுக்குமாறு நிலைபெறுத்திய நல்கல் வருத்தமானது. தெய்வம் உறையும் மலையினையுடையானாய அத்தலைவன் மார்பு உறுவதொன்றானே, நம் தாய் அறியாதவளாகி, வளை நெகிழ தலைக்கண்டு செயலற்ற

உள்ளத்தினளாய் வினவுதலாலே முதுமை வாய்ந்த பொய் கூறல் வல்ல கட்டுவிச்சியராய பெண்டிர் பிரப்பரிசியைப் பரப்பிவைத்து, இது முருகனது செயலான் வந்த அரிய வருத்தம் என்று கூறலின், அதனை வாய்மையாகக் கருதி மனையில் பாவையைப் போன்ற பலராலும் ஆராயப்பெறும் மாண்புற்ற அழகானது என்மகட்கு முன்போற் சிறப்புறுக என்றுத் தெய்வத்தைப் பரவி வெறியாடு களம் அமைத்து, வெறியாட்டு நிகழ்த்தியபின்னும் மேனி முன்பு போன்று அழகுபெறாமல் இருந்தால் இக்களவொழுக்கம் பலரும் தூற்றுமாறு வெளிப்படாலிருப்பதரிது (அகநா.98).

இப்பாட்டு தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது. தோழிக்குத்தலைமகள் சொல்லியது உமாம்[80]. இப்பாட்டு தலைவி கூற்றெனினும் தோழி கூற்றெனினும் ஒக்கும். இப்பாட்டில் குறிஞ்சிநிலத்தை ,'பனிவரை நிவந்த பயம்கெழு கவான்' (1) என்றும் குறிஞ்சித்தலைவனை 'வெற்பன்' என்றதை, 'சூருறை வெற்பன்' (5); என்பது உணர்த்தும். இந்நிலத்திலுள்ள கடம்பமலர் (16) சுட்டப்பட்டுள்ளது. இப்பாட்டு களவுப்புணர்ச்சிக்குப்பின் தலைவன் தலைவியைச் சந்திக்காததால் ஏற்பட்ட உடல் மாறுபாட்டால் உண்டான மேனி வாட்டத்தை அறிந்து தாய் வெறியாடல் செய்கின்றாள். அப்போது மேனி பண்டை நிலைபோன்று அழகு பெறவில்லை. இதனை,

"ஆடிய பின்னும் வாடிய மேனி
பண்டையிற் சிறவாதாயின் இம்மறை
அலரா காமையோ அரிதே"

(அகநா. 98: 23-5)

என்றடி சுட்டும். இப்பாட்டு களவுப்புணர்ச்சி நீங்கி வருந்திய தலைவியின் நிலையைப் பாடிய களவுப் பாடலாதலால் இப்பாட்டு உரிப்பொருளால் குறிஞ்சித்திணையாகியது. இப்பாட்டில் குறிஞ்சி நிலம், குறிஞ்சித்தலைவன், குறிஞ்சிநிலத்தில் நிகழ்த்தப்பெறும் வெறியாடல் நிகழ்ச்சியும் சுட்டப்பட்டுள்ளன.

## கற்புப்பாடல்

குறிஞ்சித்திணைப்பாடல்களில் களவுப்பாடல் மிகுதி. கற்புப் பாடல் குறைவு.

குறிஞ்சி நிலத்தில் கற்பு வாழ்க்கை நிகழ்வு உண்டு. இந்நிலத்தில் பெரும்பான்மையாக களவுப் பாக்கள் இடம்பெற்றுள்ளன. பெண்பாற்புலவர் பாடிய குறிஞ்சித்திணைப்பாடலில் அஞ்சி அத்தை மகள் நாகையார் பாடிய பாட்டு கற்புப்பாடலாகும். இப்பாட்டில் மணம் முடிந்த பின் தோழி தலைவியின் இல்லத்திற்குச் சென்றபோது தலைவியும் தோழியும் பேசிக்கொள்வதுபோன்ற அழகான பாடல். இப்பாட்டில், தலைவி தோழியை ''நல்லைகாணில் காதலந்தோழி'' (11) என்று அழைத்துக்கூறுகின்றாள். தலைவனின் நாட்டைக் கூறும்போது,

''முடவு முதிர் பலவின் குடமருள் பெரும்பழம்
பல் கிளைத் தலைவன் கல்லாக் கடுவன்
பாடிமிழ் அருவிப் பாறை மருங்கின்
ஆடுமயில் முன்னதாகக் கோடியர்
விழவு கொள்மூதூர் விறலி பின்றை
முழவன் போல அகப்படத் தழீஇ
இன்றுணைப் பயிருங் குன்ற நாடன்''

(அகம்.352:1-7)

என்று, அவன் நாட்டில் ஆடுகின்ற மயிலின் முன், பலாப்பழத்தைத் தழுவிக் கொண்டு நிற்கும் ஆண் குரங்கு என்று குறிஞ்சி நிலத்தில் நிகழும் காட்சியைப் பாடுகிறார். அந்நிலத்தலைவனான மலைநாடனின் குணங்களை,

''குடிநன் உடையன் கூடுநாப்பிரியலன்
கெடுநா மொழியலன் அன்பினன் எனநீ
வல்ல கூறி வாய்வதிற் புணர்ந்தோய்''

(அகம்.352;8-10)

என்று களவு வாழ்வில் நீ கூறியது போன்று வதுவை முடிந்த நாளினும் இனியவனாக உள்ளான் என்கிறார். இதனை,

''எண்ணுமுறை நிறுத்த பண்ணினுள்ளும்
புதுவது புனைந்த திறத்தினும்
வதுவை நாளினும் இனியனால் எமக்கே

(அகம்.352;15-17)

என்று தலைவி தோழியிடம் கூறுவதால் பெறப்படும்.

இப்பாட்டில் குறிஞ்சித் தலைவனைக் " குன்றநாடன்" (7) என்றும், அந்நிலக்கருப்பொருளான குரங்கு, மயில், போன்றவற்றையும் பாடலில் சுட்டியுள்ளார். இப்பாட்டில் தலைவனும் தலைவியும் இன்பமுடன் வாழும் செய்திக் கூறப்பட்டுள்ளது. இப்பாட்டு குறிஞ்சி நிலத்ததாகும், அந்நிலத்தில் களவுகொண்டு கற்புவாழ்க்கையை மேற்கொண்டு இன்பமுடன் வாழ்வதை, "வதுவை நாளினும் இனியனால் எமக்கே" (17) என்றடி சுட்டும். இதனால் இப்பாட்டு குறிஞ்சிப்பாட்டாகியது.

குறிஞ்சித்திணையில் ஔவையார் பாடல்களில் தலைவன் இரவுக்குறியை விரும்புவதைக் குறிப்பிட்டுள்ளார். (குறுந். 29) இரவுக்குறியைப் பெண் விரும்பவில்லை என்பதைப் பாடியுள்ளார் (குறுந். 158) தோழி களவு நிகழ்ச்சியை அறத்தொடு நின்று கற்பாக்கமுயல்வதைக் காட்டுகிறார். (குறுந். 23) ஔவையார் குறிஞ்சி நிலத்தைப் புனைந்துள்ளார். " நெடுவரை (குறுந். 158;1)" இமயமும் (158:5) குறிஞ்சி நிலத்தில் வாழும் குரங்கினை "மகவுடைமந்திபோல" என்று குறிப்பிட்டுள்ளார். இவர் பாடலில் உரிப்பொருளுக்கு முதன்மை கொடுத்துள்ளார். நிலப்புனைவை மிகுதியாகப் பாடவில்லை.

வெள்ளிவீதியார் பாடிய குறிஞ்சிப்பாட்டில் தலைவன் களவுப் புணர்ச்சியை விரும்புவதையும், பெண் அதை விரும்பாமையையும் பாடியுள்ளார். இவர் பாடலால் அந்நாளில் மணம் பேச முதியவர் வந்து மணம் பேசியதை அறியமுடிகிறது (குறு. 146). இவர் பாடலில் இரவுக்குறியைப் பாடியுள்ளார். இவர் குறிஞ்சி நிலத்தையும் (அகம்.32) புனைந்துள்ளார்.

வெறிபாடிய காமக்கண்ணியார் பாடிய மூன்று பாடலும் களவுக்காலத்தில் நிகழும் வெறியாட்டைப் பாடியுள்ளார். இப்பாடல்களில் குறிப்பாக வரைவு வேண்டுவதாக உள்ளது.

குன்றியனார் பாடல்கள் வரைவு வேண்டுவதாக அமைந்துள்ளன. குறிஞ்சித் திணையில் ஒரு பாடல் பாடியதாக எழுவர் பாட்டு இடம் பெற்றுள்ளது. அஞ்சி அத்தை மகள் நாகையார் பாடலில் வதுவை முடித்தபின், களவுக் காலத்தில் உதவிய தோழி தலைவன் தலைவியை மணம் முடிந்தபின் அவன் இல்லம் சென்று

பாடியதாகப் பாடியுள்ளார் (அக.352).

கழார்க்கீரனெயிற்றியார் அந்நாளில் இரவுக்குறியையும், அப்போது தாய் துயிலின்றி இருப்பதையும் பாடியுள்ளார். இதுபோன்றே நக்கண்ணையாரும் பாடியுள்ளார். குறமகள் குறியெயினியார் பாடலில் நீராடிய செய்தி வெளிப்படுகிறது.

அள்ளூர் நன்முல்லையார் பாடிய இத்திணைப்பாடல் மூன்றும் குறுந்தொகையில் இடம்பெற்றுள்ளன. இவர் பாடிய தலைவன் கூற்றுப்பாடலில் (32) தலைவன் மடல் ஏறுவதாகக்கூறி மடல் ஏறின் பெண்ணிற்கு உண்டாகும் பழிச் சொல்லையும் குறிப்பிட்டுள்ளார். இவர் பாடலில் ஒரு இடத்தில் "அருவி வேங்கைப்பெருமலை நாடாற்" (96:1) என்று குறிஞ்சித்தலைவனை நிலப்பெயரால் சுட்டியுள்ளார்.

நல்வெள்ளியார் பாடிய இத்திணைப்பாட்டு மூன்றில், குறுந்தொகையில் ஒன்றும் (365) நற்றிணையில் (97) ஒன்றும் அகநானூற்றில் ஒன்றுமாக இடம்பெற்றுள்ளன. மூன்றும் தோழி கூற்றுப்பாட்டுக்கள். தலைவன் சிறைப்புறமாக நிற்பக் கூறியதாக (குறுந். 365, நற் 47) இரண்டு பாடலும், தலைவனின் குறையறிந்து தலைவிக்குக் கூறியதாக உள்ளது. இவர் பாட்டில் தலைவி வரையுந்துணையும் ஆற்றாள் என்றும் (குறு. 365) வெறியாடல் நிகழ்ந்ததையும் (நற். 47); தலைவன் புரவலன் போலவந்துப் பணிமொழி பேசி தினைப்புனங்காக்கச் சென்றபோதுச் சந்தித்தான் என்று தலைவன் இயற்கைப்புணர்ச்சியைச்சுட்டுகின்றார் (அகநா. 32) இவர் பாடலில் வெறியாட்டு, தலைவன் இயற்கைப்புணர்ச்சி, வரைவு வேண்டுதல் ஆகிய செய்திகள் வெளிப்படுகின்றன.

பெண்பாற்புலவர்களின் குறிஞ்சித்திணைப்பாடல்கள் தலைவன் மடல் ஏறுதல் பெண்களுக்குப் பழி உண்டாக்கியது என்பதை அறிவிக்கின்றன. தலைவன் இரவுக்குறியில் தலைவியைச் சந்தித்தான். இந்நிகழ்வை ஆண்கள் விரும்பியது போலப் பெண்கள் விரும்பவில்லை. இதனைப் பெண்கள் இரவுக்குறி மறுத்துரைத்த பாடல்கள் உணர்த்துகின்றன.

குறிஞ்சித்திணைப்பாடல்களில், பெண் கூற்றுப்பாட்டுக்கள் வரைவு வேண்டியே அமைந்துள்ளன. பெண்பாற்புலவர்கள் களவுப்புணர்ச்சியைவிடக் கற்பு வாழ்க்கையை

விரும்பினர் என்பது குறிஞ்சிதிணைப்பாட்டில் அறியமுடிகிறது. பெண் கூற்றுப்பாட்டில் கருவாக வரைவு வேண்டுவதேக் காணப்படுகின்றது. குறிஞ்சித்திணைப்பாட்டில் ஆண் கூற்றுக்கள் இடம்பெற்றுள்ளன. நான்கு பாட்டு இத்திணையில் உள்ளன. பெண்பாற்புலவர்களின் மற்ற திணையில் அமைந்ததலைவன் கூற்றுப்பாட்டில் எண்ணிக்கையை விட இதில் மிகுதி. இந்நிலத்தில் களவு காலத்தில் நிகழும் வெறியாடலைப் பெண்புலவரான வெறிபாடிய காமக்கண்ணியார் பாடியது குறிப்பிடத்தக்கது. பெண்கள் பெண்ணின் நிகழ்வினைப் பாடவிழைந்தமை அறியப்படும். பெண்பாற்புலவரின் குறிஞ்சித்திணைப்பாட்டில் குறுந்தொகையில் நிலப்புனைவு குறைவு அகநானூறு, நற்றிணைப்பாட்டில் நிலப்புனைவு மிகுதி. இதற்கு அடியெண்ணிக்கையே காரணம். பெண்பாற்புலவர்களின் இத்திணைப்பாடல் குறுந்தொகையின் மிகுதியாக இடம்பெற்றுள்ளன. இதனால் பெண்கள் இயற்கையைப் பாட விரும்பியதை விட உரிப்பொருள் சிறக்கவே பாட விரும்பியமை பெறப்படும்.

குறிஞ்சித்திணையில் களவு நிகழ்ச்சி பெறும் இடம் மிகுதி என்ற அகமரபுப்படி பெண்பாற்புலவர் பாடலிலும் களவுப்பாட்டு மிகுந்துள்ளது.

## மருதத்திணைப்பாடல்கள்

பெண்பாற்புலவர்கள் இத்திணையில் இருபது பாடல்கள் பாடியுள்ளனர். ஔவையாரும், அள்ளூர் நன்முல்லையாரும் நான்கு பாடல்கள் பாடியுள்ளனர். குன்றியனார், நெடும்பல்லியத்தையார், வெள்ளிவீதியார் முறையே இரண்டு பாடல்களும், அஞ்சில் அஞ்சியார், ஆதிமந்தியார், ஒக்கூர் மாசாத்தியார், கழார்க்கீரனெயிற்றியார், பூங்கணுத்திரையார், மதுரை ஓலைக்கடையத்தார் நல்வெள்ளையாரும் முறையே ஒருபாடல் பாடியுள்ளனர்[81].

## மருதத்திணை

மருதநிலம் வயலும் வயல் சார்ந்த நிலமும் ஆகும். தொல்காப்பியர், "வேந்தன் மேய தீம்புனல் உலகமும்[82]" என்று மருதநிலக்கடவுளான இந்திரன் விரும்புகின்ற மிகுதியான நீரையுடைய மருதநிலம் என்பர். மருதநிலத்தின் பொழுதாக "வைகறை விடியல் மருதம்" என்று வைகறையும், விடியலையும் குறிப்பிடுவர். இம்மருதத்தின் உரிப்பொருள் " ஊடல் " இம்மருதத்தில் வாழும் விலங்கு, இயற்கை,

தெய்வமும், இசை மற்ற அனைத்தும் அந்நிலத்தின் கருப்பொருளாகும். இவையனைத்தும் பெண்பாற்புலவர்களின் மருதத்திணைப் பாட்டுக்களில் பயிலுகின்றன. பெண்பாற்புலவர்களின் இத்திணைப்பாடலில் தலைவன் கூற்றில் ஒன்றும் தலைவி கூற்றில் பன்னிரண்டும், தோழி கூற்றில் ஐந்தும், பரத்தையர் கூற்றில் இரண்டு பாடலுமாக இடம்பெற்றுள்ளன[83]. பெண்பாற் புலவரின் பாட்டுக்களில் பதினைந்துபாட்டு குறுந்தொகையிலும், நான்கு பாட்டு நற்றிணையிலும், ஒருபாட்டு அகநானூற்றிலும் காணப்படுகின்றன.

## 1. தலைவன் கூற்று

மருதத்திணையில் தலைவன் கூற்று ஒன்றை, மதுரை ஓலைக்கடையத்தார் நல்வெள்ளையார் பாடியுள்ளார். இப்பாட்டு நற்றிணையில் இடம் பெற்றுள்ளது. இப்பாட்டில் "நகுகம் வாராய் பாண" என அழைத்து கிண்கிணியொலிப்பத்தெருவிலே சிறுதேரை ஓட்டி நடைபயிலும் தேமொழிப்புதல்வனை எம்நெஞ்சோடு அணைத்து, தலைவியை முயக்கல் விருப்பொடு சென்றேன். அங்ஙனஞ்சென்றவுடன் பிறைத்திங்களைப் போன்ற அழகு பொருந்திய நெற்றியையும், மணங்கமழும் கூந்தலையுமுடைய அவள்தன் உள்ளத்து வேறாகக்கருதிப் பிணைமான் போல வெகுண்டு எம்மை நீங்கி அயலே சென்று நின்று, யாரையோ வென்று இகந்து நின்றதுவே அதனை நினைக்குந்தோறும் நகைப்புவருகின்றது (நற்.250). இப்பாட்டு புதல்வனொடு புக்க தலைமகன் ஆற்றானாய்ப் பாணற்குரைத்தது[84].

இப்பாடலில் மருத நிலப்புனைவில்லை. அந்நிலஉரிப்பொருளான ஊடல் சுட்டப்பட்டுள்ளது. தலைவி தலைவன் அருகே வர அவள் அவன்மீது ஊடல் கொண்டு ஒதுங்கினாள் என்பதை,

"நாறிருங்கதுப்பின்எம் காதலி வேறுணர்ந்து
வெரூஉமான் பிணையின் ஒரீஇ
யாரையோ வென்று இகந்து நின்றதுவே "

(நற் 250 : 8-10)

என்றடிகள் உணர்த்தும். கற்பு வாழ்க்கையில் தலைவனின் ஒழுக்க மாறுபாட்டால் ஊடல் கொண்டு உறவின்மை போன்றச் சொற்களைத் தலைவி பேசுதல் என்பது

மரபு. இதற்கு தொல்காப்பியர்,

"அவன் குறிப்பு அறிதல் வேண்டியும், கிழவி
அகன் மலி ஊடல் அகற்சிக்கண்ணும்
வேற்றுமைக்கிளவி தோற்றவும் பெறுமே"[85]

என்பர். இக்கருத்து யாரையோ என்று தலைவி கூறியதற்கு ஒப்புமையாக அமைகின்றது.

தலைவன் பரத்தையரை நச்சிப் பின் தலைவியைச் சேர எண்ணும் போது வாயில்களாக வருபவன் பாணன். இப்பாட்டில் தலைவன் தனித்துச்செல்லாமல் தெருவில் தேரினைஓட்டி நடந்துதிரிந்த தன்மகனுடன் சென்றால் ஏற்றுக்கொள்வாள் தலைவி எனச் சென்றும், அவள் ஏற்றுக்கொள்ளாதது கூறப்பட்டுள்ளது. மரபுப்படித் புறத் தொழுக்கம் காரணமாகத் தலைவி ஊடல் கொண்டபோது அவள் கால்களை வருடி நீக்க முயல்வான் தலைவன் என்பதை,

"பயங்கெழு துணையணை புல்லிய புல்லாது
உயங்குவள் கிடந்த கிழத்தியைக் குறுகிப்
மெல்லென் சீறடி புல்லிய இரவினும்"[86]

என்ற தொல்காப்பியர் கூற்றால் அறியமுடியும். இதனால் பரத்தையொழுக்கத்தால் தலைவன் தலைவிக்கு அஞ்சியதும், தலைவன் மீது தலைவி ஊடல் கொண்டதும் அறியப்படும். இப்பாட்டு ஊடல் எனும் உரிப்பொருளால் மருதத்திணையாகியது.

### தலைவி கூற்று

பெண்பாற்புலவர் மருதப்பாக்களில் தலைவி கூற்றுப்பாக்கள் மிகுதி. இப்பாடல்கள் வாயில் மறுப்பு, வாயிலை ஏற்றல், பாங்கனிடம் கூறல், பிரிவுத்துயரத்தால் கூறல் என்னும் பல நிலைகளில் அமைந்துள்ளன.

மருதத்திணையில் ஔவையார் பாடல்களில் இரண்டு இத்தலைவி கூற்றுப்பாட்டு. இப்பாடல்களில் குறுந்தொகையில் இடம்பெற்ற பாடலில்,

"அரிற்பவர்ப் பிரம்பின் வரிப்புற விளைகனி
குண்டு நீரிலஞ்சிக் கெண்டை கதூஉம்

தண்டுரை யூரன் பெண்டினை யாயிற்
பலவா குகநின் னெஞ்சிற் படரே
ஓவா தீயுமாரி வண்கைக்
கடும் பகட்டியானை நெடுந்தேரஞ்சி
கொன்முனை யிரவூர் போலச்
சிலவாகுக நீ துஞ்சு நாளே''

(குறுந் 91)

இப்பாட்டு பரத்தையர் மாட்டுப் பிரிந்து தலைமகன், வாயில் வேண்டிப் புக்கவழித்தன் வரைத்தன்றிஅவன் வரைத்தாகித் தன் நெஞ்சு நெகிழ்ந்துழித் தலைமகள் அதனை நெருங்கிச் சொல்லியது.

இப்பாட்டில் மருத நிலத்திலுள்ள பிரப்பங்கொடி, குளம், கெண்டைமீன், ஊரன் என்பன வருகின்றன. இதனை, "ஒன்றோடொன்று பிணங்குதலையுடைய பிரப்பங்கொடியின் புறத்தே வரிகளையுடைய விளைந்த பழத்தை ஆழமாகிய நீரையுடைய குளத்திலுள்ள கெண்டைமீன் கவ்வுதற்கிடமாகிய தண்ணிய நீர்த்துறைகளையுடைய ஊர்த்தலைவன்'' என்று மருதநிலத்தைப் புனைந்துள்ளார். இப்பாடலில் தலைவி தலைவனின் பரத்தை ஒழுக்கத்தால் துயிலின்றி இருக்கின்றாள். அவன் வந்து ஏற்கும்படி கூறும் போது ஊடல் கொண்டு மறுக்கின்றாள். அவள் நெஞ்சம் அவனிடம் செல்கின்றது. அதனால், தலைவி மீண்டும் அவன் இவ்வாறு செல்வான் என்று நெஞ்சிற்குக் கூறி,

"கொன்முனை இரவூர் போல,
சிலவாகுக நீ துஞ்சு நாளே''

(குறுந்.91;7-8)

என்று வருந்துகின்றாள். இப்பாட்டில் மருதத்தின் உரிப்பொருளாகிய ஊடல் சுட்டப்பட்டுள்ளது. இப்பாட்டில் மருத நிலப்புனைவு ஊடல் என்ற உரிப்பொருள் சுட்டியதால் மருதத்திணையாகியது. தலைவன் பரத்தையர்பால் சென்று வரும்போது தலைவி மறுப்பதும் நெஞ்சிற்குச் சொல்லுவது மரபு. இவ்வாறு தலைவி பேசுவாள் என்பதை,

"பகன்ற உள்ளமொடு புதுவோர் சாயற்கு
அகன்ற கிழவனைப் புலம்பு நனிகாட்டி

இயன்ற நெஞ்சம் தலைப்பெயர்த் தடுக்கி
எதிர்பெய்து மறுத்த ஈரத்து மருங்கினும்[87]"

என்பதால் அறியமுடியும். இதனால் ஔவையார் அகப்பொருள் மரபுப்படியே பாடல் யாத்தமையை அறியமுடிகிறது.

குன்றியனார் பாடிய தலைவி கூற்றுப்பாடலில் தலைவன் பரத்தையரிடம் சென்று, அவனால் தூதுவிடப்பட்ட பாங்கனிடம் தலைவி தலைவன் விளையாடும் துறை அழகுபெற்றது. அவர் மணந்த தோள் மெலிவுற்றது என்று கூறுகிறாள். இப்பாட்டு

"ஐயவி யன்ன சிறுவீ ஞாழல்
செவ்வீ மருதின் செம்மலொடு தாஅய்த
துறையணிந் தன்ற வரூரே யிறையிறந்
திலங்குவளை நெகிழச் சாஅய்ப்
புலம்பணிந் தன்றவர் மணந்த தோளே"

(குறுந். 50)

என்பது "கிழவற்குப் பாங்காயின வாயில்கட்குக் கிழத்தி சொல்லியது". இப்பாட்டில் ஞாழல் மரத்தின் பூ, மருத மரத்தின் பூ, நீர்த்துறை, தலைவன் 'ஊரன்' என்றும் குறிப்பிடுகிறார். இதனை,

"ஐயவியன்ன சிறுவீ ஞாழல்
செவ்வீ மருதின் செம்மலொடு தாஅய்ந்
துறையணித் தன்றவரூரே "

(குறுந்.50;1-3)

என்றடிகளால் அறியமுடிகிறது. தலைவன் மீது ஊடல் கொண்டதலைவி வாயிலாக வந்தவரிடம் பேசுவாள். இதனை,

"வாயிலின் வரூஉம் வகையொடு தொகைஇக்
கிழவோள் செப்பல் கிழவதென்ப"[88]

என்ற தொல்காப்பியச் சூத்திரத்தால் அறியமுடியும். இப்பாடலில் தலைவி பாங்கனிடம் தலைவனின் பரத்தமை ஒழுக்கத்தால் கைவளை கழன்றதாகக் கூறுகிறாள். இதனால்

தலைவன் மீது தலைவி கொண்ட ஊடல் புலப்படும். அவன் மணந்த தோள் மெலிந்தது. அவர் ஊரிலுள்ள துறையை அணிந்தன்று என்றது "அவன் பரத்தையரோடு அத்துறைக்கண் விளையாடினான் என்று அறிந்தமையை சுட்டுகிறாள்"[89] இது அவன் பரத்தையருடன் கொண்டுள்ள உறவைப்புலப்படுத்தும்.

இப்பாட்டில் மருதநிலப்புனைவு சுட்டப்பட்டுள்ளது. அந்நிலத்தலைவி, தலைவன் கொண்ட பரத்தமை ஒழுக்கத்தை கூறி வாயிலாக வந்தவனிடம் தனது உடலின் மெலிவு கூறி, தலைவன் மீது கொண்ட ஊடலைப்புலப்படுத்துகிறாள். இப்பாட்டு மருதத்தின் உரிப்பொருளான ஊடலைக் குறித்ததால் அத்திணையாகியது.

சங்க அக வாழ்வான களவிலும் கற்பிலும் தலைவியின் பெருந்துணைத்தோழி, அவள் தலைவனின் பரத்தைமை ஒழுக்கத்தால் அவனை ஏற்க மறுக்கும் போது, தலைவியிடம் தலைவனை ஏற்கும்படி வாயிலாக வருவாள். இது அகமரபு. அவ்வாறு தோழி வரும் போது தலைவி மறுத்தும்பேசுவாள். இதற்குத் தொல்காப்பியர்,

"கொடுமை ஒழுக்கத்துத் தோழிக்கு உரியவை
வடுவறு சிறப்பின் கற்பின் திரியாமைக்
காய்தலும் உவத்தலும் பிரித்தலும் பெட்டலும்
ஆவயின் வரூஉம் பல்வேறு நிலையினும்
வாயிலின் வரூஉம் வகையொடு தொகைஇக்
கிழவோள் செப்பல் கிழவதென்ப"[90]

என்பதால் அறியமுடியும். அள்ளூர் நன்முல்லையார் பாடிய பாடலில், " பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகனுக்குத் தூதாக வந்து," நீ சினவற்க அவர் அன்புடையார்? என்ற தோழிக்குத் தலைவி "அவர் நம்மால் உபசரித்து வழி படற்குரியவரே யன்றி அளவளாவி மகிழத்தற்குரியரல்லர்" என்று தலைவி கூறுகிறாள். இப்பாட்டில்,

"நன்னலந் தொலைய நலமிகச் சாஅய்
இன்னுயிர் கழியினுமுரைய லவர் நமக்
கன்னையு மத்தனு மல்லரோ தோழி
புலவிய ஃ தெவனோ வன்பிலங்கடையே"

(குறுந் 93)

என்கின்றாள். இப்பாட்டில் மருதநிலப்புனைவில்லை. மருதத்தின் ஊடலாகிய உரிப்பொருளைத் தலைவி சூசகமாகத் தோழியிடம்,

"அன்னையு மத்தனுமல்லரோ தோழி
புலவிய ஃ தெவனோ வன்பிலங்கடையே"

(குறுந்.93;3-4)

என்று தலைவன் எமக்கு அன்னையும், தந்தையும் போன்றவர். தலைவன் அன்பில்லாவிடத்து ஊடல் உண்டாவது எதன்பொருட்டு என்கிறாள். இதனால் தலைவன் பரத்தையர் ஒழுக்கால் தலைவியை எண்ணாமல் இருப்பதையும், தலைவி ஊடல்கொள்வதால் பயன் இல்லை என்று கூறுகின்றாள். இப்பாட்டில் தலைவி ஊடல், குறிப்பால் சுட்டப்படுகிறது. இப்பாட்டு உரிப்பொருளால் திணையாகியது.

இவர் பாடிய மற்றொரு பாடலிலும், தலைவனின் பரத்தையர் ஒழுக்கத்தைக் கூறி அவன் தலைவியை வருத்தப்படுத்துவதைப் பாடுகின்றார். இதனை,

"நோமென் னெஞ்சே நோமென் னெஞ்சே
புன்புலத்தமன்ற சிறியிலை நெருஞ்சிக்
கட்கின் புதுமலர் முட்பயந்தாஅங்
கினிய செய்தநங் காதலர்
இன்னா செய்த னோமென் னெஞ்சே"

(குறுந். 202)

என்பது வாயிலாகப் புக்கதோழிக்கு வாயில் மறுத்தது. இப்பாட்டில் முல்லை நிலத்தையும் அந்நிலத்திலுள்ள நெருஞ்சியையும் குறிப்பிடுகின்றார். இதனை,

"புன்புலத்தமன்ற சிறியிலை நெருஞ்சிக் " (2)

என்றடி உணர்த்தும். இவை உவமையில் பயின்றவை; எனவே திணையை உறுதிப்படுத்தப் பயன்பட்டது. இப்பாட்டு தலைவன் முன்பு நமக்கு இனியவற்றைத் செய்து, இப்பொழுது இன்னாதனவற்றைச் செய்தெழுகிறான் என்கிறாள். இன்னாத செயல் பரத்தையருடன் தலைவன் கொண்ட உறவு. இதனால் நெஞ்சம் வருந்துகின்றது என்று தோழியிடம் கூறுகின்றாள். இதனை,

"நோமென் னெஞ்சே நோமென் னெஞ்சே

....................................................

இனிய செய்த நங்காதலர்

இன்னா செய்த னோமென் நெஞ்சே"

(குறுந்.202;1-4)

என்பதால் அறியமுடியும். இப்பாட்டின் உரிப்பொருள் தலைவனின் பரத்தைமைச் செயலால் தலைவி ஊடல் கொண்டு, வாயிலாகத் தோழியிடம் வாயிற் மறுக்கின்றாள். இப்பாட்டு ஊடல் கொண்ட தலைவி நிலையை எடுத்தோதுவதால் உரிப்பொருளால் மருதத்திணையாகியது.

இது போன்று தோழி வாயிலாக வந்தவிடத்து வாயில் மறுப்பதாக பெண்பாற்புலவரான நெடும்பல்லியத்தையார் பாடியுள்ளார். இப்பாடலில் "தலைவர் மலைகள் இடையிடுவதனாற் சேயதாகிய நாட்டினருமல்லர், தன்னிடத்துள்ள மரங்கள் நமக்குத் தோன்றாத சேய்மையிலுள்ள ஊரினரும் அல்லார், கண்ணாலே காணும்படி விரைவில் வருவதற்குரிய அணிமையிடத்திலிருந்தும், முனிவரை அணுகி வாழும் பகுதியினரைப்போல மனத்தால் நீங்கி ஒழுகுகின்ற என் தலைவர் பொருட்டு யான் முன்பு ஒரு சமயத்தில் பரிதலையுடையேனாயினேன் அஃது இப்பொழுது கழிந்ததே!" என்று கூறுகின்றாள் தலைவி (குறுந்.203).

இப்பாட்டில் மருத நிலப்புனைவில்லை. தலைவன் தலைவி காணும்படி அணிமையில் இருந்தும் தலைவன் தலைவியிடம் வந்து சேரவில்லை. "கடவுள் நண்ணிய பாலோர் போல"[4] தலைவியை மனத்தால் நீங்கி உள்ளான். முன்பு அவன்மீது பரிதலையுடையாளாக இருந்தேன். இப்போது அவன்மீது பரிவில்லை என்று வாயிலாக வந்த தோழியிடம் வாயில்மறுத்துக் கூறுகிறாள்.

இப்பாட்டு ஊடல் உரிப்பொருளால் மருதத்திணையாகியது. அள்ளூர் நன்முல்லையார் பாடிய,

"குக்கூ வென்றது கோழி யதனெதிர்

துட்கென் றன்றென் றூயநெஞ்சம்

தோ டோய் காதலர்ப் பிரிக்கும்

வாள்போல் வைகறை வந்தன்றா லெனவே''

(குறுந் 157)

என்றபாட்டு பூப்பெய்திய தலைமகள் உரைத்தது[91] இப்பாட்டில் மருதத்தின் பொழுதான'வைகறை' குறிப்பிடப்பட்டுள்ளது. இப்பாட்டில் தலைவி பூப்புக் காலமாகிய மூன்று நாளும் தலைவனுடன் கூட இயலாததாய் இவ்வாறு கூறுகிறாள். ''அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல்'' என்பது விதியாதலின் தலைவி தான் பூப்பெய்தியதை வெளிப்படையாகக் கூறாதொழிந்தாள்[92]. இப்பாட்டில் இதற்கான குறிப்பில்லை. கோழி கூவுகிறது. தலைவனுடன் இருக்கும் தலைவி விடிந்தால் என் தோளை மணந்த தலைவரைப் பிரியச் செய்யும் என்பதால் விடியற் பொழுதைப் பார்த்து பிரிப்பதாகக் கூறுகின்றாள்.

இப்பாட்டு தலைவனுடன் தலைவி இன்பமுடன் இருக்கும் போது துன்பமான எண்ணம் குறுக்கிடுகிறது. இதனால் இப்பாட்டைப் புணர்தல் என்று குறிஞ்சியாகவும், பிரிதல் என்று பாலையாகவும் கருத இயலாதற்கு இப்பாட்டில் ''வைகறை'' என்ற பொழுது மருதத்தைச் சுட்டுகிறது. இந்நிகழ்ச்சி மருத நிலத்தில் வாழும் தலைவியின் நிலை என்பதால் இப்பாடலை மருதத் திணையாகக் கொள்ள இடமுண்டு.

தலைவிக்கு இன்பமும் துன்பமும் ஒருங்கு நிகழும் வழி கூற்று நிகழும் என்பதற்கு இளம்பூரணர் இப்பாட்டை மேற்கோளாக்குவர்[93]. நச்சினார்க்கினியர் நாட்பிரிவாகிய பூப்பிடைப்பிரிவு வந்துழித்தலைவி கூறியது[94] என்பதற்கும், பூப்புப்பட்ட ஞான்றும் மற்றைநாளும் கருத்தங்கின் அதுவயிற்றில் அழிதலும், மூன்றாம் நாள் தங்கின்அது இல்வாழ்க்கைத்தாதலும் பற்றி முந்நாளும் கூட்டமின்றென்றார். ..............................குக்கூ என்பதைக் காட்டுவாருமுளர்[95] என்று இப்பாட்டைக்காட்டுவர்.

ஔவையார் பாடிய நற்றிணைப்பாடலில் '|தோழீ'| வாளைமீன்கள் வாள்போலப்பிறழா நிற்ப அவற்றை இரையாக உண்ணக்கருதாது, நாள்தோறும் பொய்கையிலுள்ள நீர் நாய் தங்கிய துயிலை ஏற்றுப்பொருந்தா நிற்கும் கைவண்மையுடைய கிள்ளி வளவனதுக் கோயில் வெண்ணியைச் சூழ்ந்த

வயலிலுள்ள வெளிய ஆம்பலின் அழகிய நெறிப்பையுடைய தழையை மெல்லிதாயகன்ற அல்குலின் மேலே அழகுபெற உடுத்து யானும், இங்கு நடக்கின்ற விழாக்களத்தின் கண்ணே செல்ல வேண்டும். முன்னமே கருதாமையின் அதுவீணே கழிந்தது. இப்பொழுது இவ்விளமகள் தோற்றப்பொலிவோடு செல்லுதலைப் புதுவரு வாயினையுடைய ஊரன் காண்பனாயின், ஏனையோரை ஏறிட்டுப்பாராது இவளையே கொண்டு செல்லாநிற்கும், அங்ஙனம் கொள்ளாது விடுதலரிதேயாம், கொண்டு சென்றொழிந்தாலோ, வரைபோல்கின்ற யானையும் வாய்மையுமுடைய முடியனது மலையிலுள்ள மூங்கில் போன்ற இவனுக்குரிய இல்லுறை மாதர்களின் நல்ல தோள்கள் பல தம் நலனிழப்பனவாகும், கருதின் அவை இரங்கத்தக்கன.

இப்பாட்டில் மருத நிலத்தையும், அங்கு நீரில் வாழும் நீர்நாய், வயலில் உள்ள ஆம்பல் இவற்றைக் குறிப்பிடுகின்றார். இதனை,

> “வாளை வாளின் பிறழ நாளும்
> பொய்கை நீர் நாய் வைகுதுயில் ஏற்கும்
> ............................................
> வயல்வெள்ஆம்பல் உருவ நெறித்தழை
> ....................................................
> ....................................................
> யாணர் ஊரன் காணுநன் ஆயின்”
>
> (நற் 390;1-7)

என்றடிகள் சுட்டும். இப்பாட்டில் தலைவன் ‘ஊரன்’ என்று குறிக்கப்படுகிறாள். இப்பாட்டு ‘அளிய தோழி’ என்பதால் தலைவி தோழியை அழைத்துக் கூறியது பெறப்படும். இப்பாட்டில் தலைவன் பரத்தையருடன் கொண்டுள்ள உறவும், அதற்குக்காமக்கிழத்தி தலைவனைத் தன்வயப்படுத்தச் செய்யும் முயற்சியையும் கூறி இத்தகைய தலைவனை ஏற்பது எங்ஙனம் என்ற பொருளில் வாயிலாக வந்த தோழியிடம் வாயில்மறுத்துக் கூறுகின்றாள். இப்பாட்டு பரத்தைமை ஒழுக்கத்தையுடைய தலைவனின் செயலைக்கண்டு ஊடல் கொண்டுத் தலைவனை ஏற்க மறுப்பதால் உரிப்பொருளால் மருதத்திணையாயிற்று.

பெண்பாற்புலவர்களின் மருதத்திணைக் கற்புப் பாட்டுக்கள் தலைவனின்

பரத்தையர் உறவும், அதனால் தலைவி வருந்துவதும், தலைவனை ஏற்றுக்கொள்ளுமாறு கூறிய தோழியிடம் வாயிற் மறுப்பதுமாகப் பாடப்பட்டுள்ளன. மருதப்பாடல்களில் மருதப் புனைவு குறுந்தொகையைக் காட்டிலும், நற்றிணையில் விரிவாக இடம்பெற்றுள்ளன. இதற்கு அடி எண்ணிக்கையே காரணமாக அமைகின்றது. இயற்கைப்புனைவு உரிப்பொருளின் பொருள் சிறக்க பயன்படுத்தப்பட்டுள்ளது.

## தோழி கூற்று

மருத்திணையில் அமைந்த தோழி கூற்றுப்பாட்டு தலைவனிடம் தோழி கூறுவதாய் அமைந்துள்ளது. ஒக்கூர் மாசாத்தியார் பாடிய பாடலில்

> "மனையுறை கோழிக் குறுங்காற் பேடை
> வேலி வெருகின மாலை யுற்றெனப்
> புகுமிடனறியாது தொகுபுடன் குழீஇய
> பைதற் பிள்ளைக் கிளைபயிர்ந் தாஅங்
> இன்னா திசைக்கு மம்பலொடு
> வாரல் வாழிய ரைய வெந்தெருவே"
>
> (குறுந். 139)

இப்பாட்டு "வாயில் வேண்டிப்புக்க தலைமகற்குத் தோழி வாயில் மறுத்தது"[96]

இப்பாட்டில் கூறப்பட்ட கோழி மருதநிலத்தில் இல்லங்களில் வளர்க்கப்படும் பறவை. இதனை தலைவனின் செயலுக்கு உவமையாகக் கூறும்போது கூறுகின்றார். இப்பாட்டில் தலைவன் பரத்தையருடன் கொண்ட உறவு அம்பலாகியதை, "இன்னாதிசைக்கு மம்பலொடு" என்று குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு களவு, கற்பு இரண்டு காலங்களும் நிகழும் என்பதை, "களவும் கற்பும் அலர் வரைவு இன்றே"[97] என்ற தொல்காப்பியச் சூத்திரத்தால் அறியமுடியும். இப்பாட்டு பரத்தையருடன் உறவு கொண்ட தலைவன் "எம்தெரு வாரல்" என்று இங்கு வராதே என்கிறாள் தோழி. இதனால் வாயில் மறுப்பாயிற்று. தலைவி தலைவன் மீது ஊடல் கொண்டுள்ளதை அறிந்த தோழி கூற்றென்பதால் இப்பாட்டு உரிப்பொருளால் மருதமாயிற்று. இவ்வாறு தலைவன் பரத்தையரிடம் சென்று வரும்போது தோழி வாயில் மறுப்பது அகமரபு. தொல்காப்பியர் இதனைக் குறிப்பிடுவர்." நீத்த கிழவனை

நிகழுமாறு படீஇக் காத்த தன்மையிற் கண்ணின்று பெயர்க்குங்கால் தோழிக்குக் கூற்று நிகழ்ந்தது என்பதற்கு இப்பாட்டை மேற்கோளாக்குவர் இளம்பூரணர்[98] நச்சினார்க்கினியர் இதனுள் அம்பலொடு வாரலெனவே, பன்னாள் நீத்தமையுங் கண்ணின்று பெயர்த்தமையுங் கூறிற்று. தோழிபோலத் தாயர் மகளிரைத் தழீஇக் கொண்டா ரென்றலிற் புறம் போயும் பயமின்றெனக் காத்த தன்மை கூறிற்று என்பதற்கு இப்பாட்டைக் காட்டுவர்[99]. தோழி கூற்றில் குன்றியனார் பாடிய பாட்டில்,

"பாச வலிடித்த கருங்கா ழுலக்கை
ஆய்கதிர் நெல்லின் வரம்பணைத் துயிற்றி
ஒண்டொடி மகளிர் வண்டலயரும்
தொண்டி யன்னவென் னலந்தந்து
கொண்டனை சென்மோ மகிழ்நநின் சூளே"

(குறுந். 238)

இப்பாட்டு தலைமகன் பரத்தையின் மறுத்தந்து வாயில் வேண்டித் தோழியிடைச் சென்றுத் தெளிப்பான் புக்காற்குத்தோழி சொல்லியது.

இப்பாட்டில் மருத நிலத்தில் நெல்விதைக்கும் போது முளைவிட்ட நெல்லால் அவல் இடித்தலையும், தொண்டியன்ன அவள் நலத்தையும் கூறி, தற்போது அந்நலம் தலைவனின் பரத்தையர் உறவால் நலனழிந்துள்ளாள். அதனால் அந்நலத்தைத் தந்து உன்னைப்பிரியேன் என்று கூறிய உனதுசூளினைப் பெற்றுச்செல் என்று தோழி கூறுகிறாள். இப்பாட்டு தலைவனின் பரத்தையர் உறவால் தலைவி ஊடல்கொண்டு வருந்தி உடல் மெலிந்திருப்பதுக் குறிப்பால் சுட்டப்பட்டுகின்றது. பரத்தையர் உறவு கூறித்தோழி வாயில் மறுப்புச் சுட்டப்பட்டதால் உரிப்பொருளால் மருத்திணையாகியது.

அஞ்சிலஞ்சியார் பாடிய மருதத்திணைப்பாடலில்,

"ஆடியல் விழவின் அழுங்கல் மூதூர்
உடைதோர்பான்மையின் பெருங்கை தூவா
வறனில் புலத்தி எல்லித் தோய்ந்த
புகாப்புகர் கொண்ட புன்பூங்கலிங்கமொடு
வாடா மாலை துயல்வர ஓடிப்
பெருங்களிறு நாலும் இரும்பனம் பிணையல்

பூங்கண் ஆயம் ஊக்க வூங்காள்
அழுதனள் பெயரும் அஞ்சில் ஓதி
நல்கூர் பெண்டின் சில்வளைக் குறுமகள்
ஊசல் உறுதொழிற் பூசல் கூட்டா
நயனின் மாக்களொடு குழீஇப்
பயனின்று அம்ம வேந்துடை அவையே"

(நற். 90)

என்ற இப்பாட்டு தோழி தலைமகளுக்குரைப்பாளாய்ப் பாணனை நெருங்கி வாயின் மறுத்தது[100]. இப்பாட்டில் மருத நிலப்புனைவில்லை. பரத்தையரின் வாழ்க்கை சுட்டப்பட்டுள்ளது. இப்பாடலில் "பரத்தையிற் பிரிந்த தலைமகனால் விடுக்கப்பட்டு வாயில் வேண்டிவந்த பாணன் கேட்பத் தோழி தலைமகளை நோக்கி நின்காதலனை முயங்கும் பரத்தையருள் பெண்டன்மையறியாப் பெதும்பை பருவத்தாளொருத்தி ஊசலாடாது அழுது நிற்பதை ஆற்றுவித்து, மீட்டும் ஆடச்செய்யாத அவனது அவை பயனுடையதன்று, அவள் ஊடல் கொண்டமையால் இங்கு வந்தான் போலும்" மென வெகுண்டு கூறியது[101]. இப்பாட்டில் மருதநிலத்தில் நடைபெறும் பரத்தையர்செயலும் அங்கு சென்றுவந்த தலைவனை ஏற்க மறுப்பதாகத் தோழி கூறுகிறாள். இதனால் உரிப்பொருளால் மருதமாயிற்று.

அள்ளூர் நன்முல்லையார் பாடிய மருதப்பாடல் அகநானூற்றில் (46) இடம்பெற்றுள்ளது. பெண்பாற்புலவரின் மருதத்திணைப் பாடலில் அகநானூற்றில் இடம்பெறும் பாட்டு இது ஒன்றேயாகும். இப்பாடலில் "சேற்றில் நிற்பதை வெறுத்த சிவந்த கண்ணினையுடைய எருமை, ஊரார் துயின்ற இருளில் தனது வலிய தளையை அறுத்துக் கொண்டு கூரிய முள்வேலியைத் தனது கொம்பினால் அகற்றிவிட்டு, நீர்மிக்க வயலில், மீன்கள் எல்லாம் ஓட அழகிய உட்டுளையையுடைய வள்ளைக் கொடியை மயங்கச்செய்து வண்டுகள் உள்ளிருந்து ஊதும் தாமரையின் குளிர்ந்த மலரை நிறையத் தின்னும் ஊரனே" நின்னை யாம் புலத்ததற்கு நீ என்ன உறவினை, இவ்வூரார் பலரும், நீ கரிய கூந்தலையுடைய ஒருத்தியை எம்மனையிற் கொணர்ந்து. காட்டி நீ அவளை வதுவை புரிந்தனை என்று கூறுவர். எந்தையே, அதனை நீ செய்தாயென யாங்கள் சொல்லேம், நீ வாழ்வாயாக பகைவர்களது யானைகளைக்

கொண்ட அரிய போரினைச் சிதைந்திடக் கொல்லும் ஒளிவீசும் வாட்படையினையுடைய வெற்றி பொருந்திய செழியனது நெற்பொலி மிக்க அள்ளூரையொத்த, எனதுஒளிய வளையல் நெகிழ்ந்து வீழினும் வீழ்க, நீ முன்னிய இடத்திற்குச் செல்வாயாக, நின்னைதடுப்பவர் யாரோதான்? என்கிறாள் தோழி. இப்பாட்டு வாயில் வேண்டிச் சென்ற தலைமகற்குத்தோழி வாயில் மறுத்தது[102] இப்பாடலில் மருதநிலத்தைப் புனைந்துள்ளார். இதனை,

"சேற்றுநிலைமுனைஇய செங்கட்காரான்

..................................................

வண்டுது பனிமலர் ஆரும் ஊர"

(அகம்.46;1-6)

என்ற பாடலடி உணர்த்தும். இப்பாடலில் தலைவனை "ஊரன்" என்று குறிப்பிடுவது மருதநிலத் தலைவனைக் குறிக்கும்.

இப்பாடலில் தலைவனின் பரத்தையர் உறவும், அவன்வேறொரு பெண்ணை மணந்ததாக ஊரார் கூறுகின்றனர் என்றும், தலைவி அள்ளூரன்ன நலமுடையவள். தற்போது வளைகழன்று உள்ளாள். உன்னைத் தடுப்பவர் யாருமில்லை. நீ விரும்பிய இடத்திற்கேச் செல் என்று தலைவனை வாயில் மறுக்கின்றாள். மருதத்தின் உரிப்பொருளான ஊடல் நிகழ்வது தலைவனின் பரத்தையரிடம் செல்லும் செயலால் நிகழ்வது. இப்பாட்டு அச்செயலைச் சுட்டுவதால் மருதத்திணையாகியது.

## பரத்தையர் கூற்று

பெண்பாற்புலவர் பாட்டுக்களில் பரத்தையர் கூற்றுப்பாட்டு இரண்டு. இதனைப்பாடியவர் ஔவையார். மற்றபெண்பாற்புலவர் இக்கூற்றில் பாடவில்லை. சங்க இலக்கியத்தில் பரத்தமை பற்றியன 279. பாடியோர் தொகை 50. ஓரம்போகியார், மருதன் இளநாகனார், பரணர், ஆலங்குடி வங்கனார், ஔவையார், நக்கீரர், மருதன் இளங்கடுங்கோ, மாங்குடி மருதனார் என்போர். பரத்தைத்துறை பாடிய வல்லவர்கள்[103]. ஔவையார் மட்டும் இத்துறையில் பாடியிருப்பதுக் கருதத்தக்கது. இவர் பாடிய இவ்விருபாட்டும் குறுந்தொகையில் (80, 364) இடம் பெறுவன.

இவர் பாடிய "எம்கூந்தற்கண் ஆம்பலினது புறவித ழொடித்த முழுப்பூவைச்

செருகி, வெள்ளம் வரப்பெற்ற பெரிய நீர்த்துறையை விரும்பி, அப்புனல் விளையாட்டைச் செய்வேமாகிச் செல்வேம், தலைவி அங்ஙனம் யாம் தலைவனுடன் விளையாடுதலுக்கு அஞ்சுவாளானால், போரில் பகைவரை நடுநிலையுண்டாகும்படி வஞ்சியாது எதிர் நின்று கொல்லும் பலவேற்படையையுடைய எழினியென்னும் உபகாரி போர் முனையிடத்தேயுள்ள பசுக்களின் பெரிய கூட்டத்தைப்போல தன் கணவனது மார்பைப் பாங்காயினாரோடும் காப்பாளாக என்பது தலைமகட்குப் பாங்காயினார் கேட்பப்பரத்தை சொல்லியது (குறுந்.80). இப்பாடலில் மருதநிலத்தின் நீர்த்துறையையும், அதில் மலரும் ஆம்பல் பூவும், குறிப்பிடப்பட்டுள்ளன. இதனை,

"கூந்த லாம்பன் முழுநெறி லடைச்சிப்
பெரும் புனல் வந்த இருந்துறை விரும்பி"

(குறுந்.80;1-2)

என்றடிகள் உணர்த்தும். மருதநிலமான "பெரும்புனல் உலகம்" இப்பாட்டில் "பெரும்புனல்" விளங்கும் வயல் சார்ந்த நிலத்தைக் குறிப்பிடுவதுச் சிறப்புடையதாகும். இப்பாட்டில் மருதநிலத்தில் வாழும் பரத்தையரைப் பாடினமையாலும், தலைவியின் ஊடலுக்குக் காரணமாக அமையும் பரத்தையரின் செயலைச்சுட்டுவதாலும் இப்பாட்டு மருதமாகியது. சங்க காலத்தலைவன் பரத்தையரோடு நீர் விளையாடுவதை,

"யாறுங் குளனும் காவுமாடிப்
பதியிகந்து நுகர்தலு முரிய வென்ப"[104]

என்பதாலும் அதன் உரையாலும் பெறப்படும். "புனல் விளையாட்டின் கண் காமக்கிழத்தியர் கூற்று நிகழ்ந்ததும்"[105]. "தொல்காப்பியர் காமக்கிழத்தியருக்கென்று கூற்றுக்களை வகுத்துள்ளதும். தலைவனின் கூற்றில் காமக்கிழத்தியும் மனையோள் ஒத்தலின்"[106] என்று சுட்டுவதாலும், காமக்கிழத்தி தலைவி போன்று தலைவனிடம் உரிமைபெற்றிருந்தமைத் தொல்காப்பியத்தால் அறியமுடிகிறது.

இப்பாட்டில் தலைவன் எம்மொடு நீர் விளையாடுவான் நீ வேண்டுமானால் பாங்காயினாரோடும் பாதுகாப்பாயாக என்று கூறுவதுக் காமக்கிழத்தி கூறியதாகக்கொள்ள இடமுண்டு. புனல் விளையாட்டு காமக்கிழத்தியருடன்

விளையாடுவான் தலைவன் என்பதால் இப்பாட்டு காமக்கிழத்தி கூற்றாகக் கொள்ள இடமுண்டு. இப்பாட்டு காமக்கிழத்தியர் தலைவனைத் தனதாக்கிக் கொண்டு அவன் அன்பைப் பெற்றதால் துணிவுடன் பேசுகிறாள் என்பதைக் காட்டுகிறது.

ஔவையார் பாடிய பரத்தையர் கூற்றுப்பாடலில் "பிணக்கையுடைய கொடிப் பிரம்புகளைப் போன்ற கோடுகள் பொருந்திய புறத்தையுடைய நீர்நாயானது வாளை மீனாகிய நாட்காலை உணவைப் பெறுகின்ற ஊருக்குத்தலைவனுடைய பொன்னாலாகிய திரட்சியையுடைய விளங்குகின்ற வளையையணிந்த, தனக்குப்பொருந்திய தகுதியையுடைய பரத்தை என்னைப் புறங்கூறுவளென்று கூறுவர், அவள் கூறுவது உண்மையா அன்றா என்பது விளங்கும்படி, மூங்கிலைப்போன்ற தோள்களில் விளக்கத்தையுடைய வளையையணிந்த மகளிர்க்குரிய துணங்கைக் கூத்தாடும் நாட்களும் வந்தன, அக்காலத்தில் ஒருவர் கண் மற்றொருவர் கண்ணோடு மாறுபடும்படி அத்துணங்கைக் கூத்தினிடத்து அம்மகளிரது மணத்தைக் கொள்ளும் பொருட்டு மள்ளர்களுடைய சேரிப் போரானது விரும்பிக் கொள்ளப்படும். (குறுந்.364)

இப்பாட்டு வேறொரு பரத்தை தன்னைப் புறங்கூறினாளெனக் கேட்ட இப்பரத்தை அவட்குப்பாங்காயினார் கேட்பக்கூறியது[107]. இப்பாடலில் மருத நிலத்து நீர்த்துறையில் வாழும் நீர்நாய், வாளை மீன், ஆகியன இடம் பெற்றுள்ளன. இதனை,

"அரிற்பவர்ப் பிரம்பின் வரிப்புற நீர்நாய்
வாளை நாளிரை பெறூஉமூரன்"

(குறுந்.364;1-2)

என்றடிகள் உணர்த்தும். இப்பாடலில் பரத்தைப் பெண்களுக்குள் நடக்கும் போராட்டத்தைப் பாடியுள்ளார். தலைவன் தலைவியை நீங்கிப் பல பரத்தையருடன் தொடர்பு கொண்டுள்ளான். மருத நிலத்தில் நடைபெற்ற நிகழ்ச்சி என்பதால் மருதப்பாடலாகியது.

பெண்பாற்புலவர்களின் மருதப்பாடல்களில் ஔவையாரும் அள்ளூர் நன்முல்லையாரும் நான்கு பாடல்கள் பாடியவர்கள். இத்திணையில் பதினொரு பெண்பாற்புலவர் பாடியுள்ளனர். இவர்கள் பாடிய பாடல்களில் குறுந்தொகையில்

பதினைந்தும், நற்றிணையில் நான்கும், அகநானூற்றில் ஒரு பாடலும் இடம்பெற்றுள்ளன. இவ்வெண்ணிக்கை அமைப்புப் பெண்பாற்புலவர் மருதத்திணைப்பாக்களை குறைந்த அடிஎண்ணிக்கையில் உரிப்பொருள் சிறக்கப்பாடினர் என்பது புலனாகும்.

மருத்திணையில் கற்புப் பாடல்கள் மிகுதி. இப்பாடல்களில் பரத்தையரிடம் சென்று வந்த தலைவனை வாயில் மறுப்பதும், தூதாக வந்த தோழி, பாணனிடம் வாயில்மறுப்பதுமாகப் பாடலுள்ளது. சங்க காலத்தில் பரத்தைமை ஏற்றுக்கொள்ளப்படவில்லை. ஆனால் இருந்துள்ளது. அகமரபில் பரத்தையும் கூற்று நிகழ்த்துவோர் கூறப்படுவது இந்நிலை இருந்தமையை உறுதிபடுத்தும். வ.சுப. மாணிக்கனார் பரத்தைமை பற்றிக்கூறும்போது,

> "தமிழிலக்கியப் புலவரும் பரத்தைமையை உடன் பட்டதில்லை, வேண்டும் என்பது போல ஒருசொற் சொல்லியதுமில்லை. தமிழ்மக்களைக் கேட்டாலும், பரத்தைமை வேண்டுமெனக் கூறார். எனினும் சமுதாய நடைமுறையில் பரத்தை வழக்காறு வேரோடிக்கிடக்கக் காண்கிறோம். அதற்குப்பேரெதிர்ப்பு இன்மையையும் இன்றுவரை காண்கிறோம்"[108].

என்பர். இந்நிலையே பெண்பாற்புலவர் பாடல்களில் உள்ளது. தலைவனின் இச்செயலை நீக்கவே " வாயில்மறுப்பு" நிகழ்ந்தது. ஆனால் முற்றிலுமாக அத்தலைவனைச் சேர்க்காமல் இருக்கவில்லை. இதனையே,

> "தமிழகத்திற் பரத்தைமை உண்டு. அவ்வழிப்பட்ட கணவனைப் பொறுத்து ஏற்கும் மனைவியும் உண்டு. இது சமுதாயத்தின் இயல் வழக்கு"[109].

என்று கூறுவர். சங்கச் சமுதாயத்தில் பரத்தையைப் பெண்கள் ஏற்கவில்லை.

பெண்பாற்புலவர் அந்நாளில் இருந்த பரத்தை என்ற பெண்குலத்தையும், அதனால் இல்லறம் நடத்தும் பெண்களுக்கும் இடையில் நடந்த நிகழ்வினைப் பாடியுள்ளனர். ஔவையார் பாடிய பரத்தை கூற்றுப்பாக்கள் அந்நாளில் பரத்தையருக்குச் சமுதாயத்தில் இருந்த அங்கீகாரத்தைக் காட்டுவதாக அமைகின்றது.

பரத்தையர் பலருடன் ஆணுக்கு உறவு இருந்தமையையும் இப்பாட்டு உணர்த்துகின்றது.

மருதப்பாடல்களில் மருத நில வயல், நீர்த்துறை, நீர்நாய், எருமை, மருதமலர், ஆம்பல், இவைப் பாடலில் சுட்டப்பட்டுள்ளன. இப்புனைவுகள் உரிப்பொருளாகிய ஊடல் பொருளுக்கு மெருகூட்டும்படி உவமைகளாக உள்ளுறையாக நிலப்புனைவு உள்ளது. மருதத்தின் வைகறைப் பொழுதுப் பாடலில் பயிலப்பட்டுள்ளது. பெண் புலவர்களின் இத்திணைப்பாக்கள் குறுந்தொகையில் இடம்பெறுவதால் உரிப்பொருளுக்கே சிறப்பாக அமைந்துள்ளன. நற்றிணை, பாட்டில் நிலப்புனைவுள்ளது.

## முல்லைத்திணைப் பெண்புலவர்கள்

பெண்பாற்புலவர்களில் முல்லைத்திணைப்பாக்களை எழுவர் பாடியுள்ளனர். இத்திணையில் பதினேழு பாடல்கள் இவர்கள் பாடியன. இப்பாடல்களில் ஒக்கூர் மாசாத்தியார் ஆறு பாடல்களும், ஔவையார் ஐந்து பாடல்களும், கச்சிப்பேட்டு நன்னாகையார், கழார்க்கீரனெயிற்றியார், காக்கைப்பாடினியார்நச்செள்ளையார், பொதுப்பிற்புல்லாளங்கண்ணியார், பொன்மணியார் போன்றோர் முறையே ஒரு பாடலும் பாடியவர்கள்[110].

## முல்லைத்திணை

முல்லைநிலம் காடும் காடுசார்ந்த பகுதியுமாகும். தொல்காப்பியம் 'மாயோன் மேயக்காடுறை உலகமும்'[111] என்று காடுறை உலகத்தையும், அதன் தெய்வமான கண்ணனையும் எனச்சுட்டும் அதன் பொழுதாகக் கார்காலத்தையும் மாலைப்பொழுதையும், காரும் மாலையும் முல்லை[112] எனக்குறிக்கும் இந்நிலத்தின் உரிப்பொருள் ஆற்றியிருந்தல் இதனை இருத்தல்[113] என்று குறிப்பிடும். இந்நிலத்திலுள்ள உயிரினங்கள், இயற்கை, இசை, மற்றனைத்தும் அந்நிலக் கருப்பொருள்களாகும். பெண்புலவரின் இத்திணைப்பாடல்களில் இந்நிலப் புனைவுகள் பயிலப்பட்டுள்ளன. இத்திணையில் தலைவன், தலைவி, தோழி, கண்டோர், உழையர் கூற்றுக்களில் பாடல்கள் உள்ளன[114].

## தலைவன் கூற்று

பெண்பாற்புலவர் பாட்டில் தலைவன் கூற்றில் மூன்றுமப் பாட்டுக்கள் இடம்பெற்றுள்ளன. இப்பாடல்களில் ஔவையார் பாடியதாக இரண்டு பாடலும் (குறுந். 99, நற் 371) பொதுப்பிற்புல்லாளங்கண்ணியார் பாடியதாக ஒரு பாடலும் உளது. இம்மூன்று பாடல்களும் வினைமுற்றிய பின் தலைவன் தோழியிடமும், பாகற்கும் கூறியதாக அமைந்துள்ளன. ஔவையார் பாடிய குறுந்தொகை (99) ப் பாடலில்

"உள்ளினெ னல்லெனோ யானே யுள்ளி
நினைத்தனெ னல்லனோ பெரிதே நினைத்து
மருண்டனெ னல்லெனோ வுலகத்துப் பண்பே
நீடிய மரத்த கோடுதோய் மலிர்நிறை
இறைத்துணச் சென்றற் றாஅங்
கனைப்பெருங் காமமீண்டுகடைக் கொளவே"

(குறுந். 99)

இப்பாடல் பொருள் முற்றிப் புகுந்த தலைமகன், 'எம்மை நினைத்தீரா? என்ற தோழிக்குச் சொல்லியது. இப்பாடலில் முல்லை நிலப்புனைவில்லை. இப்பாடலில் வினைகாரணமாகப் பிரிந்து சென்ற தலைவன் வினைமுடிந்து இல்லம் வந்து சேர்ந்தான். அப்பொழுது சென்ற இடத்தில் தலைவியை நினைத்தீரா எனக்கேட்க, நினைத்தேன் என்கிறான் தலைவன். இதனைத் தொல்காப்பியர் தலைவன் கற்பில் நிகழ்த்தும் கூற்றுக்களில் "மீட்டு வர ஆய்ந்த வகையின் கண்ணும்"[115] என்றெழுதுவர். இப்பாட்டை இளம்பூரணர் 'இளமையும் காமமும் நோக்காதுப்' பெயர்ந்தீரென்று கூறி, இதற்குக்காரணம் என்னையெனத் தலைவன் வந்துழிக் கேளிர் நிகழ்த்தும், நிகழ்ச்சிக்கண் தலைவனுக்குக் கூற்று நிகழ்ந்தது என்பதற்கும்,[116] நச்சினார்க்கினியர் மீண்டு வந்த தலைவனை இடைச் சுரத்து மறந்தீரோவெனத் தலைவி வினாவிய வழி அவனுக்குக் கூற்று நிகழ்ந்ததது என்பதற்கும்[117] மேற்கோளாகக் காட்டுவர். இப்பாட்டில் தலைவியின் நினைவால் தோன்றிய காமம்,

"நீடிய மரத்த கோடு தோய் மலிர்நிறை
இறைத்துணச் சென்றற் றாஅங்

கனைப்பெருங் காமமீண்டு கடைக் கொளவே''

(4-6)

என்று மரத்தின் கிளையைத் தொட்டுச் சென்ற வெள்ளம் நெடுந்தூரம் வந்து இறைத்துண்ணும்படி குறுகிப்பின்பு அற்றது போலக் காம வெள்ளமானது மிகப்பெரிய தாயிருந்து நான் இங்கு மீண்டுவரும்போது வரவரக்குறைந்து தலைவியோடு அளவளாவியுடன் அறுமென்று[118] கூறியதால் தலைவன் தலைவி மீதுகொண்ட அன்பும், அவன் பிரிந்து வரும்வரை ஆற்றியிருந்தாள் தலைவி என்பதால் இப்பாட்டு உரிப்பொருளால் முல்லையாகியது. இப்பாடலில் '' உலகத்தியல்பு என்றது தலைவன் பொருள் ஈட்டச் சென்றபோது இயல்பாகப் பொருள் தேடலில் ஊக்கம் பெற்றிருக்க வேண்டும்.அது அவன் இயல்பு. தலைவி அக்காலத்தில் ஆற்றியிருத்தல் வேண்டும். இதனை ஔவையார் அறிந்திருந்ததால், தலைவன் கூற்றில் அவன் இயல்பைச் சுட்டும்போது தலைவனுக்கு அந்நாளிலிருந்த கடமைகளை உலகத்தியல்பென்று சுட்டினார்.

இவர் பாடிய மற்றொரு பாடல் தலைவன் வினைமுடித்து வரும்போது தேர்ப்பாகனுக்குக் கூறுவதாய் அமைந்த பாடல். இப்பாடலில், பாகனே இதுகாறும் மழைபெய்யாத மேகம் இப்போது மழைப் பெய்யத்தொடங்கியது. கார்காலம் தொடங்கியதால் ஆராய்ந்த அணிந்த கைவளைகளையுடைய தலைவியின் வளை கழன்றோடும். அவள் வருத்தமிகக் கோவலரும் குழலோசையை இசைக்கத்தொடங்கி விட்டனர். ஆதலின் விரைவிலே தேரைச் செலுத்துவாயாக (நற். 371) என்கிறான். இப்பாட்டில் முல்லை நிலத்தில் மலரும் காயாம்பூ கொன்றை, அந்நிலத்தில் இசைக்கும் குழலோசை, கோவலர், கார்காலம் இவைப் புனையப்பட்டுள்ளன. கார்காலம் வந்ததை,

''.......................................... மின்னி
மாயோள் இருந்த தேஎம் நோக்கி
வியலிரு விசும்பகம் புதையப் பாஅய்ப்
பெயல் தொடங்கினவே பெய்யா வானம்''

(நற் 371;2-5)

என்று முல்லையின் பெரும்பொழுதான கார்காலத்தைக் குறிப்பிட்டுள்ளார். அந்நிலத்துக் கருப்பொருளான, காயா, கொன்றை இவற்றை, ''காயாங்குன்றத்துக்

கொன்றை போல'' (1) என்றார். அந்நிலத்தில் வாழும் கோவலரையும், அவர்கள் பாடும் குழலோசையையும், ''குழல் தொடங்கினரே கோவலர்'' (8) என்று குறிப்பிட்டார்.

இப்பாடலில், தலைவன் பிரியும் போது, கார்காலத்தில் வருவேன் என்று கூறிச்சென்றான். கார்காலம் வந்தது. பெருமழைப் பெய்யத்தொடங்கியது. இன்னும் செல்லாவிட்டால் வருந்துவள் என்ற தலைவன் தேர்ப்பாகனிடம் விரைந்துத் தேரைச் செலுத்தும்படிக் கூறுகின்றான்.

இப்பாட்டில் முல்லைநிலத்தின் முதல்கருப்பொருள்களும், அந்நிலத்தலைவி ஆற்றியிருப்பதும், தலைவன் கார்காலத்தில் வினைமுடித்து மீள்வதும் சுட்டப்பட்டதால் முல்லையின் இருத்தல் உரிப்பொருள் சுட்டிநின்றது. தலைவன் வினைமுடித்து வரும்போது இடைச்சுரத்தில் தங்குவதில்லை என்பதும், விரைந்து வருவான் என்பது மரபு. இதனை,

''வினைவயின் பிரிந்தோன் மீண்டுவரு காலை
இடைச்சுரம்மருங்கில் தவிர்தல் இல்லை
உள்ளம் போல உற்றுழி உதவும்
புள் இயல் கலிமா உடைமை யான''[119]

என்பதால் அறியமுடியும். அதுபோல இப்பாட்டுடைத்தலைவன் விரைந்து வந்தமையறியப்படும். இப்பாட்டில் பாகன் என்ற சொல்லாட்சி இல்லை. ஆனால் இப்பாட்டு தலைவன் வினைமுடித்து மீண்டுவரும்போதுத் தலைவியின் நிலையை எண்ணி விரைந்து அவளை அடைய வேண்டும் என்று கூறுவதால் இப்பாட்டு தேர்ப்பாகனுக்குக்கூறியது எனக் கொள்ளத்தகும்.

இத்தலைவன் கூற்றில் பொதுப்பிற்புல்லாளங்கண்ணியார் பாடிய பாடலில், (அக.நா.154) ''பாகனே மிக்க மழை சொரிந்தமையால் பயன்மிக்க முல்லை நிலத்தே, ஆழமாகிய நீரையுடைய பள்ளங்களிலுள்ள பிளந்த வாயினையுடைய தேரைகள் நீண்ட வழியெலாம் சிறிய பலவாகிய வாத்தியங்களைப் போல ஒலிக்கவும், குறிய புதராகிய பிடவின் நீண்ட காம்மையுடைய மலர்கள், செம்மண்ணாகிய நிலத்திடத்து நுண்ணிய மணலில் உதிர்ந்து கோலம்செய்யவும், கொடிய சினமுடைய பாம்பின் படம் மேலே நிவந்தால் போன்ற தன்னை மணக்கின்ற காந்தள் பூவின் தாது

கட்டவிழ்ந்துவிரியவும் ஆண்மான் நீரைப்பருகிப் பிணையுடன் இன்பம் மிகத்தங்கவும், காடு அழகுபெற்ற பெரிய வழியில், ஓடும் வேகம்குறையாத கொய்யப்பட்ட புரவிகள் தாளின் அளவு தாழ்ந்த மாலையிடத்து மணி விளங்கி ஒலிக்க தேரை ஓட்டுவாயாக, தலைவியை விரைவில் சென்றடைய என்றான். இப்பாட்டு வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியதாகும்.

இப்பாட்டில் 'புறவு' என்று முல்லை நிலத்தைக் குறிப்பர்; கார்காலத்தில் மழை பெய்ததால் காடு அழகு பெற்றதையும், அங்குள்ள, பலமலர்களையும், காந்தட்பூ அக்காட்டில் வாழும் மான், ஆகியவற்றைக் குறிப்பிட்டுள்ளார். முல்லை நிலத்தை "படுமலை பொழிந்த பயம் மிகு புறவின் (1) என்றும், அக்காட்டில் வாழும் மானை" திரிமருப்பு இரலை (8) என்றும்குறிப்பிட்டுள்ளார். இப்பாட்டில் பத்தடிகளில் நிலப்புனைவு அமைகிறது.

முல்லை நிலத்தலைவி ஆற்றியிருப்பதை 'நம்வயிற் (13-15) புரிந்த கொள்கை' என்று நம்மிடத்து விரும்பிய கொள்கை என்றார். இப்பாட்டு கார்காலம் வந்ததும் வினைமுடிந்து வரும் தலைவன், தேரைச் செலுத்தும் பாகனை " வலவ(13) என்றழைத்து,

"ஓடுபரி மெலியாகக் கொய்சுவல் புரவித்
தாள்தாழ் தார்மணி தயங்குபு இயம்ப"

(11-12)

என்று விரைந்து தேரைச் செலுத்த என்றான். இப்பாட்டு முதல், கரு, உரிப்பொருளாலும் முல்லைத்திணையாகியது. தலைவன் கூற்றுப்பாட்டு மூன்றிலும் தலைவன் தலைவி மீது கொண்ட அன்பினைக் காட்டுவதாய் அமைந்துள்ளது. குறுந்தொகையில் உரிப்பொருள் மட்டும் சுட்டப்பட்டுள்ளது. நற்றிணை, அகநானூற்றுத் தலைவன் கூற்றுப்பாடலில் முல்லை நிலப்புனைவு இடம்பெற்றுள்ளன. இதனால் அடி கூடுதலாகப் பாடப்படும்போது நிலப்புனைவு இடம்பெற்றதை அறியமுடிகிறது. பெண்பாற்புலவர் ஆண் கூற்றுக்களைப்பாட வல்லவர்கள் என்பதைத் தலைவன் கூற்றுப்பாட்டுக்கள் காட்டுகின்றது.

## தலைவி கூற்று

முல்லைத்திணையில் அமைந்த தலைவி கூற்றுப்பாடலில் ஔவையார் இரண்டு பாட்டும், ஒக்கூர் மாசாத்தியார் மூன்று பாடலும் பாடியுள்ளனர். கழார்க்கீரனெயிற்றியார் (அகந. 294); பொன்மணியார் (குறு. 391) இருவரும் முறையே ஒவ்வொரு பாடல்கள் பாடியுள்ளனர். இத்திணையில் தலைவி கூற்றில் ஏழுபாட்டுக்கள் அமைந்துள்ளன.

ஔவையார் பாடிய தலைவி கூற்றில் தோழி "மழை பெய்யதலால் காயாம்பூ மலர்ந்துள்ளது. அது மயிலினது கழுத்துப்போல தோன்றும், கார்காலவருகையால் கொன்றை மலர்களும் மலர்ந்தது. அப்பூ என் மேனியில் படர்ந்த பசலைப் போன்று தோன்றுகிறது. தலைவர், சென்ற நாட்டில் பெண் மானிடத்து நீங்கிய ஆண் மானைப் பார்ப்பாரோ" என்று கேட்கிறாள் (குறுந்.183). இப்பாட்டு பருவ வரவின்கண் ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி யுரைத்தது. இப்பாட்டில் முல்லை நிலத்தில் மலரும் காயா, கொன்றை மலர்களையும், மயில், மானையும் குறிப்பிட்டுள்ளார். இதனை,

"சென்ற நாட்ட கொன்றையம் பசுவீ<br>
..........................................................<br>
சிறுதலைப் பிணையிற் றீர்ந்த நெறி கோட்<br>
டிரலை மானையுங் காண்பர்<br>
புல்லென் காயாப் பூக்கெழு பெருஞ்சினை<br>
மென்மயி லெருத்திற் றோன்றும்<br>
கான வைப்பிற் புன்புலத்தானே "

(குறுந் 183)

என்று முல்லைநிலத்தை "கானவைப்பிற் புன்புலம்" என்று குறிப்பிட்டுள்ளார்.

இப்பாட்டில் தலைவி தலைவனைப்பிரிந்து ஆற்றியிருப்பதும், கார்ப்பருவம் வந்தும் வராததால் தலைவன் சென்ற நாட்டில்கொன்றைப்பூ மலர்ந்திருப்பது எம்மேனியின் பசலை நிறம் போன்றதால் தலைவி மேனிப் பசலைபாயும் என்றுவிரைந்து வருவார் என்றும், அங்கு ஆண்,பெண்மானைக் கண்டால் என்நினைவு வரும் வந்துவிடுவார் என்றும் கூறுகின்றாள். இப்பாட்டில் தலைவி

ஆற்றியிருத்தல் என்ற உரிப்பொருள் சுட்டியதால் முல்லையாகியது. இப்பாட்டில் நிலம் புனையப்பட்டுள்ளது.

ஔவையார் பாடிய நற்றிணைப்பாட்டில் (381) தலைவி "அதியமான் பரிசில் வழங்கும் நாளோலக்கம் போல மேகம் மழைபெய்யத் தொடங்கியது. கார்காலத்தில் வருவதாகக் கூறிச் சென்ற தலைவன் வரவில்லை. தலைவன் வராததால் இறப்பேனாயின் நான் அவர்மீது அன்பில்லை என்பது உண்மையாகும். உயிர்நீங்காது இருப்பேனாயின் அதுவும் அவர்மீது அன்பில்லை எனக்காட்டும். இப்போது கான்யாற்றின் இடிகரையில் வேர்களெல்லாம் அசைப்பட்டுத்தோன்றிக்காற்றாலலையும் மரத்தின் அழகிய தளிர் போல நடுங்குதல் நீங்காத நெஞ்சுடனே இத்துன்பத்தை எவ்வாறு தாங்கவல்லேன்" என்கிறாள். இப்பாட்டில் முல்லையின் பொழுதான கார்காலத்தை, "மாரி இரீஇ மான்றன்றால் மழையே" (10) என்று குறிப்பிட்டதால் அறியமுடியும். இப்பாட்டில் தலைவி, தலைவன் பிரிவில் ஆற்றியிருந்தும், கார்காலம் வந்து நாளாகியும் தலைவன் வராததால் அழிந்து கூறியதாகவும் உள்ளது. அதனால் இப்பாட்டு உரிப்பொருளால் முல்லையாகியது.

முல்லைத்திணையில் பாடும் சிறந்த புலவரில் ஒக்கூர்மாசாத்தியாரும் ஒருவர். இவர் பாடலில்,

"இளமை பாரார் வளனசைஇச் சென்றார்
இவணும் வாரா ரெவண ரோ வெனப்
பெயல் புறந்தந்த பூங்கொடி முல்லைத்
தொகுமுகை யிலங் கெயிறாக
நகுமே தோழி நறுந்தண்காரே"

(குறுந். 126)

இப்பாட்டு பருவங்கண்டு அழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது. இப்பாட்டில் முல்லை நிலத்தில் மலரும் முல்லைப்பூவையும், கார்காலத்தையும் புனைந்துள்ளார். இதனை,

"பெயல் புறந்தந்த பூங்கொடி முல்லைத்
தொகுமுனக யிலங்கெயிறாக
நகுமே தோழி நறுந்தண் காரே"

(3-5)

என்றடிகள் சுட்டும். இப்பாட்டில் தலைவன் பொருள் பிரிவு மேற்கொண்டதையும், கார்காலத்தில் மீண்டு வருவதாகக் கூறிய தலைவன் இன்னும் வரவில்லை என்றும், தலைவி ஆற்றியிருந்தால் என்ற உரிப்பொருள் சுட்டுவதால் முல்லையாகியது. இவர் பாடிய மற்றொரு பாடலில்,

"ஆர்கலி யேற்றோடு கார்தலை மணந்த
கொல்லைப் புனத்த முல்லைமென்கொடி
எயிறென முகைக்கு நாடற்குத்
துயிறுறந் தனவாற் றோழியென் கண்ணே"

(குறுந். 186)

என்பது பருவ வரவின்கண் ஆற்றாளெனக்கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

இப்பாடலில் முல்லை நிலத்தில் மலரும் முல்லைப்பூவையும், கார்காலத்தையும் குறிப்பிடுகிறார். இதனை,

"ஆர்கலி யேற்றோடு கார்தலை மணந்த
கொல்லைப் புனத்தமுல்லை மென்கொடி
எயிறென முகைக்கு நாட"

(1-3)

என்றடிகளால் அறியமுடியும். இப்பாடலில் கார்காலத்தில் வருவதாகக் கூறிச்சென்ற தலைவன் வராததால் ஆற்றியிருக்கும் தலைவித் துயிலை மறந்ததாகக் கூறப்பட்டுள்ளது. இப்பாடலில் தலைவன் பிரிவில் ஆற்றியிருக்கும் தலைவியின் நிலை கூறப்பட்டதால் முல்லைத்திணையாகியது.

ஒக்கூர் மாசாத்தியார் பாடிய தலைவி கூற்றுப்பாடலில் தோழி என அழைத்து "பொருள் ஈட்டி வரும் பொருட்டு நம்மை இங்கு வைத்துப் பிரிந்து சென்ற தலைவர், பழைய மழையினால் தழைத்த புனத்தில் உள்ள புதிய வரகினை ஆண்மான் மேய்ந்தமையால் குறைதலை உடைய நுனியை உடைய, கதிர் அரிந்தாள் சேர்ந்த பக்கத்தில் மலர்ந்த முல்லைக்கொடியானது காட்டுப்பூனை சிரித்தால் போன்ற தோற்றத்தை உடைய செவ்விப்பூவின் மெல்லிய பொதிதலை உடைய சிறிய அரும்புகள் மலர்ந்த நறிய மலர்களை உடைய முல்லை நிலத்தில், வண்டுகள் அம்மலரை ஊதும் பொருட்டுச் சுற்றுகின்ற மாலைக்காலத்திலும் வாராயினார்

இதனைக் கருதுவாயாக" என்றபாடியுள்ளார் (குறுந்.2220).

இப்பாடலில் முல்லை நிலத்தைப் "புறவு" (5) என்றும், அந்நிலத்தின் மாலைப்பொழுதை "மாலையும் வாரார்" (6) என்றும், கார்காலம் தொடங்கி நாள் பல கழிந்ததால் "பழமழைக் கலித்த" (1) என்றும், அந்நிலத்தில் மலரும் முல்லைப்பூவை "பூத்த முல்லை" (3) எனவும், முல்லை நிலத்தில் வாழும் மானை "இரலை மேயந்த" (2) என்றும் குறிப்பிட்டுள்ளார். இப்பாடலில் முல்லைநிலம், பொழுது கருப்பொருள் அனைத்தும் குறிப்பிடப்பட்டுள்ளன.

இப்பாடலில் கார்காலத்தில் வருவதாகக்கூறிச்சென்ற தலைவன் வராததால் ஆற்றியிருக்கும்தலைவித் தோழியிடம் கூறும் பாடலாதால் இப்பாட்டு உரிப்பொருளாலும் முல்லையாகியது. இவன் பிரிவு பொருட்பிரிவு என்பதை "பொருட்பிரிந்தோரே" (7) என்றதால் அறியமுடியும். இப்பாடலில் "கண்டிசிற் றோழி" என்று தோழிலை விளிக்கும் சொல் இடம்பெற்றுள்ளது.

பொன்மணியார் பாடிய பாடலில் தலைவி தோழியிடம் "முல்லைநிலத்தில் மழைபெய்யத் தொடங்கியது. பலமலர்களும் மலர்ந்துள்ளன. மயில்கள் கார்காலத்தைக் கண்டதும் அகவின. அவை பேதமை உடையன" (குறுந்.391) என்றது. இப்பாட்டு பிரிவிடைப் பருவ வரவின்கண் ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி அழிந்து சொல்லியது.

இப்பாடலில் முல்லை நிலத்தை "புயல் நீங்கு புறவில்" (2) என்றும் முல்லையின் பொழுதான மாலைப்பொழுதைப் "பையுள்மாலை" (6) என்றும், அந்நிலத்தில் வாழும் மயிலை "மஞ்ஞை (2) அங்குவாழும் மானைப்" புகரி (2) என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. இப்பாட்டில் கார்காலம் வந்தது; தலைவன் வரவில்லை என்று தலைவி ஆற்றியிருந்தமைப் பாடப்பட்டதால் உரிப்பொருளாலும் முல்லைநிலமாகியது.

பெண்பாற்புலவர்கள் பாடிய தலைவி கூற்றுப் பாடல்களில் கார்கால வருகையும், தலைவன் வரவில்லை என்று வருந்தித்தலைவி தோழியிடம் கூறுவதாகவும் அமைந்துள்ளன. முல்லைப்பூ மலர்வது தலைவியின் நிலைகண்டு சிரிப்பதுபோலுள்ளது என்று ஒக்கூர் மாசாத்தியார் பாடியுள்ளார்.

## தோழி கூற்று

பெண்பாற்புலவரின் பாடல்களில் தோழி கூற்றில் அமைந்த பாடல்கள் மூன்று. இதனை ஒக்கூர் மாசாத்தியார் காக்கைப்பாடினியாரா நச்செள்ளையார் (குறுந். 210, கழார்க்கீரனெயிற்றியார் (குறுந். 287) போன்றோர் பாடியுள்ளனர். மூன்றும் குறுந்தொகைப்பாக்கள்.

ஒக்கூர் மாசாத்தியார் பாடிய தோழி கூற்றுப்பாடலில் தோழி மாலைக்காலத்தில் ஊரைவந்து அடையும் பசுக்களின் கழுத்தில் கட்டப்பட்ட மணிகளின் ஓசையா? இல்லை, செய்வினை முடித்த செம்மல் உள்ளமொடு தேரின் வரும் தேரின் மணி ஓசையா? முல்லைக் கொடி படர்ந்த கல்லின் மேல்ஏறி கண்டு வருவேம் வருவாயாக'' என்று தோழி அழைக்கின்றாள். இப்பாடலில் முல்லை நிலத்தையும், அந்நிலத்திலுள்ள முல்லைப்பூவையும்,

"முல்லை யூர்ந்த கல்லுயரேறிக்'' (1)

என்றார். இப்பாடலில் மாலைக்காலத்தில் பசுக்கள் இல்லம் வரும் வருகையை "புல்லார் நல்லான் பூண்மணி கொல்லோ " (4) என்றும் முல்லை நிலத்துக் காட்டாற்றினை " ஈர்மணற் காட்டாறு வரூவும்'' (7) என்றார்.

இப்பாடலில் தலைவன் கார்காலத்தில் வருவதாகக் கூறிச் சென்றவன் வரவில்லை. அதனால் தலைவி வருந்துவாள் என்பதை அறிந்த தோழி தலைவியிடம் தலைவன் வரும் தேரின் மணியோசைக் கேட்கிறது. அதனால் தலைவன் விரைவில் வந்து விடுவான் என்கிறாள். இப்பாடலில் தலைவி ஆற்றியிருப்பதும், தோழி தலைவன் வருகிறான் என்று கூறுவதும் முல்லையின் உரிப்பொருளான ஆற்றியிருக்கும் பொருளாக அமைவதால் உரிப்பொருளால் முல்லையாகியது.

இத்தோழி கூற்றில் அமைந்த மற்றொரு பாடலைக் காக்கைப்பாடினியார் நச்செள்ளையார் பாடியுள்ளார். இப்பாடலில் தலைவன் இல்லத்திற்கு வந்தபின்பு தலைவன் வரும்வரைத் தலைவியை ஆற்றுவித்துக் காத்தமையால் தோழியை வாழ்த்த தோழி இதுநான் செய்யவில்லை இது காக்கைக்குச் செய்யவேண்டிய சிறப்பு என்று கூறுகிறாள் (குறுந்.210). இப்பாடலில் நள்ளியின் கானத்தைக்குறிப்பிடுகிறார். இப்பாடலில்,

"திண்டேர் நள்ளி கானத் தண்டர்
பல்லா பயத்த நெய்யிற் றொண்டி
முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெஞ்சோ
றெழுகலத் தேந்தினுஞ் சிறிதென் றோழி
பெருந்தோ ணெகிழ்த்த செல்லற்க
விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே"

(குறுந் 210)

என்று விருந்துவரக் கரைந்த காக்கைக்கு சிறப்புச் செய்யவேண்டும் என்று பாடுகிறார். இப்பாடலில் தோழி காக்கைக் கரைதலாகிய நின் வரவுக்குரிய நிமித்தங் காட்டி, யான் தலைவியை ஆற்றுவித்தேன் என்று பாடியதால் முல்லையின் உரிப்பொருளாகியது. இத்தோழி கூற்றில் அமைந்த பாடலில் கழார்க் கீரனெயிற்றியார், தலைவன் வரவில்லை என வருந்தும் தலைவிக்குத்தோழி கார்காலம் வந்தது வந்துவிடுவார் என்று கூறுகின்றாள். இப்பாடலில, தோழி, கேட்பாயாக, பன்னிரண்டு மாதம் நிறைந்த கருப்பத்தைத் தாங்கித் தளர்ந்து நடக்கமாட்டாத பச்சைப்புளிச்சுவையில் விருப்பத்தை உடைய முதற்சூலை உடைய மகளிரைப் போல நீரை முகந்து கொண்டு வானத்தின் கண் ஏறாமல் அந்நீர்ப் பொறையைத் தாங்கிக் கொண்டு ஒன்றோடு ஒன்று சேர்ந்து வளம்மிக்க பல மலைகளை நோக்கி பெரிய முழக்கத்தை உடைய மேகங்கள் எழுகின்ற கார்ப்பருவத்தை இப்பொழுது பார்த்த பின்பும் தலைவன் நம்மைப்பிரிந்து வாராமல் இருப்பாரோ? வருவர் என்கிறாள். இப்பாடலில் கார்காலத்தின் வருகையைக் குறிப்பிட்டுள்ளார். இதனை,

"................. நீர் கொண்டு
விசும்பிவர் கல்லாது தாங்குபு புணரிச்
செழும்பல் குன்ற நோக்கிப்
பெருங்கலி வானமேர் தரும் பொழுதே"

(குறுந் 287: 5-8)

என்றடி உணர்த்தும்.

இப்பாடலில் தலைவன் கார்காலம் வந்ததும் விரைந்து வந்துவிடுவார் என்று ஆற்றுவித்தலால் இப்பாட்டு உரிப்பொருளால் முல்லையாகியது.

தோழி கூற்றில் அமைந்த பாடல் மூன்றும் கார்காலத்தில் தலைவன் வந்துவிடுவான் என்று தலைவியிடம் கூறி ஆற்றுவிப்பதாக அமைந்துள்ளன.

## உழையர் கூற்று

முல்லைத்திணையில் உழையர் கூற்றில் பாடியவர் ஒக்கூர் மாசாத்தியார். இப்பாடல் இரண்டும் அகநானூற்றில் (324 - 384) இடம்பெற்றுள்ளன. இப்பாடல்களில் வினைமுற்றிய தலைமகன் கருத்துணர்ந்து உழையர் சொல்லியது.

இப்பாடலில் கார்காலம் தொடங்கியதால் காடுகள் தோறும் புற்கள் தழைத்துள்ளன. பாறையின் கண்ணுள்ள சுனைகள்தோறும் நீர் நிறைந்துவிட்டன. முல்லை மலரும் மாலை காலத்தே நகரின்கண் புகுதலை ஆய்ந்துணர்ந்துப் பெருந்தகையாய தலைவன் தேர் செல்லுகின்றது. அதனால் தலைவி இன்று விருந்துபெருகுவள் என்பது பாடல். முல்லை நிலத்தில் கார்காலத்தில் மழை பெய்ததால் சிறுபுற்கள் முளைத்தது, எங்கும் நீர் நிறைந்துள்ளது என்று கார்கால வருகையைப் பாடியுள்ளார். இக்காலத்தில் தலைவி தலைவன் வரவை எண்ணி தலைவி ஆற்றியிருந்த்தல் உரிப்பொருளாகும்.

மற்றொருபாடலும், தலைவன் கார்காலத்தில் வருவதைக்கண்டு உழையர் கூறியதாக அமைந்தது. இப்பாடலில் "பாசறையில் நம் அரசன் அருந்தொழிலான போர் முடித்ததால் விரும்பிய காதலொடு பெரிய தேரின்கண் ஏறியமர்ந்ததை அறிந்ததேயன்றி இங்கு வந்துற்ற பரிசினை நன்கு அறிந்திலேன். முயல்குட்டிகள் தாவிக்குதிக்கும் முல்லையாய அழகிய காட்டில் கவர்ந்த கதிரினைக் கொண்ட வரகினையுடைய சிறிய ஊரிடத்தே மென்த்தன்மை வாய்ந்த தலைவியின் இல்லின்கண் தேரினை நிறுத்தி இரங்கு என்று சொற்கேட்டு மருட்சியுற்றேன் நீ தேரில் காற்றினைக் குதிரையின் வடிவாக பூட்டினையா ?இல்லை நின் மனத்தைப் பூட்டினையா? தலைவி விருந்து பெற்றனள் என்பது பாடலின் பொருள். இப்பாடலில் முல்லை நிலத்தையும்,

"முயற்பறழ் உகளும் முல்லையம் புறவிற்

கவைக்கதிர் வரகின்சீறூர் ஆங்கன்"

என்று முல்லைநிலத்தையும், அந்நிலத்தில் வாழும் முயற்குட்டியையும் பாடியுள்ளார்.

இப்பாடலில் தலைவன் போர்க் காரணமாகப் பிரிந்துப் போர் முடிந்து வந்தமைச் சுட்டப்பட்டுள்ளது. இதனை, "இருந்த வேந்தன் அருந் தொழில் முடித்தென" என்றதால் அறியமுடியும். இப்பாடலில் தலைவன் பிரிவினால் தலைவி ஆற்றியிருந்தபோது தலைவன் விரைந்து தேரைப்பாணன் ஓட்ட சேர்ந்தான் என்றதால் இப்பாட்டு உரிப்பொருளாலும் முல்லையாகியது.

பெண்பாற்புலவர்களின் முல்லைப்பாடல்களில் முல்லைமலர், முல்லையின் மாலைப்பொழுது, கார்காலம் புனைவு இடம் பெற்றுள்ளது. இத்திணையில் ஆண்பாற் கூற்றுக்கள் இடம்பெற்றுள்ளன. இப்பாடல்களின் வினைமுடித்துமீண்டு வரும் தலைவனின் மனத்தின்படி விரைந்துவருதல் குறிப்பிடப்பட்டுள்ளது.

## ஆய்வுமுடிவுகள்

பெண்பாற்புலவர்கள் அகத்தில் ஐந்திணைகளிலும் பாடியுள்ளனர். பாலைத்திணையில் பெண்பாற்புலவர் பாடல்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன. பாலையை (32) யடுத்து, நெய்தல் (26) திணையிலும்; அடுத்து குறிஞ்சித்திணையிலும் (25); அடுத்து மருதம் (20); முல்லைத்திணையிலுமாகப் (17); பாடல்கள் காணப்படுகின்றன.

பெண்பாற்புலவர் கூற்றுக்களில் தலைவி கூற்றுப்பாக்கள் அறுபத்தாறு. தோழி கூற்றுப்பாக்கள் முப்பத்தாறு, தலைவன் கூற்று பதினொன்று, செவிலி கூற்று இரண்டு, பரத்தை கூற்று இரண்டு, கண்டோர் கூற்று இரண்டு, உழையர் இரண்டு, கண்டோர் கூற்று ஒன்று என இடம் பெற்றுள்ளன. பெண்புலவர்கள் பாடல்களில் பெண் கூற்றுகள் மிகுதி (தலைவி 66+தோழி 36 + பரத்தை +2, செவிலி +2) பெண்புலவர்களின் மொத்த அகத்திணைப்பாட்டு 120. இதில் 106 பாட்டு பெண்கூற்றாக இருப்பது குறிப்பிடத்தக்கதாகும். மீதமுள்ள பதினான்கு பாட்டே ஆண் கூற்று. இவ்வெண்ணிக்கை பெண்பாற்புலவர்கள் பெண்கூற்றைப் பாடவிரும்பியதைக் காட்டுகிறது. பெண்பாற்புலவர்களின் தலைவி கூற்றுப்பாட்டுக்களில் தலைவனைப்

பிரிந்த பிரிவின் துன்பக் கூற்றுக்கள் வெளிப்படுத்துகின்றன.

பெண்பாற்புலவர்களின் பாடல்களில் குறுந்தொகைப்பாடல்களில் புனையப்பட்ட நிலப்புனைவுகளை விட நற்றிணை, அகநானூற்றில் மிகுந்துள்ளன. பெண்புலவர் ஆண்புலவர்களைப்போலப் பாக்கள் பாடுவதில் அறிவுத்திறம் பெற்றமையைப் பாக்கள் அறிவிக்கின்றன.

பெண்பாற்புலவர்கள் ஐந்திணையிலும் புலமைபெற்றிருந்தனர். அனைத்து பாடல்களிலும் தலைவி தலைவனுடன் இணையும் எண்ணம் இழையோடுகிறது. அனைத்துப்பாக்களிலும் பிரிவு இல்லாதிருப்பதும் கற்பு வாழ்க்கையைத் தலைவன், தலைவி உடனிருந்து துய்க்க விரும்புவதுமாக அமைகிறது.

சங்ககாலப்பெண்களின் சமுதாய நிகழ்வுகளைப் பெண்பாற்புலவர்கள் பாடவிரும்பினர். ஔவையாரும், வெள்ளிவீதியாரும் அந்நாளில் உடன்போக்கு சமுதாயத்தில் இருந்ததைப் பாடியுள்ளனர். உடன்போக்காகச் சென்ற பெண்களுக்குத் தலைவன் நாட்டில் திருமணம் நடந்ததை ஔவையார் (குறுந்.15) பாடியுள்ளார். இதுபோன்று பல நிகழ்வுகள் சுட்டப்பட்டுள்ளன.

பெண்பாற்புலவர்களின் பாலைப் பாடல்களின் பிரிவுப் பொருள் பாடப்பட்டதேயன்றிப் பிரிவுக்கான காரணம் குறிப்பிடவில்லை. கழார்க்கீரனெயிற்றியார், வெண்பூதியார் பாடல்களில் பொருள் பிரிவு ஒன்று சுட்டப்பட்டுள்ளது. அகத்தில் பாடும்போது பிரிதல், புணர்தல், இருத்தல், இரங்கல், ஊடல் என்று உரிப்பொருளுக்கு முதன்மை வழங்கப்பட்டதுபோல், அதன் காரணங்களுக்கு முக்கியத்துவம் கொடுக்காததைப் பாடல்கள் காட்டுகின்றன.

ஒவ்வொரு நிலத்தைப் பாடும்போது அவ்வவ் நிலப்புனைவு பாடலில் இடம் பெறப்பாடினர். பாலை எனில் குறிஞ்சியும் முல்லையும் முறைமையில் திரிந்தது ஆகையால் இருநிலமும் நீரின்றி இருக்கும் காட்சியைப் பாடியுள்ளனர். வாடிய உழிஞ்சில் மரம், வாடிய மூங்கில், இலவ மரம், வேங்கை, பிடவு, பசித்திருக்கும் புலி, வேம்பு, கள்ளி, வேனிற்பொழுது நீரற்ற குளம் போன்றவைகளைக் குறிப்பிடப்பட்டுள்ளனர். நெய்தல் திணைப்பாடலில் அந்நிலத்தலைவனைக் கொண்கன் துறைவன் சேர்ப்பன் எனச் சுட்டியுள்ளனர். அந்நிலத்தைப் புனையும்

போது கடற்கரைச் சோலை, புன்னைமரம், நண்டு, கொக்கு போன்ற பலவும் பாடலில் பயிலப்பட்டுள்ளன. குறிஞ்சிப்பாடலில் மலையும், மலைவாழ் மயில், குரங்கு, யானை போன்றவையும், அந்நிலத்தலைவனை வெற்பன் என்றும் குறிப்பிட்டுப்பாடியுள்ளனர். மருதப்பாடலில் வயலும், குளங்களும் குறிப்பிடப்பட்டுள்ளன. அந்நிலத்தலைவனை ஊரன் என்று குறிப்பிட்டுள்ளனர். அதுபோன்று முல்லை நிலத்தையும் புனைந்து பாடியுள்ளனர்.

பெண்பாற்புலவர்கள் பாடல்களால் பிரிந்துசென்ற தலைவன் மீண்டும் இல்லத்திற்கு வராமல் இருந்ததை அறியமுடிகிறது. ஆதிமந்தி, வெள்ளிவீதியார், ஔவையார் (அகம்.303), போன்றோர் பாடல்களில் தலைவன் பலகாலம் வராமலிருக்க வருந்திய தலைவி தேடிச் சென்றதுங் குறிப்பிடப்பட்டுள்ளது. அன்று ஆறலைக் கள்வரால் தலைவனுக்கு இடையூறு ஏற்பட்டிருக்குமோ என்று கருதவேண்டியுள்ளது.

## மேற்கோள் விளக்கம்

1. மு. வரதராசன், **தமிழிலக்கிய வரலாறு** ப. 28

2. மேலது ப. 30.

"அகத்தில் வாய்மொழிப் பாடல் பாடும்போது காதல் உரிப்பொருளாகப் போற்றப்பட்டது. அந்த வாழ்வை எடுத்துக்காட்டும் பொருளாக உள்ள மரம் விலங்குபறவை தொழில் முதலியவற்றைக்கருப் பொருள்கள் எனப்பட்டன. அந்த வாழ்வுக்குப் பின்னணியாக விளங்கும் நிலமும் காலமும் முதற்பொருள்கள் எனப்பட்டன. நிலந்தோறும் இயற்கைப் பொருட்களும் தொழில்களிலும் இருந்தமையால் நிலத்துக்குநிலம் நாட்டுப்பாடல்களும் வேறுவேறுவாக அமைந்தன.

3. தொல். பொருள். அகத். சூத். 5

4. மு. வரதராசனர், **தமிழிலக்கிய வரலாறு**. பக்.31-32.

5. பின்னிணைப்பு - 4 : 1

6. மேலது 4 : 1

7. பின்னிணைப்பு 4 : 2

8. தொல். பொருள். அகத். சூத். 2.

9. தொல். பொருள். அகத். சூத். 9

10. சிலம்பதிகாரம் 11 : 64-66

11. வ.சுப. மாணிக்கம், **தமிழ்க் காதல்,** ப-180

12. பின்னிணைப்பு 4 : 4

13. தொல். பொருள் அகத் சூத் 15

14. உ.வே.சாமிநாதையர் - **குறுந்தொகை மூலமும் உரையும்,** ப. 685

15. கா. காளிமுத்து, **தொல்காப்பிய இலக்கியக்கொள்கைகளும் குறுந்தொகையும்,** ப. 183

16. உ.வே.சாமிநாதையர்-**குறுந்தொகை மூலமும் உரையும்** ப. 66

17. உ.வே. சாமிநாதையர் - **குறுந்தொகை மூலமும் உரையும்** ப.106

18. அ. நாராயணசாமி அய்யர்-**நற்றிணை நானூறு மூலமும் உரையும்** ப. 10

19. உ.வே.சாமிநாதையர் - **குறுந்தொகை மூலமும் உரையும்,** ப. 89

20. தொல். கற்பு 6

21. தொல். கற்பு 6

22. சித.மு. வேங்கடசாமி நாட்டார், **அகநானூறு, மூலமும் உரையும்**, ப. 34 (களிற்றியானைநிரை)

23. தொல்.பொருள்.கற்பு. சூத். 21

24. மு.வேங்கடசாமி நாட்டார், **அகநானூறு மூலமும் உரையும்** ப. 7. (நித்திலங்கோவை)

25. உ.வே.சாமிநாதையர் - **குறுந்தொகை மூலமும் உரையும்,** ப. 64.

26. தொல். பொருள் அகத். சூத் 10

27. வ.சுப. மாணிக்கம், **தமிழ்க்காதல்**, ப.388

28. தொல் மு. வேங்கடசாமி நாட்டார், **அகநானூறு மூலமும் உரையும்,** (மணிமிடைப்பவளம்) ப. 88

29. தொல். பொருள் கற்பு. சூத். 5

30. மேலது சூத். 53

31. மேலது சூத் 5

32. பின்னிணைப்பு 4 : 5

33. தொல். அகத் சூத். 5

34. மேலது சூத். 8

35. மேலது சூத் 5

36. மேலது சூத் 14

37. பின்னிணைப்பு இயல் நான்கு - 6

38. தொல்.பொருளியல் சூத் 18

39. தொல். களவு சூத். 37

40. அ. நாராயணசாமி ஐயர், **நற்றிணை நானூறு, மூலமும் உரையும்** ப. 146

41. தொல். களவு சூத். 20

42. தொல். பொருளியல் சூத். 3

43. தொல். களவு. சூத். 20 இளம்

44. தொல் களவு. சூத். 24 இளம்

45. தொல் களவு. சூத். 24 நச்

46. தொல். கற்பு சூத். 21

47. தொல். கற்பு சூத். 22

48. உ.வே.சாமிநாதையர் - **குறுந்தொகை மூலமும் உரையும்,** ப. 231

49. தொல் களவு சூத். 38

50. தொல். களவு சூத். 39

51. உ.வே.சாமிநாதைய - **குறுந்தொகை மூலமும் உரையும்**, ப. 207

52. தொல்.மெய். சூத். 23

53. தொல். களவு சூத். 20

54. பின்னிணைப்பு; இயல் நான்கு 7

55. தொல். பொருள் அகத். சூத். 5

56. தொல் பொருள் அகத். சூத். 6

57. தொல். அகத். சூத். 7

58. அகத். சூத். 14

59. மு. வரதராசன் - **தமிழிலக்கியவரலாறு** ப. 31

60. பின்னிணைப்பு-இயல் நான்கு 8

61. உ.வே.சாமிநாதையர் - **குறுந்தொகை மூலமும் உரையும்,** ப. 67

62. தொல். களவு சூத் 16

63. தொல். களவு இளம் ப. 38

64. அகத்தியலிங்கம் - **வெள்ளிவீதியார் கவிதைகளின் உருவமும் உள்ளடக்கமும்** (கட்டுரை) ப.1

65. தொல். களவு. சூத். 11 இளம்.

66. தொல். களவு. சூத். 11 நச்.

67. தொல். களவு. சூத். 11

68. உ.வே.சாமிநாதையர் - **குறுந்தொகை மூலமும் உரையும்**, ப. 303

69. மேலது ப. 302

70. மேலது ப. 194

71. மேலது ப. 482

72. தொல். களவு. சூத். 16 நச்

73. தொல் களவு. சூத். 16

74. அ. நாராயணசாமி ஐயர், **நற்றிணை நானூறு மூலமும் உரையும்** ப. 375

75. தொல். களவு சூத். 11

76. அ. நாராயணசாமி ஐயர் - **நற்றிணை நானூறு மூலமும் உரையும்** ப.162

77. தொல். களவு சூத். 23 நச்

78. உ.வே.சாமிநாதையர் - **குறுந்தொகை மூலமும் உரையும்**, ப. 653

79. தொல். களவு 23 நச்

80. மு. வேங்கடசாமி - **அகநானூறு** ப. 228

81. பின்னிணைப்பு: 9

82. தொல் அகத். சூத் 5

83. பின்னிணைப்பு - 10

84. அ. நாராயணசாமி ஐயர்- **நற்றிணை நானூறு மூலமும் உரையும்** ப. 311

85. தொல். கற்பு. சூத். 18

86. தொல் கற்பு. சூத். 5

87. தொல். கற்பு. சூத். 6

88. தொல். கற்பு சூத் 6

89. உ.வே.சாமிநாதையர் - **குறுந்தொகை மூலமும் உரையும்**, ப. 110

90. தொல் கற்பு. சூத். 6

91. உ.வே.சாமிநாதையர் - **குறுந்தொகை மூலமும் உரையும்**, ப. 301

92. மேலது ப. 302

93. தொல். கற்பு. சூத். 6 இளம்

94. தொல் களவு. சூத். 31 நச்

95. தொல் கற்பு. சூத். 46 நச்

96. உ.வே.சாமிநாதையர் - **குறுந்தொகை மூலமும் உரையும்,** ப. 269

97. தொல் கற்பு சூத். 21

98. தொல் கற்பு சூத் 9 இளம்

99. தொல். கற்பு சூத். 9 நச்

100. அ.நாராயணசாமி ஐயர் - **நற்றிணை நானூறு மூலமும் உரையும்** ப. 112

101. மேலது ப. 113

102. மு.வேங்கடசாமி - **அகநானூறு** ப. 112

103. வ.சுப. மாணிக்கம் - **தமிழ்க்காதல்** ப. 291

104. தொல். கற்பு சூத். 50

105. உ.வே.சாமிநாதையர் - **குறுந்தொகை மூலமும் உரையும்**, ப. 162

106. தொல். கற்பு. சூத். 10 இளம் நச்

107. உ.வே.சாமிநாதையர் - **குறுந்தொகை மூலமும் உரையும்**, ப. 651

108. வ.சுப. மாணிக்கம் - **தமிழ்க்காதல்** பக. 288 - 289

109. மேலது ப. 291

110. பின்னிணைப்பு.இயல் நான்கு 11

111. தொல் அகத் சூத் 5

112. தொல் அகத் சூத் 6

113. தொல் அகத் சூத் 14

114. பின்னிணைப்பு - 12

115. தொல். கற்பு சூத் 5

116. தொல் கற்பு சூத் 6 இளம்

117. தொல் கற்பு. சூத். 6 நச்

118. உ.வே.சாமிநாதையர் - **குறுந்தொகை மூலமும் உரையும்**, ப. 200

119. தொல். கற்பு சூத் 53.

# ஐந்தாமியல்

## புறப்பாடல் திணைத்துறையாய்வு

சங்ககாலப் பெண்பாற்புலவர்கள் பாடிய புறப்பாடல்கள் புறநானூறு, பதிற்றுப்பத்து, பத்துப்பாட்டு ஆகிய மூன்று நூல்களிலும் இடம்பெற்றிருக்கின்றன. புறநானூற்றில் பத்தொன்பதிமரும், பதிற்றுப்பத்தில் காக்கைப் பாடினியார் நச்செள்ளையாரொருவரும், பத்துப்பாட்டுள் முடத்தாமக்கண்ணியாரும் பாடியுள்ளனர்.

பெண்பாற்புலவர் பாடிய புறநானூற்றுப் பாடல்கள் அறுபத்தைந்து. இப்பாடல்கள் பாடாண் (21), வாகை (17) தும்பை (10), பொதுவியல் (9), கைக்கிளை (3), கரந்தை (2), வெட்சி (1), காஞ்சி (1) என்று ஒன்பது திணைகளிலும் இடம்பெற்றுள்ளன. பெண்பாற்புலவர்களின் புறநானூற்றுப்பாடல்களில் பாடாண்திணைப்பாக்கள் மிகுதி[1]. இத்திணைப்பாக்கள் முதலில் ஆராயப்படுகின்றன.

### பாடாண்திணையும் துறையும்

பெண்பாற்புலவரில் புறநானூற்றில் மிகுதியான பாக்கள் பாடியவர் ஔவையார். இவர் முப்பத்துமூன்று பாடல்கள் பாடியவர். இதில் பாடாண்திணையில் பதின்மூன்று பாடல்கள் உள்ளன. நெட்டிமையாரும், மாறோக்கத்து நப்பசலையாரும் இத்திணையில் மும்மூன்று பாக்கள் பாடியிருக்கின்றனர். குறமகள் இளவெயினியாரும், பேய்மகள் இளவெயினியாரும் முறையே ஒவ்வொரு பாடல் பாடியவர்கள். பாடாண்திணையில் இயன்மொழித்துறைப் பாக்கள் மிகுதி. இத்துறையில் பத்துப்பாடல்கள் அமைந்துள்ளன. ஔவையார் (92,96,97,102,390); ஐந்தும், நெட்டிமையார் மூன்றும் (9,12,15); குறமகள் இளவெயினியார் ஒன்றும் (157); மாறோக்கத்து நப்பசலையார் ஒன்றுமாகப் (39) பாடல்கள் பாடியுள்ளனர். மற்றுள்ள பாடல்களில் பரிசிற்றுறையில் (126, 206,) இரண்டும், பரிசில் விடைத்துறையில் (140) ஒன்றும், வாழ்த்தியலில் (91,367) இரண்டுமாகப் பாக்கள் உள்ளன.

### பாடாண்திணை

பாடாண்திணையாவது 'ஒருவனுடைய கீர்த்தியும் வலியும் கொடையும் அளியும் ஆகிய இவற்றைத் தெரிந்து சொல்லுதல்'. தொல்காப்பியர் பாடாண்திணைக்கு இலக்கணம் வகுக்கும் போது,

"பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே" [2]

என்று கூறுவாறே யன்றி விளக்கமாகக் கூறவில்லை. புறப்பொருள் வெண்பாமாலையில்,

"ஒளியும் ஆற்றலும் ஓம்பா வீகையும்
அளியும் என்றிவை ஆய்ந்துரைத்தன்று" [3]

என்று ஒரு தலைவனுடைய புகழும், வலியும், கொடையும், தண்ணளியையும் ஆராய்ந்து சொல்வது என்பர் ஐயனாரிதனார். பாடாண்திணைக்கு அறிஞர் இராகவையங்கார் 'பாடாணாவது புகழ் முதலியவற்றை விரும்பிய ஆண்மகன் ஒருவனிடம் பரிசில் வேண்டி, ஒரு புலவன் அவன் குணம் செயல் முதலியவற்றைப் புகழ்ந்து பாடுவதாகும்[4] என்பர் 'ஒருபயன் கருதியே பாடுதலும் பாடப்படுதலுமாக அமைவது பாடாண்திணையாம்'[5] என்றும் "பாடாண் திணையாவது - கொடையாரைப் புலவர்கள் பாடுவது" [6] என்றும் "போர் மறவர் பால் அமைவனவாகிய வெட்சி முதலிய புறத்திணைகளிலும் குற்றமற்ற மனைவாழ்க்கையாகிய அகத்திணையிலும் அமைந்த செயல்களாய்த் தலை மக்களுக்குரிய கல்வி, தறுகண், இசைமை, கொடைமை எனச் சொல்லப்பட்ட பெருமிதப் பண்புகளாய்ப் புலவர் பாடுதற்கமைந்த ஒழுகலாறு[7] என்று நா.செயராமனும் கூறுவர். எனவே, பாடாண்திணையாவது வேந்தர், மன்னர், வீரனின் சிறந்த பண்புகளையும், கொடைத்தன்மையையும் பாடுவது என்பதுப் பெறப்படும். பெண்பாற்புலவர் பாடாண் பாடல்களில் ஔவையார் அதியமான் நெடுமான் அஞ்சியையும், அதியமான் மகன் பொகுட்டெழினியையும் பாடியுள்ளார். இப்பாடல்கள் இவர்களின் வீரம், கொடை, புகழ் போன்றவற்றைச் சுட்டுவன நெட்டிமையார் பாடிய இத்திணைப் பாடல்கள் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதியின் வீரப்பண்பினைச் சுட்டுகிறது. மாறோக்கத்து நப்பசலையாரின் இத்திணைப் பாடல் சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவனின் வீரம், கொடைப்பண்புகளைக் குறிப்பிடுவன. குறமகள் இளவெயினியார் ஏறைக்கோனைப்பாடிய பாடல் வீரத்தையும், அவனின் உயர் பண்புகளையும் கூறுகின்றன. பேய்மகள் இளவெயினியார் சேரமான் பாலைபாடிய பெருங்கடுங்கோவைப் பாடிய பாடல் அவன் கொடை, வீரப்பண்புகளைச்சுட்டுவன.

இப்பாடாண் பாடல்கள் ஈண்டு துறைவாரியாக ஆராயப்படுகின்றன.

## இயன்மொழித்துறை

சங்க இலக்கியத்தில் புறநானூற்றில் பாடாண்திணையில் 142 பாடல்கள்[8] உள்ளன. இவற்றில் பெண்பாற்புலவர்களின் பாடாண்திணைப் பாக்களும் அடங்கும். இயன்மொழித் துறைப்பாடல்கள் மொத்தம் ஐம்பத்தெட்டு[9] இதில் பெண்பாற்புலர்கள் பாடியன பத்து. இயன் மொழித்துறைக்குத் தொல்காப்பியர்,

"அடுத்தூர்ந்து ஏத்திய இயன்மொழி வாழ்த்து" [10]

என்று, நேரே சென்று அவன் இயல்பினைப் புகழ்ந்து வாழ்த்துதல் இயன்மொழி என்பர். இதற்குப் புறப்பொருள் வெண்பாமாலை,

"இன்னோர் இன்னவை கொடுத்தார் நீயும்
அன்னோர் போல அவையெமக் கீகென
என்னோரும் அறிய எடுத்துரைத்தன்று "[11]

என்றும்,

"மயலறு சீர்த்தி மான்றேர் மன்னவன்
இயல்பே மொழியினும் அத்துறையாகும்" [12]

என்று மன்னனிடம் சென்று இன்னார் இவை கொடுத்தார் அதுபோல நீயும் எமக்குக் கொடு என்று கேட்பதும், மன்னவனின் இயல்பை எடுத்துக் கூறினும் இயன்மொழியாகும் எனச்சுட்டும்.

தொல்காப்பியர் சுட்டிய 'அடுத்தூர்ந்தேத்திய' என்பதற்கு இளம்பூரணார், தலைவனது வெற்றியையும், பண்பையும் புகழ்வது என்றும், அது இயல்மொழி எனவும், வாழ்த்து எனவும், இயல்மொழி வாழ்த்து எனவும் மூவகைப்படும்[13] என்று ஒரு துறையை மூன்றாக்கிக்காட்டுவர்.

"மன்னன் இயல்பை மட்டும் புகழ்வது இயல்மொழி என்றும்,
வாழ்த்துக் குறிப்போடு கூடியது இயல்மொழி வாழ்த்தொன்றும்[14]

சுட்டுவர் என்பர் நா.செயராமன். புறநானூற்றில் இயன்மொழித் துறை என வகுக்கப்பட்ட பாடல்கள் வீரம், வெற்றி, கொடைப் பண்புகளைப் பேசுவனவாக

அமைந்துள்ளன. புரவலனுடைய இயல்பை மொழிவது இயன்மொழியாகும். இதில் புலவன் புரவலன் நீர்மைகளைக் கூட்டிக் குறைத்துப்பாடாது மெய்ம்மையைப் பாடவேண்டும். ஔவையார் அதியமான் நெடுமானாஞ்சியைப் பாடும் போது,

"யாழொடுங் கொள்ளாப் பொழுதொடும் புணரா
பொருளறி வாராவாயினுந் தைந்தையர்க்
கருள்வந் தனவாற் புதல்வர் தம்மழலை
என்வாய்ச் சொல்லு மன்ன வொன்னார்
கடிமதி லரண் பலகடந்த
நெடுமானஞ்சி நீ யருளன் மாறே"

(புறம். 92)

என்று, புதல்வர் மொழியும் மழலைச் சொல் பொருள்நலமும், இடச் சிறப்பும் இல்லாவாயினும் தந்தையர் அருள் சுரத்து அச்சொற்களைக் கேட்டது போல, என் வாய்ச் சொல்லையும் நீ அருள் சுரந்துக் கேட்கிறாய் என்று அவனது குண இயல்பைப் பாடுகிறார். அதியமான் பகைவரின் மதிலாகிய அரணையழித்த வீரமுடையவன் என்று அவன் குணம், வீரம் இவற்றை பாடியதால் இப்பாட்டு இயன் மொழித்துறையாயிற்று. 'இப்பாடலுக்கு, அதியமான் தான்நெடிது உயிர்வாழ்தலினும் ஔவையர் நெடிது வாழ்தலால் உலகுயிர்கட்கு ஆக்கமாகும் என்ற பேரருளால் தான் பெற்ற நெல்லிக்கனியைத் தந்தருளியது கண்ட ஔவையார் மனங்குழைந்து நாக்குழறித்தாம் நினைத்தவாறெல்லாம் அவனைப் பாராட்டக் கருதினார்'[15] என்ற கருத்துண்டு. இக்கருத்தால் ஔவையார் அதியனின் கொடை மனதைப் பாராட்டிப் பாடினார் என்றறிய உதவும்.

அதியமான் மகன் பொகுட்டெழினியைப் பாடிய ஔவையார். அவன் இயல்பைப் பாடுகிறார்.

"அலர்பூங் தும்பை யம்பகட்டு மார்பின்
பூப்போல் உண்கண் பசந்து தோள் நுணுகி
நோக்கிய மகளிர்ப் பிணித்தன்று ஒன்றே
விழவின் றாயினும் படுபதம் பிழையாது

மையூன் மொசித்த வொக்கலொடு துறைநீர்க்

கைமான் கொள்ளு மோவென

உறையுண் முனியுமவன் செல்லு மூரே"

(புறம்.96:4-8)

என்ற பாடலில், தும்பை மாலையணிந்த வீரன் பொகுட்டெழினி என்றும், அவன் இளமையழகு மகளிரைப் பசப்புறச்செய்யும் என்று அவன் இளமையையும், அவன் சுற்றத்தார்க்கு விருந்தூட்டும் பண்பினன் என்றும் அவன் இயல்பினைப் பாடியதால் பாடாண்திணை இயன் மொழித்துறையாயிற்று இக்காலத்தார் மெய்யியல் என்று கூறுமாறு இப்பாட்டு மெய்ம்மையைப் பாடுகின்றது. "அதியமானை ஔவையார் பாடிய மற்றொரு பாடலில்,

ஒல்வான் அல்லன் வெல்போரான் எனச்

சொல்லவும்தேறீர் ஆயின் மெல்லியல்

கழற்கனி வகுத்த துணைச்சில் ஓதிக்

குறுந்தொடி மகளிர் தோள்விடல்

இறும் பூ தன்று அஃது அறிந்தாடுமினே"

(புறம். 97:21-25)

என்று அதியமான் பகைவீரருடன் போர் புரிந்ததால் அவனுடைய வாள் உருவிழந்துள்ளது; வேல் படைகலங்கி நிலை திரிந்துளது; களிறு போரிட்டதால் தொடிகழிந்துள்ளன; குதிரைகள் போரிட்டதால் குளம்புகள் மாறுபட்டன. அதியமான் பகைவர் எறிந்த அம்புகளால் துளையுண்ட கேடயத்தை யேந்தியுள்ளான். இதனால் இவனுடன் பகைத்தவர் உயிருடன் செல்வதில்லை. ஆதலால் உங்கள் மூதூர் உங்களுக்கு உரித்தாகல் வேண்டின் திரை செலுத்துக. திரை கொடாது பகைத்தால் உங்கள் உரிமைமகளிர் தோளைப் பிரிவது உறுதி என்கிறார். இப்பாடலில் அதியமானின் வீரம் பாடப்பட்டுள்ளது. அதியமான் வீரக்குணம் இயல்பாகப் பெற்றவன் என்று இயல்பைப் பாடுவதால் பாடாண்திணை இயல்மொழித் துறையாயிற்று.

பொகுட்டெழினியப் பாடிய ஔவையார் 'எருதே இளைய நுகமுண ராவே'

என்ற பாடலில், உமணர் பாரமேற்றிய வண்டியில் பாதுகாப்பாகப் பயன்படுத்தும் சேமஅச்சுப் போல தந்தைக்கு பாதுகாப்பாக இருக்கின்றாய். உன் புகழ் விளங்கும் கொடைப் பண்பால் உன்னுடைய நாட்டில் மதியால் இருள் நீங்குவது போல வறுமை இல்லை என்று பொகுட்டெழியின் கொடை, வீரப்பண்பைப் பாடியதால் இயன்மொழித்துறையாயிற்று.

ஔவையார் பாடிய பாடாண்திணை இயன்மொழித்துறைப்பாடல்களில் அதியமான் நெடுமானஞ்சி, அதியமான் மகன் பொகுட்டெழினியை இருவருக்கும் இயல்பாக அமைந்த வீரமும், கொடைப்பண்புகளும் பாடப்பட்டுள்ளன.

பெண்பாற்புலவரான நெட்டிமையார் பாடியபாடல் மூன்றும் இத்திணைத்துறையில் அமைவன. இப்பாக்கள் பாண்டிய மன்னன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி செய்த அறப்போரையும், கொடைப்பண்பையும் பாடுவன. இவர் பாடிய ,,

"ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடையீரும் பேணித்
தென்புலம் வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்
பொன்போல் புதல்வர் பெறாஅதீரும்
எம் அம்பு கடி விடுதும் நும் அரண் சேர்மின் என "

(புறம். 9 : 1-5)

என்று அவன் பேருக்குச் செல்லுமுன் பசு, பார்ப்பனர், பெண்டிர், ஆண் மகவு ஈனாதோர் ஆகியவர்களை எல்லாம் பாது காப்பான இடங்களில் சேர்க என்று அறிவுறுத்திப் போர் செய்ததைக் கூறுகிறார் புலவர். அவன் கொடைத்தன்மையை,

"அறத்தாறு நுவலும் பூட்கை மறத்திற்
கொல்களிற்று மீமிசைக் கொடிவிசும்பு நிழற்றும்
எங்கோ வாழிய குடுமி தங்கோச்
செந்நீர்ப் பசும் பொன் வயிரியர்க் கீத்த"

(6-9)

என்று, அவன் கூத்தருக்குப் பொன்னைக் கொடுத்தவன் என்று கொடைத்தன்மையையும் சொல்லி,

"முந்நீர் விழவி னெடியோன்

நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே"

(10-11)

என்று பன்னூறு ஆண்டுகள் வாழவேண்டும் என்று வாழ்த்துவதால் இப்பாடல் பாடாண்இயன்மொழி வாழ்த்து துறையாயிற்று. இம்மன்னனைப் பாடிய மற்றொரு பாடலில்,

"பாணர் தாமரை மலையவும் புலவர்

பூநுதல் யானையொடு புனைதேர் பண்ணவும்"

(புறம். 12 : 1-2)

என்று அவன் கொடைவழங்கும் இயல்பினைப்பாடி, பகைத்தவனின் நாடுகளைக் கைப்பற்றிக் கொண்டு அவர்களை ஏதுமில்லாமல் செய்யும் (4) வீரத்தைப் பாடியதால் இயன்மொழித்துறையாயிற்று.

இவர் பாடிய மற்றொரு பாடலில் முதுகுடுமிப்பெருவழுதியின் வீரத்தையும், அவன் அறப்பண்பையும், பாடுகிறார். அப்பாடலில் "பகை நாட்டை அழிக்கும் அவன் போர்த்திறத்தைப்பாடி, உன்னிடம் தோற்றோடிய பகைமன்னர்களின் எண்ணிக்கை மிகுதியா? நீ செய்த வேள்விகளின் எண்ணிக்கை மிகுதியா? (புறநா. 15) என்று பாடுகிறார். இதனால் அவன் வேள்விசெய்யும் இயல்பினன் என்றும் அவன் வீரமும் பாடியதால் இப்பாடல் இயன்மொழித் துறையாயிற்று. நெட்டிமையார் பாடல் மூன்றிலும் பெருவழுதியின் வீரம், கொடை, அறப்பண்புகள் சுட்டப்பட்டுள்ளன.

குறமகள் இளவெயினியார் குறவர் குலத்தலைவனான ஏறைக்கோனை பாடாண்திணையில் பாடியுள்ளார். அப்பாடலில்,

"தமர் தன் தப்பின் அது நோன்றலும்

பிறர் கையறவு தான் நாணுதலும்

படைப்பழி தாரா மைந்தினன் ஆகலும்

நும் மோர்க்குத்தகுவன அல்ல எம்கோன்"

(புறம். 157: 1-4)

என்று ஏறைக்கோன் பிறர் பிழை பொறுப்பவன், பிறரின் வறுமை கண்டு நாணுபவன்,

படையாளுமிடத்துப் பழிபடாமையுடையவன், வேந்தர் அவையில் பெருமிதமுற்று விளங்கும் அவன் குணத்தைப்பாடி இப்பண்புகள்,

'பெருங்க னாடனெம் மேறைக்குத் தகுமே'

(13)

என்று ஏறைக்கோன் பண்பினைப் பாடியதால் இயன்மொழித் துறையாயிற்று. இங்கு அவன் இயல்பு முழுமையும் விவரிக்கப்பெற்றது.

பாடாண்திணையில் பாடப்பெறுகின்ற ஆண்மகனின் இயல்புகளைப் பேசுவதன்றி அவன் முன்னோர் புகழையும் சங்கப்புலவர்கள் பேசுகின்றனர். புறத்திணையில் நக்கினார்க்கினியர் 'அவன்குலத்தே' செய்தியையும் அவன் மேலேற்றிப்புகழ்தல்[16]. இத்துறை என்பர். இது தொல்காப்பியமும் வெண்பாமாலையும் விளம்பாத கருத்து. இவ்விளக்கத்தை நக்கினார்க்கினியர் புறநானூற்றுப்பாடல்கள் கொண்டே தருகிறார். இதற்கு அடிப்படை பெண்பாற்புலவரான மாறோக்கத்துநப்பசலையார் பாடலேயாகும்.

சோழன்கிள்ளி வளவனை மாறோக்கத்து நப்பசலையார் பாடிய புறநானூறு 39ஆம்பாடலும் இத்திணைதுறையன. இப்பாடலில், கிள்ளிவளவன் புறாவின் துயர் துடைத்த செம்பியன் மரபில் வந்தவன் என்றும், ஈதல் அவனியல்புக்குணம் என்றும், உனது மூத்தோர் தூங்கெயில் எறிந்தவர் என்றும் நீ பகைவனை வெல்லும் வீரமுடையவனென்றும் கூறுவர்,

"இமயஞ் சூட்டிய வேம விற்பொறி
மாண்வினை நெடுந்தேர் வானவன் றொலைய
வாடா வஞ்சி வாட்டுநின்
பீடுகெழு நோன்றாள் பாடுங்காலே "

(புறநா. 39:15-18)

என்று இமயத்தில் வில் கொடியைப் பதித்த சேரனின் தேரையும் கொடியையும் அழித்ததோடு, அவனுடைய அழிவில்லாத கருவூரையும் அழித்தவன் என்று அவன் வீரத்தையும், அவன் முன்னோர் வரலாறும் பாடியதால் இயன்மொழியாயிற்று.

இவ்வியன்மொழிப் பாட்டுக்கள் பாடிய புரவலரும், புலவரும் பலர், ஆனால் பாடப்பட்ட செய்தி புரவலனின் வீரம் வெற்றி கொடைப் பண்பைப் பாடுவனவாகவே

அமைந்துள்ளன; இவ்வியன்மொழித்துறையில் பரிசில் வேண்டியகுறிப்பில்லை. சங்கப்புறப்பாட்டில் புலவர்கள் மன்னர்களிடம் பரிசில் வேண்டியும் வேறுகாரணம் கருதியும் பாடல் பாடியுள்ளனர். ஆனால் இயன்மொழிப்பாடல்கள் மன்னர்களின் இயல்பையே விவரிக்கின்றன. ஆதலால், இவை இயன்மொழித்துறையாயின. இப்பாடலில் நேரடியாகப் பரிசில் வேண்டிய குறிப்பில்லை. ஒருவேளை, இவைபுலவர்கள் பரிசில் பெற்றபின் இயல்பை அறிந்து பாடியனவர்தல் கூடும். மேற்காட்டிய பாக்களில் இன்னபரிசில் தருக என்றோ இன்னபரிசில் தந்தான் வாழ்க என்றோ பாடிய குறிப்புப்பாக்களில் கிடையாது. பாடாண்திணை இயன் மொழித்துறைப்பாடல்கள், சங்ககாலப் பெண்பாற்புலவர்கள் மெய்ம்மையே பாடுமியல்பினர் என்பதைக் காட்டுகின்றன. வேந்தர்களுக்கும் பெண்பாற்புலவர்களுக்குமிடையே மதிப்புறும் உறவே இருந்தது. அதனால் அப்பாடல்கள் இயல்பாகவும் ஓட்டமாகவும் அமைத்திருக்கின்றன.

## பரிசிற்றுறை

சங்கப்புலவர்கள் மன்னனைப் பாடிப்பரிசில் பெற்று வாழ்ந்தவர்கள். பரிசில் தொடர்பான நிகழ்ச்சிகள் நடந்ததை இலக்கியமும் இலக்கணமும் சுட்டுகின்றன.

தொல்காப்பியர்,

"கொடுப்போர் ஏத்திக் கொடாஅர்ப்பழித்தலும்
சேய்வரல் வருத்தம் வீட வாயில்
காவலர்க் குறைத்த கடைநிலையானும்"[17]

என்று பரிசிற்றுறையைக், கொடுப்பவரை ஏத்திப் பாடுதலும், கொடாதோரைப் பழித்துப்பாடுதலும், பரிசில் வேண்டிச்சென்று வாயிற்காவலர்க்கு உரைத்த கடை நிலையையும் சுட்டுவர். அதுபோன்று பரிசில் பெற்று விடைபெறுவதை,

"பரிசில் கடைஇய கடைக் கூட்டு நிலையும்
பெற்ற பின்னரும் பெருவள னேத்தி
நடைவயின் தோன்றும் இருவகை விடையும்"[18]

என்று புலவன் 'தான் போதல் வேண்டும்'[19] எனக் கூறுதலும், பரிசில் வழங்கியபின்

அரசன் விடுப்பப் போதலும் என்று விடைபெறுதல் இருவகையாகும் எனும் தொல்காப்பியம். பரிசிற்றுறை என்பதற்குப் புறப்பொருள் வெண்பாமாலை,

"மண்ணகம் காவல் மன்னர் முன்னர்
எண்ணிய பரிசில் இதுவென உரைத்தன்று"[20]

எனப்பகரும். தொல்காப்பியர் பரிசில் தொடர்பான துறைகளைக் கூறும்போது பரிசிற்றுறையெனத்தனித்துக் கூறவில்லை. கொடுப்போரை ஏத்தலும், கொடாதாரைப் பழித்தலும் என்பர். இதன் பொருள் மன்னவன் முன் பரிசில் வேண்டுவதாகும். ஐயனாரிதனார் பரிசிற்றுறையைக் குறிப்பிடும்போது புலவன் இன்ன பரிசில் என்று வேண்டுவதாகக் குறிப்பிடுவர். இவ்வாறு பரிசில் பெறுதல் தொடர்பான துறைக்கள் பரிசிற்றுறையாயிற்று.

இத்துறையில் புறநானூற்றில் பதினொரு[21] பாடல்கள் இடம்பெற்றுள்ளன. இப்பரிசிற்றுறையில் பெண்பாற்புலவர்கள் பாடியன இரண்டுபாக்கள், ஔவையார் அதியமானிடம் பரிசில் வேண்டிச் சென்றார். அவ்வாறு சென்றபோது பரிசில் கொடுக்கக் காலதாமதமானது. அப்போது மன்னனிடம் கூறி விடைபெற எண்ணினார். மன்னனைச் சந்திக்க இயலவில்லை. வாயில் காப்பவனை அழைத்து

"வாயிலோயே வாயிலோயே
வள்ளியோர் செவிமுதல் வயங்குமொழி வித்தித்தாம்
உள்ளியது முடிக்கு முரனுடை யுள்ளத்து
வரிசைக்கு வருந்துமிப் பரிசில் வாழ்க்கைப்
பரிசிலக் கடையா வாயிலோயே"

(புறநா. 206 : 1-5)

என்று அதியமான் பரிசிலர்க்குக் கொடுக்கும் கொடையாளன். அவன் வாயில் பரிசிலர்க்காக எப்போதும் திறந்திருக்கும்; ஆனால் என்தரம் அறியாது இருக்கின்றான் என்று பரிசில் தரக்கால நீட்டிப்பு ஏற்பட்டவுடன் பாடுகிறார்.

"அறிவும் புகழுமுடையோர் மாய்ந்தென
வறுந்தலை யுலகமு மன்றே யதனாற்
காவி னெங்கலனே சுருங்கி னெங்கலப்பை

மரங்கொஃ தச்சன் கைவல் சிறாஅர்
மழுவுடைக் காட்டகத் தற்றே
எத்திசைச் செலினு அத்திசைச் சோறே"

(புறநா. 206: 8-13)

என்று, அறிவும் புகழுமுடையோர் மாய்ந்ததால் உலகமும் வறுமையடையாது. எத்திசைச் சென்றாலும் அத்திசையில்சோறு பெறுவேன் என்று பாடினார். இப்பாடல் ஔவையார் அதியமானிடம் நேரில் கூறவில்லை. வாயிற்காப்பவனிடம் கூறுகின்றார். இப்பாடலுக்குப் பரிசிற்றுறை என்று துறை வகுப்பர். இப்பாட்டு மன்னன் முன்கூறுவதென்றால் பரிசிற்றுறை என்பது பொருந்தும். பரிசில் கேட்காது, பரிசில் தரவில்லை என்று வாயிற்காவலனிடம் கூறுவது கடைநிலைத்துறை என்ற துறைக்குப் பொருந்துவனவாக உள்ளது. பெண்பாற்புலவர்கள் பாடிய கடைநிலைத்துறை இரண்டிலும் பரிசில் பெற்றதற்கான குறிப்புண்டு. ஆனால் இப்பாட்டு பரிசில் பெறாது ஔவையார் பாடுவதாக உள்ளது. பரிசிற்றுறையில் அமைந்த மற்றொரு பாடல் மாறோக்கத்து நப்பசலையார் பாடியது. இப்பாடலில், மலையமான் திருமுடிக்காரியைப் பாடியுள்ளார். அவனிடம் பரிசில் வேண்டிச் சென்றபோது,

"ஒன்னார் யானை யோடைப் பொன்கொண்டு
பாணர் சென்னி பொலியத் தைஇ
வாடாத்தாமரை சூட்டிய விழுச்சீர்
ஓடாப்பூட்கை உரவோன் மருக"

(புறநா. 126:1-4)

என்று பாணருக்குப் பொற்றாமரைப்பூவை வழங்கிய மரபில் உதித்தவனே என்று அவன் மரபினைப் போற்றுகிறார். முள்ளூர் நாட்டு மன்னனான உன்னை,

"புலன் அழுக்கற்ற அந்த ணாளன்
இரந்து சென்மக்கட்கு இனி இடன் இன்றிப்
பரந்து இசை நிற்கப் பாடினன்"

(புறம் 126:11-13)

என்று கபிலனைப் பாராட்டி, இனி அவன் பாடியதை விட யான் பாட இயலாது என்று பரிசில் வேண்டுகிறாள். இப்பாடலில் முன்னோர் கொடைப்பண்பும், கபிலனும்

புகழ்ந்து பாடும் சிறப்புப்பெற்றவன் என்று கூறி, நீ

'அருஞ்சமந் ததையத் தாக்கி நன்றும்;
நண்ணாத்தெவ்வர்த் தாங்கும்,
பெண்ணையம் படப்பை நாடுகிழ வோயே'
(21-23)

என்று பகைவரை வெட்டி வீழ்த்திய வீரத்தையும் பாடியவர். இப்பாடல் அவன் மரபு, கொடை, வீரம் இவற்றைப்பாடியதால் பாடாண்திணை, இப்பாடலில், பரந்து இசை நிற்கப் பாடினான் என்று கபிலர் பாடியதைக்கூறுகிறார்; அதனைவிடச் சிறப்பித்துப் பாடஇயலாது என்று வேண்டுகிறார். எம்மை இன்மையானது துரப்ப நின் வண்மை முன்னின்று ஈர்ப்ப வந்து சில பாடுவே மாயினம் என்கிறார். பாடலில் இன்னபரிசில் வேண்டும் என்று கேட்காது, பரிசிலர்க்குப் பொற்றாமரைப்பூவை வழங்கியதைக்குறிப்பிட்டுப்பாடுகிறார். இக்குறிப்பினால் இவர் அப்பரிசை வேண்டுவதாகிறது.

ஔவையாரின் பரிசிற்றுறைப் பாட்டு காலம் நீட்டிக்காது பரிசில் வேண்டுவதும், மாறோக்கத்து நப்பசலையார் பாட்டு கபிலனை விட யான் பாடயியலாது எனவே பரிசில்வேண்டும் எனக் கேட்பதுமாக அமைகின்றன. இது தொல்காப்பியக் கோட்பாட்டை ஒத்துள்ளது. இன்ன பரிசில் வேண்டும் என்று ஐயனாரிதனார் குறிப்பிடுவது போல, இப்பரிசிற்றுறைப் பாடலில் இன்ன பரிசில் வேண்டுமென்று பெண்பாற்புலவர் பாடிலர்.

ஔவையார் பரிசில் வேண்டும் பாடலில் 'உள்ளியது முடிக்கும் உரனுடைய உள்ளத்து வரிசைக்கு வருந்துமிப்பரிசில் வாழ்க்கை' என்கிறார். மாறோக்கத்து நப்பசலையார் உன் மரபிலுள்ளோர் பொற்றாமரைப்பூவைப் பரிசிலர்க்கு வழங்கினர் என்பதால் அப்பரிசுப்பொருளே இவர் வேண்டுவது எனக்கொண்டு பரிசிற்றுறையாகத்துறை கொள்ளுவது பொருந்தும்.

**பரிசில் கடாநிலை**

பாடாண்துறைகளுள் ஒன்று; இத்துறையில் புறநானூற்றில் பதினேழு பாடல் உள[22]. பெண்பாற்புலவர்கள் பாடியன இரண்டு. தொல்காப்பியரும் ஐயனாரிதனாரும்

பரிசில் கடாநிலையென்று சுட்டவில்லை. பரிசில் பெறவிரும்புவோன் பரிசில் வேண்டுவது ஒரு துறையாகக் கருதப்பெறும். தொல்காப்பியர் 'பரிசில் கடை இயகடைக்கூட்டு நிலை' என்று பரிசில்வேண்டி வாயிலில் நிற்பதைக் குறிப்பிடுவர். ஐயனாரிதனார் மன்னன் முன்னர் எண்ணிய பரிசில் இதுவென வேண்டிநிற்பது என்று குறிப்பிடுவர். இரண்டும் பரிசில் வேண்டுவதாக அமைந்ததாகும். இதற்கு நா. செயராமன்,

> "பரிசில் கடாநிலை, பரிசில் துறை இரண்டிற்கும்
> பாடப்படும் செய்தி ஒன்றேயாகும். இதற்குப்பரிசில்
> கடாநிலையென்று நச்சினார்க்கினியர் பெயரிட,
> ஐயனாரிதனார் பரிசில் துறை என்று பெயரிட்டுள்ளார்"[23]

என்று கூறுவது ஏற்றுக்கொள்ளத்தக்கதாகும். இவ்விருதுறைப் பாடல்களிலும் பொருள் வேறுபாடில்லை. இத்துறையில் ஔவையார் ஒருபாடல் பாடியுள்ளார். அதியமானிடம் பரிசில் வேண்டிச் சென்ற போது பரிசில் தரக்காலதாமதமானதும். தன் நெஞ்சுக்குச் சொல்லுவாளாய்

> "ஒருநாட் செல்லம் இருநாள் செல்லலம்
> பலநாள் பயின்று பலரொடு செல்லினும்
> தலைநாட் போன்ற விருப்பினன் மாதோ
> அணிபூ ணணிந்த யானை யியறேர்
> அதியமான் பரிசில் பெறூஉங் காலம்
> நீட்டினும் நீட்டா தாயினும் யானைதன்
> கோட்டிடை வைத்த கவளம் போலக்
> கையகத் ததுவது பொய்யாகாதே
> அருந்தே மாந்த நெஞ்சம்
> வருந்த வேண்டா வாழ்கவன் றாளே"

(புறம்: 101)

என்றுபாடுகிறார். 'கோட்டிடை வைத்த கவளம் போல' அதியமான் பரிசில் வழங்குவது உறுதி என்று கொடைச்சிறப்பைக்கூறி எத்துணை நாள் சென்றாலும் விருந்தினரை முதல்நாள் உபசரித்ததைப் போல உபசரிக்கும் அவனுடைய

பண்பைக்கூறியதால் பாடாண் திணையாகியது. இப்பாடலில் பரிசில் தருவது உறுதி. தராமையால் தருக என்று கேட்பதால் இது பரிசில் வேண்டுவதாய்ப் பரிசில்கடா நிலையாயிற்று. இப்பாடலில் பரிசில் விரைந்து வேண்டும் ஔவை 'நெஞ்சிடம் வருந்த வேண்டாவாழ்க' என்கின்றாள்.

பேய்மகள் இளவெயினியார் சேரமான் பாலை பாடிய பெருங்கடுங்கோவைப் பாடிப் பரிசில் வேண்டுகிறார். அப்போது,

"புறம் பெற்ற வயவேந்தன்
மறம் பாடிய பாடினியும்மே
ஏருடைய விழுக் கழஞ்சிற்
சீருடைய விழை பெற்றிசினே
இழைபெற்ற பாடினிக்குக்
குரல் புணர்சீர்க் கொளை வல்பாண்மகனும்மே
என வாங்கு
ஒள்ளழல் புரிந்த தாமரை
வெள்ளிநாராற் பூப்பெற்றிசினே "

(புறநா. 11:10-18)

என்றுபாடுகிறார். பாடலில் இளவெயினியார் பரிசில் வேண்டியது கூறப்படவில்லை. சேரனின் வீரம், கொடை சிறப்புமே குறிப்பிடப்பட்டுள்ளன. அதனால் பாடாண்திணையாகியது. இப்பாடலுக்கு உரையாசிரியர்,

"பாடினி இழை பெற்றாள், பாணன் பூப்பெற்றான்,
யான் அது பெறுகின்றிலேன் எனப்பரிசில் கடாநிலை
யாயிற்று இனி, இவள் பேயாயிருக்க, கட்புலனாய
தொரு வடிவு கொண்டு பாடினா ளொருத்தியென"

வும் கூறுவர்[24]. இவ்வுரை கொண்டு பரிசில் வேண்டும் குறிப்புப் பொருளால் பரிசிற் கடாநிலையாயிற்று. பாடல் பொருள் மட்டும் கருத்திற்கொள்ளின் இத்துறையாவதை விட, பாடாண்திணை இயன்மொழித்தறை என்பதே பொருத்தமுடையதாகும்.

எனப்பாடி,

"முத்தீப் புரையக் காண்தக இருந்த
கொற்ற வெண்குடைக் கொடித்தேர் வேந்திர்
யான் அறி அளவையோ இதுவே வானத்து
வயங்கித் தோன்றும் மீனினும் இம்மென
இயங்கு மாமழை உறையினும்
உயர்ந்து மேந் தோன்றிப் பொலிநுந்நாளே"

(13-18)

என்று மூவேந்தரையும் விண்மீனின் அளவையும், பெய்யும் மழைத்துளிகளின் அளவையும் போன்று மிகுந்த நாட்கள் வாழவேண்டும் என்று வாழ்த்துவதால் இப்பாடல் பாடாண் வாழ்த்தியல் துறையாகியது.

**கடைநிலை**

பாடாண்துறைகளுள் ஒன்று. தொல்காப்பியர்,

"சேய்வரல் வருத்தம் வீட வாயில்
காவலர்க் குரைத்த கடைநிலையானும்"[30]

என்பர். நெடுந்தொலைவு வந்தவருத்தம் தீர வாயில் காவலர்க்குத்தன் வரவினைத் தலைவனுக்குக்கூறு என்று கூறுவதாகும். இதற்குத் "வாயிலின்கண் நிற்றல்"[31] என்று உ.வே. சாமிநாதையர் இத்துறைக்குப்பொருள் கூறுவர். ஐயனாரிதனார் கடைநிலை என்று கூறாது வாயில் நிலை என்றார். இதில்,

"புரவலன் நெடுங்கடை குறுகிய என்னிலை
கரவின்றுரையெனக் காவலற் குரைத்தது"[32]

என்பர். இவ்வாறு தொல்காப்பியர் கடைநிலை என்பதை, ஐயனாரிதனார் வாயில் நிலை என்பர். இரண்டும் ஒன்றே,

வாயில் காவலனுக்கு உரைக்கும் செய்தி எனும் பொருள் கொண்டு கடைநிலை என்ற தொல்காப்பியத் துறையை விளக்கினால் ஐயனாரிதனாரது "வாயில்நிலை" எனும் துறை விளக்கம்

பொருத்தமாய் உளது. பரிசில் வினவுதல் எனும் பொருள் கொண்டு கடைநிலை என்ற தொல்காப்பியத் துறையை விளக்கினால் "பரிசில் நிலை" எனும் ஐயனாரிதனார் துறை விளக்கம் பொருத்தமாய் உளது. எனவே, பெயரிலும் பொருளிலும் மாற்றமிருக்கக் காணலாம்"[33] என்பர் நா. செயராமன். இதனால் வாயில்கள் பரிசிலன் நின்று பரிசில் வேண்டுதல் இத்துறைக்கருத்து.

புறநானூற்றில் கடைநிலைத்துறையில் பதினொரு பாடல்கள் காணப்படுகின்றன[34]. இதில் பெண்பாற்புலவரின் இரண்டு பாடல்களும் அடங்கும். ஔவையார் அதியமான் நெடுமான் அஞ்சியின் மகனான பொகுட்டெழினியிடம் பரிசில் வேண்டிச் சென்றபொருநன் வாயிலின் கண் நின்றுபாடியதை,

"மதியேர் வெண்குடை யதியர் கோமான்
கொடும்பூணெழினி நெடுங்கடை நின்றியான் "

(புறநா. 392 : 1-2)

என்ற பாடலடி சுட்டும். பொகுட்டெழினி உபசரித்து பரிசுவழங்கியதை,

"ஊருண் கேணிப் பகட்டிலைப் பாசி
வேர்புறை சிதாஅர் நீக்கி நேர்கரை
நுண்ணூற் கலிங்க முடீஇ யுண்மெனத்
தேட்கடுப்பன்ன நாட்படு தேறல்
கோண்மீனன்ன பொலங்கலத் தளைஇ
ஊண்முறை யீத்த லன்றியுங் கோண்முறை
விருந்திறை நல்கி யோனே"

(13-19)

என்று பொருநன் அணிந்திருந்த கிழித்த உடைநீக்கி வேற்றாடையணியும் வகையில் நுண்ணிய நூலினால் செய்யப்பட்ட ஆடை தந்தான். பொற்கலத்தில் தேறலைக் கொடுத்தான் என்று பாடுகிறார். இப்பாடலில் வாயிற்கண்நின்று பரிசில் வேண்டியதை, 'நெடுங்கடை நின்றியான்' என்றடியாலும், பரிசில் பெற்றதாக ஆடையும், விருந்தும் செய்ததைப் பாடியதால் இப்பாடல் கடைநிலைத்துறைக்குப் பொருந்துவதாகும்.

மாறோக்கத்து நப்பசலையார் அவியனிடம் பரிசில் வேண்டிச் சென்றார். அதனை,

"நுண்கோற் சிறுகிணை சிலம்ப வொற்றி
நெடுங்கடை நின்று பகடுபல வாழ்த்தித்
தன்புகழ் ஏத்தினெனாக"

(புறநா. 383 : 2-4)

என்று "நெடுங்கடை" வாயிலில் நின்று பரிசில் வேண்டியமைக் குறிக்கப்படுகிறது.

"ஒண்பூங் கலிங்கம் உடீஇ நுண்பூண்
வசிந்து வாங்கு நுசும்பின் அவ்வாங்கு உந்திக்
கற்புடை மடந்தை தற்புறம் புல்ல
.........................
.........................
பிறர் பாடு புகழ் பாடிப் படர்பு அறியேனே"

(12-19)

என்று அவியன், 'வறுமை நீங்கும்படி குவிந்திருந்து விரியும் மெல்லிய அரும்பு மலர்ந்த ஆம்பற்பூவைப்போன்ற பரந்துள்ளதாகிய கட்டெளிவை அழகிய மணங்கமழும் மாரிற் பெய்து வண்ணச் செய்து, அரிய காவலையுடைய அகன்ற தன் பெருமனைக்குள் அழைத்து ஆடைகொடுத்தான்' என்கிறார். இப்பாடலில் வாயிலின் நின்று பரிசில் வேண்டிப் பெற்றதால் இது கடைநிலையாயிற்று.

இரண்டு பாடல்களிலும் புலவரின் வறுமையும் அவ்வறுமை நீங்க புரவலன் வாயில் குறுகியதும் அவ்வாறு வந்த புலவருக்கு ஆடையும், பொருளும் கொடுத்தனர் என்றுள்ளன. தொல்காப்பியரும், ஐயனாரும் வாயின்கண் சென்று தன்னிலையைப் புரவலன் கூறிப் பரிசில் வேண்டுவதைக் கடைநிலை எனக் குறிப்பிடுவர். பெண்பாற்புலவரின் இரண்டு பாடல்களிலும் வாயில்கண் நின்று பரிசில் வேண்டிப் பெற்ற செய்தியும் கூறப்பட்டுள்ளன.

### பரிசில் விடை

புரவலனிடம் பரிசில் வேண்டிச் சென்று பரிசில் பெற்று விடைபெறுவது

இது மன்னன் புலவனுக்குக் கொடுக்கும் விடை. இதுவே, புலவன் பரிசில் பெற்று விடைகேட்டல் பரிசில் நிலையாகும்[35]. இதற்கு தொல்காப்பியர்,

"பெற்ற பின்னரும் பெருவளன் ஏத்தி
நடைவயிற் றோன்றும் இருவகை விடையும்"[36]

என்று புரவலன் புலவனுக்குக் கொடுக்கும் விடையும், புலவன் புரவலனிடம் விடைபெறுதல் என்ற இரண்டைக் குறிப்பிடுவர். ஐயனாரிதனார்,

"வேந்தனுள் மகிழ வெல்புகழ் அறைந்தோர்க்கு
ஈந்து பரிசில் இன்புற விடுத்தன்று"[37]

என்ற மன்னன் பரிசில் கொடுத்து விடைகொடுத்ததைக் குறிப்பிடுவர்.

புறநானூற்றில் ஔவையார் பாடிய 140-ஆம் பாட்டு பரிசில் விடைப்பாட்டு. இப்பாடலில் நாஞ்சில் வள்ளுவனிடம் சில அரிசிகள் வேண்ட அவன் எமக்கு மலைபோல் களிற்றைப்பரிசாகக் கொடுத்தான். இதுபோன்ற கொடைமடம் யாண்டுளது என்பர்.

"வளைக்கை விறலியர் படப்பைக் கொய்த
அடகின் கண்ணுறையாக யாஞ்சில்
அரிசி வேண்டினெ மாகத்தான்பிற
வரிசை யறிதலிற் றன்னுந் தூக்கி
இருங்கடறு வளைஇய குன்றத் தன்னதோர்
பெருங்களிறு நல்கி யோனே யன்னதோர்
தேற்ற வீகையுமு ளதுகொல்
போற்றா ரம்ம் பெரியோர் தம்கடனே "

(புறநா. 140 : 3-10)

என்று பரிசில் பெற்ற ஔவையார் அவனின் கொடைப்பண்பினைப் போற்றி அவன் கொடைமடம் உடையவன் என்பதைப் 'போற்றா ரம்ம பெரியோர் தம்கடனே' என்று ஏத்திப் பாடுவதால் இப்பாடல் பெற்ற 'பின்னரும் பெருவளன் ஏத்தி பாடும் மரபினது' ஆதலால் தொல்காப்பியக் கருத்துப்படி இப்பாடல் பரிசில் விடையாயிற்று.

பாடாண்திணைப் பாடல்களில் இயன்மொழிப் பாக்கள் மிகுதி. இதில் வீரம், கொடை, நற்பண்புகள் பாடப்பட்டுள்ளன. பரிசில் பெறும் நோக்கில் அமைந்த பாக்கள் பெண்பாற்புலவரின் பாடலில் குறைவு. இதனால் புலவர்கள் புரவலர்களைப் பரிசில் வேண்டும் நோக்கத்துடன் குறுகிலர் என்பது பெறப்படும். பரிசிற் பொருளில் அமைந்த பாடல்களில் துறைகளில் சிறுசிறு வேறுபாடுகளே உள.

> "பரிசிலன் பரிசில் வேண்டுதல்; பரிசில்கடாநிலை
> இன்னபரிசில் வேண்டுமென்றுக்கூறுதல், பரிசில் துறை
> பரிசில் பெற்று விடைகேட்டல் பரிசில் விடை"[38].

என்று பரிசில் பெறுவதிலும் விடை பெறுவதிலும் ஒருமுறையான மரபு இருந்தமையை இலக்கணங்கள், பாடல்கள் உணர்த்துகின்றன. பாடாண்பாடல்களில் ஔவையாரின் பாடல் மிகுதி. அவர் பாடல்களில் புலவன் அந்நாளில் பெற்றிருந்த பெருமைப் புலப்படுகின்றது. எத்திசை செலினும் அத்திசைச் சோறே என்று புலவன் பாடுவது அந்நாளில் சமூகத்தில் பெற்றிருந்த உயர்நிலையைக் காட்டுவதாயுள்ளன. புரவலர்கள் பெண்பாலருக்கு பொன்னும், யானைகளையும் பரிசிலாக வழங்கிக் கௌரவித்ததை இலக்கியம் பறைசாற்றுகின்றது.

பதிற்றுப்பத்தில் காக்கைப்பாடினியார் நச்செள்ளையார் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைப் பாடிய பாடல்களில் இருபாட்டுச் செந்துறைப் பாடாண் துறைஉள. இத்துறையில் பதிற்றுப்பத்தில் முப்பத்தேழு பாடல்கள் உள்ளன[39]. இதில் இவ்வம்மையார் பாடிய பாடல்களும் அடங்கும். செந்துறைப்பாடாண்பாட்டு தொல்காப்பியர்,

> "வழங்கியல் மருங்கின் வகைபட நிலைஇப்
> பரவலும் புகழ்ச்சியும் கருதிய பாங்கினும்
> முன்னோர் கூறிய குறிப்பினும் செந்துறை
> வண்ணப்பகுதி வரைவின் றாங்கே"[40]

என்பர். இது பாடாண் பாடல்களைப் பாடும்போது வாழ்த்தல், புகழ்தல் இவற்றிற்கு இயற்பாக்களன்றி இசைவகை வண்ணக் கூறுகளும் விலக்கப்படாது என்பதாகும். ஐயனாரிதனார் செந்துறை பாடாண்பாட்டுப்பற்றிக் குறிப்பிடவில்லை. இத்துறையை

ஆராய்ந்த நா. செயராமன்,

"பாடாண்பாட்டு என்பது பொருளடிப்படையினை
யும் செந்துறை என்பது இசையினையும்
கூறுவதாகக்கொள்ளலாம். பரவல், புகழ்தல்
முதலிய பொருளில் இசைப் பாடல்களைப்
பாடாண்பாட்டு என்றனர் என்பது பொருத்தம்"[41].

என்பர். இதனால் செந்துறைப் பாடாண்பாட்டென்பது இசையுடன் மன்னனின் புகழ்ப்பாடுதல் என்றறியப்படும். நச்செள்ளையார் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் வீரத்தைப் பாடும்போது,

"வானுற வோங்கிய வளைந்து செய்புரிசை
ஒன்னாத் தெவ்வர் முனைகெட விலங்கி
நின்னிற் றந்த மன்னெயிலல்லது
முன்னும் பின்னுநின் முன்னோ ரோம்பிய
எயின்முகப் படுத்தல்"

(பதிற் 53:9-13)

என்று அவன் பகைவரை அழிக்கும் வீரத்தைப் பாடி அவன் வென்றதால் பகைமன்னர் திரைசெலுத்துவதை, ?

"வென்று கலந் தரீஇயர் வேண்டுபுலத்திறுத்தவர்
வாடா யாணர் நாடு திறை கொடுப்ப"

(53 : 1-2)

என்று புகழ்ந்துபாடுகின்றார். இவர் மன்னனை இசையுடன் புகழ்ந்துபாடி அவன் வீரத்தையும் பாடுவதால் செந்துறைப்பாடாண்பாட்டாயிற்று.

இவர் பாடிய மற்றொரு பாடலும் இத்துறைப்பாட்டு, அதில் ஆடுகோட்பாட்டுச்சேரலாதனின் கொடைப்பண்பையும் அவன் ஆண்மையையும் பாடுகிறார். இதனை,

"நன்கல வெறுக்கை துஞ்சும் பந்தக்

..................................................................

செவ் ஊன் தோன்றா வெண்துவைமுதிரை
வால் ஊன் வல்சி மழவர் மெய்ம்மறை
குடவர் கோவே கொடித்தேர் அண்ணல்
வாரார் ஆயினும் இரவலர் வேண்டி
தேரின் தந்து அவர்க்கு ஆர்பதன் நல்கும்
நசைசால் வாய்மொழி இசைசால் தோன்றல். ''

(பதிற் 55 : 4-11)

என்று அவன் கொடைப்பண்பையும்

"நனந்தலை வேந்தா தார் அழிந்து அலற
நீடுவரை அடுக்கத்த நாடுகைக் கொண்டு
பொருது சினம் தணிந்த செருப்புகழ் ஆண்மைத்"

(17-19)

என்று அவன் வீரத்தையும் புகழ்ந்து பாடுவதால் இது செந்துறைப்பாடாண் பாட்டாகியது.

செந்துறைப் பாடாண்பாட்டு பாடப்படும் செய்யுளின் வகையினால் துறைகூறப்படுகிறது. ஆயின், செந்துறையாக அமைந்துள்ள இப்பாடல்களுக்குப் பொருள், அமைப்பு, குறிப்பு ஆகியவற்றை நோக்கித்துறை வகுக்கும்போது பூவைநிலை, இயல்மொழி வாழ்த்து, நாடு வாழ்த்து, காட்சி வாழ்த்து, ஆற்றுப்படை கொற்றவள்ளை முதலிய பல துறைகளை வகுக்கலாம்.[42] காக்கைப்பாடினியாரின் பாடல் மன்னனைப் புகழ்ந்துரைப்பதாலும், இப்பாட்டு செந்துறைப்பாடாண்பாட்டாகக் கொள்ளத்தக்கதாகும்.

## வாகைத்திணைப் பாடல்கள்

சங்க கால மக்களின் போர்க்கள வாழ்க்கையைத் தொல்காப்பியர் ஏழுதிணையிலும், ஐயனாரிதனார் பன்னிரண்டு திணையிலும் சுட்டுவர். இரண்டு இலக்கணிகளும் வாகைத் திணையைப் புறத்திணையில் ஒன்றாகக் கொண்டிருக்கின்றனர்.

புறநானூற்றில் வாகைத்திணைப்பாடல்கள் எழுபத்தாறு[43] இப்பாடலில் பெண்பாற்புலவர்களின் பதினேழு வாகைப்பாடலும் அடங்கும். இத்திணையை

ஔவையார்,காவற்பெண்டு, மாறோக்கத்து நப்பசலையார், வெண்ணிக்குயத்தியார், மாற்பித்தியார், ஒக்கூர் மாசாத்தியார், அள்ளூர் நன்முல்லையார், பொன்முடியார் போன்றோர் பாடியுள்ளனர். ஔவையார் இத்திணையில் ஏழுபாக்கள் பாடியுள்ளார். மாறோக்கத்து நப்பசலையாரும், மாற்பித்தியாரும் இத்திணையில் இரண்டுபாடல்கள் பாடியவர்கள். மற்ற அனைவரும் இத்திணையில் ஒரு பாடல் பாடியுள்ளனர்.

இவ்வாகைப்பாடலில் அரச வாகைப்பாடல் ஒன்பது அமைந்துள்ளன. (37, 66, 93, 94, 98, 99, 100, 104, 174) மூதின் முல்லைத்துறைப்பாக்கள் மூன்று (279, 306, 312) ஏறாண்முல்லைத்துறைப்பாக்கள் இரண்டு (86, 296) தாபத வாகைப்பாக்கள் இரண்டும் (251, 252) வல்லாண் முல்லைத்துறையில் ஒரு பாடலும் (315) அமைந்துள்ளது.

## வாகைத்திணை

வாகை என்பது வெற்றி. இதனைத் தொல்காப்பியர்,

வாகை தானே பாலையது புறனே[44]

தாவில் கொள்கைத் தத்தம் கூற்றைப்,
பாகுபட மிகுதிப் படுத்தல் என்ப[45]

என்றார். இதற்கு உரையாசிரியர்கள் பல விளக்கங்களைப் பகர்கின்றனர. இளம்பூரணர்,

"அது கேடில்லாத கோட்பாட்டினையுடைய தத்தமக்
குள்ளே இயல்பை வேறு பட மிகுதிப்படுத்தல்"[46]

என்றும், நச்சினார்க்கினியர்,

"வலியும் வருத்தமின்றி இயல்பாகிய ஒழுக்கத்தானே நான்கு வருணத்தாரும் அறிவரும் தாபதர் முதலியோருந்தம்முடைய கூறுபாடுகளை இருவகைப்பட மிகுதிப்படுத்த லென்று கூறுவர்"[47]

என்பர்; அறிஞர் வ.சுப. மாணிக்கம்,

"தாவில் கொள்கைத் தத்தம் கூற்றை என்று எல்லா, மாந்தர்க்கும் பொதுப் படக்கூறினார் யாராயினும் அவர் தொழில் மேம்பாடு வாகை எனப்படும். மிகுதிப்படுத்தல் என்ற பிற வினையால் பிறர் உணருமாறு பிறரினும் மேம்படத்தன்

ஆற்றலை வெளிப்படக் காட்டல் வேண்டும் என்பது பொருளாயிற்று"[48] என்பர் கோ.சிவகுருநாதன்,

"எப்பெயரிட்டழைப்பினும் ஒன்றின் உயர்நிலை அடைதல் வாகை என்பதில் மாறுபாடில்லை. உயர்நிலை அடைதல் எவ்வாறு அடையலாம் எண்ணமின்றி மரபு வழிப்பட்ட செய்கைகளாலும் உயர்நிலை அடைதல் உலகியல் மேனிலை அடையவேண்டும் என்ற எண்ணத்துடன் செயற்பட்டு மேனிலை யடைதலே வாகை"[49] என்பர். இவ்வாறு பலரும் வாகைக்குக்கூறும் விளக்கம் வாகையாவது வாழ்வில் செய்யும் ஒரு செயலின் வெற்றி என்பது பெறப்படும். இதனைப் புறப்பொருள் வெண்பாமலை,

"இலைபுனை வாகை சூடி இகன் மலைந்து
அலைகடல் தானை அரசட்டார்த்தன்று"[50]

என்று வாகை மலர் சூடிப் பகைவனைக்கொன்று ஆரவாரிப்பது வாகை எனச்சுட்டும். இவ்வாகைத்திணை உணர்த்தும் பொருளான "வெற்றியாவது தனக்கு ஒத்தது என ஏற்றுக்கொண்ட ஒரு கொள்கையில் ஓர் ஒழுக்கத்தில் அக்கொள்கையும் ஒழுக்கமும் உடைய பிறரைக் காட்டிலும் தானே உயர்ந்தவனாம் என்ற சிறப்புடைமையாகும்"[51] என்று குறிப்பிடுவர்.

இவ்வாகைத்திணையின் துறைகளாகப் " கூதிர் வேனில் என்று இரு பாசறை"[52] எனத் தொடங்கிப் பதினெட்டுத்துறைகளைத் தொல்காப்பியம் சுட்டும். புறப்பொருள் வெண்பாமாலை சீர்சால் வாகை வாகையரவம் என்று முப்பத்திரண்டாக வரையறுக்கும்[53].

பெண்பாற்புலவரின் வாகைப்பாடல்கள் இடம் பெறும் துறை வாரியாகப் பாக்கள் மிகுதியடிப்படையில் ஆராயப்படுகின்றன.

### அரசவாகை

புறநானூற்றில் இத்துறையில் முப்பத்தாறு பாடல்கள்[54] அமைந்துள்ளன. இதில் பெண்பாற்புலவரின் ஒன்பதுபாக்களும் அடங்கும். அரச வாகையைத் தொல்காப்பியம்,

"ஐவகை மரபின் அரசர் பக்கம்"[55]

எனச்சுட்டும், ஐவகையான ஓதல், ஈதல், வேள்வி, படையெழுச்சி, மக்கட்காவல் ஆகிய இயல்புகளில் மேலோங்கல் இத்துறை. புறப்பொருள் வெண்பாமலை,

"பகலென்ன வாய்மொழி
இகல் வேந் தனியல்புரைத்தன்று"[56]

என்று நடுநிலையோடு விளங்கும் சொல்லினையுடைய மாறுபாட்டாற் சிறந்த வேந்தனது இயல்பினைக் கூறுவது என உணர்த்தும். இரண்டும் வேந்தனின் பண்பினை மொழிவன. இரு இலக்கண நூல்களுள்ளும் முரண்படுமாறு கருத்தில்லை.

ஔவையார் அரசவாகைத்துறையில் பாடிய ஆறுபாடல்களும் அதியமான் நெடுமான் அஞ்சியைப் பாடியன. ஔவையார், அதியமான் பகை அரசர்களுடன் போரிட்டு விழுப்புண்பட்டு வென்ற செய்தியைத்,

"திண்பிணிமுரசம் இழுமென முழங்கச்
சென்றமர் கடத்தல் யாவது வந்தோர்
ஓடல் மரீஇய பீடுஇல் மன்னர்
நோய்ப்பால் விளிந்த யாக்கை தழீஇக"

(புறம். 93 : 1-5)

என்று அதியன் போர்முரசொலிக்கப்போர்க்களம் புகுந்து போரிட்டதால் பகை மன்னர் மார்பிலே புண்பட்டு இறந்தனர். அப்போரில் அதியனின் மார்பில் விழுப்புண் பட்டது. இதனை,

"வாள் போழ்ந்தடக்கலு முய்ந்தனர் மாதோ
வரிஞிமிறார்க்கும் வாய்புகு கடாஅத்
அருஞ்சமந் ததைய நூறிநீ
பெருந்தகை விழுப்புண் பட்டமாறே"

(11-15)

என்றடிகள் உணர்த்தும். இப்பாடல் போரின் முடிவில் பகைவனை அழித்து வெற்றி பெற்ற அதியனின் வெற்றியைப்பாடியதால் இப்பாட்டு வாகையாகியது. இப்பாடலில்

"தார் தாங்குதலும் ஆற்றார் வெடிபட்டு
ஓடல் மரீஇய பீடுஇல் மன்னர்"

(3-4)

என்று பகைவனை வெட்டி (புகழ்) வெற்றி பெற்ற இவன் போராற்றலையும், இவன் வீரத்தின் இயல்பினையும் பாடியதால் அரசவாகையாயிற்று.

இப்பாடலை வஞ்சித்திணைத் துறைகளுள் "அடுத்தூர்ந்து அட்ட கொற்றமும்" என்ற துறைக்கு இளம்பூரணர் இப்பாடலைச் சான்றாக்குவர்[57]. இப்போர், "தார்தாங்குதலும்" என்பதால் காலாட்படைகள் பகை மன்னரின் நாட்டை எதிர் கொண்டு முன்னேறி அழித்து அந்நிலத்தைக் கைப்பற்றிக் கொண்டு முடிவில் பகை மன்னர்களின் தூசிப்படையை அழித்துக் கைப்பற்றுவது. இப்போர் மண்ணாசை காரணமாக நிகழ்வதால் இது வஞ்சிப் போரின் வெற்றி என்பர் இளம்பூரணர்.

> "வெற்றி, தனக்கென ஒரு தனி நிலையோ" வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை என்ற இப்புறத்திணை நிகழ்ச்சிக்கு மட்டும் தனி உரிமையோ உடையதாகாது, அத்திணைகளின் முடிவாகவும், அத்திணைகள் அனைத்திற்கும் உரியதாகவும் வரும். ஆதலின், அவ்வெற்றியாம் வாகைத்திணைத் தனக்கென ஒரு நிலம் பெறாமல் ............... முல்லை முதலாம் நிலங்களின் திரிபாகவும், அத்திணை ஒழுக்கங்களை ஒவ்வொன்றோகும் கலந்திருப்பதாகவும் விளங்கும்"[58]

என்ற கா. கோவிந்தனின் கருத்திற்கேற்ப இப்பாடல் வஞ்சிப் போரின் வெற்றி என்பதால் இளம்பூரணர் "அடுத்தூர்ந்து அட்ட கொற்ற நிலைக்கு" இப்பாடலைக் காட்டுவது பொருத்தமானதாகும்.

ஔவையார் அதியமானைப் பாடிய புறநானூற்றுத் 94-ஆம் பாடலும் வாகைத்திணை அரசவாகைத் துறையினது இப்பாடலில், "ஊரின்கட்சிறு பிள்ளைகள் தனது வெள்ளிய கோட்டைக் கழுவுதல் காரணமாக நீரையுடைய துறைக்கட்படியும் பெரிய களிறுஅவர்க்கு அவ்வாறு எளிதாய் இனிதாம்; அவ்வாறே எங்களுக்குப் பெரும நீ இனியை, மற்றதனுடைய அணைதற்கரிய மதம் பட்ட நிலைமை எவ்வாறு இன்னதாம் அதுபோலப் பெரும! பகைவர்க்கு இன்னாய் என்பது பாடல். இதில்,

"துன்னருங் கடாஅம் போல
இன்னாய் பெரும நின் னொன்னா தோர்க்கே"

(94 : 4-5)

என்று பகைவருக்கு இன்னாத வீரப்பண்பினை உடையவன் என்று அவன் வீரம் பகைவரை அழிக்கும் என்று பாடியதால் இது வாகைத்திணையாகியது. இப்பாடலின் உட்பொருள் அவனைப்பகைப்பவர்இல்லை பகைத்தால் வெற்றி இவனுக்கே என்ற பொருள் சுட்டுவதால் அரசவாகையாயிற்று.

இப்பாடலில், அதியனின் வெற்றிச்செய்திக் குறிப்பிடவில்லை. பகைவருடன் போர் நடந்த குறிப்புமில்லை. இப்பாடலை இளம்பூரணர், பாடாண்திணைத்துறைகளுள் "இயன்மொழி" என்பதற்கு மேற்கோளாக்குவர்[59]. பாடலில் அதியமானின் வீரப்பண்பையும் சுட்டுவதால் இதனை, பாடாண்திணை இயன்மொழித் துறைக்குச் சான்றாக்குவது பொருத்தமே. இப்பாடலில்,

"ஊர்க்குறு மாக்கள் வெண்கோடு கழாஅலின்
நீர்த்துறை படியும் பெருங்களிறு போல"

(1-2)

என்பதால் போர்க்களம் சென்று வெற்றி பெற்றுவந்த யானைகளின் கோடுகளில் இருக்கும் இரத்தத்தை நீரில் கழுவியதைப் பாடியதாகக் கொண்டு இவ்வாறு அரசவாகைத் துறையாக வரையறுத்தல் வேண்டும்.

ஔவையார் அதியமானின் போர் வெற்றியைப் பாடும் மற்றொரு 98ஆம் பாடலில், அதியமானைப் பகைத்த பகைவர் நாட்டில் இவன் படைகள் சென்று பகை நாட்டின் மதிற்கதவுகளை யானைகள் கொண்டு முறித்தனர், அவ்வாறு முறித்ததால் பகை நாட்டவர் புதுக்கதவுகளை நிறுத்தினர். குதிரைப் படைகள், வெட்டுண்டு கிடந்த பகைவர்களின் உடல் கிடக்கும் போர்க்களத்தை உழக்கி வந்தமையால் குதிரைகள் போகக் கண்ட பகை நாட்டவர் கவைமுள்ளினைக் கொண்டுக் காட்டு வாயிலை அடைத்தனர். மறவரது பெரும் படைகண்டவர் தம்தம் தூணிகளில் அம்பையடக்கிக் கொள்கின்றனர். நீ பகைவர்களுக்குக் கூற்றுவனை ஒப்பவன் என்று அவனது போராற்றலைப்பாடி அப்போரில் அவன்

வெற்றிபெறத்திரும்பியதை,

"ஐயவி புகைப்புந் தாங்க தொய்யென
உறுமுறை மரபிற் புறநின்றுய்க்கும்
கூற்றத் தனையை ........................."

(புற;98-15-17)

என்று புண்பட்ட வீரர்களுக்கு வெண்சிறுகடுகு கொண்டு புகையிடவும், அதனை அறியது புறத்தே நின்று உயிரைக்கொடுப்பதும் கூற்றுவனை ஒப்பாய் என்று போரின் முடிவுநிலையைப் பாடியதால் பெறப்படும். அரசனின் வீரத்தின் வலிமையும், அவன் பகைவரை அழித்துப்பெற்ற வெற்றியையும் பாடியதால் அரசவாகையாயிற்று.

இப்பாடலை 'வஞ்சித்திணை, கொற்றவள்ளைத்துறை' என்று கூறுவர்[60]. இப்பாடலில் பகைவர் நாட்டின் அழிவினைப் பாடியதால் கொற்ற வள்ளையாயிற்று கொற்றவள்ளையாவது, "வஞ்சி வேந்தனின் புகழினை எடுத்துச் சொல்லி அவனுடைய பகைநாடு அழிவது குறித்து வருந்துவது"[61]. இப்பாடலில் பகைவர் நாட்டின் மதில், பகைவர் அழிவு இவற்றைச்சுட்டி இதுபோன்ற பகைத்தவருக்குக் "கூற்றுவன் ஒப்பவன்" அதியமான் என்று அவன் வீரம் கூறப்படுவதால் கொற்றவள்ளையாயிற்று. இதுவும் பொருத்தமானது.

இலக்கண ஆசிரியர்கள் வரையறுத்ததிணைதுறைகள் அடிப்படையில் புலவன் புறப்பாடல்பாடவேண்டும் என்ற கட்டுப்பாடில்லை. சங்க இலக்கியங்களில் சில முக்கியக்கோட்பாடுகள் மரபாகப் போற்றிக்காக்கப்பட்டன. (அகம். பெயர் சுட்டப்படாமை), புறப்பாடல்கள் போர்நடந்த உண்மைச் சம்பவங்களைப் பாடுவதால் புலவன் நடந்ததைப் பதிப்பித்தான். பின்னாளில் ஆராய்ச்சியாளர்கள் இப்பாடல்கள் ஒவ்வொன்றையும் ஆராய்ந்து அவற்றுக்குத் திணைதுறைகள் வகுத்தனர். ஒருசில பாடல்கள் பல திணைகளுக்குப் பொருத்தமாயின.

ஔவையாரின் புறநானூற்றுப்பாடல்கள் அதியமானின் போராற்றல், கொடைப்பண்புகளைப் பற்றியன. இவர் பாடும்போது இன்ன திணைதுறையின் கீழ் பாடுகிறோம் என்று பாடவில்லை. இதனால் ஒருபாடல் இருதிணை, துறைகளுக்குப் பொருத்தமாக அமைந்தன.

அதியமானை ஔவையார் பாடிய 99-ஆம் பாடலும் இத்திணை துறையன. இவ்வாகைப்பாடலில்,

"தொன்னிலை மரபினின் முன்னோர் போல
ஈகையங் கழற்கா லிரும்பனம் புடையற்
பூவார் காவிற் புனிற்றுப் புலாநெடுவேல்
எழுபொறி நாட்டத் தெழாஅத்தாயம்
வழுவின் றெய்தியு மமையாய் செருவேட்
டிமிழ்குரன் முரசி னெழுவரொடு முரணிச்
சென்றமர் கடந்துநின் னாற்ற றோற்றிய
அன்றும் பாடுநர்க் கரியை யின்றும்
பரணன் பாடினன் மற்கொன் மற்றுநீ
முரண்மிகு கோவலூர் நூறிநின்
அரணடு திகிரி யேந்திய தோளே "

(புறநா. 99 : 4-14)

என்று அதியமான் வீரக் கழல் அணிந்து பகைவருடன் போரிட்டு வெற்றி பெற்றதைப்பல புலவர்களும் பாடினர். இன்று பரணரும் நீ கோவலூரை அழித்த செய்தியைப் பாடினான் என்று அதியமான் பகைவர்களை வெற்றி கொண்ட செய்தியைப் புகழ்ந்து பாடும் பாடலால் அரசவாகைத் துறையாகியது. இது பகைவரை அழித்த வெற்றியைப்பாடியதால் வாகைத்திணையாகிறது.

ஔவையார் அதியமான் போர்க்களம் சென்று, மகன் பிறந்த செய்தியறிந்ததும் போர்க்களம் சென்று வந்த தோற்றத்துடன் வேலினைக் கையில் ஏந்தியபடி வருகின்றான். அதனைக் கண்ட ஔவையார்,

"கையது வேலே காலன புனைகழல்
மெய்யது வியரே வளரிளம் போந்தை
உச்சிக் கொண்ட வூசி வெண்டோடு
வெட்சி மாமலர் வேங்கையொடு விரைஇச்
சுரியிரும் பித்தை பொலியச்சூடி
வரிவயம் பொருத வயக்களிறு போல

இன்னுமாறாது சினனே யன்னோ
உய்ந்தனரல்லரிவ னுடற்றி யோரே
செறுவர் நோக்கிய கண்டன்
சிறுவனை நோக்கியுஞ் சிவப்பா னாவே ”

(புறம் 100)

என்ற பாடலில் “ வெட்சி மாமலர் வேங்கை யொடு விரைஇச்” என்றதால் இப்போர் வெட்சிப்போர் என்பது பெறப்படும். இப்போரில் அதியமான் வெற்றி கொண்டான், என்பதை, “உய்ந்தன ரல்லரிவ னுடற்றி யோரே” என்று, பகைத்தவர் பிழையார் என்று கூறுவது. இப்பாடல் போர் முடிவு நிலையைச் சுட்டுவதைக்காட்டுகிறது. போர்முடிந்து அதியமான் கையில் வேலுடன் வந்து அவன் மகனைப்பார்க்கும் போதும் அவன் பகைவரைச் சினத்துடன் நோக்கிச் சிவந்த கண்ணின் நிறம் மாறாது நின்றான் என்பதால் அறியமுடிகிறது. இவ்வாறு மன்னனின் வெற்றியும், அவன் பகைவனை அழிக்கும் வீரத்தின் இயல்பும் பாடியதால் வாகை, அரசவாகைத் துறையாயிற்று. இப்பாடல் வெட்சிப்போர் என்பதால் யாருடன் போர்நடந்தது என்பது குறித்துப்பாடவில்லை.

ஔவையாரின் அரசவாகைத்துறைப் பாடல்களினால், கோவலூரை அழித்த செய்தி (99) யும், பகை நாட்டை அதியமான் அழித்த செய்தியும் (93-98) அதியமான் இயல்பாகவே வீரம் நிறைந்தவன் (94-104) என்ற செய்தியும், பகை நாட்டை அழித்துப்போர்க்கோலத்துடன் மகனைக் கண்டான் (100) என்ற செய்தியும் தெரியவருகின்றன.

வாகைத்திணை அரசவாகைத்துறைப் பாடலில் பொகுட்டெழினியைப் பாடியதாகப் பாடலில. இவர் பாடல்களில் அதியமானுடன் பகைத்த மன்னர் பெயர் குறிப்பிடவில்லை. கோவலூரை எறிந்ததைப் பரணர் பாடியதை (99) இவர் குறிப்பிட்டுள்ளார். இவ்வாகைப்பாடல்கள் போரின் முடிவுச் செய்தியைப் பகர்கின்றன. (93, 98, 99, 100), அதியமான் போருக்குச் சென்று திரும்பியதை ஔவையார் நேரில் பார்த்துள்ளார் (100) அதியமான் முன்னோர்கள் கருப்பினைக் கொணர்ந்ததைப் பாடியுள்ளார் (99).

மாறோக்கத்து நப்பசலையார் வாகைத்திணை அரச வாகைத்துறையில் பாடிய

37-ஆம் பாடல் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனைப்பாடியது. இப்பாடலில், மாறோக்கத்து நப்பசலையார் கிள்ளி வளவனைப் பகைவனை அழித்து வென்றாய் என்று பாடுகிறார். இதனை,

"கடுமுரண் முதலைய நெடுநீ ரிலஞ்சிச்
செம்புறழ் புரிசைச் செம்மன் மூதூர்
வம்பணி யானை வேந்தகத் துண்மையின்
நல்ல வென்னாது சிதைத்தல்
வல்லையா நெடுந்தகை செருவத் தானே"

(புறம்.37:10-14)

என்ற பாடலால் அறிய முடிகின்றன. இவன் போரில் பகைவனை வென்றதைப் பாடியதால் அரசவாகையாயிற்று.

இவ்வரசவாகைத்துறையில் வெண்ணிக்குயத்தியர் சோழன் கரிகாலனின் வெண்ணிப்போர் வெற்றியைப் பாடியுள்ளார் (66) இப்பாட்டில்,

"நளியிருமுந்நீர் நாவா யோட்டி
வளிதொழி லாண்ட உரவோன் மருக
களியியல் யானைக் கரிகால் வளவ
சென்றமர்க் கடந்தநின் னாற்ற றோன்ற
வென்றோய் நின்னினு நல்லனன்றே
கலிகொள் யாணர் வெண்ணிப்பறந்தலை
மிகப்புக ழுலக மெய்திப
புறப்புண்ணாணி வடக்கிருந்தோனே"

(புறம் 66)

என்ற பாடலில் பகைவரை வென்றதை " வென்றோய் " என்றதால் அறிய முடியும் வெற்றியைப பாடியதால் வாகைத்திணையாகியது. பகைவரை வெல்லும் வீரத்தை இயல்பாகக்கொண்டவன் என்பதால் இப்பாடல் அரசவாகையாயிற்று. இப்பாடலில் 'வெண்ணி' என்ற இடத்தில் நடந்த போர் என்று சுட்டப்படுகின்றது. இப்போரில் தோற்றவன் சேரமான் பெருஞ்சேரலான் என்பது 65ஆம்பாடலால் அறியமுடிகிறது.

இப்பாடலைப்பாடியவர் கழாத்தலையாவார். பெண்பாற்புலவரின் வாகைப்பாடலில் இடம் குறிப்பிட்டுப் பாடிய பாடல் இது. தோற்றவேந்தனின் சிறப்பைப்பாடியிருப்பது இவரின் தனித்தன்மையாகும்.

ஔவையார் அதியமானுடன் பகை மன்னரைப் பாடாதது அதியனைப் பாடவேண்டும் என்ற உளவேட்கையே காரணம். இதனால் பகை மன்னரின் பெயர் குறிப்பிடுவதில் அவர் மனம் ஈடுபடவில்லை.

## மூதின்முல்லைத்துறை

மூதின் முல்லைத்துறையெனத் தொல்காப்பியர் வகுத்திலர். ஆனால் வீரப்பெண்களைக் காஞ்சித்திணையில் குறிப்பிடுகின்றார். மூதின் முல்லைத்துறையை புறப்பொருள் வெண்பாமலை,

“அடல் வேலாடவர்க் கன்றியு மவ்வில்
மடவரன் மகளிர்க்கு மற மிகுந்தன்று”[62]

என்று மறக்குடிப் பெண்களின் வீரத்தைக் கூறுவர். ‘வல்லாண் முல்லையிலிருந்து மூதின் முல்லை வளர்ந்திருக்கலாம் என்ற கருத்தும் உண்டு’[63].

புறநானூற்றில் மூதின் முல்லைத்துறையில் ஐந்து பாடல்கள் உள்ளன[64]. பெண்பாற்புலவர்கள் மூதின் முல்லையில் பாடியன மூன்று பாக்கள் என்பது குறிப்பிடத்தக்கதாகும். மற்ற இரண்டு பாடல்களை ஆண்பாற்புலவர்கள் பாடியுள்ளனர். பெண்பாற்புலவர்களின் படைப்புத்திறனால் இந்தத்துறை உருவாகியிருக்கலாம்.

ஒக்கூர் மாசாத்தியார் பாடிய 279-ஆம் பாடலில் மூதின் மகளிர் ஒருத்தியின் வீரத்தைப பாடுகிறார்.

“கெடுக சிந்தை கடிதிவடுணிவே
மூதின் மகளிராத றகுமே
மேனா ளுற்ற செருவிற் கிவடன்னை
யானை யெறிந்து களத் தொழிந்தனனே
இன்றும் செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி
வேல்கைக் கொடுத்து வெளிது விரித்துடீஇப்

பாறுமயிர்க் குடுமி யெண்ணெய் நீவி
ஒருமகனல்ல தில்லோள்
செருமுக நோக்கிச் செல்கென விடுமே"

(புறநா. 279)

என்ற பாடலில் தாய் ஒருத்தி முதல்நாள் போரில் தந்தையை இழந்தாள், இன்று போர்ப்பறை கேட்டு மகனைப் போர்க்களத்திற்கு அனுப்பினாள். இவ்வாறு மறக்குடிப பெண்ணின் வீரத்தைப் பாடுவதால் மூதின் முல்லையாயிற்று. தந்தை யானையைக் கொன்று களத்தில் அழிந்தான். அப்போரில் வெற்றிகிட்டியது. அதுபோல இன்றும் வெற்றிகிட்டும் என்று விருப்புற்று மகனை அனுப்புகிறாள். இப்பாடல் போரின் முடிவுச் செய்தியைக் கூறவில்லை. இப்பாட்டு மகன்வெற்றி பெறுவான் என்று களத்திற்கு மகனை அனுப்பியதால் வாகையாகியது.

இத்துறையில் அள்ளூர் நன்முல்லையார் பாடியுள்ளார் (306ஆம்). இப்பாடல் "களிறு பொரக் கலங்கு கழன் முள்வேலி" எனத் தொடங்கும், இதில், "ஒரு பெண் தினமும் நடுகல்லைத்தொழுது தினமும் விருந்தினர் வரப்பெறல் வேண்டும் என்றும், தன் கொழுநன் போரில் வெற்றி பெறுக என்றும், போர் செய்யும் பகைவேந்தரும் உண்டாக வேண்டும் என்று வேண்டிக்கொண்டாள் " என்று மறக்குடிப்பெண்ணின் வீரப்பண்பினைப் பாடுவதால் இப்பாடல் மூதின் முல்லைத்துறையாகியது. இப்பாடலில் போரைப் பெண் விரும்புவதும், கணவன் போருக்குச் சென்றால் வெற்றி பெறுவது திண்ணம் என்பதால் வாகைத்திணையாகியது.

இத்துறையில் பொன்முடியார் (312-ஆம்) பாடிய பாடலில்,

"ஈன்று புறந்தருதல் என்தலைக்கடனே
சான்றோ னாக்குதல் தந்தைக்குக் கடனே
வேல் வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே
நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே
ஒளிறுவாள ருஞ்சம முருக்கிக்
களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே "

(புறம் 312)

என்றுபாடினார். இப்பாடலில் ஒருதாயின் கடமை வீர மகனைப் பெறுவது (என்றும்,) அவன் தந்தையின் கடமை அவனைச் சான்றோராக்குதல் (என்றும்,) அந்நாட்டுக் கொல்லனின் கடமை வேலினை வடித்துக் கொடுப்பதும், அந்நாட்டு வேந்தனின் கடமை நல்லொழுக்கத்தை நல்குவது, அவ்வீரமகனின் கடமைப் பகைவரை அழித்து வெற்றி பெறுவது என்று இப்பாடலில் ஒரு பெண்ணின் மறப்பண்பை விதந்தோகிறாள். அதனால் இப்பாடல் மூதின் முல்லையாயிற்று. இவ்வாறு போர்க்களம் சென்று மைந்தன் பகைவரை வெற்றிகொள்ளல் கடமை என்று கூறப்பட்டதால் வாகையாகியது.

இத்துறையில் ஆண்பாற்புலவர்களில் கழாத்தலையார் பாடும் போது (288) மனைவி ஒருத்தி போர்க்களத்தில் மார்பில் விழுப்புண்பட்டு இறந்த கணவனைப் பார்த்து மகிழ்ந்தாள் என்று அவளின் மறப்பண்பைப் பாடியுள்ளார். இத்துறையில் கோவூர்க்கிழார் 'போரில் பகைவரின் வேலினை மார்பிலே தைத்து வெளிவந்த வேலை உருவி பகைவனின் யானை மீது எறிய பகைவனின் யானை அஞ்சி ஓடியது என்று ஒரு மனைவி கூறுவதாக' உள்ள பாடலும் மூதின் முல்லைத்துறையாகியது.

சங்கப்புலவரில் பெண்பாற்புலவர் எண்ணிக்கைக் குறைவெனினும் மூவர் மூதின் முல்லை துறையில் பாடியது பெண்ணின் வீரத்தைப் பெண்கள் பாடவிரும்பியதைச் சுட்டும். ஔவையார் 33 பாடல்கள் பாடியவர். இத்துறையில் இவர் பாடிலர். அதியனைப் பாடவேண்டும் என்ற விருப்புமிகுதி இதுபோன்ற பாடல் பாடத்தூண்டவில்லை மூதின் முல்லைத்துறைப் பாக்கள் தாயாய், மனைவியாய் விளங்கும் பெண்ணின் வீரப் பண்பைப் பாடுவன பகையை வேண்டிப் பெரும் உரம்படைத்திருந்ததையும் (306); இளையோன் எனினும் போருக்கு அனுப்பும் நெஞ்சுரம் முடையவளாக இருந்ததையும் (279); பெண்ணின் கடமை வீரமகனைப் பெறுதல் (302); என்றும் பெண்ணின் வீரப்பண்பைப் பாடியுள்ளனர். ஆண்பாற் புலவர்கள் இத்துறையில் பாடும்போது மனைவி கூற்றில் பாடியுள்ளனர். மனைவி கணவன் மார்பிலே புண்பட்டு இறந்ததைக் கண்டு மகிழ்ந்துள்ளாள். (288); தன் மகன் மார்பிலே பட்ட வேலினைப் பிடுங்கிப் பகைவனின் யானையை தாக்கினான் எனக்கேட்டு மகிழ்ந்தாள் (308); ஒரு தாய் இப்பாட்டுக்களால் தமிழச்சியின் வீரப்பண்பு

புலப்படுகின்றது. மூதின்முல்லைத் துறையில் பெண்கள்பாடியது புதியபடைப்பு இதற்கு இலக்கணம் கூறவில்லை. உணர்ச்சியாக இலக்கணம் மீறிப்பாடினர். இது பெண்பாற்புலவர்களின் மன்பதைக்கு அளித்த இலக்கியக்கொடையாகும்.

## ஏறாண் முல்லை

'எதிரில்லாதபடி ஆண்மைத்தன்மை மேன்மேல் ஏறாநின்ற குடியொழுக்கத்தினை உயர்த்திச் சொல்லுதலாகும்[65]. தொல்காப்பியர் ஏறாண்முல்லைஎன்று துறை வகுத்தாரில்லை. இளம்பூரணர் 'மறங்கடைக் கூட்டிய குடிநிலை' என்ற நூற்பாவிற்கு உரைபகரும் போது குடிநிலை என்றதனால் மைந்தருக்கும் மகளிருக்கும் பொதுவதால் அறிக என்றும், இவற்றுள் ஆண்பால் பற்றி வந்ததனைஇல்லாண்முல்லையெனவும் பெண்பால் பற்றி வந்தென மூதின்முல்லை யெனவும் கூறுப என்று கூறுவர்[66].

'ஏறாண் முல்லையை ஆராய்ந்த கோ.சிவகுருநாதன்,

> "இளம் பூரணர் கூறும் இல்லாண்முல்லையே புறப்பொருள் வெண்பாமாலை கூறும் ஏறாண்முல்லை யாகும். நச்சினார்க்கினியரின் இல்லாண்முல்லையும், ஏறாண்முல்லையே உரையாசிரியர்கள் இல்லாண் முல்லை என்ற பெயரில் ஏறாண்முல்லையை உடன் படக் காண்கிறோம்[67]

என்பர். இதனால் தொல்காப்பியர் இத்துறை கூறாததும், உரையாசிரியர் இல்லாண் முல்லையில் ஏறாண் முல்லையின் வீரக்குடியின் பண்பை மொழிந்தனர் என்பதறியப்படும். ஏறாண்முல்லையை ஐயனாரிதனார்,

> "மாறின்றி மறங்கனலும்
> ஏறாண்குடி யெடுத்துரைத் தன்று"[68]

என்பர். ஆண்மைத்தன்மையுடைய குடியெழுக்கத்தினை ஒருபெண் கூறியதாக இதன் உதாரணப் பாட்டில் சுட்டுவர். இதனால் ஏறாண்முல்லையாவது மறக்குடி மகளொருத்தி தன் குடியில் ஆண்மைத்தன்மையுடைய வீரனின் செயல்கூறிக் குடிப்பெருமையை நிலைக்கச் செய்வது என்பதை அறியமுடிகிறது.

காவற்பெண்டின் 86ஆம் பாட்டு இத்துறைப் பாட்டு. இப்பாட்டில் ஒரு பெண் 'உன்மகன் எங்கே? என வினவ, என் மகன் போர்க்களத்தில் இருப்பான் என்கிறாள். இதனை,

"சிற்றில் நற்றூண் பற்றிநின் மகன்
யாண்டுள னோவென வினவுதி யென்மகன்
யாண்டுள னாயினு மறியே னோரும்
புலிசேர்ந்து போகிய கல்லளை போல
ஈன்ற வயிறோ விதுவே
தோன்றுவன் மாதோ போர்க்களத்தானே"

(புறம். 86)

என்ற பாடல் காட்டும். இப்பாட்டில் மறக்குடியில் ஒரு பெண் வீரம் நிறைந்த ஆடவனைப் பெறுவதும், அவ்வாடவன் போர்க்களத்தில் இருப்பான் வேறு எங்கும் செல்லான் என்று வீரக்குடியில் பிறந்த மகனின் வீரத்தைச் சிறப்பித்துக் கூறுவதால் இப்பாட்டு ஏறாண்முல்லைத் துறையாகியது.

இத்துறையில் அமைந்த மற்றொரு பாடல் வெள்ளைமாளர் பாடியது. இப்பாடலில் போர்க்களம் சென்ற வீரர் பலரும் இல்லம் வந்து சேர தன்மகன் வராமையால்தாய் வெளியில் சென்று பார்க்கும் போது அவன் தேர்வருகின்றது. இதனைப் பார்த்து,

"வேம்பு சினை யொடிப் பவுங் காஞ்சிபாடவும்
நெய்யுடைக் கைய ரையவி புகைப்பவும்
எல்லா மனையுங் கல்லென் றனவே
வெந்துடன் றெறிவான் கொல்லோ
நெடிது வந்தன்றா னெடுந்தகை தேரே "

(புற.நா.296)

என்ற பாடுகிறாள். இப்பாடலில் இவள் மைந்தன் போர் முடியும் வரைக் களத்தில் பகைவரைப் பொருது அழித்து வந்தான்; என்று வீரனின் ஆண்மைத் தன்மையை ஒருதாய் மிகுத்துப் பாடியதால் ஏறாண் முல்லைத் துறையாயிற்று. இது வெற்றி பெற்றுத் திரும்பும் போரின் முடிவைப் பாடுவதால் வாகைப்பாட்டு.

ஏறாண் முல்லைத் துறைப்பாட்டு புறநானூற்றில் இரண்டு காணப்படுகின்றன. இரண்டுபாடலும் பெண்பாற்புலவர் பாடியன.

புறப்பொருளில் இவ்வாறு தாய், மனைவி என்று கூற்று வருவது, அகப்பொருளில் உள்ள கூற்று கிளவி முறை புறப்பொருளில் நுழைந்துவிட்டதைக் காட்டுகிறது. மொழியியலில் போலச் செய்தல் என்பது போல இலக்கியப் படைப்பில் போலச் செய்தல் (analogy) அமைகின்றது. புறநானூற்றில் போரைப் பாடுவது மிகுதி. புலவர்கள் பெண்களின் வீரப் பண்பினைப் பாடும் போது பெண்கள் கூறுவதாகப் பாடினர். இதனை இப்பொருளில் புலவன் பாடுவதை விட ஒரு தாய், மனைவி என்று அவர்கள் கூறுவதாகப் பாடுவதால் அப்பாடல் புலவன் கருதிய உணர்ச்சியைப் படிப்போர் பெறமுடியும். ஆதலால் புலவர்கள் புறப் பாடலில் கூற்று முறையைப் புகுத்தினர். இது புலவன் உண்மைச் சம்பவங்கள் பதியப்பட்ட போது நடந்ததை நடந்தவாறே பதிந்ததால் இக்கூற்றுக்களாக தோன்றச் செய்தன.

## வல்லாண் முல்லை

இத்துறையில் சங்கப் புறப்பாடலில் இருபத்தைந்து பாடல் உள்ளது. இதில் ஔவையார் பாடிய பாடல் ஒன்றும் (315) இதில் அடங்கும்.

"வல்லாண் முல்லையைத் தொல்காப்பியர்,
புல்லா வாழ்க்கை வல்லாண் பக்கமும்"[69]

என்று 'சிறிய வாழ்வினும் வண்மை குன்றா வேளாண்மை[70] என்பர். 'சிறிய எளிய வளங்குன்றிய சூழலிலும் கொடை செய்யும் வாய்ப்பு நேரின் உளம் தளராது எதிர்நோக்கும் வலிய ஆண்மை என்பது ஒரு பொருள்[71] என்பர் இளம்பூரணர்.

"கருவியும் களனும் பிற சூழலும் வாய்ப்பாக அமையாவிடினும் வீரம் காட்டல் அதனின் மேல்நிலை அது வல்லாண் நிலையாகும். இக்கருத்து விளக்கத்துடன் புல்லா வாழ்க்கை என்ற தொடர் அமைகிறது.[72]

என்பர் கோ.சிவகுருநாதன். புறப்பொருள் வெண்பாமாலை,

"இல்லும் பதியும் இயல்புங் கூறி

நல்லாண்மைறை நலமிகுத் தன்று"[73]

(177 புறப்.வெ)

என்று ஒரு மறவனின் குடியும், ஊரையும் அவன் இயல்பு மேம்பாட்டையும் எடுத்துக் கூறி அவன் ஆண்மைத்தன்மையை நன்மை பெருகச் சொல்லியதாகும். ஒருவனின் குடிப்பெருமையும், வீரனின் ஆண்மையும், அவன் ஊரும் வீரமிகுந்த ஆடவரைப் பெற்றதென்றும், அவன் விருந்தோம்பல் பண்பை உடையவன் என்றும் பாடுவது வல்லாண் முல்லைத் துறை என்பதும் பெறப்படும். இத்துறையில் பாடிய ஔவையார் அதியமானைப் பாடுகிறார். அப்பாடலில், அதியமான் விருந்தினருக்குக் கொடுத்துப் பின் உண்பான்; அவன் பகைவரை எதிர்த்துப் போரிட்டு அழிக்கும் ஆண்மைத் தன்மையுடையவன்; என்று கூறுவர். இதனை,

"உடையனாயினுண்ணவும் வல்லன்
கடவர் மீது மிரப்போர்க் கீயும்
மடவர் மகிழ்துணை நெடுமானஞ்சி
இல்லிறைச் செரீஇய நெலிகோல் போலத்
தோன்றாதிருக்கவும் வல்லன் மற்றதன்
கான்றுபடு கனையெரி போலத்
தோன்றவும் வல்லன்றான் தோன்றுங்காலே "

(புறநா.315)

என்ற பாட்டு உணர்த்தும். இப்பாடலில் அதியமான் விருந்தினருக்கு விருந்தோம்பி பின் உண்பவன் என்கிறார். இப்பாடலில் அவன் இல்லில் சொருகி வைக்கப்பட்டுள்ள தீக்கடைகோல், பார்க்கச் சாதாரணமாக இருக்கும் உரசினால் தீப்பொறி தோன்றும் அதுபோல இவனும் பகைத்து வருபவனை அழிக்க வல்லான் என்று அவன் வீரமும், குடிச்சிறப்பு, விருந்தோம்பல் என்று அதியனைப் பாடியதால் வல்லான்முல்லைத் துறையாயிற்று.

"மூதின்முல்லை முதுக்குடி மகளிரின் வீரப்பண்பையும் ஏறாண்முல்லை மறக்குடி வீரனின் பண்பை மகளிர் எடுத்துரைப்பதாகவும், வல்லாண்முல்லை வீரனின் குடிச்சிறப்பு, விருந்தோம்பல், வீரனின் ஆண்மைத்தன்மை ஆகியவை

மொழிவதாகவும் உள்ளன.

இம்மூன்று துறையிலும் முதின்முல்லை, ஏறாண்முல்லை இரண்டிலும் பெண்புலவர்கள் பாடிய பாடல்கள் மறக்குடிமகளின் வீரப்பண்பைச் சுட்டுவன. வல்லாண்முல்லைப் பாடல் அதியமானின், வீரமும், விருந்தோம்பல் பண்பும், குடியின் சிறப்பும் சுட்டப்படுவன. பெண்பாற்புலவர்கள் மறக்குடிப் பெண்களின் வீரம் பாடுவதில் விருப்புடையவராக விளங்கியதை இப்பாடல்கள் உணர்த்துகின்றன.

## தாபத வாகை

வாகைத் திணைத் துறைகளுள் ஒன்று. இதனைத் தொல்காப்பியம், 'நாலிரு வழக்கின் தாபதபக்கமும்'[74] எனச்சுட்டும். இதற்கு இளம்பூரணர் எட்டு வகைப்பட்ட வழக்கினையுடைய தாபதர் பக்கமும் என்று நீராடல், நிலத்திடைக் கிடத்தல், தோலுடுத்தல், சடைபுனைதல், எரியோம்பல், ஊரடையாமை, காட்டிலுள்ள உணவு கோடல், தெய்வப்பூசையும் அதிதி பூசையும் செய்தல்[75] என்று விளக்குவர். புறப்பொருள் வெண்பாமாலை,

> "தாபத முனிவர் தவத்தொடு முயங்கி
> ஓவுதல் அழியா ஒழுக்குரைத் தன்று"[76]

எனச்சுட்டும். இதனால் தாபத வாகை என்பது முனிவருடைய நடையைக் கூறுவது என்பதை அறிய முடிகிறது. இத்துறையை ஆய்வு செய்த கோ.சிவகுருநாதன்.

> "தாபதம் இருபாலார்க்கும் அமையுமோ எனத்தெளிதல் வேண்டும். தாபதப்பக்கம் என்ற தொல்காப்பியத் தொடரும் தாபதவாகை என்ற புறப்பொருள் வெண்பாமாலைக் கொளுவும் பால் வரையறை செய்யாது பொது நிலையிலேயே அமைகின்றன"[77].

என்பர். பெண் துறவறம் மேற்கொண்ட குறிப்புச் சங்ககாலத்திலில்லை, தாபதவாகைப் பாடல் இரண்டும் பெண்பாற்புலவர் பாடியிருப்பது பெண்மையின் அறிவினை அறியச் சான்றாகிறது.

மாற்பித்தியார் பாடிய இரண்டு பாடல்களும் ஓரிடத்தில் (251,252) தொகுக்கப்பட்டிருப்பது ஒரு பொருள் நுவல்வதும், பாட்டின் பொருள்ளோட்டத்தையும்

கருத்திற் கொண்டுக் கோக்கப்பட்டவை. இப்பாடலில் ஓவியம் போன்ற அழகுள்ள இல்லத்தில் கொல்லிப் பாவை போன்ற அழகுடைய பெண்களின் இழைகளை நெகிழ்த்து, முன்பு வாழ்ந்தவன் என்பதை,

"ஓவத் தன்ன விடனுடைய வரைப்பிற்
பாவையன்ன குறுந்தொடி மகளிர்
இழைநிலை நெகிழ்த்த மள்ளற் கண்டிகும் "

(251:1-3)

"இல்வழங்கும் மடமயில் பிணிக்கும்
சொல் வலை வேட்டுவனாயினன் முன்னே"

(252:4-5)

என்று பாடினார். தற்போது தவம் மேற்கொண்டு காட்டில் அருவி நீராடி கானத்தில் யானை கொண்டுவந்த விறகினால் செந்தீ உண்டாக்கி, சடைமுடியுடன், தாளியிலையைக் கொய்து உணவாக்கி உண்டு வாழ்ந்தான் என்பதை,

"கழைக்க நெடுவரை யருவியாடிக்
கான யானை தந்த விறகிற்
கடுந்தெறற் செந்தீ வேட்டுப்
புறந்தாழ் புரிகடை புலர்த்து வோனே "

(புறநா.251:4-7)

என்றும்,

"கறங்கு வெள்ளருவி யேற்றலினிறம் பெயர்ந்து
தில்லை யன்ன புல்லென் சடையோ
பள்ளிளைத் தாளி கொய்யுமோனே "

(புறநா.252:1-3)

என்றடிகளால் அறியமுடிகின்றது.

தாபத வாகை பெண்கள் பாடியிருப்பது ஆண், பெண்ணைப் பிரிந்து காட்டில் வாழும் காலத்தில் பெண் தனித்து இல்லத்தில் துன்பப்படுவர் என்ற பெண்மையை எண்ணிப்பாடியிருக்க வேண்டும். இதில் ஆண்புலவர் பாடாதது வியப்பைத் தருகிறது. ஆண்களின் துறவத்தைப் பாடியிருக்க ஆண்பாற்புலவருக்கு வாய்ப்புண்டு.

எனினும் பாடவில்லை.

வாகைப் பாடல்களில் அதியமானின் போர்க்கள வெற்றியை வாகைத்திணையில் பாடினார் ஔவையார். வெண்ணிக் குயத்தியார் சோழன் கரிகாலனின் வெற்றியைப் பாடினார். மாறோக்கத்துநப்பசலையார் சோழன் குளமுற்றத்துத்துஞ்சியகிள்ளிவளவன், மலையமான் திருமுடிக்காரியின் போர் வெற்றியைப் பாடினர். இப்பாடல்கள் அனைத்தும் அரசவாகைத் துறையின. மூதின் முல்லைத் துறைப்பாடல்களில் அள்ளூர் நன்முல்லையார், ஒக்கூர் மாசாத்தியார், பொன்முடியார் போன்றோர் மறக்குடி மகளிரின் வீரப் பண்பைப் பாடியுள்ளனர்.

ஏறாண்முல்லைத் துறையில் ஔவையார் அதியமானைப் பாடியுள்ளார். தாபதவாகைப் பாடல்கள் இரண்டை மாற்பித்தியார் பாடியுள்ளார். இரண்டும் துறவறம் சென்றவனின் ஒழுக்கம் கூறுவன. வாகைப் பாடல்களில் மகளிரின் வீரத்தைப் பாடியிருப்பதுப் பெண்களின் படைப்புகளின் சிறப்பைக் காட்டுகின்றன. இத்துறைகளில் ஆண்களை விடப் பெண்கள் பாடினர் என்பது(பெண்கள்)பெண்ணின் வீரத்தைப் பெண்புலவர் பாடவிரும்பியதைக் காட்டுகிறது.

## தும்பைத்திணை

மைந்துப்பொருளாகத் தும்பைப்பூச் சூடிப் பகைவனுடன் போரிடுவது தும்பைப்போர். இத்திணையைத் தொல்காப்பியர்,

> "தும்பை தானே நெய்தல் புறனே
> மைந்து பொருளாக வந்த வேந்தனைச்
> சென்று தலை அழிக்கும் சிறப்பிற்றென்ப"[78]

என்பர். இதற்கு இளம்பூரணர், 'அது வலிபொருளாகப் போர்கருதி வந்த அரசன்கண் சென்று அவனைத் தலையழிக்கும் சிறப்பினையுடையது எனப்பகர்வர்[79] இத்தும்பைப்போர்,

> "தானே பெருவீரன், அகில உலகமும் தனக்குத் தலைவனாகுதல் வேண்டும், தன்தாள்பணிதல் வேண்டும் என்ற ஆணவ உணர்வுடையனாகிய ஒருவனின்.............ஆணவத்தை அடக்குதல் வேண்டும் எனத் துணிந்து அவனை அடக்க

அவனோடு போர் தொடுத்துப் போவதும் உண்டு. அவ்வாறு மேற்கொள்ளும், அவ்வாணவப் போருக்குத் தமிழர்கள் தும்பைப்போர் எனும் பெயர் சூட்டிப் பாராட்டினர்[80]

என்பர் அறிஞர் கா.கோவிந்தன். இவ்வாறு வலிமையைப் பொருளாகக் கொண்டுப் போர் நிகழ்ந்ததைப் பேராசிரியர் தே.சொக்கலிங்கம்,

"இராவணனை, மங்கைக்காகப் போர் செய்பவனாக்காது மைந்து பொருளாகப்போர் செய்பவனாக்குகிறான். கம்பன், இறுதியில் இராம இராவணப் போர் வலிமை அறியும் போராக அமைகிறது. அப்போர் தமிழ் நெறிக்கு இணங்கத் தும்பைப் போராகிறது[81]

எனச் சுட்டுவது, போரிடுவதில், வலிமையறிய நடந்த போர் உண்டு என்பதும், தும்பைப் போர் என்பது வலிமையுடைய இரு வீரரில் எவ்வீரன் வலிமையில் உயர்ந்தவன் என்றறிய நடந்த போர் என்பதும் அறியமுடிகிறது. இப்போருக்குச் செல்லும் வீரர் தும்பைப்பூச்சூடிப் போர்" புரிந்துள்ளனர்.

தொல்காப்பியர் தும்பைத்திணையின் துறையாகப் பன்னிரண்டைக் குறிப்பர். பெண்பாற்புலவர்களின் தும்பைத் திணைப் பாடலில் தானைமறம், உவகைக் கலுழ்ச்சி, குதிரை மறம், பாண்பாட்டு, நூழிலாட்டு என்ற ஐந்து துறைகளில் பாக்கள் அமைந்துள்ளன.

## தானைமறம்

புறநானூற்றில் இத்துறையில் எட்டுப்பாடல்கள்[82] உள்ளன. இதில் ஔவையார் பாடிய நான்கு (87,88,89,90) பாடல்களும் அடங்கும். இந்நான்குபாடல்களும் அதியமான் நெடுமான் அஞ்சியின் வீரத்தைப் பாடியன என்பது குறிப்பிடத்தக்கது. தானைமறம் என்ற துறையைத் தொல்காப்பியர்,

"தானை யானை குதிரை என்ற
நோனார் உட்கும் மூவகை நிலையும்"[83]

(தொல்.புற.17)

எனச்சுட்டுவர். இதற்கு இளம்பூரணர் 'தானையும் யானையும் குதிரையுமாகிய

மூவகைப்பட்டவற்றினது நிலையும்'[84] என்பர். இதனால் தானைமறவர்து போர்வீரர்களின் படையும், யானை குதிரைப்படைகளையும் கொண்டும் பகைவரை அழிக்குச் செய்யும் மறப்பண்பாகும் என்பது பெறப்படுகிறது. ஔவையார் அதியமானைப் பாடிய தானைமறத் துறைப் பாடலில்,

"களம்புக லோம்புமின் தெவ்விர்போரெதிர்ந்
தெம்முளு முளனொரு பொருநன் வைகல்
எண்தேர் செய்யுந் தச்சன்
திங்கள் வலித்த காலன்னோனே "

(புறம்.87)

என்று 'போர்க்களம் புகுதலைப் போற்றுமின், மாறுபட்டுப் போரிட்டால் எங்களுள் ஒரு வீரன் உளன். அவன் ஒரு நாளில் எட்டுத் தேர் செய்யும் தச்சன், ஒருமாதமும் ஓர்தேர்க்காலைச் செய்தால் எவ்வாறு அமையுமோ அது போன்ற வலிமையுடையவன் என்கிறார். இப்பாடலில் போரைப்பாடவில்லை. ஒருவீரனின் மறப்பண்பைப் பாடுகின்றார். இதனால் இது தானைமறத் துறையாயிற்று. இப்பாடல் இவன் வலிமையைக் குறைத்து மதிப்பிட்டுப் போர் புரிய எண்ணினால் தோல்வியைத் தழுவுவீர் என்பதால் முன் கூட்டியே ஒரு வீரனின் வீரத்தைப் பாடுகிறார். 'இவ்வீரன் அதியன்.[86]

இவர் பாடிய மற்றொரு பாடலில் (88) 'நீவிர் அதியமானைக் காணாமுன்பு கூழையையும் தாரையும் கொண்டு பொருதுவெல்வோம் என்பது கூடாது, காண்பீராயின் அவ்வாறு நினைத்தற்கே அஞ்சுவீர்கள் என்று அதியனின் வலிமையைப் பாடியதால் தானை மறமாயிற்று. இப்பாடலில் 'மழவர் பெருமகன்' என்று வீரரில் ஒருவனாக அதியனைக் கூறுகின்றார் ஔவையார்.

ஔவையார் பாடிய மற்றொரு பாடலில் 'எங்கள் நாட்டில் எறியும் கோலுக் கஞ்சாது அதனை ஓச்சுந்தோறும் உடன்றெழும் பாம்பு போலச் சீறியெழும் வீரர் பலர் உளர். அன்றியும், மன்றின்கண் கட்டப்பட்டிருக்கும் போர்ப்பறை காற்றாலசைந்து இசைக்குமாயின், போர் வந்து விட்டது போலும் என்று பொருக்கென எழும் தலைவனும் உளன் (புறம்.89) என்று பாடுகிறார். இப்பாடலும் போர் நடப்பதைப்

பாடவில்லை. நாட்டில் மறவர்களின் வீரத்தைப் பாடுகிறார். இவ்வாறு பாம்பு போலச்சீறிப் பாயும் வலிமையுடைய போர் மறவர் என்று பாடுவதால் இது தானைமறமாயிற்று. இது வலிமைப் பொருளைச் சுட்டுவதால் தும்பைத் திணையாகியது.

அதியமானின் வீரத்தை ஔவையார் பாடிய புறநானூற்றுப் பாடலில் (90) புலி சினந்தால் மான் கூட்டம் எதிர் நில்லாது, ஞாயிறு சினந்தால் இருள் நில்லது. பெருமிதப் பகட்டுக்கு வழியருமை கிடையாது, உனது வீரர்கள் வழுவில் வன்கைமழவர் நீ களம் நின்மண்ணைக் கொண்டு ஆர்க்கும் வீரரும் உளரோ என்று பாடுகிறார். இப்பாடலும் போர்க்களத்தில் பொருதுவதைப் பாடவில்லை. அதியனின் வீரமும், அவன் படைவீரர்களின் வீரமும் பாடப்பட்டதால் தும்பைத் தானைமறத் துறையாயிற்று.

ஔவையார் பாடிய நான்கு பாடலும் அதியனின் வீரமும், அவன் படைமறவர்களின் வலிமையும் பாடப்பட்டுள்ளன. ஒரு வீரனை பலரும் அறிய அவன் வீரத்தைப் பறைசாற்றுகிறார். இதன் பொருள் போரைத் தவிர்ப்பதற்காகவும், இவனைப் பொருட்டாகக் கருதாதபகை மன்னர்களுக்கு இவன் வீரத்தைப் புரியும்படி கூறும் நோக்குடனும் பாடப்பட்டதாக்கும். இவரின் தானைமறத் துறைப்பாடல்கள் அமைந்துள்ளன.

## உவகைக்கலுழ்ச்சி

போரில் வாட்புண் பெற்று வந்த கணவனைக் கண்டு மனைவி மகிழ்ந்து கண்ணீர் வீழ்த்துவது உவகைக் கலுழ்ச்சியாகும். இது தும்பைத் திணைத் துறைகளுள் ஒன்று. தொல்காப்பியர் உவகைக்கலுழ்ச்சி என்று கூறவில்லை. கணவனை இழந்த மனைவியின் நிலையைத் தாபதநிலை என்று காஞ்சித் திணையில் குறிப்பிடுவார்.

> "உவகைக்கலுழ்ச்சித் துறையை ஐயனாரிதனார் குறிப்பிடுவர். இவர்,
> வாள் வாய்த்த வடுவாழ்யாக்கை
> கேள் கண்டு கலுழ்ந்து வந்தன்று"[86]

என்று வாளால் விழுப்புண்பெற்ற வீரனை அவன் மனைவி கண்டு ஆனந்தக் கண்ணீர் சொரிந்து மகிழ்வுற்றது எனப்பகரும்.

இத்துறையில் புறநானூற்றில் மூன்று பாடல் இடம்பெற்றுள்ளது. மூன்றும் பெண்பாற்புலவர் பாடியன என்பது குறிப்பிடத்தக்கதாகும். இதில் ஔவையார் (295) ஒன்றும், காக்கை பாடினியார் நச்செள்ளையார் ஒன்றும் (278), பூங்கணுத்திரையார் (277) ஒன்றுமாகக் பாடியுள்ளனர். இப்பாடல் மூன்றும் ஒருதாய் வீரமகனின் மார்பிலே விழுப்புண்பட்டு இறந்ததைக்கண்டு, மகிழ்ந்து, கண்ணீர் சிந்தியதாகப் புனையப்பட்டுள்ளன.

ஔவையார் பாடிய 295-ஆம் பாடலில், மூவேந்தர் இருவர் தும்பை சூடிப் போர் புரிந்தனர். அப்போரில் இருவர் பக்கத்தும் பலவீரர் மடிந்தனர். வீழ்ந்த வீரருள் பலர் அரிய போருடற்றிப் பகைவரால் வேறுவேறாகத் துணிக்கப்பட்டனர். அப்போது ஒரு வீரன் பகைவர்களை அம்பாலும் வேலாலும் தடுத்துப் போர் புரிந்த களத்தில் வெட்டுண்டு இறந்தான். அவனின் மற மாண்பைக் கண்டதும் வயதான அவன் தாயின் வற்றிய முலையில் பால் சுரந்ததாகப் பாடுகிறார். இதனை,

"இடைப்படை யழுவத்துச் சிதைந்து வேறாகிய
சிறப்புடையாளன் மாண்புகண்டருளி
வாடுமுலை யூறிச் சுரந்தன
ஓடாப் பூட்கை விடலை தாய்க்கே"

(புறநா.295:5-8)

என்றடிகளால் அறியமுடிகின்றது. இவ்வாறு விழுப்புண் பெற்ற இறந்த வீரனைக் கண்டு தாய் மகிழ்ந்ததால் இத்துறையாயிற்று.

காக்கைப்பாடினியார் நச்செள்ளையார். ஒருதாய் உன் மகன் போர்க் களத்தில் புறமுதுகிட்டு மாண்டான் என்று கேட்டவுடன் போர்க்களத்திற்குச் சென்று பிணங்களில் தன்மகன் எங்கே எனத்தேடிப் பின் அவன் கிடக்கக்கண்டாள். அவன் மார்பிலே புண்பட்டு இறந்திருப்பதைக் கண்டவுடன் பெற்ற பொழுதினில் பெற்ற மகிழ்ச்சியைவிடப் பெரிது மகிழ்ந்தாள். இதனை,

"நரம் பெழந் துலறிய நிரம்பா மென்றோள்
முளரி மருங்கின் முதியோள் சிறுவன்
படையழிந்து மாறின னென்று பலர் கூற

மண்டமர்க் குடைந்தன னாயினுண்டவென்

முலையறுத் திடுவென் யானெனச் சினைஇக்

கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்

செங்களந் துழவுவோள் சிதைந்து வேறாகிய

படுமகன் கிடக்கை காணூஉ

ஈன்ற ஞான்றினும் பெரிது வந்தனளே ”

(புறம். 278)

என்ற பாடல் சுட்டும். இப்பாடலில் தாய் ஒருத்தி விழுப்புண் மார்பிலே பட்டு இறந்த மகனைக் கண்டு பெற்ற பொழுதை விடப்பெரிது மகிழ்ந்தாள் என்பதால் உவகைக் கலுழ்ச்சித் துறையாகியது. இப்பாடல் வலிமையில் யார் பெரியவர் என்று இருபடைபொருதுவதாகச் சுட்டப்பட்டதால் தும்பைத் திணையாகியது.

பூங்கணுத் திரையார் இத்துறையில் புறநானூற்றில் 277ஆம் பாடலில், ஒரு முதுதாய் தன்மகன் போர்க்களத்தில் களிற்றை எறிந்துமாண்டான் என்ற செய்தி கேட்டதும் ஈன்ற ஞான்றினும் பெரிது உவந்தாள் என்கிறார். இப்பாடலில்,

“மீனுண் கொக்கின் முதியோர் சிறுவன்

வானுரைக் கூந்தன் முதியோள் சிறுவன்

களிறெறிந்து பட்டன னென்னுமுவகை

ஈன்ற ஞான்றினும் பெரிது கண்ணீர்

நோன்கழை துயல்வரும் வெதிரத்து

வான்பெயத் தூங்கிய சிதரினும் பலவே ”

(புறநா. 277)

என்று போரில் களிறெறிந்து இறந்தான் என்று பெற்ற பொழுதினும் பெரிது உவந்தனள் என்றதால் உவகைக் கலுழ்ச்சியாகியது.

இம்மூன்று பாடல்களும் தாயின் வீரப்பண்பைச் சுட்டுகின்றன.. இரண்டு பாடலிலும் வீரன் போர்க்களம் சென்று போரிட்டு மாண்டமைசுட்டப்பட்டுள்ளன.(277, 278) புறப்பொருள் வெண்பாமாலை உவகைக்கலுழ்ச்சிக்கு மனைவி கணவன் விழுப்புண்பட்டது கண்டு மகிழ்ந்ததைச்சுட்டும். இப்பாட்டுக்கள் மகன்

போர்க்களத்தில் விழுப்புண்பட்டு இறந்ததும், அவ்வாறு இறந்தத்ததைக் கேட்டும், பார்த்தும் மகிழ்ந்து தாய் கண்ணீர் சிந்தியதாக உள்ளன. காஞ்சித் திணையில் தொல்காப்பியர்

"ஆய்பெரும் சிறப்பிற் சிறுவன் பெயரத்
தாதபவரூஉம் தலைப்பெயல் நிலையும்"[87]

என்றதற்குப் போர்க்களத்தில் சிறுவன் புறமுதுகிட்டான் எனக் கேட்ட தாய் வருந்தி வரும் தலைப்பெயல் 'நிலைக்காஞ்சி' என்பர். பெண்பாற்புலவர் பாடிய பாடலில்போரில் மகன் புறமுதுகிட்டான் என்றதைக்கேட்டு பின் போர்க்களம் சென்று மகன் மார்பிலே விழுப்புண் பட்டு இறந்ததைக் கண்டு மகிழ்ந்ததாகக் கூறப்பட்டுள்ளது (278) புறப்பொருள் வெண்பாமாலையில் மனைவி கணவன் போர்களத்தில் புறமுதுகிட்டதைக் கேட்டு வருந்தி பின் களம்புகுந்து மார்பிலே விழுப்புண்பட்டு மாண்டதைக்கண்டு மகிழ்ந்தாள் எனச்சுட்டும். புறப்பொருள் வெண்பாமாலையில் மனைவி என்று குறிப்பிட்டது போல் பெண்பாற்புலவர் பாடலில் குறிப்பிடவில்லை. தொல்காப்பியம் சுட்டியது போல தாயின் மறப்பண்பைப் பாடியுள்ளனர்.

## குதிரைமறம்

தும்பைத் திணைத் துறைகளுள் ஒன்று. இது ஒரு வீரனுடைய குதிரையின் மறத்தைக் கூறுதல். இதனைத் தொல்காப்பியர்

"தானை யானை குதிரை என்ற
நோனார் உட்கும் மூவகை நிலையும்"[88]

என்று பகைவரை அழிக்கும் படைகளில் ஒன்றாகக் குதிரை வீரர்களின் நிலையினைச் சுட்டுவது குதிரைநிலை என்பர். இதனை ஐயனாரிதனார்.

"எறிபடையான் இகலமருள்
செறிவுடைமான் திறங்கிளந்தன்று"[89]

என்று தும்பை வேந்தர்களின் போரில் போர்க்கலை செறிந்த குதிரையினது திறத்தைச் சொல்லுவது என்றுரைப்பர்.

சங்ககாலப் போரில் குதிரைகளுக்கிருந்த பங்கினை இலக்கியமும்,

இலக்கணமும் அறியச் சான்றாகின்றன. இத்துறையில் ஐந்து பாடல்கள் புறநானூற்றில் காணப்படுகின்றன[90] இவற்றில் பெண்பாற்புலவரான வெறிபாடிய காமக்கண்ணியாரின் 302ஆம் பாடலும் அடங்கும். இப்பாடலில், குதிரைகள் வளைத்துவிட்ட மூங்கில்கள் மேலெழுவதுபோலப் போரில் தாவித்துள்ளிப் பாய்ந்து வென்றிவிளைத்தன. அவன் போரில் பெற்ற பொற்பூக்களை அவனுடைய விறலியர் கூந்தலில் அணிந்து கொண்டனர். புகழ்பாடிப் பரவிய பாணர்களுக்கு அவன் ஊர்கள் பல நல்கினான். இப்பெற்றியோன் போரில் எறிந்து வீழ்த்திய களிறுகளை எண்ணின் மழைத்துளியினும் பலவாயிருந்தன, என்று பாடியுள்ளார். இப்பாடலில் மிக விரைந்து செல்லும் குதிரையின் மீதேறி வீரர்கள் பகைவரின் யானைகளைக் கொன்று குவித்தனர் என்று குதிரைப் படைவீரர்களின் வீரத்தினைப் பாடியதால் இப்பாடல் குதிரைமறம் துறையாகியது. இதனால் சங்ககாலத்தில் போருக்கென்று குதிரைகளைப் பழக்கிப்போர்க்காலங்களில் பயன்படுத்தப்பட்டமை அறியமுடிகிறது.

## நூழிலாட்டு

தும்பைப் போரில் 'பல படை ஒருவற்குக் கெடுதலின் அவன் ஒள்ளியவாள் வீசிய நூழில்'[91] என்று வீரன் வாளைக்கொண்டுப் பகைவரை அழிக்கும் செயலைக் குறிப்பிடுவர் தொல்காப்பியர். போர்க்களத்தில் மார்பில் பட்ட வேலை எடுத்துப் பகைவீரர்களின் மேல் எறிவது நூழிலாட்டு[92] என்று ஐயனாரிதனார் குறிப்பிடுவர். இத்துறையில் புறநானூற்றில் இரண்டு பாடல்[93] காணப்படுகின்றன. இவற்றில் ஒரு (310) பாடலைப் பாடியவர் பொன்முடியார். இப்பாடலில் மனமே, இவன் பிள்ளைப்பருவத்தில் வள்ளத்தில் பாலேந்தியுண்பித்தபோது உண்ணானாகக் கண்டு சிறுகோலை எடுத்து ஓச்சிய போது நம்மைக் கண்டு அஞ்சினான்; இப்போது, இவன் முன்னாள் போரில் வீழ்ந்த பெருவீரற்கு மகனாதற்கேற்ப, பல களிறுகளைக் கொன்றதனோடு அமையானாய், தன்கேடகம் கீழ்ப்படத் தான் அதன் மேல் வீழ்ந்து கிடக்கின்றான், இடையே தன் மார்பிற் புண்ணில் பகைவர் எய்த அம்பொன்று தைத்திருப்பதைக் காட்டிய போது யான் இதனைக் கருதிற்றிலேன் என்கின்றான், இவன் மறம் இருந்தவாறென்னே எனத் தனக்குள் வியந்து கூறிக் கொண்ட தாயின் எண்ணத்தை வடிக்கின்றார் பொன்முடியார்.

இப்பாடலில் போர்க்களத்தில் பல யானைகளை வீழ்த்தியதாலும், மார்பிலே தைத்த வேலினையும் அறியாமல் வீரப்போர் செய்த வீரத்தைக் குறிப்பிட்டதாலும், நூழிலாட்டு என் பட்டது. பாடலில் வீரன் தனதுமார்பில் தைத்த வேலைப் பறித்து வீசியதாக இல்லை. பல யானைகளைக் கொன்று, தனது மார்பில் தைத்த வேலினையும் அறியாமல் போர் செய்தான் என்று பாடப்பட்டுள்ளது.

## பொதுவியல்

தொல்காப்பியர் பொதுவியல் திணை என்று தனி ஒருதிணை வகுத்திலர். ஐயனாரிதனார், பொதுவியல் எனத் தனித்திணையை வகுத்துக்கூறுவர். பொதுவியல் திணையாவது அகத்திற்கும் புறத்திற்கும் பொதுவாதலும், முற்கூறப்பட்டுள்ள திணைவகைகளுள் பொதுவாக நிகழும் இயல்பினை உடையனவாகும். இத்திணைக்குப் புறப்பொருள் வெண்பாமாலைப் பன்னிரண்டு துறைகளாக வகுத்துக்கூறும்.

இத்திணையில் பெண்பாற்புலவர்கள் பாடிய ஒன்பது பாக்கள் உள்ளன. ஔவையார் நான்கு பாடல்களும் (187, 231,232,235), மாறோக்கத்து நப்பசலையார் இரண்டும் (226, 280), பாரிமகளிர் ஒன்றும் (112), பெருங்கோப்பெண்டு (246) ஒன்றும், தாயங்கண்ணியார் (250) ஒன்றுமாகப் பாடியுள்ளனர். இப்பாடல்கள் கையறுநிலை ஆனந்தப்பையுள், பொருண்மொழிக்காஞ்சி, தாபதநிலைத் துறைகளில் இடம்பெற்றுள்ளன.

## கையறுநிலை

கையறுநிலையாவது

'கழிந்தோர் தேத்து கழிபடர் உறீஇ
ஒழிந்தோர் புலம்பிய கையறுநிலையும்'[94]

என்று காஞ்சித்திணைத் துறைகளுள் சுட்டுவர் தொல்காப்பியர். இதற்குச் செத்தோர் மாட்டுச் சாவாதார் வருத்த முற்றுப் புலம்பிய கையறுநிலையும் என்று இளம்பூரணர் கூறுவர்[95]. புறப்பொருள் வெண்பாமாலையில் பொதுவியல் என்ற திணையில் கையறுநிலைத்துறையைக் குறிப்பிட்டு,

"செய்கழன் மன்னன் மாய்ந்தெனச் சேர்ந்தோர்

கையற வுரைத்துக் கைசோர்ந்தன்று"[96]

என்று மன்னன் போரிடையே இறந்தான் என அவனைச் சேர்ந்தோர் தம்முடைய கையற்று நிலையை உரைத்துச் செயலற்று நிற்பது என்றும்,

"கழிந்தோன் தன்புகழ் காதலித்துரைப்பினும்

மொழிந்தனர் புலவர் அத்துறை என்ன"[97]

என்று இறந்தோனது புகழினை அன்புற்று எடுத்துச் சொன்னாலும் கையறுநிலையாகும் என்று குறிப்பிடுவர்.

இத்துறையில் பெண்பாற்புலவர்கள் பாடியனவாக ஐந்து பாடலுள. இதனை ஔவையார், மாறோக்கத்து நப்பசலையாரும் பாடியுள்ளனர். ஔவையார் பாடிய பாடல் மூன்று (231, 232, 235) அதியமான் நெடுமான் அஞ்சி இறந்தபோது பாடிய பாடலாக உள்ளன. மாறோக்கத்து நப்பசலையார் சோழன் குளமுற்றத்துத் துஞ்சியவளவன் இறந்தபோது பாடியதாகவும் (226), பாரிமகளிர் (112), தந்தை இறந்த நிலையில் பாடிய பாடல்களாகவும் உள்ளன.

> "புறநானூற்றில் முப்பத்தொரு பாட்டுகள் கையறுநிலையில் பாடப்பட்டவை". ஆங்கிலம் முதலான பிறமொழி இலக்கியங்களில் அவை சிறப்பிடம் பெற்று விளங்குகின்றன.........பிரிவாற்றாத் துயரம் (புரவலன் அல்லது நண்பன் இறந்தபின் செயலற்று வருந்துதல்) பற்றிய பாட்டுக்கள் பலபழங்காலம் முதல் இருந்துவருகின்றன. இதற்குக் கையறுநிலைப்பாட்டு (elegy) எனப்படும்"[98]

என்பர் மு.வரதராசன். இதனால் ஒருவன் இறந்த நிலையில் அவனை எண்ணிவருந்திப் பாடும் பாட்டுக் கையறுநிலையாகும்.

அதியமான் இறந்ததும் விறகால் அடுக்கப்பட்ட கட்டையில் அதியமானின் உடலை வைத்து எறியூட்டுகின்றனர். இதனைக் கண்ட ஔவையார்,

"எறிபுனக் குறவன் குறையலன்ன
கரிபுற விறகினீம வொள்ளழற்
குறுகினுங் குறுகுக குறுகாது சென்று

விசும்புற நீளினு நீள்க பசுங்கதிர்த்

திங்களன்ன வெண்குடை

ஒண்ஞாயி றன்னோன் புகழ்மா யலவே"

(புறம்.231)

என்று அதியமானின் உடல் கருகினும், வேகாது நேரே விண்ணுலகம் புகினும், அவன் பெற்ற புகழ் ஒருகாலும் அழியாது என்று அதியன் இறந்த நிலையில் ஔவையார் கையற்றுப் பாடுகிறார்.

அதுபோன்றே, அதியமான் இறந்த பின் அவனுக்கு நடுகல் நட்டுத் தேறல் வைத்து வழிபடுகின்றனர். இக்காட்சியைக் கண்ட ஔவையார் மிகவும் வருந்துகிறார். அதியமான் வாழ்ந்த நாள்களில் பகைவர் நாடு முழுவதும் கொடுப்பினும் கொள்ளாத மறப்பண்பினையுடையவன் இந்தத் தேறலைக் கொள்வானோ? (புறம்.232) என்று அவர் மனத்தில் அதியனின் வீரத்தையும், அவன் வாழ்க்கையையும் எண்ணி இறந்த பின் நடக்கும் நடுகல் வழிபாட்டினை எண்ணி மிகவும் வருந்தும் இப்பாடலும் கையறுநிலைத் துறையாகியது.

அதியமான் மார்பிலே வேல் பாய்ந்திறந்தான் ஔவையார் அதியன் இறந்ததால் பாணர் வாழ்க்கையைச் சீரழித்துவிட்டது. எனவே, நாட்டில் பாடுவோரும் பாடுவோர்க்கு ஈவோரும் இலராயினர் என்றும், ஈயாது வைத்து உயிர் துறந்து கெடும் கீழ்மக்களே மிகப் பலர் இவ்வுலகில் உள்ளனர். இதனை,

"சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே

பெரியகட் பெறினே

யாம்பாடத் தான் மகிழ்ந் துண்ணுமன்னே

..........................................................................

அருந்தலை யிரும் பாண ரகன் மண்டைத் துளையுரீஇ

இரப்போர் கையுளும் போகிப்

புரப்போர் புன்கனர் பாவை சோர

அஞ்சொனுண் டேர்ச்சிப் புலவிற் நாவிற்

சென்று வீழ்ந் தன்றவன்

அருநிறத் தியங்கிய வேலே

ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ

.........................................................................

நீயாது வீயு முயிர்தவப் பலவே ”

(புறம். 235)

என்ற பாடலால் அறியமுடிகிறது. ஔவையார் பாடலில் அதியமான் புகழ் எங்கும் பரவியுள்ளது என்றும், அவன் பகைவர் நாட்டினைக் கொடுத்தாலும் பெற்றுக் கொள்ளும் எண்ணம் இல்லாதவன் என்றும், அவன் புலவருக்கு ஈந்து மகிழ்ந்தவன் என்றும், இனி இரப்பவருக்கு ஈவார் யாருமிலர் என்றும் வருந்திப்பாடுகிறார். அதனால் இப்பாடல் மூன்றும் கையறுநிலைத் துறைப்பாட்டாகின.

மாறோக்கத்து நப்பசலையார் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் இறந்ததும் வருந்தமுற்றுக் கூற்றுவன் பாடுநர் போல வந்து தான் கிள்ளியின் உயிரைப் பறித்திருக்க வேண்டும் என்று பாடுகிறார். இதனை,

“பாடுநர் போலக் கைதொழுதேத்தி
இரந்தன் றாகல் வேண்டும் பொலந்தார்
மண்டமர் கடக்குந் தானைத்
திண்டேர் வளவற் கொண்டகூற்றே ”

(புறம் 226;-3-6)

என்றடி சுட்டும். இப்பாடலில் அரசன் இறந்த நிலையில் அவன் கொடையுள்ளதை எண்ணிக் கூற்றுவனும் புலவனாக வந்து உயிரைக் கேட்டதால் கொடுத்துவிட்டான் என்று வருந்திக் கையற்றுப் பாடியதால் கையறுநிலைத் துறையாகியது.

பாரிவள்ளல் இறந்தான் தந்தையை இழந்த சோகத்தில் பாரி மகளிர்,

“அற்றைத் திங்கள் அவ்வெண்ணிலவிள்
எந்தையும் உடையேம் எம் குன்றும் பிறர்கொளார்
இற்றைத் திங்கள் இவ்வெண்ணிலவின்
வென்றெறி முரசின் வேந்தரெம்
குன்றுங் கொண்டார் யாமெந்தையுமிலமே ”

(புறம். 112)

என்று தந்தையிழந்ததையும், நாட்டினைப் பிறர் கைப்பற்றிக் கொண்டதை எண்ணிக் கையற்றுப் பாடினார். இவ்வாறு கையற்றுப் பாடியதால் கையறுநிலைத் துறையாகியது.

இப்பாடலில் பாரி மகளிர் சோகம் தந்தையிழந்து வருந்துவதாக உள்ளது. ஔவையார், மாறோக்கத்து நப்பசலையார், பாட்டுகள் புரலவலன், புலவன் என்ற உறவில் அமைந்துள்ள கையறுந்நிலைப்பாட்டுகளாக உள்ளன. புலவர் என்பதால் மன்னனின் கொடைப் பண்பைப்பாடினர். பாரிமகளிர் இழந்தது தந்தை என்பதால் தந்தையின் இழப்புப் பெரிதெனப்பட்டது. நாட்டினைப் பிறர் கைப்பற்றியதையும் எண்ணி வருந்திப்பாடினர். சங்கநூல்களில் தந்தை-மகள் உறவுத்துயர் காட்டும் ஒரேபாட்டு இஃதாகும். புரவலர்-புலவர் துயரே பாடப்பட்டத் தமிழிலக்கியத்தில் இது புதுமையானது. இயற்கையாகப் பெண்மக்கள் ஆண்களைவிட அதிகம் வருந்துபவர்கள்[99]. என்பதற்குப் பெண்பாற்புலவர்களின் கையறு நிலைப்பாட்டுக்கள் சான்றாகின்றன.

## ஆனந்தப் பையுள்

புறநானூற்றுள் ஐந்து பாடல்கள்[100] இத்துறையின. இதில் இரண்டு பெண்பாற்புலவர் பாடியன. பெருங்கோப்பெண்டு கணவன் பூதபாண்டியன் இறந்த நிலையில் உடன் தீப் புகப்போகும்முன் (246) பாடியுள்ளாள். இது நேர்கூற்று மாறோக்கத்து நப்பசலையார் ஒருவீரன் இறந்த போது அவன் மனைவி உடன் இறக்க விரும்பியதைப் (280) பாடியுள்ளார். இது அயற்கூற்று இரண்டும் ஆனந்தப் பையுள் துறையைச் சார்ந்தவை.

ஆனந்தப்பையுள் துறையாவது கணவன் இறந்து அவனுடல் எறியூட்டப்பட்ட தீயில் மனைவியும் உடன் மாயப் புகுமுன் கூறும் கூற்று. இதனைத் தொல்காப்பியர் காஞ்சித் திணையில்,

> "நல்லோள் கணவனொடு நனியழல் புகீஇச்
> சொல்லிடை யிட்ட பாலை நிலையும்"[101]

என்று குறிப்பிடுவர். ஐயனாரிதனார், பொதுவியல் துறைகளில்ஒன்றாகக் கருதுவர். இதற்கு,

"விழுமங்கூர வேய்த்தோள் அரிவை
கொழுநன் வீயக் குழைந்து அப்படி"[102]

என்பர். இதற்குக் கணவன் இறந்துபட, அதனால் இடும்பை மிகுத்தாளாகி மெலிந்து வருந்தியது ஆனந்தப்பையுள் எனப்படும். தொல்காப்பியர் பாலைநிலை என்றதைப் புறப்பொருள் வெண்பாமாலை ஆனந்தைப்பையுள் எனச் சுட்டியது.

பூதபாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு கணவன் இறந்ததும் தானும் உடன் மாய எண்ணினாள். சான்றோர் பலர் தடுத்தனர் அப்போது மறுத்து மொழிவதாக அமைந்த பாடல், அதில்

"பல்சான் றீரே பல்சான்றீரே
செல்கெனச் சொல்லா தொழிகென விலக்கும்
பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான்றீரே
அணில் வரிக் கொடுங்காய் வாள்போழ்ந்திட்ட
..............................................................
..............................................................,
உயவற்பெண்டிரே மல்லே மாதோ
பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட்டீமம்
நுமக்கரிதாகுக தில்ல வெமக்கெம்
பெருந்தோட் கணவன் மாய்ந்தென வரும்பற
வள்ளித ழவிழ்ந்த தாமரை
நள்ளிரும் பொய்கையுந் தீயுமோ ரற்றே"

(புறம்.246)

என்று தடுப்போர் பொல்லாச் சூழ்ச்சியுடையவர் என்றும், அந்நாளில் இருந்த கைம்மை நோன்பையும் கூறுகின்றார். வெள்ளரிக் காயை அரிவாளால் அரிந்திடப்பட்ட விதைபோன்ற உணவில் நெய் இல்லாமல், இலையில் பழைய சோற்றுடன், எள் துவையல் உணவை உண்டு, பாயின்றித்துயின்று, வாழ்வதை விட எறியூட்டப்பட்ட தீயில் வீழ்ந்து இறப்பதுப் பொய்கையில் வீழ்வதற்குச் சமம் என்று கூறுகிறாள். இப்பாடல் கணவன் உடன் சிதையூட்டப்பட்டதீயுள் புகும்முன் கூறும் கூற்றாதலால் இத்துறையாகியது.

மாறோக்கத்து நப்பசலையார் ஆனந்தப்பையுள் துறையில் பாடிய பாடலில்,

ஒரு வீரன் மார்பில் புண்பட்டு வருந்துகின்றான். அப்போது அங்கு நடக்கும் நிகழ்ச்சிகளும் தீயதாக உள்ளன. நடுநாள் யாமத்தில் தும்பிகள் ஒலிக்கின்றன. ஏற்றி வைத்த விளக்கும் அவிகின்றது. என்னையும் அறியாமல் எனக்கு உறக்கம் உண்டாகுகிறது, மனைக்கூரையில் கூகைக் குழறுகிறது. விரிச்சி நிற்கும் முதுபெண்டிர் சொற்களும் பொய்படுகின்றன. இனி உங்கள் நிலையாதாகுமோ அறியேன், இனி நீங்கள் இங்கேயிருந்து வாழ்வது என்பதரிது. அதனினும் அரிது யான் உயிர் வாழ்ந்திருப்பது,

"என்னாகுவிர் கொலளியிர் நுமக்கும்
இவணுறை வாழ்க்கையோ வரிதே யானும்
மண்ணுறு மழித்தலைத் தெண்ணீர் வாரத்
தொன்றுதா முடுத்த வம்பகைத் தெரியற்
சிறுவெள்ளாம் பல்லி யுண்ணும்
கழிகல மகளிர் போல
வழிநினைந் திருத்த லதனினுமரிதே "

(புறம்.280 : 9-15)

எனக் கைம்மை நோன்புற்று தலைமுடி எடுக்கப்பட்டு, அல்லி அரிசி உணவுண்டு வாழும் கழிகலமகளிர்போல வாழ்தல் அரிது, தலைவன் இறந்தபின் வாழும் திறம் நினைந்து யானும் இங்கே உயிர் வாழ்ந்திருப்பது அரிது என்று அப்பெண் கூறியதாகப் பாடுகிறார்.

இப்பாடல் தலைவன் இறப்பது உறுதி. அதன்பின் நானும் உயிர்வாழ்வதென்பது முடியாது நானும்இறந்து படுவேன், என்று வருந்திக் கூறும் பாடலாதலால் இது ஆனந்தப் பையுளாகியது.

பெருங்கோப்பெண்டு பாட்டும், மாறோக்கத்து நப்பசலையார் பாட்டும் கணவன் இறந்தபின் மனைவி உயிர் துறப்பது, அந்நாளில் இருந்ததைக் காட்டுகின்றன. கைம்மை மகளிர் நிலை கூறி இறக்கத் துணியும் பெண்களின் கூற்று அந்நாளில் இருந்த கைம்மையின் துயரை உணர்த்துகிறது.

## தாபத நிலை

தலைவன் இறந்தபின் மனைவி வாழும் நிலையைப் பேசுவது தாபதநிலை. இதனைத் தொல்காப்பியர் காஞ்சித் திணையில் காதலன் இழந்த தாபத நிலை[103] என்று காதலனை இழந்தவள் நிற்கும் தாபத நிலை என்றார்.

ஐயனாரிதனார்,

"குருந்தலர் கண்ணி கொழுநன் மாய்ந்தெனக்
கருந்தடங்கண்ணி கைம்மை கூறின்று"[104]

என்று கணவன் இறந்தானாக அவன் மனைவி கைம்மை நோன்பு நோற்றது தாபத நிலை என்றார். தொல்காப்பியர் காதலனை இழந்தவள் நிற்கும் நிலை என்று கூற ஐயனாரிதனார் கணவனை இழந்து கைம்மை நோன்பு நோற்பதைக் கூறுகின்றார். தொல்காப்பியர் கைம்மை என்று வெளிப்படச் சொல்லிலர். ஐயனார் கைம்மை என்று குறிப்பர்.

இத்தாபத நிலைத் துறைப்பாட்டைத் தாயங்கண்ணியார் பாடியுள்ளார். இவர் பாடிய 250ஆம் பாடலில், அந்நாளில் கணவன் இழந்த பின் ஒரு பெண் தாளிக்காத உணவினைத் துவையலோடு, அல்லியரிசி உணவினை உண்டு வாழ்ந்ததை,

"குய்வரன் மலித்த கொழுந் துவை அடிசில்
இரவலர்த் தடுத்த வாயிற் புரவலர்
.............................................................
கூந்தல் கொய்ந்து குறுந்தொடி நீக்கி
அல்லியுணவின் மனைவி யோடினியே
புல்லென் றனையால் வளங் கெழுதிருநகர்
வான் சோறு கொண்டு தீம்பால் வேண்டும்
முனித்தலைப் புதல்வர் தந்தை
தனித்தலைப் பெருங்காடு முன்னியபின்னே "

(புறம். 250)

என்ற பகுதி காட்டும். இப்பாடலில் வான் சோறு கொண்டும் தீம்பால் வேண்டும் சிறுவனின் தாய் என்று குறிப்புளது. இதனால் கணவன் இறந்து உயிர் வாழப்

பெற்ற சிறுவயதுடைய பிள்ளைகள் காரணமாக இருந்தன. இத்துறையில் பாடிய ஒக்கூர் மாசாத்தனார் (248), தும்பைச் சொகினனார் (249) பாடியுள்ளனர். அல்லியரிசி உணவு உண்டதை ஒக்கூர் மாசாத்தனார் பாடியுள்ளார் இப்பாடல் ஐந்தடியில் உள்ளது. தும்பைச் சொகினனார் கணவன் இறந்தபின் விண்ணுலகம் சென்ற தலைவனுக்கு உணவு படைத்ததை,

"அடங்கிய கற்பினாய் நுதன் மடந்தை
உயர்நிலை யுலக மவன் புகவார
நீறாடு சுளகிற் சீறிட நீக்கி
அழுத லானாக் கண்ணாள்
மெழுகு மாப்பிகண் கலுழ்நீரானே "

(புறம்.249:10-14)

என்றுபாடுகிறார். ஆண்பாற் புலவர்களின் பாடலில் கைம்மை நோன்பு பற்றிய குறிப்பு அழுத்தமாகவோ, மிகுதியாகவோ பாடப்படவில்லை. பெண்பாற்புலவர் பாட்டுக்களில் விரிவாகப் பாடப்பட்டுள்ளது. ஆனந்தப்பையுள் துறைப் பாட்டுக்களில் பெண் கைம்மை நோன்பின் கொடுமை கூறி உயிர் துய்க்க விரும்பினாள் என்று பெண்டிர் பாடியுள்ளனர். தாபதநிலையைப் பெண்பாற்புலவர் பெண்களின் அக்கால நிலையைப் பதிவு செய்து பெண்கள் எவ்வாறு வருத்தமுற்றனர் என்பதைப்பாடியது போல ஆண்புலவர் பாடவில்லை. ஆண்கள் இது சமுதாயத்தில் நடைபெறும் பழக்கம் என்பதைப் பதிவு செய்ய, பெண்பாற்புலவர் பெண்கள் என்ற முறையில் கைம்மை நோன்பினைப் பார்த்ததை பெண்மைப்பண்போடும் பாடியுள்ளனர். இச்செய்தியின் விரிவு இவற்றை அறியச் சான்றாகின்றன. மறுக்கும் நிலை வெளிப்படாதிருந்தாலும் குறிப்பாக மறுத்த குறிப்புகளும் (246) உண்டு. இது அந்நாளில் பெண்கள் செய்திருந்த ஒரு செயல். உடன்பட்டுச் செய்தனரா? உடன்படாது செய்தனரா? என்பதறிய முடியாமலுள்ளது.

## பொருண்மொழிக்காஞ்சி

பொருண்மொழிக் காஞ்சித் துறையாவது துறவியர் விரும்பித் தெளிந்த பொருளைச் சொல்லியது. தொல்காப்பியர் இத்துறைப் பற்றிக் குறிப்பிடவில்லை.

புறப்பொருள் வெண்பாமாலையில்,

"எரிந்திலங்கு சடைமுடி முனிவர்
புரிந்து கண்ட பொருண் மொழிக்காஞ்சி"[105]

என்ற குறிப்பிடுவார். இத்துறையில் ஔவையார் ஒரு பாடல் பாடியுள்ளார். அப்பாடலில்,

"நாடா கென்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ
எவ்வழி நல்லவராடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே"

(புறநா.187)

என்ற பாடலில் எந்நிலமாக இருப்பினும் எந்நாட்டில் நல்ல ஆண்மக்கள் உள்ளனரோ அந்நாடு நல் நாடாகத் திகழும் என்றார். இப்பாட்டு அந்நாளில் சமுதாயத்தில் ஆண்களை வைத்துச் சமூகம் வாழ்ந்தமையால் ஆடவரை வைத்து நாட்டை மதிப்பிட இயலும் என்றார். இப்பாட்டு எக்காலத்திற்கும் அந்நாட்டிற்கும் உரியதாகும். பொருண்மொழிக்காஞ்சித்துறைத் துறவியர் மொழிவது எனச்சுட்டுவர். இத்துறைக்குப் பொருந்த இப்பாட்டில் 'எந்நாட்டில் நல்லாடவர் உள்ளனரோ அந்நாடு நந்நாடு' என்ற தெளிந்த பொருள் ஒன்றைச் சுட்டுவதால் இத்துறையாகியது. சங்ககால இலக்கியம் நிலைத்திருக்க இதுபோன்று காலம் கடந்து வாழும் விழுபிய பொருளைப் பாடியிருப்பதேயாகும். இலக்கியம் உயர்ந்த நோக்கத்தைக் கொண்டதாக இருக்கவேண்டும்[106] என்பதற்கு இப்பாட்டு சான்றாகும்.

## வெட்சித்திணை

வெட்சியாவது நிரை கவர்தல். பகைவர் நாட்டுப் பசு நிரைகளைக் கவர்ந்து வரச் செல்லும்வேந்தரும் வீரரும் வெட்சி மலர் அணிந்து செல்வராதலின், நிரைகவரும் இவ்வொழுக்கம் வெட்சியெனும் பெயர் பெற்றது.[107] தொல்காப்பியரும், ஐயனாரிதனாரும் முதல் திணையாக இதனைக் குறிப்பிடுவர். தொல்காப்பியர்,

"வேந்து விடு முனைஞர் வேற்றுப்புலக்களவின்

ஆதந்து ஓம்பல் மேவற்றாகும்"[108]

அரசனால் ஏவப்பெற்ற, நாட்டின் முனையிலுள்ள ஊரார், அயல் நாட்டின் கண் உள்ள பசுக் கூட்டத்தைக் கவர்ந்து கொணர்ந்து காத்தல் செய்வதாகும் என்பர். இதனை ஐயனாரிதனார், இரண்டாகப்பிரிப்பர். ஒன்று வேந்தன் ஏவி பகைவரின் பசுக்கூட்டங்களைக் கவர்தலும், தானே சென்று பசுக் கூட்டங்களைப் பகைவர் நாட்டில் கவர்வதும் என்று கூறுவர். இத்திணை பலதுறைகளையுடையது. இதில் உண்டாட்டுத்துறையும் ஒன்று. இத்துறையில் ஔவையார் ஒருபாடல் (269) பாடியுள்ளார்.

**உண்டாட்டு**

"தொல்காப்பியர் வெட்சித்துறைகளில் ஒன்றாக,
தந்துநிறை பாதீடு உண்டாட்டு"[109]

என்று குறிப்பிடுவர். இவ்வுண்டாட்டு (நிரை படுத்த மறவர்) களிப்பினால் அயரும் விளையாட்டு[110] என்று விளக்கம் எழுதுவர். புறப்பொருளாசிரியர்,

"தொட்டு இமிழும் கழன் மறவர்
மட்டு உண்டு மகிழ் தூங்கின்று"[111]

என்று கழலணிந்த மறவர் மது உண்டு களிப்புடன் ஆடும் ஆட்டம் உண்டாட்டு எனப்படும்.

இத்துறையில் பாடிய ஔவையார், நிரை கைப்பற்றப் புறப்படும் பணியைத் துடியோன் வந்து தெரிவிக்க, பிழி வழங்குவோர் தேறலை உண்ணுமாறு கொடுப்பதைக் கொள்ளாது, கரந்தையரைக் கொன்று பசுக் கூட்டத்தைக் கவர்ந்து வந்தனர். இதனால் நின் வெற்றி மேம்படுவதாக என்று வாழ்த்தினார். இதனை,

"கரந்தை நீடிய வறிந்து மாறு செருவிற்
பல்லானின நிரை தழீகிய வில்லோர்க்கு
கொடுஞ்சிறைக் குரூஉப் பருந்தார்ப்பத்
தடிந்துமாறு பெயர்த்தவிக் கருங்கைவாளே, "

(புறநா.269:9-12)

களைக் கவர்ந்து வந்த மறவர்கள் என்று வாழ்த்தி, அவர்கள் மதுவினை

வேண்டாது சென்றதை பிழிமகிழ் வல்சிவேண்ட மறுத்து, என்றதால் அறியமுடிகிறது. இப்பாடலில் பசுக்களைக் கவர்ந்து வந்ததும், கவரச்செல்லும் முன் மதுவை கொடுப்ப அதனைக் கொள்ளாது வாளினைக் கையில் கொண்டு சென்றனர். கைவரிடமிருந்து பசுக்களை மீட்டுக் கவர்ந்து வந்த பின்பு தேறல் உண்டு மகிழ்வர் என்றகருத்தைக் குறிப்பால் வெளிப்படுத்தியதால் இத்துறையாகியது.

## கரந்தை

பகை நாட்டவர் கவர்ந்து சென்ற பசுக்களை மீட்டுக் காத்தல் கரந்தைத்திணையாகும். தொல்காப்பியர்,

> "...................... ஆ பெயத்துத் தருதலும்
>
> ......................
>
> அனைக்குரி மரபினது கரந்தை அன்றியும்"[112]

என்று குறிப்பிடுவர். ஐயனாரிதனார் தனித்திணையாகக் கரந்தையைக் கூறி அதில்,

> "மலைத்து எழுந்தோர் மறம்சாயத்
> தலைக்கொண்ட நிரை பெயர்த்தன்று"[113]
>
> (பு.வெ.22)

என்று ஆனிரைமீட்டலைக் கூறுவர். இக்கரந்தைத் துறைகளுள் வேத்தியல், குடிநிலையுரைத்தல் துறைகளும் உண்டு. இவ்விரு துறைகளில் ஔவையார் (286,290) பாடியுள்ளார்.

## வேத்தியல்

வேத்தியல் துறையாவது வேந்தனைப் புகழ்ந்து சொல்லுவது. தொல்காப்பியர் சீர்சால் வேந்தன் சிறப்பெடுத்துரைத்தலும்[114] என்று வெட்சித் திணையில் கரந்தை மறவர் தம்அரசனின் சிறப்பினை எடுத்துக் கூறுவதைச் சுட்டுவர். புறப்பொருள் வெண்பாமாலையில் கரந்தைத் திணைத்துறைகளில்வேத்தியல் துறை எனப் பெயரிட்டு,

> "தோல் வலிய வய வேந்தனை
> வாள் வலிமறவர் சிறப்புரைத்தன்று"[114]

என்பர். இரண்டும் ஒருபொருள் சுட்டியதே ஆகும். ஐயனாரிதனார் வேத்தியல் என்றார். தொல்காப்பியர் பெயர் சுட்டவில்லை.

ஔவையார் பாடிய வேத்தியல் துறைப்பாட்டில்வேந்தன் யார் என்று கூறவில்லை. இப்பாடலில்,

"வெள்ளை வெள்யாட்டச் செச்சை போலத்
தன்னோ ரன்ன விளைய ரிருப்பப்
பலர்மீது நீட்டிய மண்டையென் சிறுவனைக்
கால்கழி கட்டிலிற் கிடப்பித்
தூவெள் ளறுவை போர்ப்பித் திலதே "

(புறநா. 286)

என்றார். இப்பாட்டு அரசன் 'வெள்ளிய நிறத்தையுடைய வெள்ளாட்டுக் கிடாய்களைப் போலத் தன்னையொத்த பல இளையர் இருப்ப, அப்பலருக்கும் மேலாக என் மகனாகிய அவனை கல்லில்லாத கட்டிலாகிய பாடையில் கிடத்தி தூய வெள்ளிய ஆடையால் மூடுவதாயாயிற்று. அஃதன்றோ வேண்டுவது என்று ஒருதாய் கூற்றாக அமைந்த பாட்டு. இப்பாட்டில் தன் மகனைப் பலருள்ளும் சிறப்பித்தான் அரசன் என்று குறிப்பிடுவதால் இப்பாட்டு வேத்தியலாகியது. இப்பாட்டு மறவர் மன்னனைப் புகழ்ந்ததாக இல்லை.

இவ்வாறு பாடல்களில் சிறுசிறு கூறுபாடுகளுக்குத் துறை வகுக்காததால் ஒரு துறையின் கீழ் பல கூற்றுகளையும் அடக்கினர். புறநானூற்றுப் பாடல் முழுமைக்கும் பொருந்தும் துறைகள் இன்னும் பலவகுக்க இடமுண்டு. தற்போது இருக்கும் தொல்காப்பியம், புறப்பொருள் வெண்பா மாலை குறிப்பிடும் துறைகளுள் அடக்குவதால் இவ்வாறு தொகுக்கப்பட்டுள்ளன. இப்பாட்டு மன்னன் புகழ், மறவன் புகழ் இரண்டும் கூறப்பட்டுள்ளன. தாய் கூற்று எனினும், பாடல் மன்னன் புகழினைக் கூறியதால் இப்பாட்டு இத்துறையாகியது.

## குடி நிலையுரைத்தல்

இதனைக் கரந்தைத் துறைகளுள் ஒன்றாகக் குறிப்பிடுவர் ஐயனாரிதனார். தொல்காப்பியர் குடிநிலை என்றும் துடிநிலை என்றும் கூறுவர் ஐயனாரிதனார்,

"மண்திணி நூலத்துத் தொன்மையும் மறனும்

கொண்டு பிறர் அறியும் குடிவர வுரைத்தன்று"[116]

என்பர். இத்துறையில் புறநானூற்றில் ஒருபாட்டு உளது. அவ்வொருபாட்டும் ஔவையார் பாடியதென்பது குறிப்பிடத்தக்கது (290). இவ்வாறு அருகிய பாடல்களை ஔவையார் பாடியிருப்பது பெண்களின் மறம் பற்றிய விழுமிய அறிவைக் காட்டுவதாகும். இப்பாடலில், வேந்தனே, இக்கள்ளை முன்புஇவனுக்குக் கொடுத்துப் பின்பு நீ உண்பாயாக, இவன் தந்தைக்குத் தந்தை நின் தந்தைக்குக் கண்ணிமையாது காத்து, ஆர்செறிப்புண்டு (தச்சனால் ) நிற்கும் ஆழிக்குடம் போலப் பகைவர் எறிந்த வேல் பாய்ந்து நிற்ப நின்று மாய்ந்தான், அவன் பெயரனாகிய இவன் கடுமழை காக்கும் பனங்குடைபோல நின்னைக் குறித்து மாற்றார் எறியவரும் வேலைத் தான் இடை நின்றேற்றுக் காத்து நிற்பன், இவன் வெல்போர் பல செய்து மறப்புகழ் நிறைந்தவன் என்று பாடுகிறார். இப்பாடலில் மறம் மிகுந்த வீரக்குடியில்,

"நுந்தை தந்தைக் கிவன்றந்தை தந்தை"

(புறம்.290:3)

என்று மூன்று தலைமுறைகளிலும் இவன் குடி உன்குடியைக் காத்தது என்று ஒரு வீரனின் குடிப்பெருமையைச் சுட்டியதால் இப்பாட்டு குடிநிலையுரைத்தலாகியது. ஔவையார் இவ்வாறு ஒரு குடியின் தொடரான வாழ்க்கைச் செய்திகளை அறிந்திருப்பது அறியப்படுகின்றது. இப்பாட்டு பொகுட்டெழினியிடம் கூறுவது போன்றுள்ளது. ஔவையார் அருகித் தோன்றும் புறநானூற்றுத் துறைப்பாடலைப் பாடியவர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## நொச்சித்திணை

மதிலைக் காப்பவரின் போர்ப் பூவைப் பாடுவது[117] இதற்கு புறப்பொருள் வெண்பாமாலை,

"ஏப்பழை ஞாயில் ஏந்துநிலை அரணம்

காப்போர்சூடி பூப்புகழ்ந் தன்று"[118]

என்று மதிலைக் காப்பதற்காகச் செய்யும் போர்நொச்சி என்றார். தொல்காப்பியர் உழிஞைத் திணைத் துறைகளுள் மற்றதன், புறத்தோன் வீழ்ந்த புதுமை யானும்[119]

என்று மதிலைக் காப்பவரை நொச்சி வீரர் என்று குறிப்பிட்டுள்ளார். இந்நொச்சித் துறைகளுள் ஒன்றாகச் செருவிடைவீழ்தல் என்ற துறையைக் குறிப்பிடுவர் ஐயனாரிதனார். தொல்காப்பியர் இத்துறைப் பெயரைக் குறிப்பிடவில்லை எனினும், இரவலருக்கு நடந்த போரைச் சுட்டியுள்ளார். திறம்பட,

"ஒருதான் மண்டிய குறுமையும்,
உடன்றோர் வருபகை போர் ஆர் எயில் உளப்படச்"[120]

என்ற துறைகள் இச்செய்தியைக் குறிப்பனவாக உள்ளன. ஐயனாரிதனார் இதனை,

"ஆழ்ந்து படுகிடங்கோ டருமிளை காத்து
வீழ்ந்த வேலோர் விறன் மிகுத்தன்று"[121]

என்று மதிலைக் காப்பதற்காக நடந்த போரில் வீழ்ந்த மறவனின் வீரத்தைப் பாடுவது என்பர். இத்துறையில் புறநானூற்றில் ஆறுபாட்டுள[122] இதில் வெறிபாடிய காமக்கண்ணியார் பாடிய நொச்சிப் பாடலும் ஒன்று. இத்துறையில் உள்ள புறநானூற்று இரண்டு பாடலில், இவர் பாடலும் ஒன்று என்பது குறிப்பிடத்தக்கது. இப்பாடலில், நொச்சிப் போர் நடந்தபோது மதிலைக் காக்கும் பொருட்டு நொச்சி மாலை சூடிப்போர் புரிந்தனர். அப்போரில் ஒரு மறவன் அணிந்திருந்த நொச்சி மாலை வெட்டுண்டு அறுப்புண்டு அவன் குருதியிற் படிந்து உருமாறிப்போயிற்று. போரிடைப்பட்டு வீழ்ந்த பிணங்களைத் தின்றற்குப் பருந்து முதலிய பறவைகள் அங்கே சூழ்ந்து கொண்டிருந்தன. அவற்றுள் ஒரு பருந்து குருதியிற் படிந்து உருமாறிய நொச்சி மாலையை ஊண் எனக்கருதித் தூக்கிக் கொண்டு உயரத்திற் பறந்து போயிற்று (புறம்.271) என்று பாடியுள்ளார். இப்பாடலில் நொச்சிப் போரும் அப்போரில் வீரன் நொச்சி மலர் சூடிப்போரிட்டு வெட்டுண்ட போர் செய்தியதைப் பாடியதால் இப்பாடல் செருவிடை வீழ்தல் துறையாயிற்று. இப்பாடலில் வீரன் இறந்த குறிப்பில்லை. போரில் அவன் அணிந்த நொச்சி மாலை வெட்டுண்டு அறுபட்டுக் குருதியில் வீழ்ந்ததால் குடல்போன்று கிடப்பதாகப் பாடியமை கற்பனை நயமுடைத்து.

## கைக்கிளை

தொல்காப்பியர் இத்திணையை அகத்திணையியலில் 'கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்'[123] என்று குறிப்பிடுவார். இக்கைக்கிளைத் திணையைப்

புறப்பொருள் வெண்பாமாலையில் தனித் திணையாகப் பிரித்துக் கூறுவர். கைக்கிளையாவது ஒருதலைக்காமம். இத்திணையில் மூன்று பாட்டுக்கள் (83,84,85) காணப்படுகின்றன. இம்மூன்றும் பெருங்கோழி நாய்கன் மகள் நக்கண்ணையார் பாடியது. இப்பாடல்களில் பெயர் குறிப்பு வெளிப்பட்டதால் இப்பாட்டு புறத்தில் சேர்க்கப்பட்டது. பெயர் தெரியவில்லையாயின் அது அகப்பாட்டாகும். இப்பாடலில் பெருங்கோழி நாய்கன் மகள் நக்கண்ணையார் போர்வைக் கோப்பெருநற்கிள்ளி மீது கொண்ட காதலால், வளை கழன்றதாகவும், மேனி பசலை பாய்ந்ததாகவும் பாடியுள்ளார். இதனை,

"அடிபுனை தொடுகழல் மையணல் காளைக்கு என்
தொடிகழிந்திடுதல் யான்யாய் அந்சுவலோ
அடுதோள் முயங்கல் சுவை நாணுவலே
என்போல் பெருவிதுப் புறக என்றும்
ஒருபாற் பாடஅதாகி
இருபாற் பட்ட இம்மையல் ஊரே"

(புறம்.83)

என்றதாலும்,

"யாமே, புறம் சிறை இருந்தும் பொன் அன்னம்மே, "

(புறம்.84)

என்றும், அவன் மற்போரை, மறைந்திருந்து பார்த்ததை

"அம்சிலம் புஒலிப்ப ஓடி எம்இல்
முழாஅரைப் போந்தை பொருள்தி நின்று
யான் கண்டனன் அவன் ஆடு ஆகுதலே"

(புறம்.85:6-8)

இப்பாடல்களில் நக்கண்ணையார் பெருநற்கிள்ளி மீது காதல் கொண்டதால் பசலை பாய்ந்து வளை கழல் வதாகப் பாடுவதால் கைக்கிளை என்ற ஒரு தலைக் காதலாயிற்று.

## ஆற்றுப்படை

சங்க காலத்தில் மன்னர்களை வாழ்த்திப் புலவர்கள் பலர் பரிசில் பெற்றனர். அவ்வாறு பரிசில் பெறுவதுடன் அல்லாமல் மற்ற புலவர்களுக்குக் கூறுவதை

இயல்பாகப் புலவர்கள் கொண்டது போல, கூத்தர், பாணர், பொருநர், விறலி என்று அனைவரும் இப்பண்பைக் கொண்டு விளங்கினர். இவ்வாழ்க்கை முறை மரபாகியதற்குத் தொல்காப்பியம் சான்று. இந்நூலில்,

"கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறா அர்க்கு அறிவுறீஇச்
சென்று பயன் எதிர்ச் சொன்னபக்கமும்"[124]

என்று பாடாண்திணைத் துறைகளில் குறிப்பிடுவர். இது புறப்பொருள் வெண்பாமாலையில் பாணாற்றுப்படை, கூத்தராற்றுப்படை, பொருநராற்றுப்படை, புலவராற்றுப்படை என்று தனித்தனியாக வரையறுப்பர். இது பின்னாளில் ஆற்றுப்படை எனத்தனி இலக்கியம் தோன்றுவதற்கு அன்றே இடப்பட்டு வித்தாக இருந்தது.

ஔவையார் அதியமான் நெடுமான் அஞ்சியிடம் ஒரு விறலியை ஆற்றுப்படுத்துவதாகப் புறநானூற்றுள் 103ஆம் பாடலுளது. இப்பாடலில்,

"ஒருதலைப் பதலை தூங்க வொருதலைத்
தூம்பகச் சிறுமுழாத் தூங்கத் தூங்கிக்
கவிழ்ந்த மண்டை மலாக்குநர் யாரெனச்
சுரன் முதலிருந்த சில்வளை விறலி
செல்வை யாயிற் சேணோ னல்லன் "

(1-5)

என்று கூறி அதியமானின் கொடைப் பண்பினைக் கூறி விடுக்கின்றார். அவனிடம் சென்றாள்,

"பொழுதிடைப் படாஅப் புலரா மண்டை
மெழுகு மெல்லடையிற் கொழுநிணம் பெருப்ப
அலத்தற் காலையாயினும்
புலத்தல் வல்லன் வாழ்க வன்றாளே "

(9-12)

என்று அவன் உணவும், உடையும் தந்து பாதுகாப்பவன் என்று ஆற்றுப் படுத்துகிறார்.

காக்கைப் பாடினியார் நச்செள்ளையார் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைப் பாடிய பதிற்றுப்பத்து ஆறாம்பத்தில் விறலியாற்றுப் படையில் (பதிற்.57,60)

"செல்லா மோதில் சில் வளைவிறலி" (57-6)

என அழைத்து

"ஒள்நுதல் மகளிர் துனித்த கண்ணினும்
இரவலர் புன்கன் அஞ்சும்
புரவு எதிர் கொள்வனைக் கண்டனம் வரற்கே "

(13-15)

என்று ஆற்றுப் படுத்துகிறாள்.

முடத்தாமக் கண்ணியார், 248அடிகளில் பொருநராற்றுப் படையைப் பாடியுள்ளார். இப்பாட்டு சோழன் கரிகாற் பெருவளத்தானிடம் ஆற்றுப் படுத்துவதாக உள்ளது. இப்பாட்டில், பொருநனுடன் வரும் விறலியையும் வருணித்து பாடியுள்ளார். நீங்கள் இருவரும் சென்றால் பரிசில் கொடுப்பான் என்று பாடியுள்ளார்.

இப்பாட்டில் பொருநனை வருணிப்பதை விடப் பாடினியை மிக அழகாக 23 அடிகளில் வருணிக்கின்றார். இப்பாட்டில் பொருநன், பாடினியின் வறுமையைக் கூறி நீ கரிகாற்பெருவளத்தானிடம் செல் என்றுபாடுகிறார்.

"கேளிர் போல் கேள் கொளல் வேண்டி
வேளாண் வாயில் வேட்பக் கூறிக்
கண்ணில் காண நண்ணு வழி இரீஇப்
பருகு அன்ன அருகா நோக்கமோடு
ஈரும் பேனும் இருந்து இறை கூடி
வேரொடு நனைந்து வேற்று இழை நுழைந்த"

(பொருந.74-80)

என்று அவள் வறுமைக் கோளம் சுட்டி அதுஅகலும் என்று ஆற்றுப்படுத்துவதால் ஆற்றுப்படையாகியது. இவ்வாற்றுப்படை புலவரின் பரந்துபட்ட மனத்தினைப் புலப்படுத்துவதுடன், அரசனின் கொடை, வீரம், வெற்றி இவற்றை வெளிப்படுத்துவதும்

நோக்கமாக இருந்ததைப் பாடல்கள் சுட்டுகின்றன. இப்பாட்டில் சோழனின் வெண்ணிப்போர் வெற்றியைப் பாடியுள்ளார். சங்ககாலப் போரியலைஆராய்ந்த பாண்டுரங்கன்

"பழந்தமிழர் போர்கள் பெரும்பாலும் உரிமையைக்
காக்கவும் தன்மானம் காக்கவும் நடைபெற்ற
தற்காப்புப் போர்கள் என்றே கூறலாம்"[125]

என்பர். இக்கருத்துப் பெண்பாற்புலவர்களின் புறப்பாடல் கருத்துக்குப் பொருந்தும். அந்நாளில் புரவலர்கள் செய்த போர்களை பெண்கள் பாடியமை இதற்குச் சான்றாகும்.

## ஆய்வு முடிவுகள்

பெண்பாற்புலவர்கள் அகப்பாடல்கள் பாடியது போன்று புறப்பொருள் பாட வல்லவர் என்பதைப் புறப்பாட்டுக்கள் காட்டுகின்றன. பெண்பாற்புலவர்களின் புறநானூற்றுப் பாட்டு அறுபத்தைந்து. இப்பாட்டுக்கள் பாடாண் (21); வாகை (17); தும்பை (10); பொதுவியல் (9); கைக்கிளை (3); கரந்தை (2); காஞ்சி (1); வெட்சி (1); திணைகளில் இடம் பெற்றுள்ளன. வஞ்சி, உழிஞைத்திணையில் பாடல் பாடிலர். பதிற்றுப்பத்துள் ஆறாம்பத்தும், ஆற்றுப்படையில் பொருநராற்றுப்படையும் இவர்கள் யாத்தமையாகும்.

பாடாண் பாடல்களில் மிகுதியாகப் பாடியவர் ஔவையார். இத்திணைப் பாக்களில் இயன்மொழிப் பாக்களை அதிகம் பாடியுள்ளனர். ஔவையார் அதியமானையும், மகன் பொகுட்டெழினியையும் பாடியது போன்று, நெட்டிமையார் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியையும், மாறோக்கத்துநப்பசலையார் சோழன் கிள்ளிவளவனையும் பாடாண்திணையில் பாடியுள்ளனர். இவர்தம் பாக்களில் அரசன், மன்னன் இவர்களின் வீரம், கொடை, பண்புகள் பாடும் இயன்மொழிப் பாக்கள் மிகுதி. இப்பாட்டுக்களால் பெண்பாற்புலவர்கள் பரிசில் பெறும் நோக்குடன் மட்டுமே புரவலனைப்பாடாது, புரவலனின் புகழ்பாடுமளவு நன்மதிப்புப் பெற்றிருந்ததைப் பாடாண் பாடல்கள் காட்டுகின்றன. அந்நாளில் வாழ்ந்த புலவரின் வாழ்க்கையை 'எத்திசைச்செலினும் அத்திசைச்சோறே' என்ற ஔவையின் பாட்டு உணர்த்தும். கொடை கொடுத்தபோது

'நீலமணிமிடற்று ஒருவன்போல மன்னுக' என்று வாழ்த்துவது பெண்பாற்புலவர் மெய்யியலாகப் பாடல் பாடியதைப் புலப்படுத்துகிறது. ஆண்பாற்புலவர்களைப் போன்று பெண்பாற்புலவர்களும் புறவாழ்வில் தன்னிச்சையாகவும், புரவலனைப்பாடும் வல்லமையும் பெற்று விளங்கியதை பாடாண் பாடல்கள் சுட்டுகின்றன.

வாகைத்திணையில் பெண்பாற்புலவர்கள் பதினேழு பாடல்கள் பாடியுள்ளனர். இதில் அரசவாகைப் பாக்கள் மிகுதியாக இடம்பெற்றுள்ளன. இப்பாக்களில் ஔவையார் அதியமானைப் பாடிய ஆறுபாக்கள் இடம்பெற்றுள்ளன. அரசவாகைப் பாடல்களால் அதியமான் கோவலூரை அழித்த செய்தி (99) தெரியவருகிறது. மாறோக்கத்து நப்பசலையார் பாடிய பாடலில் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனின் வெற்றி (37) பாடப்பட்டுள்ளது. வெண்ணிக்குயத்தியார் பாடலால் கரிகாலனின் வெற்றி (66) அறியப்படுகிறது. இப்பாடலில் தோற்ற மன்னனை 'நின்னினும் நல்லன்' என்று குறிப்பிடுகின்றார். தோற்றமன்னன் பெயர் குறிப்பிடவில்லை. இவ்வேந்தன் சேரமான் பெருஞ்சேரலாதன் என்பதைக் (65) கழாத்தலையார் பாடலால் அறியமுடிகிறது.

பெண்பாற்புலவரின் வாகைப் பாடல்களில் புரவலனின் வெற்றி பாடப்படும் போது தோன்ற புரவலனைக் குறிப்பிடவில்லை. புலவன் யாரைப் பாடவிரும்புகிறானோ அவனை மட்டுமே பாடினான், தோற்றவனைக் குறிப்பிடவிருப்பமும் காட்டவில்லை என்பது இதனால் பெறப்படுகிறது.

மூதின் முல்லைப்பாக்கள் அக்கால மகளிரின் மறப்பண்பை அறியச் சான்றாகின்றன. மூதின் முல்லைத் துறையிலுள்ள ஐந்து பாடல்களில் மூன்று பெண்பாற்புலவர்கள் பாடியன. இது பெண்பாற்புலவர்கள் பெண் வீரத்தைப் பாடவிரும்பியதைக் காட்டுகிறது. ஏறாண்முல்லைப்பாக்களையும் பெண்டிர் பாடியுள்ளனர்.

வாகைத்திணையில் தாபத வாகையில் மாற்பித்தியார் பாடியுள்ளார். இப்பாடல்கள் அந்நாளில் இருந்த துறவறத்தை அறியச் சான்றாகின்றன. பெண்பாற்புலவர் துறவு பாடியிருப்பது எப்பொருளையும் பெண்ணால் பாடஇயலும் என்பதைக் காட்டுவதாகும்.

பெண்பாற்புலவர்கள் தும்பைத்திணையில் பன்னிரண்டு பாடல் பாடியுள்ளனர். இதில் தானைமறத்துறையில் எட்டுப்பாக்கள் உள்ளன. ஔவையார் இத்துறையில் நான்கு பாட்டுக்கள் பாடியுள்ளார். ஔவையார் பாடிய பாடல்கள் அதியமானின் போராற்றலைப் பாடுவதாக உள்ளன. இப்பாடல்களைப் பாடுவதன் நோக்கம் அதியமானுடன் போரிடுவதைத் தவிர்ப்பதற்காக பாடிய பாட்டுக்கள். பெண்பாற்புலவரில் தானை மறத்துறையில் ஔவையார் மட்டும் பாடினார் என்பது குறிப்பிடத்தக்கதாகும். இத்துறையில் உவகைக் கலுழ்ச்சித்துறையும் ஒன்று இது போரில் விழுப்புண்பட்டு வந்த கணவனைக் கண்டு மனைவி மகிழ்ந்ததைக் கூறுவதாகும். இத்துறையில் அமைந்த மூன்று பாட்டுக்களும் பெண்பாற்புலவர்கள் பாடியன. பெண் உணர்வுகளைப் பெண்கள் பாடவிரும்பியதை இத்துறை காட்டுகிறது.

புறநானூற்றில் புரவலன் இறந்தபோது புலவன் வருந்திப்பாடினான். பெண்பாற்புலவரில் ஔவையார் அதியமான் இறந்தபோது வருந்திபாடியதும், மாறோக்கத்துநப்பசலையார் சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன் இறந்தபோது பாடிய பாடலும் உள. இது புரவலனுக்கும் புலவருமிருந்த நல்நட்பைக் காட்டுகின்றன.

பாரி இறந்தபோது பாரிமகளிர் பாடினர். பூத பாண்டியன் இறந்தபோது பெருங்கோப் பெண்டு பாடினார். இச்செய்தி அரசகுலப் பெண்கள் சோகநிலையில் பாடல் பாடவிழைந்தமையைக் காட்டுகிறது.

புறநானூற்றுப் பாடலால் கைம்மை நோன்பு, தீப்பாய்ந்த செய்தி அறியப்படுகிறது. ஔவையார் பொருண்மொழிக் காஞ்சித்துறையில் 'எவ்வழி நல்லவர் ஆடவர் அவ்வழி நல்லை வாழிய நிலனே' என்ற பாடுவது எக்காலத்தாருக்கும் எந்நாட்டவருக்கும் பொருந்தும் பொருள். இது ஔவையாரின் உலகளாவிய மானுட சமுதாயத்தின் வெற்றிப்பாதைக்கு அன்றே தடம்பதித்ததைக் காட்டுகிறது.

புறநானூற்றில் வெட்சி, கரந்தைத் திணைகளில் குறைவான பாடல்களே உள்ளன. இத்திணையில் ஔவையார் பாடியிருப்பது போர் பாடுவதில் புலமைபெற்றவரிவர் என்பதைக் காட்டுகின்றது. அத்துடன் மற்ற

பெண்பாற்புலவரிலும் இவர் புறம்சார்ந்த பரந்தறிவைப் பெற்றிருந்தமையையும் உணர்த்துகிறது.

பெண்பாற்புலவர்கள் நெடும் பாட்டுப்பாடும் திறம்பெற்றவர். இதற்கு காக்கைப் பாடியார் நச்செள்ளையார் பாடிய பதிற்றுப்பத்தும், முடத்தாமக்கண்ணியார் பாடிய பொருநராற்றுப்படையும் சான்றாகும்.

ஆற்றுப்படுத்துதல் பெண்பாற்புலவருக்கும் இருந்தமையை காக்கைபாடினியார் நச்செள்ளையார் பதிற்றுப்பத்தில் விறலியை யாற்றுப்படுத்துவதாக இருபாடல் பாடியிருப்பதும், பொருநராற்றுப்படையில் கரிகாலனிடம் பெருநனையும், விறலியையும் ஆற்றுப்படுத்துவதாகப் பாடியிருப்பது காட்டும்.

பெண்கள் போர்க்களம் சென்று போரிடவில்லை. போர்பாடுதலில் வல்லமை பெற்றிருந்தமையைப் புறப்பாட்டுக்கள் காட்டுகின்றன.

புரவலன் ஆண் பெண்பாற்புலவர்களை ஒன்றாகவே மதித்ததை பெண்பாற்புலவருக்கும் புரவலனுக்கிருந்த உறவும், புரவலன் பரிசில் வழங்கி பெண்பாற்புலவர்களை உபசரித்தமையும் காட்டுகின்றது.

## மேற்கோள் விளக்கம்

### ஐந்தாமியல்

1. பின்னிணைப்பு : இயல் ஒன்று : 1
2. தொல். பொருள். புறத். சூத்.25
3. புறப். வெண்பா. சூத்.189
4. மு.இராகவையங்கார் - ***தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி***, ப.140
5. மொ.துரையரங்கனார் - ***தொல்காப்பிய நெறி***, ப.99
6. குழந்தை உரை, தொல். பொருள், ப.508
7. நா.செயராமன் - ***சங்க இலக்கியத்தில் பாடாண்திணை***, ப.32
8. மேலது, ப.85
9. மேலது
10. தொல். பொருள். புறத். சூத்.35
11. புறப். வெண்பா. சூத். 194
12. புறப் வெண்பா. சூத். 195
13. தொல். பொருள் புறத். இளம் . ப. 156
14. நா. செயராமன் - ***சங்க இலக்கியத்தில் பாடாண்திணை*** ப.95
15. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, **புறநானூறு மூலமும் உரையும்.** ப.216
16. தொல். புறத்.சூ.35 நச்.
17. தொல். பொருள். புறத். சூத்.35
18. சூத்.36
19. தொல். புறத். சூத்.30 இளம்
20. புறப். வெண்பா. சூத்.193
21. நா. செயராமன் - ***சங்க இலக்கியத்தில் பாடாண்திணை***, ப.85

22. மேலது

23. மேலது, பக்.125-126

24. ஔவை துரைசாமிப்பிள்ளை - **புறநானூறு மூலமும் உரையும்** ப.33

25. நா. செயராமன் - **சங்க இலக்கியத்தில் பாடாண்திணை** ப.126

26. தொல். பொருள். புறத். சூத்.35

27. தொல். பொருள். புறத். இளம். ப.158

28. நா.செயராமன், **சங்க இலக்கியத்தில் பாடாண்திணை** ப.103

29. உ.வே.சாமிநாதையர் - **புறநானூறு மூலமும் உரையும்,** ப.543

30. தொல். பொருள். புறத். சூத்.35

31. உ.வே.சாமிநாதையர், **புறநானூறு மூலமும் உரையும்** ப.621

32. புறப் வெண்பா. சூத் 190

33. நா. செயராமன்-**சங்க இலக்கியத்தில் பாடாண்திணை**, பக்.118-119

34. மேலது, ப.85

35. மேலது, ப.122

36. தொல். பொருள். புறத். சூத்.30

37. புறப். வெண்பாமாலை. சூத். 214

38. மேலது ப. 122

39. மேலது ப.267

40. தொல். பொருள். புறத். சூத். 27

41. நா. செயராமன்-**சங்க இலக்கியத்தில் பாடாண்திணை.** ப.266

42. மேலது. ப.267

43. கோ.சிவகுருநாதன்- **வாகைத்திணை,** ப.151

44. தொல். பொருள். புறத். சூத். 18

45. தொல். பொருள். புறத். சூத். 19

46. தொல். பொருள். புறத். இளம். ப.109

47. தொல். பொருள். புறத். நச்சி. பகுதி. 1. ப.208

48. கோ.சிவகுருநாதன்- **வாகைத்திணை,** ப.17

49. மேலது ப.18

50. புறப். வெண்பா. சூத்.155

51. கா.கோவிந்தன்- **பண்டைத்தமிழர் போர்நெறி,** ப.250

52. தொல். பொருள். புறத். சூத்.21

53. புறப்.வெண்பா.. சூத்.8

54. கா.கோவிந்தன் - **பண்டைத்தமிழர் போர்நெறி**, ப.233

55. தொல்.பொருள்.புறத். சூத்.20

56. புறப். வெண்பா. சூத்.157

57. தொல். பொருள். புறத். சூத். 7 இளம். ப.103

58. கா. கோவிந்தன்- **பண்டைத்தமிழர் போர்நெறி,** பக்.251-252

59. தொல். பொருள். புறத். சூத். 29 இளம். ப.157

60. உ.வே.சாமிநாதையர் -**புறநானூறு மூலமும் உரையும்** ப.207

61. புறப். வெண்பா. சூத்.43

62. புறப். வெண்பா. சூத்.175

63. நா.செயராமன்- **முல்லைப்பாடல்கள்,** ப.140

64. கோ. சிவகுருநாதன்- **வாகைத்திணை,** ப.152

65. உ.வே.சாமிநாதையர்-**புறநானூறு மூலமும் உரையும்,** ப.618

66. தொல்.பொருள்.புறத்.இளம்.ப.93

67. கோ. சிவகுருநாதன்- **வாகைத்திணை**, ப.190

68. புறப்.வெண்பா. சூத்.176

69. தொல்.பொருள்.புறத்.சூத்.21

70. தொல.பொருள்.புறத்.ச.வே. ப.389

71. தொல்.பொருள்.புறத். இளம். ப.120

72. கோ.சிவகுருநாதன்- **வாகைத்திணை**, ப.206

73. புறப். வெண்பா. சூத்.177

74. தொல்.பொருள்.புறத்.16

75. தொல்.பொருள்.புறத். இளம். ப.127

76. புறப். வெண்பா.சூத்.68

77. கோ.சிவகுருநாதன்- **வாகைத்திணை** ப.166

78. தொல்.புறத்.சூத்.12

79. தொல். புறத். இளம். ப.116

80. கா.கோவிந்தன்- **பண்டைத்தமிழர் போர்நெறி**, ப.202

81. தே.சொக்கலிங்கம் - **கம்பன்புறத்திணை,** ப.21

82. உ.சே.சாமிநாதையர்- **புறநானூறு மூலமும், உரையும்,** ப.638

83. தொல்.பொருள். புறத்.சூத்.17

84. தொல்.பொருள்.புறத்.இளம்.ப.117

85 உ.வே.சாமிநாதையர்-**புறநானூறு மூலமும் உரையும்**, ப.193,
ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை- **புறநானூறு மூலமும் உரையும்** ப.209

86. புறப்.வெண்பா. சூத்.151

87. தொல்.பொருள்.புறத்.சூத்.

88. தொல்.பொருள்.புறத்.சூத்.17

89. புறப்.வெண்பா.சூத்.133

90. உ.வே.சாமிநாதையர்- **புறநானூறு மூலமும் உரையும்**, ப.627

91. தொல்.பொருள்.புறத்.சூத்.17

92. புறப்.வெண்பா. சூத்.142

93. உ.வே.சாமிநாதையர்- **புறநானூறு மூலமும் உரையும்**, ப.646

94. தொல். பொருள். புறத். சூத்.19

95. தொல்.பொருள்.புறத். இளம். ப.147

96. புறப். வெண்பா. சூத். 267

97. புறப். வெண்பா. சூத். 128

98. மு.வரதராசன்- **இலக்கிய மரபு**, ப.27

99. மு.வரதராசன் - **இலக்கியக்கலை**, ப.8

100. உ.வே.சாமிநாதையர்- **புறநானூறு மூலமும் உரையும்** ப.610

101. தொல்.பொருள். புறத்.சூத்.19

102. புறப்.வெண்பா. சூத்.266

103. தொல். பொருள்.புறத். சூத்.24

104. புறப். வெண்பா. சூத்.257

105. புறப். வெண்பா. சூத்.271

106. பி.கே.பொன்னம்பலநாதன்- **இலக்கியமும் மனிதவாழ்க்கையும்**, ப.2

107. கா.கோவிந்தன்- **பண்டைத்தமிழர் போர் நெறி**.ப.1

108. தொல்.பொருள்.புறத்.சூத்.2

109. தொல்.பொருள்.புறத்.சூத்.3

110. தொல்.பொருள்.புறத்.இளம்.ப.91

111. புறப். வெண்பா. சூத்.15

112. தொல்.பொருள்.புறத்.சூத்.5

113. புறப். வெண்பா. சூத்.22

114. தொல்.பொருள்.புறத்.சூத்.5

115. புறப்.வெண்பா. சூத்.34

116. தொல்.பொருள்.புறத்.சூத்.35

117. உ.வே: சாமிநாதையர்- **புறநானூறு மூலமும் உரையும்,** ப:647

118. புறப். வெண்பா. சூத்.86

119. தொல்.பொருள்.புறத்.சூத்.13

120. தொல்.பொருள்.புறத்.சூத்.12

121. புறப். வெண்பா. சூ.89

122. உ.வே.சாமிநாதையர்- **புறநானூறு மூலமும் உரையும்** ப.647

123. தொல்.பொருள்.புறத்.சூத்.1

124. தொல்.பொருள்.புறத்.சூத். 36

125. கி.பாண்டுரங்கன்- **பண்டைத்தமிழர் போரியல் வாழ்க்கையும், போர் நடவடிக்கையும்,** ப.115

# ஆறாம் இயல்

## இலக்கியக்கொடை

சங்க நூல்களான எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் சங்கப் புலவர்கள் மன்பதைக்குப் பாடியளித்த இலக்கியக் கொடையாகும். இதில் பெண்பாற்புலவர்களின் பாடல்களும் அடங்கும். பெண்பாற்புலவர்கள் பாடிய பாடல்களில் பயன்படுத்திய யாப்பு, பாடுபொருளை வெளிப்படுத்தப் பயன்படுத்திய உவமை, உள்ளுறை, இறைச்சி பற்றி ஆராய்கிறது.

### யாப்பு

சங்க காலத்தில் புலவர்கள் பாட்டுக்களில் ஆசிரியப்பாவையே பெரிதும் பயன்படுத்தினர். ஆசிரியப்பாவில் நேரிசையாசிரியப்பாவில் அமைந்த பாட்டுக்கள் இலக்கியங்களில் பெரிதும் பாடப்பட்டிருக்கின்றன. பெண்பாற்புலவர்கள் பாடிய அகப்பாக்கள் குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு ஆகிய நூல்களில் காணப்படுகின்றன. இவற்றில் பெண்பாற்புலவர்கள் பாடிய 120 பாட்டுக்களில் இரண்டு பாடல் தவிர எஞ்சிய 198 பாட்டுக்கள் நேரிசை யாசிரியப்பாவின. சங்கப் புலவர்களால் பெரிதும் கையாளப்பட்ட யாப்பு ஆசிரியப்பாவாகும். இதற்கு,

> குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு, ஐங்குறுநூறு ஆகிய அகப்பொருள் நுதலிய தொகை நூல்கள் முழுமையாக ஆசிரியப்பாக்களினால் அமைந்தவை[1]

என்ற சோ. ந. கந்தசாமியின் கருத்து தெளிவுபடுத்தும். குறுந்தொகை நானூற்றியொரு (401) ஆசிரியப் பாக்களை உடையது. நான்கு அடிமுதல் எட்டுவரை இப்பாட்டுக்கள் அமைந்துள்ளன. இந்நூலில் பெண்பாற்புலவர்கள் எழுபத்தொரு பாடல்கள் பாடியுள்ளனர். பெண்பாற்புலவரான பொன்மணியார் பாடிய 391ஆம் பாட்டு ஒன்பது அடிகள் உடையதாக உள்ளது. இந்நூலில் 'எட்டுப் பாடல்கள் மட்டும் நிலைமண்டில ஆசிரிய யாப்பில் அமைந்தன'[2] இதில் அள்ளூர் நன்முல்லையார் பாடிய 93ஆம் பாட்டும் அடங்கும். மற்றவை ஆண்பாற்புலவர்கள் பாடியவை. நிலை மண்டில ஆசியப்பாவானது 'எல்லா அடியும் நாற்சீராய் அளவொத்து வருவது'[3] அள்ளூர்

நன்முல்லையார் பாடலில்,

நன்னலந் தொலைய நலமிகச் சாஅய்
இன்னுயிர் கழியினும் உரைய லவர்நமக்கு
அன்னையும் அத்தனும் அல்லரோ தோழி
புலவியஃ தெவனோ அன்பிலங் கடையே

(குறுந்.93)

என்ற பாடலில் எல்லா அடியும் நாற்சீராய் வந்ததால் நிலைமண்டில ஆசிரியப்பா. மற்ற பெண்பாற்புலவர்கள் பாடிய குறுந்தொகைப் பாக்கள் எழுபதும் நேரிசை யாசிரிய யாப்பின. நேரிசை யாசிரியமாவது 'ஈற்றலடிய முச்சீராய் வருவது'[4] இவை எளிமையாகப் பாடுதற்குரிய யாப்பு வகை. இதனால் இவ் யாப்பிலேயே புலவர்கள் மிகுதியாகப் பாடினர். உதாரணமாக,

உள்ளின் உள்ளம் வேமே உள்ளா
திரும்பினெம் அளவைத் தன்றே வருந்தி
வான்றோய் வற்றே காமம்
சான்றோர் அல்லர்யாம் மரீஇ யோரே

(குறுந்.102)

என்ற ஔவையாரின் பாட்டில் ஈற்றயலடிமுச்சீராய் வருகின்றது. அதுபோல வெள்ளிவீதியாரின்,

காலே பரிதப் பினவே கண்ணே
நோக்கி நோக்கி வாள் இழந்தனவே
அகலிரு விசும்பின் மீனினும்
பலரே மன்றஇவ் உலகத்துப் பிரரே

(குறுந்.44)

என்றபாட்டில் ஈற்றயலடி முச்சீராய் அமைந்து நேரிசை யாசிரியப்பாவாகிறது. இவ்வாறு மற்ற பாட்டுக்களும் நேரிசையாசிரியமாக விளங்குகின்றன.

நற்றிணை, நானூறு ஆசிரியப்பாக்களைக் கொண்டது. ஒன்பது அடிமுதல்

பன்னிரெண்டு அடிவரையரையானவை. இதில் இருபத்தைந்து பாட்டுக்கள் பெண்பாற்புலவர்கள் பாடியவை. இந்நூலில் இரு பாட்டு நிலை மண்டில ஆசிரியப்பாவின[5] இதில் வெள்ளிவீதியாரின் 398-ஆம் பாட்டும் அடங்கும். இது பத்து அடிப்பாட்டு.

நிலவே, நீனிற விசும்பிற் பல்கதிர் பரப்பி...

..........................................................................

அதனால் என்னொடு பொருங் கொல்இ வுலகம்

உலகமொடு பொருங்கொலென் அவலமுறு நெஞ்சே

(நற்.398)

என்றபாட்டு நிலைமண்டில ஆசிரியப்பாவில் அமைந்தது. இப்பாட்டில் ஈரடிக்கு ஒருமுறை நிலவே, ஊரே, கானே, யானே என்று சீர் கூனாக வந்துள்ளது.

'அளவடியில் சீர் கூனாக வருதல் தொல்காப்பிய இலக்கண வழக்கேயாகும். ஈற்றயலடியில் இடம்பெற்ற 'அதனால்' என்ற சொல்லைக் கூனாகக் கொள்ளின், எஞ்சியது சிந்தடி ஆகும். சிந்தடியில் சீர் கூனாதற்கு இலக்கணம் கூறப்பெறாமையின், 'அதனால்' என்பதனை அடியுடன் இணைந்து சீராக எண்ணின் அளவடி என்பது பெறப்படும். ஆதலின், இப்பாட்டு நிலைமண்டில ஆசிரியமாகும்[6]

என்ற சோ.ந. கந்தசாமியின் கருத்தும் இதனைப் புலப்படுத்தும். இப்பாட்டு நீங்க மற்ற இருபத்துநான்கு பாட்டும் நேரிசையாசிரிய யாப்பினவாகும். உதாரணமாக ஔவையாரின்,

முரிந்த சிலம்பின் நெரிந்த வள்ளியின்

....................................................

இளநலன் இற்கடை யொழியச்

சேறும் வாழியோ முதிர்கம் யாமே

(நற்.295)

இப்பாட்டில் ஈற்றயலடி முச்சீராய் வந்தமையால் நேரிசை ஆசிரியப்பாவாகியது. இதுபோன்ற மற்ற பாட்டுக்களும் உள்ளன.

அகநானூற்றில் இருபத்து நான்கு பாட்டுப் பெண்பாற்புலவர் பாடியவை. இந்நூல் நானூறு அகவல் பாக்களால் அமைந்தது. இந்நூலில் இடம் பெற்ற பாட்டுக்கள் பதின்மூன்று முதல் முப்பத்தொரு அடி வரையறையானவை. பெண்பாற்புலவர்கள் இந்நூலில் பாடிய பாட்டுக்கள் அனைத்தும் நேரிசை ஆசிரிய யாப்பினவாகும். உதாரணமாக, ஔவையார் பாடிய,

> வானம் ஊர்ந்த வயங்கொளி மண்டிலம்
>
> ........................................................
>
> அழுதல் மேவல ஆகிப்
>
> பழிதீர் கண்ணும் படுகுவ மன்னே
>
> (அகம். 11)

இப்பாட்டில் ஈற்றயலடி முச்சீராய் வந்தமையால் நேரிசை யாசிரியப்பாவாகியது. மற்ற பெண்பாற்புலவர்களின் பாடல்களும். இவ்வாறே நேரிசை யாப்பின.

பெண்பாற்புலவர்கள் அகப்பாட்டுக்களில் பெரிதும் நேரிசை ஆசிரிய யாப்பிலே பாடியுள்ளனர். இதனால் பெண்பாற்புலவர்கள் இந்நேரிசை யாசிரியப்பாவில் பாடவிரும்பியமை பெறப்படும். தமிழில் யாப்பினை ஆய்வு செய்த சோ.ந. கந்தசாமி,

> யாப்பியல் வரலாற்றில் சங்க காலத்தில் நேரிசையாசிரியமே மேலாண்மை பெற்றது என்பது உண்மை. இத்தொகை நூலில் உள்ள பாக்களின் பெருக்கத்தாலும் உறுதி பெறுகிறது.[7]

என்பர். இதனால் சங்கப் புலவர் நேரிசை ஆசிரிய யாப்பிலே பாட விரும்பியமை அறியப்படும். அள்ளூர் நன்முல்லையாரும் (குறுந்.93) வெள்ளிவீதியாரும் (நற்.398) நிலைமண்டில ஆசிரிய யாப்பில் பாடியிருப்பது. புதுவகை யாப்பில் பெண்பாற்புலவர் பாட விழைந்தமையைக் காட்டுகின்றன.

## புறப்பாட்டு

புறநானூற்றில் பெண்பாற்புலவர்கள் பாடிய பாட்டுக்கள் அறுபத்தைந்து. இப்பாட்டில் ஔவையார் பாடிய 'இவ்வே பீலி யணிந்து மாலை சூட்டிக்' (புறம்.95) எனத்தொடங்கும் பாட்டு வஞ்சியடி விரவிய நேரிசை ஆசிரியப்பாவில் அமைந்த பாடல். இப்பாடலில்,

உண்டாயிற் பதங்கொடுத்
தில்லாயி னுடனுண்ணும்
இல்லோ ரொக்கற் றலைவன்
அண்ணலெங் கோமான் வைந்நுதி வேலே

(புறம். 95; 6-9)

என்றடிகளில் 6-7 அடிகள் வஞ்சியடிகள். வஞ்சியடியாவது இருசீரடியால் வருவது. இப்பாடலில் வஞ்சியடிகள் வந்து ஈற்றயலடி முச்சீராய் வந்தமையால் வஞ்சியடிவிரவிய நேரிசை ஆசிரியப்பாவாகியது.

இந்நூலில் அள்ளூர் நன்முல்லையார் பாடிய 306ஆம் பாட்டு சிதைந்துள்ளதால் இதன் பா அறியஇயலவில்லை. சேரமான் பாலை பாடிய பெருங்கடுங்கோவைப் பேய்மகள் இளவெயினியார் பாடிய பாட்டு வஞ்சிப்பாட்டாகும். இப்பாட்டில்,

அரிமயிர்த் திரண்முன்கை
வாலிழை மடமங்கையர்

என இருசீரடியில் தொடங்கி, இறுதியில்,

கொள்ளழல் புரிந்த தாமரை
வெள்ளி நாராற் பூப்பெற் றிசினே

(புறம்.11)

என்று நேரிசை ஆசிரியப்பாவில் முடிந்துள்ளது. இவ்வாறு குறளடி சிந்தடியில் அமைவதும் இறுதியல் ஆசிரியத்தின் முடிவாக வருவதும் வஞ்சிப்பாவாகக் கொள்ளப்படும். இதற்கு சோ.ந. கந்தசாமி,

"புறநானூற்றில் 36 பாட்டுக்களின் முதலடி குறளடியாகத் தொடங்குதல் காணலாம். குறளடி, சிந்தடியினால் அமைவதும்

ஆசிரியப்பாவின் முடிவு கொள்வதும் வஞ்சிப்பாவின் இலக்கணம் என்று கொள்வதும், வஞ்சிப்பாவின் இலக்கண என்று ஒருமுகமாக யாப்பிலக்கண நூல்கள் காட்டுகின்றன"[9]

என்று கூறும் கருத்து அரண்சேர்க்கும்.

ஔவையார் படிய 235ஆம் பாடலான, 'சிறிய கட்பெறினே' எனத்தொடங்கும் பாட்டு இணைக்குறள் ஆசிரியப்பா. இப்பாட்டில் இரு சீரடி, முச்சீரடி, ஐந்சீரடியும் இடையிடை விரவி வந்தள்ளது. இதனை,

சென்றுவீழ்ந் தன்றவன்
அருநிறத் தியங்கிய வேலே
ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ
இனிப், பாடுநரு மில்லைப் பாடுநர்க் கொன்றிகுநரு
பனித்துறைப் பகன்றை நறைக்கொண் மாமலர்
சூடாது வைகியாங்குப் பிறர்க்கொன்
றியாது வீயு முயிர்வதுப் பலவே.

(புறம்.235-14-20)

என்றடிகள் உணர்த்தும்.

"இலக்கண விளக்கத்தின் உரையில், இரு சீரடியும் முச்சீரடியும் இடையிடை வந்த இணைக்குறளாசிரியப்பாவிற்குச் செய்யுள் சிறிய கட்பெறினே.......பலவே, என்று குறிக்கப்பெற்றது.[10]

என்று காட்டுவதும் இப்பாட்டு இணைக்குறளாசிரியப்பா என்பதைக் காட்டுகிறது.

மாறோக்கத்து நப்பசலையார் பாடிய 383-ஆம் பாட்டு நிலைமண்டில ஆசிரியப்பா. எல்லா அடியும் நாற்சீராய் அளவொத்து வந்தமையால் நிலைமண்டில ஆசிரியப்பா. இப்பாடல்,

ஒண்பொறிச் சேவ லெடுப்பவேற் றெழுந்து
தண்பனி யுறைக்கும் புலரா ஞாங்கார்........

எனத்தொடங்கி,

'அறாஅனெவன் பரிகோ வெள்ளியது நிலவே',

(புறம்.383)

என்று இறுதியடிவரை நான்கு சீராய் வந்தமையால் நிலைமண்டில ஆசிரியப்பாவாகியது. இப்பாட்டில் 14,15,19,20 அடிகள் சிதைந்துள்ளன. மற்ற பெண் பாற்புலவர்களின் புறநானூற்றுப் பாட்டுக்கள் நேரிசை ஆசிரியப்பாவின.

பதிற்றுப்பத்தில் ஆடுகோட்டுபாட்டுச் சேரலாதனைக் காக்கைப்பாடினியார் நச்செள்ளையார் பாடிய ஆறாம்பத்தில் முதற்பாடல், 'துளங்கு நீர் வியலகம்' எனத் தொடங்குவது. இது ஐம்பத்தொரு அடியுள்ள பாட்டு. இதனுள் இரு சீரான் இயன்ற வஞ்சியடி பயின்றுள்ளது. இதனை,

சுடர்நுதன் மடநோக்கின்
வாணகை யிலங்கையிற்

(19-20)

என்றும்,

மழைதவழும் பெருங்குன்றத்துச்
செயிருடைய வரவெறிந்து
கடுஞ்சினத்த மிடறபுக்கும்
பெருஞ்சினப்புடி லேறனையை

(25-28)

என்றடிகள் காட்டும். இப்பாடலில் மூச்சீரான் இயன்ற அடிகளும் பயின்றுள்ளன. இதனை,

'வந்த ரந்தரம் வேய்ந்து' (16)

என்றடி சுட்டும். இப்பாடலின் ஈற்றடியும் அன்னதே. ஏனைய யாவும் நேரடிகள். இப்பாட்டு வஞ்சியடி மயங்கிய ஆசிரியம். மற்ற ஒன்பது பாடல்களும் நேரிசை ஆசிரியம். இவ்வொன்பது பாட்டுகளும் செந்தூக்காக அமைந்து ஒழுகு வண்ணம் கொண்டவை.

முடத்தாமக்கண்ணியார் பாடிய பொருநராற்றுப்படை 248 அடிகளுடையது. இது சோழன் கரிகாற்பெருவளத்தானைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு

பாடப்பட்டநூல். இந்நூலில் ஆசிரியப்பாவைக் கொண்டு பாடியுள்ளார்.

> மற்ற பாட்டுக்களின் அமைப்பிற்கும் இதன் அமைப்பிற்கும் ஒரு வேறுபாடு உண்டு. அவற்றில் வஞ்சியடிகள் வரவில்லை. இதில் பல இடங்களில் வஞ்சியடிகள் பயின்று வந்தன. இப்பாட்டின் முதலிலும் முடிவும் வஞ்சியடியில்லாத ஏனைய அளவடியினால் இயன்று ஈற்றயலடி முச்சீரினால் அமைதலின், இதனை வஞ்சியபடி விரவிய நேரிசை ஆசிரியம் என்று கூறுதல் தகும்.[11]

என்பர். இதனால் பொருநராற்றுப்படை வஞ்சியடி விரவிய நேரிசை ஆசிரிய யாப்பின என்பது பெறப்படும்.

யாப்பியல் நோக்கில் பெண்புலவர்கள் பெரிதும் விரும்பிய யாப்பு நேரிசை ஆசிரியம் என்பது, நேரிசையாசிரியப்பாவில் அதிகப் பாக்கள் இடம் பெற்றமை காட்டுகின்றன. சிலவாக நிலைமண்டில ஆசிரியப்பா, வஞ்சிப்பாவில் இவர்கள் பாக்கள் இடம் பெற்றுள்ளன.

**உவமை**

சங்க காலத்தில் புலவர்கள் பாடிய பாட்டுக்களில், பொருள் சிறக்க பயன்படுத்திய இலக்கிய உத்திகளுள் உவமையும் ஒன்று. இவ்வுவமைப் புறப்பாட்டுக்களை விட அகப்பாட்டுக்களில் அதிகம் பயன்படுத்தப்பட்டுளளன. உவமைகள் இலக்கியங்களில் பயன்படுத்த பட்டமையை அறிந்த தொல்காப்பியர் உவமவியல் என்ற தனியியலை அமைத்து விளக்குவர். இவர் உவமையை நான்காக வகைப்படுத்துவர். இதனை,

> வினை பயன் மெய் உரு என்ற நான்கே
> வகை பெற வந்த உவமத் தோற்றம்[12]

என்று, வினையாகிய தொழில், பயன், மெய்யாகிய வடிவம், உருவாகிய நிறம் ஆகிய நான்கு வகையிலும் உவமை தோன்றும் என்பர். இவ்வுவமைகள் தனித்தனியாகவும், சேர்ந்தும் வரும் என்பதை 'விரவியும் வரூஉம் மரபின' என்பர்[13]. அதுபோன்று உவமைகள் ஒரு பொருளின் சிறப்பு, அதன் நலன், அதன் மேல் கொண்டுள்ள

பேரன்பு, அதன் வலிமை இவைகள் உவமை தோன்றநிலைக்களனாக அமையும் என்பதை,

சிறப்பே நலனே காதல் வலியொடு
அந்நால் பண்பும் நிலைக்களம் என்ப[14]

என்பர். இவ்வாறு தோன்றும் உவமைகளைப் பெண்பாற்புலவர்கள் பாடியளித்த பாடல்களில் பயன்படுத்தியுள்ளனர். இவ்வுவமைகள் இயற்கையோடு தொடர்புடையதாகயும், வாழ்வில் நடந்த நிகழ்ச்சிகளாகவும், வரலாற்றோடு தொடர்புடையதாகவும் அமைந்துள்ளன. பெண்பாற்புலவர்கள் பயன்படுத்திய உவமைகளில் சில,

வெள்ளிவீதியார் பாடிய பாடலில் களவு காலத்தில் தலைவன் ஒருவன் இயற்கைப் புணர்ச்சிக்குப்பின் தலைவியைக் காணப்பெறாமையால் பெரிதும் துன்புற்று நலிந்தான் தலைவன். அவனை பாங்கன் இது நின் பெருமைக்குத் தகாது என்று இடித்துரைக்கும் போது தலைவன் மனம் தலைவியைக் காணாதுத் துன்பப்படுகிறது. தலைவன் படும் வேதனையை வெளிப்படுத்த ஓர் உவமையைக் கையாளுகின்றார்.

ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கிற்
கையில் ஊமன் கண்ணில் காக்கும்
வெண்ணெய் உணங்கல் போல
பரந்தன் றிந்நோய் நோன்று கொளற்கரிதே

(குறுந்.58, 3-5)

என்று பாடுகிறார். வெம்மையால் சூடேறிய பாறையில் இருக்கும் வெந்நெய் உருகின்றது. இவ்வெண்ணெய் உருகுவதைப் பார்க்கும் ஒருவனுக்குக் கையுமில்லை, வாயும் ஊமை. அந்நிலையில் அவனால் பாறையில் இருந்து உருகும் வெண்ணெயை எவ்வாறு தடுக்க இயலும். எடுப்பாரின்றி வெம்மையால் வெண்ணெய் கரைந்து போகும். அதுபோல தலைவன் தலைவி மீது கொண்ட காதலால் உண்டாகிய நோய் அவன் உடலெங்கும் பரவியது. அதனை அவன் கையில் ஊமன் கண்ணில் காக்கும் வெண்ணெய் உணங்கல் போல தடுப்பாரின்றி தலைவனின் நிலையும் அமைகின்றது. இவ்வுவமை இயற்கையோடு தொடர்புடையது. தலைவியைக்

காணாது வருந்துகிறான். இதனால் படும் துன்பம் உடலெங்கும் பரவி ஒரு மாறுபாட்டை அவனிடம் உருவாக்குகிறது. இதனைத் தடுக்கஇயல முடியாததற்கு இவர் காட்டும் உவமை சிறப்பானதாகும்.

கச்சிப்பேட்டு நன்னாகையார் பாடிய பாடலொன்றில் களவுகாலத்தில் தலைவன் வரைபொருள் ஈட்டச் சென்றபோது தலைவி தலைவனின் பிரிவை நினைத்து வருந்துகிறாள். தலைவியின் நெஞ்சம் படும் வேதனையை வெளிப்படுத்த,

ஏழூர்ப் பொதுவினைக் கோரூர் யாத்த
உலைவாங்கி மிதிதோல் போலத்
தலைவரம் பறியாது வருந்துமென் னெஞ்சே

(குறுந்.172 4-6)

என்று பாடுகிறார். அந்நாளில் கொல்லர்கள் ஊர்தோறும் கொல்லுலைகளை அமைத்து கருவிகளை அவ்வப்போதுச் செய்தளிப்பர். அவ்வாறின்றி ஏழூருக்கு ஒரு கொல்லுலை இருப்பின் இடையறாது இரவு பகல் இயங்கும். அப்போது கொல்லுலையில் பயன்படுத்தப்படும் துருத்திபோல முடிவேயில்லாமல் தலைவியின் நெஞ்சம் வருந்துகின்றது என்கிறார். தலைவியின் நெஞ்சம் படபடப்பதற்கு உலைவாங்கு மிதிபோல என்று துருத்தியை உவமிப்பது சிறப்பானதாகும். புலவர்கள் உவமைகளை உவமிக்கப்படும் பொருளோடு நுண்ணிதின் ஒப்புமைப்பட அமைத்தனர் என்பதற்கு இவ்வுவமை சிறந்த உதாரணமாகும். இவ்வுவமையால் சங்ககாலத்தில் கொல்லுலைகள் பல இடங்களில் இருந்தமைப் பெறப்படுகிறது.

அள்ளூர் நன்முல்லையார் பாடிய கற்பு காலப் பாடலில் தலைவன் இனிமையுடையவனாக இருந்து பின்பு பரத்தையருடன் உறவுகொண்டு துன்பம் செய்கிறான். இதற்கு,

புன்புலத் தமன்ற சிறியிலை நெருஞ்சிக்
கட்கின் புதுமலர் முட்பயந் தாங்கு
கினிய செய்தநங் காதலர்
இன்னா செய்தல் நோமென் னெஞ்சே

(குறுந்.202 3-6)

என்று பாடுகிறார். நெருஞ்சி மலர் மலர்ந்திருக்கும் போது காண்பதற்கினியதாக இருக்கும். பின் முட்பயத்தால் காலில் பட்டு துன்பம் விளைவிக்கும். அதுபோல தலைவன் முன்பு இனிமையுடையவனாக இருந்து, பின்பு பரத்தையருடன் தொடர்கொண்டுத் துன்பம் தருகிறான் என்கிறார். இவ்வுவமை நிலத்தில் இயல்பாக மலர்ந்து அழகாக காட்சியளிக்கும் நெருஞ்சிச் செடியின் அழகினைக் கண்ட புலவர் வாழ்க்கை நிகழ்வோடு உவமிப்பது புலவரின் நுட்பஅறிவைப் புலப்படுத்துகிறது. சங்க காலத்தில் பாடுபொருளைப் படிப்போர் உணரும்படி புலவர் பல்வேறு திறத்தில் ஆழ்ந்து குறைந்த அடிகளில் உணர்வுகளை வெளிப்படுத்த விளைந்ததற்கு இவ்வுவமை சிறந்த சான்றாகும்.

ஒக்கூர் மாசாத்தியார் 'முல்லைப் புலவர்' என்றே போற்றப்படுபவர். முல்லை நிலத்தில் நடக்கும் நிகழ்ச்சிகளைப் பாடல்களில் மிக அழகாக உவமிப்பவர். முல்லை நிலத்தலைவன் கார்காலம் வந்ததும் வருவதாகக் கூறிச் சென்றான். கார்காலம் வந்தது தலைவன் வரவில்லை. தலைவன் வாராமையால் தலைவி வருந்தியுள்ளாள். முல்லை நிலத்தில் முல்லைப் பூ கார்காலத்தில் மலர்ந்துள்ளது. அக்காட்சியைக் கண்ட புலவர்,

ஆர்கலி யேற்றெடு கார்தலை மணந்த
கொல்லைப் புனத்த முல்லை மென்கொடி
எயிறென முகைக்கு நாடற்குத்

(குறுந்.168 1-3)

என்று, முல்லைப் பூ மலர்ந்திருப்பது, தலைவன் வருகையைப் பார்த்து வருந்தியிருக்கும் தலைவியின் நிலையைக் கண்டு சிரிப்பதாக உள்ளது என்று பாடுகிறார். இப்பாட்டில் முல்லை அரும்புகளைப் பற்களாக உவமிக்கிறார். இயற்கையாக நடக்கும் நிகழ்வுகளைப் பாடுபொருளைத் தெளிவிக்கப் பயன்படுத்துவது சிறப்பான ஒன்றாகும்.

காமக்கணி நப்பசலையார் எனும் பெண்பாற்புலவர் இவ்வுலக வாழ்க்கையின் நிலையாமையைப் பாட விளைந்தபோது 'கவறு பெயர்த்தன்ன நில்லா வாழ்க்கையிட்' (நற்.243-5) என்று சூதாடு கருவி உருண்டு ஓடும் இயல்பிற்றாகலின் அதுபோல

வாழ்க்கையும் நிலையில்லாது என்று உவமிக்கிறார்.

நக்கண்ணையார் பாடிய களவுப் பாடலில் தலைவன் வரைபொருள்ளீட்டச் சென்றபோது தலைவி கனவு கண்டு விழிக்கின்றாள். அதனைப் பாடும்போது,

உள்ளூர் மாஅத்த முள்ளெயிற்று வாவல்
ஓங்கல் அஞ்சினைத் தூக்குதுயில் பொழுதின்
வெல்போர்ச் சோழன் அழிசியம் பெருங்காட்டு
நெல்லியம் புளிச்சுவை கனவி யாஅங்கு

(நற்.87 1-4)

என்று பாடுகிறார். இப்பாடலில் தலைவி தலைவன் பிரிந்திருந்த காலத்தில் கனவு கண்டு அதுபொய்யாகியது. அதற்கு வௌவாலின் கனவை உவமையாக்குகிறார். உள்ளூரில் மாமரத்தின் உயர்ந்த மரக்கிளையில் தொங்கிக்கொண்டு உறங்கும் வௌவால், சோழனின் அழிசியது பெரியகாட்டில் வளர்ந்திருக்கும் நெல்லிக்காயின் புளிச் சுவையை உண்பதாக கனவுகண்டு அது பொய்யாகியது. தொலை வினைச் சுட்ட சோழனது அழிசி நாட்டைக் குறிப்பிடுவது சிறப்பான ஒன்றாகும். வௌவாலின் கனவு உண்மையாகாததுபோல தலைவி கண்ட கனவும் உண்மையாகாததைக்காட்டுகிறார்.

வெள்ளிவீதியார் பாடிய பாடலில் தலைவன் தலைவியைப் பிரிந்து நெடுநாளாகியும் வரவில்லை. தலைவி வருந்தியிருக்கிறாள். ஊரில் அலர் எழுகின்றது. இவ்வலரைக் குறிப்பிட,

............................................ அலரே
அன்னி குறுக்கைப் பறந்தலைத் திதியன்
தொன்னிலை முழுமுதல் துமியப் பண்ணிப்
புன்னை குறைத்த ஞான்றை வயிரியர்
இன்னிசை யார்ப்பினும் பெரிதே யானே

(அகம்.45-8-10)

என்று பாடுகிறார். அன்னி என்பான் திதியனின் தொல்நிலைப் புன்னனைமரத்தை வெட்டி வீழ்த்திய வெற்றியை கூத்தர் இன்னிசைப் பாடி முழங்கினர். அப்போது

எழுந்த முழக்கத்தைவிட ஊரில் எழுந்த அலர் பெரியது என்கிறார். அலருக்கு வரலாற்று நிகழ்ச்சியை உவமித்துள்ளார். அப்பாடலில், தலைவனைப் பிரிந்த தலைவியின் நெஞ்சம் படும் வேதனையைப் பாடும் போது,

'கடல்கால் கிளர்ந்த வென்றி நல்வேல்
வானவரம்பம் அடன்முனைக் கலங்கிய
உடைமதில் ஓரரண் போல
அஞ்சுவரு நோயொடு துஞ்சா தேனே.

(அகம்.45-16-19)

என்று வானவரம்பன் வலிபொருந்திய போர் முனையிற் போரிட்டு பகைவனின் கலங்கிய உடை மதிலாகிய ஒரு அரணைப்போல, தலைவி அச்சம் பொருந்திய வருத்தத்தால் துயிலன்றி இருப்பதற்கு உவமிக்கிறார்.

ஔவையார் பாடிய பாடலில், தலைவனைப் பிரிந்த தலைவியின் நிலையைப் பாடும் போது, ஊரில் எழுந்த அலருக்கு,

.......................................... வென்வேல்
மறமிகு தானைப் பசும்பூட் பொறையன்
கார்புகன் றெடுத்த சூர்புகல் நனந்தலை
மாயிருங் கொல்லி யுச்சித் தாஅய்த்
ததைந்துசெல் லருவியின் அலரெழப் பிரிந்தோர்

(அகம்.303 4-8)

என்று பாடுகிறார். இப்பாடலில் பொறையனின் கொல்லி மலையுச்சியிலிருந்து வரும் அருவியின் ஓசைபோன்று அலர் உள்ளதாக உவமிக்கிறார்.

இவ்வாறு பெண்பாற்புலவர்கள் பாடிய பாடல்களில் இயற்கை நிகழ்சிகளையும், வாழ்க்கை நிகழ்வுகளையும், வரலாற்றுச் செய்திகளையும் உவமையாகக் கையாண்டு பாடுபொருளின் திறத்தை புலவரும் உணர்ந்து காலம் காலமாகப் படிப்போரின் நெஞ்சத்தில் எண்ணிய உணர்வுகளைப் பதியவைத்த சிறப்பு சங்கப் புலவருக்கேயுரிய தனிச்சிறப்பாகும்.

## உள்ளுறை

சங்க இலக்கியங்களில் அகப்பொருள் பாடல்களில் பயன்படுத்தப்பட்ட இலக்கிய உத்திகளுள் உள்ளுறையும் ஒன்று. தொல்காப்பியர் காலத்தில் உள்ளுறை பாட்டுகளில் பயன்படுத்தப்பட்டதை,

உள்ளுறுத் திதனோடு ஒத்துப்பொருள் முடிகென
உள்ளுறுத் திறுவதை உள்ளுறை உவமம்[15]

என்று இலக்கணம் வகுத்தமை காட்டும். இதனால் உள்ளுறையாவது உள்ளுறுத்த பொருள் இதனோடு ஒத்து முடிக என உள்ளுறுத்து உரைப்பது என்பதாகும். இவ்வுள்ளுறை உவமம் கருப்பொருளில் தெய்வம் ஒழிந்த ஏனைய பொருள்களில் பயின்று வருவதை,

உள்ளுறை தெய்வம் ஒழிந்ததை நிலன்எனக்
கொள்ளும் என்ப குறியறிந்தோரே[16]

எனச்சுட்டுவர். இவ்வுள்ளுறை உவமம் அல்லாதது ஏனைய உவமமாகக் கொள்ளப்பெறும் என்று கூறுவர். இது,

ஏனை உவமம் தான்உணர் வகைத்தே[17]

என்று இது பொருள் இது உவமம் எனத்தானே உணர்த்தி வருவது ஏனைய உவமமாகக் குறிப்பிடுவர். இவ்வுள்ளுறை தொல்காப்பியர் காலத்திற்கு முன்இருந்த இலக்கியக்கியங்களில் பயன்படுத்தப்பட்டதைக் 'குறியறிந்தோரே' என்று அவர் குறிப்பிட்டமை காட்டும். இவ்உள்ளுறை உவமைகள் சங்க இலக்கியத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளன. சங்க இலக்கியத்தில் இடம்பெற்ற உவமைகளை ஆய்வு செய்த ரா. சீனிவாசன்,

> உள்ளுறை என்பது உடனுறை உவமம், சுட்டு, நகை, சிறப்பு ஆகிய அமைப்புகளைக் கொண்டு குறிப்பாகக்கொள்ளப்படும் உவமைவகை ஆகுமென்பதும், வினை பயன்மெய் உருபிறப்பு ஆகிய இயல்புகளின் அடிப்படையில் உவமச் செய்திகள் பெறப்படும் என்பதும், இவற்றால் இனிதுறு கிளவியும் துனியுறு

கிளவியும் அமையும் என்பதும், இவை ஒருசிலர் உரையாடலில்
பயின்றுவரும் மரபைப் பெற்றுள்ளன என்பது, புலனாகின்றன.[18]

எனப்பகர்வதும் இதற்குப் பொருந்தும். இவ்உள்ளுறையைப் பெண்பாற்புலவர்களும் பாடலில் பயன்படுத்தியுள்ளனர். அவற்றில் சில.

நல்வெள்ளியார் பாடிய நற்றிணைப் பாடலில், சிறைப் புறமாகத் தலைவனிருக்கத் தோழி தலைமகளுக்குக் குறைப்பாளாய் கூறுகின்றாள். இக்கூற்றில்,

பெருங்களி றுழுவை அட்டென இரும்பிடி
உயங்குபிணி வருத்தமொ டியங்கல் செல்லாது
நெய்தற் பாசடை புரையும் அஞ்செவிப்
பைதலங் குழவி தழீஇ ஒய்யென
அரும்புண் ணுறுநரின் வருந்துபு வைகும்
கான நாடற் இதுவென யான்றற்
கூறின் எவனோ தோழி வேறுணர்ந்து

(நற்.47-1-7)

என்று பாடுவர். இப்பாடல் குறிஞ்சி நிலத்தலைவன் களவு காலத்தில் தலைவியைப் பிரிந்திருப்பதை, அந்நிலத்தில் நடக்கும் ஒரு நிகழ்ச்சியைக் காட்டி விளக்குகிறார். காட்டில் வாழும் பெருங்களிற்றை புலி (உழுவை) கொன்றதால் பிடியானை வருத்தமொடு இயங்குதலின்றித் தன்கன்றை தழீச் கொண்டு வைக்கின்றது என்கிறாள். இதில் தலைமகன் பிரிவால் மேனி நலம் பசலையால் வேறுபட்டழியவே தலைவி அவனது காதலன்பு ஒன்றையே தழீஇக் கொண்டு வேறு செயலற்றிருக்கின்றாள் என்பதை உள்ளுறையாகப் பாடுகிறார்.

ஔவையார் பாடிய மருதத்திணைப் பாடலில் தலைவனின் பரத்தையரை நச்சிச் சென்றபோது வாயிலாகவந்தவன் அறியும்படி. தலைவி தோழிக்கூறுவது போல கூறுகிறாள்.

வாளை வாளிற் பிறழ நாளும்
பொய்கை நீர்நாய் வைகுதுயில் ஏற்கும்
கைவன் கிள்ளி வெண்ணி வாயில்

(நற்.390 1-3)

என்று, பொய்கைக்கண் வாளை பிறழ்தலால், நீர் நாய் அதனை நாளிரையாக உண்டு உறங்கும் என்பதைக்கூறி, தலைவனும் பரத்தையர் சேரிக்கண் சென்று பரத்தையரைக் கூடி நுகர்ந்து வாழும் செயலைக் கூறி வாயிலாக புக்கார் அறியும்படி உள்ளுரையாகத் தலைவி கூறுவதாகக் கூறுகின்றார்.

இவ்வாறு அகப்பொருளில் கருத்துப்புலப் பாட்டிற்கென்று உள்ளுறைச் செய்தி பயன்படுத்தப்பட்டுளது. உள்ளுறைகள் பாடு பொருள் வெளிப்படுத்தும் உணர்வுகளை வெளிப்படுத்துதற்கும், கருத்துத்தெளிவிற்கும் பயன்படுத்தப்பட்டுள்ளது.

## இறைச்சி

அகஇலக்கியங்களில் பாடுபொருள் சிறக்கப் பயன்படுத்தப்பெறும் இலக்கிய உத்திகளுள் ஒன்று தொல்காப்பியர்,

'இறைச்சி தானே பொருள் புறத்ததுவே'[19]

என்று இறைச்சி என்பது கருப்பொருளின் புறத்ததாகக் கொள்ளப்பெறும் குறிப்புப் பொருள் என்பர். சங்க இலக்கியங்களில் நற்றிணையிலும் கலித்தொகையிலும் இறைச்சி ஆங்காங்கே சுட்டப்பட்டள்ளன. இறைச்சி பற்றிக் கூறுகையில்,

> "உவமை வழியாக அமையும் இறைச்சிக்கும் உள்ளுறைக்கும் உள்ள வேறுபாடு மிக நுட்பமானதாகும். உள்ளுறையில் உவமும் உண்டு. இறைச்சியும் (குறிப்புப் பொருள்) உண்டு. இறைச்சியில் குறிப்புப் பொருளும் உண்டு, உவமமும் உண்டு. இவை இரண்டிற்கும் உள்ள ஒற்றுமைப் பண்புகளாம். இவற்றை உள்ளுறை என்றோ இறைச்சி என்றோ கொள்வதுக் கொள்வோரின் மனநிலையைப் பற்றியதாகும். உவமைக்குத் தலைமையும் சிறப்பும் கொடுத்தால் அவை உள்ளுறை உவமம் எனக் கொள்ளப்படுகின்றன. குறிப்புப் பொருளுக்குத் தலைமை கொடுத்தால் அவை இறைச்சி எனக்கொள்ளப்படுகின்றன. இவையே இரண்டிற்குமுள்ள அடிப்படை வேறுபாடுகள் எனலாம்.[20]

என்ற ரா.சீனிவாசனின் கருத்துப் பொருத்தமானதாகும். பெண்பாற்புலவர்களின்

அகப்பாடல்களில் இறைச்சிப் பொருளில் பாடல் பாடியுள்ளனர்.

குறமகள் குறிஎயினியார் பாடிய நற்றிணைப் பாடலில் (357) தலைமகன் வரைவு நீடியவிட்டது ஆற்றுவல் என்பது படச் சொல்லியது, மனைமருண்டு வேறுபாடாயினால் என்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியதூஉமாம். இப்பாடலில்

சேணுறத் தோன்றும் குன்றத்துக் கவாஅற்
பெயலுழந் துலறிய மணிப்பொறிக் குடுமிப்
பீலி மஞ்ஞை ஆலும் சோலை
அங்கண் அறைய அகல்வாய்ப் பைஞ்சுனை
உண்கண் ஒப்பின் நீலம் அடைச்சி
நீரலைக் கலைஇய கண்ணிச்
சாரல் நாடனொடு ஆடிய நாளே.

(நற். 357 4-10)

என்ற பாடலில் தலைவி தலைவனுடன் பண்டு, சுனையில் நீராடிய நிகழ்ச்சி நாளும் நடவா தாயினும், என்னெஞ்சு புண்ணுற்று வருந்துமாறு மறந்து போவது கிடையாது என்று நீ ஆற்றியிருத்தலே தகும் என்று பாடலில் பொருளை வெளிப்படையாகக் கூறியதால் இறைச்சியாகிறது. இவ்வாறு பெண்பாற்புலவர்கள் இறைச்சிப் பொருளிலும் பாடியுள்ளனர்.

## தொகுப்புரை

பெண்பாற்புலவர்கள் நேரிசை ஆசிரியப்பாவிலே மிகுதியாகப் பாடியுள்ளனர். இதனை குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு, புறநானூறு, பதிற்றுப்பத்து பாட்டுக்களால் பெறப்படுகிறது. அகத்தில் சில பாடல்கள் நிலைமண்டில ஆசிரிய யாப்பில் (அள். நன்முல்லையார் .குறுந்.93) (வெள்ளிவீதியார் நற்.398) அமைந்துள்ளன. புறநானூற்றில் ஔவையார் வஞ்சியடிகள் விரவிய நேரிசை ஆசிரிய யாப்பில் பாடியுள்ளார் (புறம்.95) காக்கைப்பாடினியார் நச்செள்ளையார் பாடிய பதிற்றுப்பத்துள் ஆறாம்பத்தின் முதல்பாடல் வஞ்சியடிகள் விரவிய ஆசிரிய யாப்பில் அமைந்துள்ளது. மற்றபாட்டுக்கள் நேரிசை ஆசிரிய யாப்பின. முடத்தாமக் கண்ணியார் பாடிய பொருநராற்றுப்படையும் நேரிசை ஆசிரிய யாப்பில் அமைவன. இதனால்

பெண்பாற்புலவர்கள் நேரிசை ஆசிரிய யாப்பில் பாட விரும்பியமை பெறப்படும். அள்ளூர் நன்முல்லையார், வெள்ளிவீதியார்போன்றோர் நிலைமண்டில ஆசிரிய யாப்பில் பாடியது புதிய வகையில் பெண்பாற்புலவர்கள் பாடவிழைந்ததைக் காட்டுகின்றன.

புறநானூற்றில் ஔவையார் வஞ்சியடிவிரவிய நேரிசை ஆசிரியயாப்பில் பாடியிருப்பதும், காக்கைப் பாடினியார் நச்செள்ளையார் இவ்யாப்பில் பாடவிரும்பியதும், பொருநராற்றுப்படையில் முடத்தாமக் கண்ணியார் வஞ்சியடி விரவிய நேரிசை ஆசிரியப்பாவில் பாடியிருப்பதும் பெண்பாற்புலவரை இவ்யாப்பு முறை பெரிதும் கவர்ந்தமையு பெறப்படும்.

பெண்பாற்புலவர்கள் பாடிய அகப்பாடல்களில் பொருள் சிறக்கப் பயன்படுத்திய உவமை, உள்ளுறை, இறைச்சிப் பொருள்களின் பயன்பாடு பெண்பாற்புலவர்களின் இலக்கியக் கொடையின் சிறப்பைப் புலப்படுத்துகின்றன. பாடலில் ஆண்பாற்புலவர்கள் பாடியவை, பெண்பாற்புலவர்கள் பாடியவை என்ற வேறுபாடு பாடலில் இல்லை. பாக்கள் அனைத்தும் செம்மையுற அமைந்திருப்பது அக்கால பெண்கல்வியை அறியச் சான்றாகின்றன.

## மேற்கோள் விளக்கம்

1. சோ.ந.கந்தசாமி - **தமிழ் யாப்பியலின் தோற்றமும் வளர்ச்சியும்**, ப.547
2. மேலது. ப. 593
3. ................................................., **யாப்பருங்கலக்கரிகை மூலமும் உரையும்**, ப.89
4. மேலது. ப.86
5. சோ.ந. கந்தசாமி, **தமிழ் யாப்பியலின் தோற்றமும் வளர்ச்சியும்**. ப.592
6. மேலது. ப.593
7. மேலது. ப.590
8. மேலது. ப.553
9. தொல்.செய்.சூத்.44
10. சோ.ந.கந்தசாமி, **யாப்பியலின் தோற்றமும் வளர்ச்சியும்,** ப.551
11. மேலது, ப.582-583
12. தொல்.பொருள். உவம. சூத்.1
13. மேலது. சூத்.2
14. மேலது. சூத்.4
15. தொல்.அகத்.சூத்.48
16. மேலது. சூத். 47
17. மேலது. சூத். 49
18. ரா.சீனிவாசன், **சங்க இலக்கியத்தில் உவமைகள்,** ப.228,
19. தொல். பொருள். சூத். 229
20. ரா. சீனிவாசன், **சங்கஇலக்கியத்தில் உவமைகள்**, ப.229-230

# ஏழாமியல்

## சங்க காலப் பெண்ணியம்

### பெண்ணியம் - விளக்கம்

பெண்ணியம் என்பதுப் பெண்களைப் பற்றியது. இப்பெண்ணியம் பதினெட்டாம் நூற்றாண்டிற்குப் பின் அமெரிக்கா, இங்கிலாந்து, பிரான்சு, செருமனி முதலான நாடுகளில் வளர்ந்து உலகம் முழுவதும் பரவிய இயக்கமாகும்.

தங்களைப் பற்றியும் தங்களுக்கான அரசியல் உட்பட்ட எல்லா நலன்களைப் பற்றியும் தங்களுக்கான மொழியில் பெண்களே பேசுவது தான் பெண்ணியம் எனப்படுகிறது[1]. இவ்வாறு பெண்ணியம் பற்றிப் பல்வேறு விளக்கங்கள் தரப்படுகின்றன. அவை கீழே தொகுத்துத் தரப்பெறுகின்றன.

'Feminism' என்ற ஆங்கிலச் சொல் 'Femina' என்ற இலத்தீன் சொல்லிலிருந்து வந்ததாகும்..... இச்சொல் பெண்களின் பாலியல் குணாதிசயங்களைக் குறிப்பிட வழங்கப்பட்டது. பின் பெண்ணியம் உரிமைகளைப் பேசுவதாக எடுத்தாளப்பட்டது [2].

பெண்ணியம் என்பது உலகிலுள்ள அனைத்து மனித குலத்துள்ளும். ஒவ்வொரு கால கட்டத்தில் பெண்களின் முன்னேற்றத்தை விமர்சிக்க ஏற்பட்டது. பெண்களின் சமத்துவத்தையும் முன்னேற்றத்தையும் வலியுறுத்துவதாகும்[3]. 'Feminism' என்ற சொல்லுக்கு ஈடாகப் பெண்ணியம் என்ற கலைச்சொல் கையாளப்படுகிறது.

பெண்ணியம் என்ற சொல் பெண் எந்த ஆணுக்கும் நிகரானவளே! எந்த நிலையிலும் எந்தக் காலத்திலும், அவள் அடக்கி வைக்கப்படக் கூடாது, தனிமைப்படுத்தி வைக்கக்கூடாது, சார்பு நிலைப் படுத்தக்கூடாது என்று பொருள் படுகிறது[4]. இச்சொல்லுக்குப் பெண்களின் தேவையை நிறைவேற்ற அவர்கள் சார்பாகப் போராடுவது (adrocacy of the claims of women) என்ற பொருளை ஆக்ஸ்போர்டு அகராதி தருகிறது.

பெண்ணியம் என்ற இயக்கமானது, பெண்கள் தாமாக முடிவெடுத்து;

அவர்களின் விருப்பப்படி வாழ்க்கையை நடத்திச் செல்லும் ஒரு சமூகத்தை உருவாக்குவதாகும். இஃது பெண்களிடையே பல மாற்றங்களை ஏற்படுத்தி, அவர்களின் மேற்கூறிய இலக்கை அடைவிக்க உதவும் புரட்சிகரமான செயற்பாடு உடையதாகும்[5].

பெண்ணியம் என்பது பெண்கள் மீதான வரலாறு/மத/பொருளாதார/பண்பாட்டு ரீதியான ஒடுக்கு முறையின் பல்வேறு பரிணாமங்கள், அதற்கான தீர்வுகள் அதை அடைவதற்கான வழிமுறைகளை ஆராய்வதாகும்[6].

பெண்கள் சமத்துவம், மதிப்பு என்பதை வீட்டிற்குள்ளேயும் வெளியேயும் பெறுவதற்கான போராட்டமாகும்[7].

பெண்ணியம் என்பது ஓர் 'உயிரி' எனச் சமூகம் அங்கீகரித்து, அவளுக்கு ஆணுக்குச் சமமான உரிமையும் சுதந்திரமும் கொடுக்கத் தூண்டும் கொள்கையாகும்[8].

பெண்டிர் நலக்கொள்கைகளின் தொகுப்பான பெண்டிர் உரிமை வேட்டலைப் பெண்ணியம் எனலாம்[9].

பெண்ணியத்தைப் பொதுவுடைமைப் பெண்ணியம் (மார்க்சியம்), சமவுடைமைப் பெண்ணியம் (சோசலிசம்); மிதவாதப்பெண்ணியம் தீவிரப் பெண்ணியம், பழைமை வாதக்குடும்பம் சார்ப்பெண்ணியம் என்றும் பிரித்து ஆராய்கின்றனர்[10].

மிதவாதப் பெண்ணியமும் பழைமைவாதப் பெண்ணியமும் சீர்திருத்தப் போக்கின. பொதுவுடைமைப் பெண்ணியமும் சமவுடைமைப் பெண்ணியமும் பொருள் முதல் வாதத்தை மையமிட்டவை. இவை தவிர உளவியல், மானிடவியல், மொழியியல் சார்ந்த பெண் பெண்ணிய நோக்குகளும் உள்ளன[11].

இவற்றை நோக்கும் போது, பெண்ணியம் என்பது பெண்களைப் பற்றியதாகும் என்று சுருக்கமாகக் கூறவேண்டும். பெண் ஆணுக்கு நிகரானவள்; அவனை எக்காலத்திலும் அடக்கி வைக்கலாகாது, பெண்சுதந்திரமாக வாழவும் செயல்படவும் வேண்டும்; பெண்களுக்காகப் போராடுவதும் பெண்ணியத்துள் அடங்கும். இந்த அடிப்படையை அமைத்துக் கொண்டும் பல்வேறு கோட்பாடுகளின் நோக்கில் பெண்ணியம் ஆராயப்பெறுகிறது.

***பெண்ணிய ஆய்வுப்பார்வை :***

பெண்ணியம் பற்றிப் பல கருத்துக்கள் உள்ளன. பெண்ணிய நோக்கில் சங்க இலக்கியத்தை ஆராய்ந்த ஆராய்ச்சியாளர்கள்..... 1. பெண்ணை, மொழி மற்றும் பண்பாடு எவ்வாறு அங்கீகரித்துள்ளது. 2. ஆண்களின் பார்வையில் முக்கியத்துவமில்லாமல் கருதப்பட்ட பெண்களின் நிலையை எடுத்துரைப்பது. 3. புதைந்து கிடக்கும் பெண்களின் பாரம்பரியத்தை ஆராய்வது. 4. மரபுவழியில் காலம் காலமாகப் போற்றப்பட்டு வரும் கருத்துக்களோ அமைப்புக்களோ ஒத்துக்கொள்ள முடியாத போது அதைக்காரண காரியங்களோடு எதிர்ப்பது[12] ஆகியவற்றைக் கொண்டு ஆராய்ந்தனர்.

தமிழிலக்கண இலக்கியங்களைக் கொண்டு பெண்ணியம் பெற்ற வளமையும் வளர்ச்சியும் ஆராயப் பெறுகிறது. வளர்ந்த இலக்கிய இலக்கணங்களே மூலாதாரம்; பெண்களைப் பற்றிய தொல்காப்பியர் கருத்துக்கள் - உட்பொருள்கள்- யாவை என்றும் சங்கப் பாடல்கள் காட்டும் சங்க காலப்பெண்மை யாது என்றும் ஆராயப்பெறுகிறது.

***தொல்காப்பியப் பெண்மை :***

தொல்காப்பியர் தமிழ்மன்பதையின் இலக்கியத்திற்கும், வாழ்க்கை முறைக்கும் இலக்கணம் வகுத்த பெரும் ஞானி. அவருடைய இலக்கணப் படைப்பில் களவு கற்பு என்று அக வாழ்க்கை நெறிகளையும், புறவாழ்க்கை நெறிகளையும் எடுத்தியம்பியவர்.

> 'புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்
> ஊடல் இவற்றின் நிமித்தம் என்றிவை
> தேருங்காலை திணைக் குரிப்பொருளே[13].

இவ்வுரிப் பொருள் தலைவன் தலைவியுடன் புணர்தலும், தலைவியைத் தலைவன் பிரிவதும், தலைவன் பிரிவில் இரங்கியிருத்தலும், தலைவன் செயல் கண்டு தலைவி ஊடுதல் எனவும் அக வாழ்வில் ஆண், பெண் இருவரின் மன சுழற்சியையும் பாகுபாடின்றி ஒன்றாக்கி இலக்கணம் படைத்துள்ளார். அகப்பாடல்களில் பெரும்பான்மைப் பெண்ணின் உணர்வுகளுக்குச் சங்ககாலம் கொடுத்த மதிப்பைக்

காட்டுவதாகும். ஆணையும் பெண்ணையும் ஒத்த நிலையில் தொல்காப்பியர் கருதினாலும், பெண்களின் உணர்ச்சிக்கு முக்கியத்துவம் கொடுத்தே உரிப்பொருட்பாகுபாடு செய்துள்ளார். இது பண்பாட்டில் பெண்ணிற்குக் கொடுத்த மன்பதை இசை வாகும்.

**பெண்கூற்று முதன்மை :**

தொல்காப்பியர் கூற்றுக்களை வரையறை செய்யும் போது அன்றையச் சமுதாயத்தில் மேலாண்மையுடைய ஆடவர்க்குரிய கூற்றுக்களை முதற்கண் உரைக்கவில்லை. அகத்திணையியலில் நற்றாய் கூற்றை முதற்கண் அமைத்தார். இவ்வுலகில் உயிர்களின் பிறப்பிற்கு உரியவள் தாய். அதனால்,

'தன்னும் அவனும் அவளும் சுட்டி
மன்னும் நிமித்தம் மொழிப்பொருள் தெய்வம்[14]

என்று நற்றாய் கூற்றை முதலில் அமைத்தார். இது தொல்காப்பியர் தாய்மையான பெண்மைக்குக் கொடுத்த முதன்மையை உணர்த்துகிறது.

**ஆண்பெண் ஒத்தநிலை :**

சங்க காலத்தில் பெண்ணியம் என்ற சொல்லாட்சியில்லை. ஆனால், அஞ்ஞான்று பெண்ணுரிமைச் செயல்கள் நடந்துள்ளன. இல்வாழ்க்கையில் இணையும் ஆணையும் பெண்ணையும் சமுதாயம் சமத்துவப் பார்வையொடு பார்த்தது. பின்னாளில் பெண்களுக்கான உரிமைகள் மறுக்கப்பட்டபோது பெண்ணுரிமைக்காகப் போராட வேண்டிய நிலை ஏற்பட்டது.

சங்க நாளில் ஆண், பெண் சந்திப்பு நிகழ்ந்துள்ளது. பெண் காதல் கொள்ளும் உரிமை பெற்றிருந்தாள். காதல் கொள்ளும் தலைவனும் தலைவியும் பிறப்பு, குடிமை, ஆண்மை, வயது, வடிவம் போன்ற பத்துவகைப் பொருத்தத்திலும்[15] சமமானவர்களாக இருப்பர் என்பது தொல்காப்பியக் கோட்பாடு. இதனை 'ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப'[16] என்கிறது தொல்காப்பியம். இக்கருத்து சமுதாயத்தில் ஆணுக்குச் சமமாகப் பெண் மதிக்கப்பட்டதையே காட்டுகிறது. ஆண் மேலாண்மை சமுதாயத்தில் பெண் போற்றி மதிக்கப்பட்டமைக்கு இது நற்சான்றாகும்.

**மண உறவு :**

பெண்ணுரிமையில் ஒரு பெண் விரும்பிய தலைவனை மணந்து கொள்வது முதலுரிமையும் முதன்மையான உரிமையுமாகும். சங்க காலத்தில் இவ்வுரிமை பெண்ணிற்கிருந்தது. வளர்ந்த நாடுகளில் கூடப் பெற்றோரே பெண்ணுக்குரிய மணமகனைத் தேடி மணம் செய்கின்றனர். சங்க காலத்தில் பெண் விரும்பிய ஆடவனை மணந்துள்ளாள். வேற்று வரைவுவரின் அதற்கு உடன்படவில்லை. இதனை 'வேற்று வரைவுவரின் அது மாற்றுதற்கண்ணும்'[17] என்று இலக்கணம் உணர்த்தும். வேற்று மணம் பேசவந்த போது தலைவி இத்திருமணம் நடக்காது என்று கூறுகிறாள். இதனை,

"காணினி வாழிதோழி யாணர்க்
கடும்புன லடைகரை நெடுங்கயத்திட்ட
மீன் வளை மாப்பட்டாஅங்
கிது மற்றெவனோ நொதுமலர் தலையே "

(குறுந். 171)

என்ற பாடலில் 'மீனிற்கென விரிக்கப்பட்டவலையில் விலங்கு மாட்டினாற்போல இவ்வரைவு வந்ததா'கவும், இது நடக்காது என்றும் கூறுகின்றாள் தலைவி வரைவு தலைவி இசைவுடன் நடந்ததை,

"வரைவு உடன் படுதலும் ஆங்கதன் புறத்துப்
புரைபட வந்த மறுத்த லொடு தொகை இக்
கிழவோற் மேன என்மனார் புலவர்"[18]

என்ற நூற்பா காட்டும். இவ்வரைவு பெண் விருப்பத்துடன் நடந்தது. தலைவி விருப்பப்படி மணம் நடக்கவில்லையெனில், தலைவி தலைவனுடன் உடன் போக்காகப் போய்விட்டாள்; உடன் போக விரும்பாதவள், தன் காதலைத் தோழியிடம் சொல்லி அவள் செவிலி மூலம் கூறித்தான் விரும்பியவனையே மணக்கும் நெஞ்சுரம் பெற்றிருந்தாள்; இவ்வாறுப் பெண்ணுரிமை நிலைநாட்டப்பட்டது.

திருமணம் நடக்கும் போது தலைவி தாய், தந்தை, ஊர், மூத்தோர் இருந்து மணம் செய்து கொடுப்பதை விரும்பினாள். ஒரு தலைவி தோழியிடம் தலைவன்

மீது கொண்ட காதலை ஏற்பாரா? என வினவ, அதற்குத் தோழி,

"யானும் காதலென் யாயும் நனிவெய்யாள்
எந்தையும் கொடீஇயர் வேண்டும்
அம்பல் ஊரும் அவனொடு மொழிமே"

(குறுந்.51:4-6)

என்கிறாள். அதுபோன்று திருமணம் மூத்தோர் கூடிய அவையில் நடந்திற்கானக் குறிப்புளது. இதனை,

'அம்ம வாழி தோழி நம் ஊர்ப்
பிரிந்தோர்ப் புணர்ப்பவர் இருந்தனர் கொல்லோ
தண்டுடைக் கையவர் வெண்தலைச்சிதவலர்
நன்றுநன்று என்னும் மக்களோடு
இன்றுபெரிது என்னும் ஆங்கனது அவையே'

(குறுந்.146)

என்ற பகுதி உணர்த்தும். இவற்றால் சங்க காலத்தில் பெண்கள் விரும்பிய தலைவனை மணக்கும் உரிமை பெற்றிருந்தமைப்பெறப்படுகிறது.

**உடன்போக்கு மணம் :**

உடன் போக்குத் திருமணம் சங்க காலத்தில் நடந்துள்ளது. பெண்கள் இல்லமும் இல்லம் சார்ந்த பகுதிகள் மட்டுமே செல்லும் உரிமை பெற்றிருந்தனர். அவ்வாறு வாழ்ந்த பெண்கள் துணிவுடன் தலைவனுடன் இணைந்து (elopment) சென்றுள்ளனர். உடன் போக்கு மணம் நிகழ்ந்ததை,

"கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டே
புணர்ந்துடன் போகிய காலையான"[19]

என்பதால் பெறப்படும். இவ்வுடன் போக்கிற்குத் தோழியும் துணையானாள். தலைவன் பாலையின் கொடுமை கூறி உடன்போக்கிற்கு செலவழுங்கலுற்ற போதுத் தோழி உன்னுடன் வருவது தலைவிக்கு இனிமையுடையது என்கிறாள். இதனை,

"நீர்க்கால் யாத்த நிரையிதழ்க் குவளை
கோடை ஒற்றினும் வாடாதாகுங்

கவணை அன்ன பூட்டுப்பொரு தசாஅ

உமணெருத் தொழுகைத் தோடு நிரைத்தன்ன

..........................................................................

யானை கைமடித்துயவும்

கானமும் இனியஆம் நும்மொடு வரினே."

(குறுந்.388)

என்ற ஔவையார் பாடல் உணர்த்தும். இது பெண் பெற்றிருந்த உரிமையையும், சமுதாயத்தில் அங்கீகாரம் பெற்று அகவாழ்வில் எண்ணங்களை உரைக்கின்ற பேச்சுரிமை பெற்றிருந்ததையும் காட்டுவதாகும்.

'உடன்போக்கு' என்பது பெண்ணியத்தின் நெஞ்சுரத்தையும் மேம்பாட்டையும் காட்டுவதாகும். தான் பிறந்து வளர்ந்த மனையையும் மக்களையும் விடுத்து ஒரு நங்கை ஓர் ஆடவனொடு வாழச் செல்கின்றாளெனின் அது பெண்ணுரிமை பெற்றதைக் காட்டுகிறது. பெண்ணடிமைப்பட்டு மனைக்குள்ளேயே முடங்கிக்கிடப்பதை விடுத்துத் தன்னுரிமையை நிலைநாட்டும் பெண்ணுரிமை நிகழ்ச்சி நடந்திருப்பது அந்நாளையப் பெண்ணியத்தைக் குறிக்கிறது.

தலைவனுடன் தலைவி உடன்போக்காகச் சென்று அவனூரில் திருமணம் நடந்ததை அறிந்த செவிலி நற்றாயிடம் கூறுகின்றாள். இதனை,

"பறைபடப் பணிலம் ஆர்ப்ப இறைகொள்பு

தொன்மூதாலத்துப் பொதியில் தோன்றிய

நாலூர்க் கோசர் நன்மொழி போல

வாயாகின்றே தோழி ஆய்கழல்

சேயிலை வெள்வேல் விடலையொடு

தொகுவளை முன்கை மடந்தை நட்பே"

(குறுந்.15)

என்ற பாட்டு உணர்த்தும். பெண்பாற்புலவர் பாடலில் உடன்போக்குச் செய்தி அமைந்த இரண்டு பாடலும் ஔவையார் பாடியது. பெண்பாற்புலவர்கள் மிகுதியான பாக்கள் பாடிய இவர் பாடலில் 'உடன்போக்கு' அந்நாளில் நடந்ததைப் பாடுகிறார்.

பெண்பாற்புலவரில் மற்ற புலவர்கள், களவுகாலத்தில், தலைவன் பிரிவதால் தலைவி வருந்தியுள்ளாள் என்றும், விரைந்து மணம் செய்து கொள் என்று தலைவனை வேண்டியுள்ளதாகப் பாடியுள்ளனர். ஔவையார் உடன்போக்கு நடந்ததைப் பெண்ணுணர்வோடுப் படைத்துக் காட்டுவதுப் பாராட்டத்தக்கதாகும். தொல்காப்பியரின் உடன்போக்குச் செய்தியை சங்கப்புலவர் பாடியிருப்பது சங்க காலத்தில் பெண்ணியக் மேலோங்கியிருப்பதைக் காட்டுகிறது.

**பெண்ணியம் :**

ஆண், பெண் வாழ்க்கை அமைப்பினைக் கொண்டுத் தொல்காப்பியர் பண்புகளை வரையறுத்துள்ளார். ஆண் போருக்குச் சென்றதால் போருக்குண்டான வலிமையையும், அப்போரின் வெற்றியால் உண்டாகும் பெருமையையும் கருதிப் 'பெருமையும் உரனும் ஆடூஉ மேன'[20] என்றார். பெண்கள் போர்க்களம் சென்று போரிடவில்லை. உடலால் வீரமில்லை எனினும் உள்ளத்தால் வீரப்பண்பைக் கொண்டவர் ஆதலால் 'மூதின் முல்லை' என்று பெண்மைக்குத் துறைவகுத்தார் தொல்காப்பியர். இல்லறக் கடமையாற்றும் பெண்ணின் நிலை கருதி,

> அச்சமும் நாணும் மடனும் முந்துறுத்த
> நிச்சமும் பெண்பாற்கு உரிய என்ப[21]

என்றார். இதற்கு இளம்பூரணர்.

> "வேட்கையுற்றுழியும் அச்சத்தானாதல் நாணா
> னாதல் மடத்தானாதல் புணர்ச்சிக்கு இசையாது
> நின்று வரைந்தெய்தல் வேண்டுமென்பது
> போந்தது. இவ்வாறு இருவரும் உள்ளப்புணர்ச்சியால்
> நின்று வரைந்தெய்தி மெய்யுறும்"[22]

என்பர். இதனால் சமுதாயத்தில் பெண்களுக்குப் பாதுகாப்புக் கருதி இப்பண்புகள் பெண்ணிற்குரியதாகின்றன.

பெண் அச்சப்படும் சூழல் சங்ககாலத்தில் களவு வாழ்க்கையில் நிகழ்ந்துள்ளது. களவில் ஈடுபட்ட தலைவி இல்லில் இற்செறிக்கப்பட்டபோதும், தலைவியின் களவு நிகழ்ச்சி கண்காணிக்கப்பட்ட போதும் தலைவி, தோழி இருவரும் அச்சப்படுகின்றனர்.

காரணம் காதல் கொண்ட தலைவனுடன் மனும் நடக்க இடையூறு ஏற்படுமோ? என்ற நிலையில் அச்சம் ஏற்படுகிறது.

அச்சம், நாணம், மடம்,பயிர்ப்பு இந்நான்கில் பெண்ணைப் பெண்ணாகக் காட்டுவது நாணம்; நாணமின்றேல் பெண்ணில்லை. இதனால்,

"உயிரினும் சிறந்தன்று நாணே, நாணினும்
செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று"[23]

என்று உயிரினும் நாணம் சிறந்ததென்றும், அந்நாணத்தை விடக் கற்புச் சிறந்ததென்றுங் கூறுவர், இந்நாணம் களவில் விலகியும், கற்பில் நாணம் இணைந்தும் சங்கப் பாடல்களில் பல இடங்களில் பாடப்பட்டிருக்கின்றன. களவில் நாண் அழிந்ததாக வெள்ளிவீதியார்.

"அளிதோ தானே நாணே நம்மொடு
நனிநீடு உழந்தன்று மன்னே இனியே"

(குறுந். 149:1-2)

என்ற பாடலில், உடன் போக்குணர்த்திய தோழிக்குத், தலைமகன் தலைவன் மீது கொண்ட காதலால் நாணம் அழிந்து படுமோ என்று கூறுவதாக அமைந்த பாடல். இது போன்று,

"காணாக்கழிய மன்னே நாண்" (குறுந். 231:4)

"நாணும் விட்டேமலர் கவிவ்வூரே" (நற்.15:10)

"நாணடை வருந்திய" (நற்.93:9)

என்று களவில் நாணழிந்தது குறிப்பிடப்பட்டது. இந்நாணம் கற்பு வாழ்க்கையில் பெண்மைக்குச் சிறப்புச் சேர்ப்பதாய் அமைகிறது. இதனை

"நாணொடு மிடைந்த கற்பு" (அகம் 9:24)

"நாணல்ல தில்லாக் கற்பு" (புறம் 196:13)

என்றடிகள் உணர்த்தும்.

**மடன் :**

மடன் என்பது பேதைமை. இக்குணம் சங்ககாலத்தில் பெண்ணிற்குரியதாகயிருந்தது. களவில் பெண்வேட்கையுற்றபோது

வரைந்தெய்தல்வரை மடத்தானாதலால், புணர்ச்சிக்குக் களவில் விரைந்து உடன்படாள். இந்நிலைபேண மடன் பெண்மைப் பண்பாகியது. மடன் என்பது பெண்ணிற்குக் கூறப்பட்டிருப்பதும் பெண்ணின் மென்மைகருதியேயாகும். இச்சொல்,

> "இனம் நிலம் வர்க்க வேறுபாடின்றி அனைத்துப் பெண்களும்
> மடமகளாக அறிவு மெல்லியராகப் படைக்கப்பட்டுள்ளனர்...........
> இங்குப் பெண்டிரின் ஒடுக்குமுறை கடுமையாகவோ,
> கோட்பாடாகவோ அமையாது பெண்ணை அன்பிற்கு இட்டுச்
> செல்வது போன்று எளிமையான படிநிலைப் படுத்தலாகவே
> அமைகின்றது.......... மடன் பெண்ணுக்குச் சமூகம் உருவாக்கிய
> பண்பு என்பது உறுதி பெறுகிறது"[24]

என்பர் ஆய்வாளர். சங்க இலக்கியத்தில் பெண்ணைக் குறிப்பிடும் இடங்களில் ம்டமகள், மடமா அரிவை, மடமொழிக் குறுமகள், மடநல்லாள், கூடநடை, அரிவை என்ற அடைச் சொற்கள் காணப்படுகின்றன. இதற்கு

> "அன்பும் மடனும் சாயலும் இயல்பும்
> என்பும் நெகிழ்விக்கும் கிளவியும் பிறவும்
> ஒன்றுபடு கொள்கை................"
>
> (அகம் 225:1-3)

என்று பண்புகளில் ஒன்றாக மடன் கூறப்பட்டிருப்பது சான்றாகும்.

பெண்களுக்குச் சங்க கால வாழ்வில் அச்சம், நாணம், மடன் ஆகிய பண்புகளைச் சுட்டியது பெண்களின் வாழ்க்கையமைப்புக் கருதியேயாகும். இப்பண்புகள் பெண்ணிற்கு வழங்கப்பட்டதால் பெண் அடங்கி வாழ்ந்தாள் என்று கருத வேண்டியதில்லை. இப்பண்புகளால் பெண்ணுரிமை பாதிக்கப்படவில்லை. அன்றைய சமுதாய வாழ்க்கை முறையை அடிப்படையாகக் கொண்டு இப்பண்புகள் தோன்றின. இது தமிழ்மொழியில் பெண்களுக்குக் கொடுத்த அங்கீகாரத்தையும், பண்பாட்டில் பெண்கள் பெற்றிருந்த இடத்தையும் காட்டுகிறது.

**கற்பு :**

கற்பு = கல்வி, ஒரு பெண் தாய் தந்தையர் கற்பித்த படி வாழ்தல் வேண்டும்,

பின் கணவன் கற்பித்தபடி வாழ்தல் வேண்டும். நச்சினார்க்கினியர் பொருளதிகார உரையில் இவ்வாறு விளக்கம் தருகிறார்.

"கற்பு நிலையென்று சொல்லவந்தால் இரு
கட்சிக்கும் அஃது பொதுவில் வைப்போம்"[25]

என்றார் பாரதியார். சங்க காலத்தில் கற்பு என்ற சொல் பல இடங்களில் பயிலப்பட்டுள்ளன. கற்பு என்பதற்கு விளக்கம் தரும் தொல்காப்பியர்,

"கற்பெனப்படுவது கரணமொடு புரணக்
கொளற்குரிமரபின் கிழவன் கிழத்தியைக்
கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே"[26]

என்று, திருமணஉறவில் பெண்ணைக் கொடுப்போர் கொடுக்கத் தலைவன் பெற்றுக் கொள்வதுக் கற்பாகும் என்பர். ஆண்பெண் திருமணஉறவு கற்பு என்பதால் இக்கற்பு இருவருக்கும் பொதுவானமை அறியப்படும். கற்பொழுக்கத்தை விளக்கிய சொல்லான கற்பு பின்னர், பெண்ணுக்குரிய ஒழுக்கத்தை மட்டும் குறிப்பதாக வழங்கலாயிற்று. பெண்மைப் பண்புகளைக் கூறவந்த தொல்காப்பியர்,

"கற்பும் காமமும் நற்பா லொழுக்கமும்
மெல்லியல் பொறையும் நிறையும் வல்லிதின்
விருந்து புறத்தலும் சுற்றம் ஓம்பலும்
பிறவுமன்ன கிழவோள் மாண்புகள்"[27]

என்று கூறும் போது கற்பை முதலில் குறிப்பிடுகிறார். குடும்ப உறவில் கணவனால் மனைவிக்கும் மனைவியால் கணவனுக்கும் பெருமை வாய்த்தல் வேண்டும். சங்க இலக்கியத்தில் பெண்ணொடு ஆணை இணைத்துப் பாடும் இடங்கள் உண்டு. மனைவியின் சிறப்பினால் கணவன் பெருமை பெற்றதை, ஆன்றோள் கணவ (பதிற். ஆறாம் 55-1) கொடுங்குழை கணவ (பதிற். ஆறாம் 14-15) என்று மனைவியுடன் சேர்த்து அழைக்கப்பட்டமை காட்டும். மனைவியின் கற்பு வலிமையால் கணவன் அம்பு குறிமாறாது பாய்கிறது. இதனை,

"கந்தன் கடிகமழும் கண்வாங் கிருஞ்சிலம்பின்
வாங்கமை மென்றோட் குறவர் மடமகளிர்

தாம்பிழையார் கேள்வர்த் தொழுதெழலாற் றம்மையருஞ்

தாம்பிழையார் தாந்தொடுத்த கோல்"

(கலி.39:15-19)

என்றடிகள் உணர்த்தும். இதனையே வள்ளுவர் ஏறுபோல் பீடு நடை[28] என்றார்.

சங்ககாலத்தில் கணவனுடைய கற்பின் சிறப்புக் குறிக்கப்பட்டு மனைவி உயர்வு பெற்றதாக குறிப்பிடப்படவில்லை. அன்றைய சமுதாயத்தில் ஆண் பரத்தைத் தொடர்புடையவனாக இருந்தமையால் கற்பு ஆணுக்கு வலியுறுத்தப்படவில்லை. கற்புப் பெண்மைப் பண்பாக மட்டும் பேணப்பட்டது. இப்பண்பைப் பெண் விரும்பி ஏற்றாள். இப்பண்புப் பெண்ணியத்திற்குப் பெருமை சேர்த்தது.

**உடன் கட்டை ஏறுதல் :**

கணவன் இறந்தவுடன் மனைவி தீயில் வீழ்ந்து உயிரை மாய்த்துக் கொள்வது பாலைநிலை. தொல்காப்பியர்,

நல்லோள் கணவனொடு நனியழல் புகீஇச்

சொல்லிடை இட்ட பாலை நிலையும்[29]

என்று காஞ்சித் திணையில் பாலை நிலை என்று குறிப்பிடுவர். இப்பாலைநிலை கணவனொடு மனைவி உடன் தீயில் வீழ்ந்து உயிர் விடுவதாகும். இச்செயல் தொல்காப்பிய காலத்தில் நிகழ்ந்ததைப் பாலைநிலை காட்டுகிறது. சங்கப் பாடலால் ஆய் அண்டிரன் இறந்த போது அவன் உரிமை மனைவியர் உடன் மாய்ந்ததை,

"கோடேந்தல் குறுந்தொடி மகளிரோடு

காலனென்னுங் கண்ணிலி யுய்ப்ப

மேலோருலக மெய்தி னனெனா

.........................

கள்ளியம் பறந்தலை ஒருசிறை அல்கி

ஒள்ளெரி நைப்ப உடம்பு மாய்ந்தது"

(புறநா.240:4-10)

என்று உயிர் கொடுத்துப் புகழ்கொண்ட அண்டிரன் மேலுலகம் சென்றான். சான்றோர்

அவன் உடம்பை ஈமத்தெடுத்த எரியில் இட்டனர்; அவன் உருவுடம்பு மாய்ந்தது; அதனோடு அவன் உரிமை மகளிரும் மாய்ந்தனர் என்பதை குட்டுவன் கீரனார் பாடலால் அறியமுடிகிறது.

ஒல்லையூரை ஆண்ட பாண்டிய மன்னன் பூதப் பாண்டியன் இறந்த போது அவன் மனைவி பெருங்கோப் பெண்டுத் தீபாயத் துணிந்தாள். அப்போது சான்றோர் தடுத்தும் பெருங்கோப் பெண்டு தீபாய்ந்ததைப் பேராலவாயர் பாட்டும் (புறநா.247) பெருங்கோப் பெண்டின் பாட்டும் (புறம்.246) உறுதி செய்கின்றன. பெருங்கோப் பெண்டைச் சான்றோர் தடுத்துள்ளனர். இதனை,

"பல்சான்றீரே பல்சான்றீரே
செல்கெனச் சொல்லா தொழிகென விலக்கும்
பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான்றீரே"

(புறம். 246:1-3)

என்று பெருங்கோபெண்டு தீபாயத்துணியும் என்னைத் தடுக்காதீர்கள் என்று சான்றோரைப்பார்த்து கூறுவதால் அறியமுடியும். உடன் கட்டை ஏறுதல் இன்றும் பல மாநிலங்களில் நடக்கின்றன. கணவன் இறந்து தீ மூட்டப்பட்ட சிதையில் மனைவி தீபுக மறுத்த போது வலுக்கட்டாயமாகத் தூக்கித் தீயில் போடும் நிலை உள்ளது. ஆனால், பெருங்கோப்பெண்டைத் தடுத்த நிலையில், அவள் விருப்பப்பட்டுச் சிதையில் விழுகின்றாள். இதற்குக் காரணம் அவள் பாடலில் குறிப்பிடும் கைம்மை நோன்பின் கொடுமையாகும். கைம்மை நோன்பினைக் கூறி 'உயவற்பெண்டிரே மல்லே மாதோ' (புறம்:246:10) என்கிறாள். எமக்கு பொய்கையும் தீயும் ஒன்றே என்று தீபுகுகின்றாள். இதனை,

"பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட்டீமம்
நுமக்கரிதாகுக தில்ல வெமக்கெம்
பெருந்தோட் கணவன் மாய்ந்தென வரும்பற
வள்ளித ழவிழ்ந்த தாமரை
நள்ளிரும் பொய்கையுந் தீயுமோரற்றே"

(புறம். 246:11-15)

என்றடிகள் சுட்டுகின்றன. சங்க காலத்தில் உடன்கட்டை ஏறும் வழக்கம் இருந்துள்ளது. இது பெண்ணுரிமைக்கு மாறானதாகும். இவ்வுடன் கட்டை ஏறுதலும், உடன்கட்டை ஏறாமல் உயிர் வாழ்ந்தால் நோற்கும் கைம்மை நோன்பும் சங்க காலத்தில் பெண்ணிற்குக் கொடுக்கப்பட்ட இரு தீப்பண்புகள் இதில் எதை ஏற்றாலும் சுடும். இதனைப் பெண் மறுக்கவில்லை. இதில் கைம்மை நோன்பைக் கொடியதாகக் கருதி பெருங்கோப்பெண்டு சான்றோர் தடுத்தும் தீபாயத்துணிந்தாள் அரச குலப் பெண்ணான அவள் கைம்மை நோன்பினை நோற்று வாழ விரும்பிலள். சமுதாயத்தில் இப்பழக்கம் வேரூன்றி இருந்ததை இது உணர்த்துகிறது. உடன் கட்டை ஏறுதல் அக்காலத்தில் இருந்த பெண்களால் மறுக்கப்படாத செயல் இது பெண்ணியக் கோட்பாட்டிற்குப் புறம் பானதாகும். பெண்கள் விரும்பி மாண்டனரேயன்றி வற்புறுத்தி எரியூட்டப்படவில்லை.

**கைம்மை நிலை :**

கணவன் மாண்டபின் மனைவி உடன்கட்டை ஏறாது உயிர்வாழும் போது கைம்மை நோன்பினை மேற்கொண்டு வாழும் நிலை. கணவன் இறந்த உடன் மனைவி இழை, வளை, தொடி களைந்து, கூந்தல் நீக்கி, பரற்பெய்பள்ளியில் பாய்யின்றுப் படுத்து, இன்னாத பொழுதில் பச்சைக் கீரை, புல்லரிசி, வெள்ளெட்சாந்து, பழஞ்சோறு இவற்றை உண்டு வாழ்வர். இவ்வாறு வாழ்ந்த பெண்களை ஆளில் பெண்டிர்[30], கழிகல மகளிர்[31], படிவ மகளிர்[32], உயவற் பெண்டிர்[33], பருத்திப் பெண்டிர்[34], தொடிகழி மகளிர்[35], கைம்மை[36] என்று சுட்டினர். இப்பெயர்கள் அனைத்தும் அவர்களின் உடல் மாறுபாட்டைச் சுட்டுவன. சங்க காலத்தில் கணவன் மாண்டபின் மனைவி வாழும் நிலையில் மாற்றம் ஏற்பட்டது போன்று, மனைவி இறந்தபின் கணவன் வாழும் நிலையில் மாற்றம் ஏற்பட்டதாக இல்லை. கணவனிறந்து பின் உயிர் வாழும் மனைவியின் கூந்தல் களையப்பட்டது. இதனை,

"முறை பொலியாக முருப்ப நூறி
மெய்ம் மறந்து பட்ட வரையாப்பூசல்
ஒண்ணுதல் மகளிர் கைம்மை கூர
குவையிருங் கூந்தல் கொய்தல் கண்டே"

(புறம் 25:10-14)

என்ற புல்லாடனார் பாடலும்,

"கூந்தல் கொய்து குறுந்தொடி நீக்க"

(புறம் 250:4)

என்ற தாயங்கண்ணியார் பாடலும் உணர்த்துகின்றன. இவை போன்று வளை நீக்கப்பட்டதும்[37], தொடிகழிதலும்[38], இழைகளைதலும்[39], பாயின்றித்துயில்தலும்[40], உணவுப் பொருளில் புல்லரிசி[41], பச்சைக் கீரை உண்பதும்[42] பழக்கத்தில் இருந்துள்ளன.

"கணவனின் உடலுடன் அவளின் முடியும்,
கைவளையலும் செல்ல வேண்டும்
என்பது பொதுவான கருத்தாக இருந்தது"[43]

என்பர் பார்வதி அதவேல்.

"சங்க காலத்தில் ......... கைம்மை மகளிர் வாழ்
வென்பது துன்பத்தையுடைய நோன்பாக இருந்தது
கணவனை இழந்த நிலையில் நல்ல உணவு வசதி
மறுக்கப்பட்டது. கைம்மை நிலை பிரச்சனையாகவே
இருந்தது. சமுதாயம் விதவையை ஆதரிப்பதை
விடுத்துக் கடுமையான நிலையில் வைத்தே பார்த்தது"[44]

என்ற அ.வி.சுப்பிரமணியன் கருத்து அரண் சேர்க்கும்.

சங்க காலத்தில் நாற்பதிற்கும் மேற்பட்ட பெண்பாற்புலவர்கள் வாழ்ந்திருந்தும் கைம்மைநிலையைத் தாயங்கண்ணியார், பெருங்கோப்பெண்டு ஆகிய இருவரே பாடியுள்ளனர். மன்னனின் செயலைக் கண்டித்துப் பேசும் ஔவையார் அதியன் இறப்பைப் பாடியவர். இவர் கைம்மையையோ உடன்கட்டை ஏறலையோ பாடவில்லை. சங்க கலத்தில் கல்வி, கலை அறிவு பெற்றிருந்த பெண்கள் இச்செயல்களுக்கு மறுப்புத் தெரிவிக்காமல் அவர் மன்பதை மரபு என்று அடங்கி இருந்துள்ளனர். பெருங்கோப்பெண்டு கைம்மை நிலையைக் கூறி 'உயவற் பெண்டிர் அல்லே யாம்', என்று கூறி உடன்கட்டை ஏறத் துணிவது உடன் கட்டை ஏறுவதை விடக் கைம்மை நோன்பு நோற்று வாழ்வது கொடியது என்றகருத்தைப் புலப்படுத்தும். பெருங்கோப்பெண்டின் கூற்றிற்கு,

"கைம்மைக் கொடுமைகளைச் சுட்டிக் காட்டும் (புறம் 246)

அவருடைய பெண் உணர்வு மதிக்கத்தக்கது. ஆனால் உயவற்

பெண்டிரேம் அல்லேம் எனும் பேச்சும் தீயைத் தாமரைப்

பொய்கையாக்கலும் ஆணுயர்வுச் சமுதாயத்தின் கற்புக்

கருத்தாக்கத்திற்கே அதிகம் துணை செய்கின்றன.

பெண்ணைக் கொண்டு பெண்ணை வீழ்த்தும் செயலாகிறது"[45].

என்று பக்தவத்சல பாரதியும், இரா.சம்பத்தும் கருத்துப் பகர்வர்.

அக்காலத்தில் பெண்கள் உடன்கட்டை ஏறமறுக்காததும், கைம்மை நோன்பு நோற்க மறுக்காது ஏற்று நடத்ததும் பெண்ணியத்திற்குப் புறம்பான செயலாகும்.

**பெண்கல்வி :**

சங்க காலத்தில் கல்வி அனைவரும் பயிலும் படி அமைந்தது. இக்கல்வி எவ்வாறு போதிக்கப்பட்ட என்றறிய போதிய சான்றில. இலக்கியத்தில் 'மன்றத்து' என்ற சொல் காணப்படுகிறது. 'மன்றத்து' என்ற சொல்லைக் கொண்டு கல்வி பயில்வதற்கு என ஒரு இடம்இருந்தது என்று கே.கே.பிள்ளை கருதுகிறார்[46].

சங்ககாலத்தில் கல்வி என்ற சொல் பல இடங்களில் இடம்பெற்றுள்ளன. கல்வி உயர்ந்தோரும், பொருளாதார நிலையில் தாழ்ந்தவர்களும் கற்கும்படி இருந்தது. கல்வி கற்க,

"உற்றுழி யுதவியும் உறுபொருள் கொடுத்தும்

பிற்றை நிலை முனியாது கற்றல் நன்றே"

(புறம் 183:1-2)

என்று கல்வியைக் கற்றுக் கொடுப்பவனுக்குப் பொருள் கொடுத்தோ, ஊழியம் செய்தேனும் கற்றுக் கொள்ள வேண்டும் என்று கூறுபவர் பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன். வேந்தனான இவன் அந்நாளில் கல்விக்குக் கொடுத்த சிறப்பு மகத்தானது.

"கீழ்ப்பாலொருவன் கற்பின்

மேற்பாலொருவனு மவன் கட்படுமே"

(புறம் 183:9-10)

என்று கற்றவனுக்கிருக்கும் சிறப்பைக் கூறுகின்றார்.

பாண்டியன் ஆண்கள் மட்டும் கல்விகற்க என்றோ பெண்கள் கற்க வேண்டாம் என்றோ கூறுவில்லை. பொதுநிலையில் கற்க என்றே வலியுறுத்துகிறார். இக்கல்வியைக் கற்றவன் சமுதாயத்தில் பெருமிதத்துடன் வாழ இயலும். தொல்காப்பியர் மெய்ப்பாட்டியலில் பெருமித உணர்ச்சியில் "கல்வி தறுகண்........" என்று கல்வியைக் கூறுவார். மெய்ப்பாடு இருபாலர்க்கும் ஒன்றென்பதால் பெருமிதம் தரும் கல்வியைப் பெண்களும் சங்ககாலத்தில் கற்றனர். இதனால் புலமைபெற்ற பெண்கள் நாற்பதிற்கும் மேற்பட்டோர் வாழ்ந்தனர். சங்கப் புலவரில் ஆண்கள் மிகுதியாகவும் (329), பெண்களின் எண்ணிக்கைக் குறைவாகவும் இருப்பதும் பெண்கள் கல்வி கற்கும் வாய்ப்புக் குறைவாக இருந்தமையைப் புலப்படுத்துகிறது. குறைவான எண்ணிக்கையில் பெண்பாற்புலவர் இருந்தாலும் பாடிய பாடல்கள் அனைத்தும் ஒரு தரம் உடையனவாக அமைந்துள்ளன. இதனை,

> "சங்க காலத்துப் புலவர்களின் இலக்கிய
> வன்மை மென்மைகளைப் பாட்டின் எண்ணிக்கையை
> வைத்து அளக்கலாகாது, அளக்கமுடியாது.
> நூறு பாடியோர் பாவின் வனப்பும் ஒன்று பாடியோர்
> பாவின் வனப்பும் சங்கத் தன்மையுடையனவாகவே உள"[47].

என்ற அறிஞர் வ.சுப. மாணிக்கனாரின் கருத்து உறுதிப்படுத்தும். சங்ககாலத்தில் பெண்கள் புலவர்களாகத் திகழ்ந்தவர் குறைவானவர்கள் எனினும் பெண்கள் சமுதாயத்தில் கல்வி கற்கும் உரிமை பெற்றிருந்ததைக் காட்டுகிறது. 'ஒரு நாட்டில் வீரர்களும் அரசியல் மேதைகளும் தத்துவ அறிஞர்களும் தோன்ற வேண்டுமானால் கல்வியறிவு பெற்ற பெண்கள் வேண்டும்'. சங்க காலத்தில் கல்வியறிவு பெண்கள் பெற்று வாழ்ந்ததால் பல கல்வியறிவு பெற்ற ஆண்களையும், வீரமிக்க ஆடவரையும் பெற்று வளர்த்தாள் பெண்.

சங்க காலத்தில் கல்வியறிவு பெண்கள் பெற்றிருந்ததால் இசை, வரலாற்று அரசியல், என்று பலவற்றிலும் பரந்துபட்ட அறிவு பெற்று வாழ்ந்தனர். சங்கப் பெண்புலவரில் ஒருவரான ஔவையார் பெண்பாற்புலவர்களில் அக்கால

வாழ்க்கையையறிய உதவும் கலங்கரை விளக்கம். இவர் பாடல்கள் உலகப் பெண்புலவர்கள் பாடலுடன் ஒப்பிட்டு ஆராயப்பட்டுள்ளன.

"ஔவைக்கு நிகரான ஒரு பெண்கவி உலகநாடு
களில் தோற்றியதில்லை என்பதற்கு அம்மூதாட்டி
யார் தொண்டைமானிடம் தூது வெற்றி நிகழ்ச்சி
ஒன்றே போதுமானதாகும்."[48]

என்பர் ம.பொ.சிவஞானம்.

ஔவையார் அகப்பாட்டும், புறப்பாட்டும் பாடியவர். அகப்பாடல்கள் ஐந்திணையிலும் இடம்பெற்றுள்ளன. நிலப்புனைவின் போது அவ்வவ் நிலங்களில் நிலைகளைப் புனைந்துள்ளார். இவரின் பாடல்களால் இவர் நெடுந் தொலைவு சென்றும் பலதிறத்தறிவும் பெற்றவர் என்பதை அறியமுடிகிறது. இவரைப் போன்று எண்ணிக்கைக் கூடுதலாக மற்ற பெண்பாற்புலவர்கள் பாடவில்லையாயினும் அவர்கள் பாடல்களும் பெண்கள் பெற்றிருந்து புலமைக்குச் சான்றானவையாகும்.

பெண்புலவர்களில் மலை நாட்டுப் பெண்கள் கல்வி கற்றறிந்ததற்குக் குறமகள் இளவெயினி, குறமகள் குறியெயினி போன்றோர் சான்றாகும். ஏறைக்கோன் என்ற மலைநாட்டுத் தலைவனை மலைவாழ் மங்கை யொருத்தி பாடுகிறாள்

"தமர் தந்தப்பின் அது நோன்றல்லும்
பிறர்கை யறவு தான் நாணுதலும்
படைப்பழி தாரா மைந்தினன் ஆகலும்
வேந்துடை அவையத்து ஓங்குபு நடத்தலும்
நம்மோர்க்குத் தகுவன அல்ல எம்மோன்
....... ........... ...........
பெருங்கல் நாடான் எம் ஏறைக்குத்தகுமே"

(புறம்.157)

என்று ஏறைக்கோனின் மறப்பண்பையும் அவன் நற்குணத்தையும் பாடுமளவிற்கு மலைவாழ் பெண்கள் கல்வியறிவு பெற்றிருந்ததற்கு இப்பாட்டு சிறந்த சான்றாகும்.

## இசையறிவு :

சங்க காலத்தில் ஆடலும், பாடலும் இசையுடன் ஒன்றியமைந்தமையாகும். கல்வியுடன் இசையும் கலந்திருந்தது. கல்வி வளர்ச்சியைக் காட்டும் இன்னொரு பகுதியே இசைவளர்ச்சி. இதற்குப் பாடினிவிறலியரின் வாழ்க்கை நல்ல சான்றாகும். அவர்கள் ஆடலும், பாடலும் சங்க விலக்கியம் முழுமையும் பரவிக்கிடக்கிறது. ஔவையார் கார் காலத்தின் வருகையைப் பாடும் போது,

"................ ........... ....... இடிக்கும்
கடுவிசை உருமின் கழறு குரல் அளைஇக்
காலொடு வந்த கமஞ்சூல் மாமழை
ஆரளி யிலையோ நீயே பேரிசை
இமயமும் துளக்கும் பண்பினை"

(குறுந்.158:1-5)

என்று இடியின் முழக்கத்தில் இசையைக் காண்கிறார். அஞ்சி அத்தை மகள் நாகையார் பாடலில் இல்லறம் நடத்தும் தலைவியின் இல்லத்திற்குச் சென்ற தோழி, அந்நாட்டில் இயற்கையாக நடக்கும் செயலில் இசையையும் ஆடலையும் புனைகிறார்.

"முடவுமுதிர் பலவின் குடம் மருள் பெரும்பழம்
பல்கிளைத் தலைவன் கல்லாக் கடுவன்
பாடுஇமிழ் அருவிப் பாறை மருங்கின்
ஆடுமயில் முன்னது ஆகக் கோடியர்
விழவு கொள் மூதூர் விறலி பின்றை
முழவன் போல அகப்படத் தழீஇ"

(அகநா. 352:1-6)

என்று அருவி ஒழுகும் மலையில் அண் குரங்கு, நன்கு பழுத்து விழுந்த பலாப்பழத்தைத் தன்னுடலுடன் கல்வி நிற்கின்றது. அதற்கு முன்பாக மயில் ஆடிக்கொண்டிருக்கிறது. இக்காட்சி இயல்பாக நிகழ்கிறது. இதை இசையறிவு பெற்ற அஞ்சியார், கூத்தர் முழுவினை இசைக்க, விறலியர் ஆடுவது போல அமைந்துள்ளது என்கிறார். இச்செய்தி விறலியர் இசைக்குத்தக ஆடினார் என்பதை அறியச்சான்றாகிறது. அஞ்சி அத்தை மகள் நாகையார் மேடை நாடகக் காட்சியைப்

பாடலில் புனைகிறார். தான் வாழும் வாழ்க்கை நிகழ்ச்சியைத் தான் பாடும் பாடலில் சொல்லோவியமாகத் தீட்டுகிறார்.

பொருநராற்றுப் படையில் முடத்தாமக்கண்ணியார் யாழின் அமைப்பினைப் பாடுகிறார். இருபத்தொரு அடிகளில் பாலையாழின் அமைப்பைப் புணைந்துள்ள வகை இவரின் இசையறிவிற்குச் சிறந்த உதாரணமாகும்.

"குளப்புவழி அன்ன கவடு படு பத்தல்
விளக்கு அழல் உருவின் விசிஉறு பச்சை,
எய்யா இளஞ்சூற் செய்யோள் அவ்வயிற்று
ஐது மயிர் ஒழுகிய தோற்றம் போலப்
பொல்லம் பொத்திய பொதியுறு போர்வை
அளைவாழ் அலவன் கண் கண்டன்ன
துளைவாய் தூர்ந்த துரப்பு அமை ஆணி
எண்நாள் திங்கள் வடிவிற்று ஆகி
அண்-நா இல்லா அமைவருவறுவாய்ப்
பாம்பு அணந்தன்ன ஓங்கு இரு மருப்பின்
மாயோள் முன்கை ஆய் தொடி கடுக்கும்
கண்கூடு இருக்கைத் திண்பிணித் திவவின்
ஆய் தினை யரிசி அவையல் அன்ன
வேய்வை போகிய விரல் உளர் நரம்பின்
........ ....... ....... .......
மாறுதலை பெயர்க்கும் மறுவு இன்பாலை"

(பொருந. 4-22)

என்று மான் குளம்பு அழுத்திய இடத்தை யொத்த, இரண்டருகும் தாழ்ந்து நடுவுயர்ந்த பத்தலினையும், விளக்கினது எரிகின்ற நிறத்தையுடைய விசித்துப் போர்த்தலுற்ற தோல், இரண்டு தலையும் கூட்டித் தைத்த மரத்தைப் பொதிதலுறும் போர்வையினையும், நண்டின் கண்ணையொத்த பத்தலிரண்டுஞ் சேர்ந்தற்குத் திறந்த துளைகளின் வாய் மறைதற்குக் காரணமாகிய முடுக்கு தலமைந்த ஆணியினையும், உவாவிற்கு எட்டாநாளில் திங்களின் வடிவை உடைத்தாய் உண்ணாக் இல்லாத

பொருந்துதல் வந்த வறிய வாயினையும், பாம்பு தலையெடுத்தாலொத்த ஓங்கின கரிய தண்டினையும், கரிய நிறத்தையுடையோளுடைய முன்கையில் அழகினையுடைய நேர்ந்த தொடியையொக்கும் வார்க்கட்டினையும், ஒன்றோடொன்று நெருங்கின இருப்பையுடைத்தாகிய திண்பிணிப் பிணையுடைய திவவு ....... அருளினது மாறாகிய மறத்தினை அவர்களிடத்து நின்று பெயர்க்கும் மருவுதல் இனிய பாலையாழை,

"வாரியும் வடித்தும் உந்தியும் உறழ்ந்தும்
சீருடை நன்மொழி நீரொடு சிதறி"

(பொருந. 23-24)

என்பதால் நரம்புகளைக் கூடத் தழுவியும், உருவியும், தெறித்தும், ஒன்றைவிட்டு ஒன்றைத் தெறித்தும் சீரையுடைத்தாகிய தேவபாணிகளை நீர்மையுடன் பரக்கப்பாடி என்று பாலையாழையும், அவ்யாழை இசைக்கும் முறையினையும் பாடியிருப்பது இசைக்கருவியையும், அதைக் கையாளும் திறமும் முடத்தாமக் கண்ணியார் பெற்றிருந்தமை பெறப்படும். பெண்புலவர் இசையறிவு பெற்றமைக்கு இச்சான்று ஒன்றே போதுமானதாகும்.

**தன்னம்பிக்கை :**

சங்க கால வாழ்க்கை வினை ஆடவர்க்குயிராகவும், மகளிர்க்கு ஆடவரை உயிராகவும் கொண்டது. இதனை,

"வினையே ஆடவர்க்குயிரே வாணுதல்
மனையுறை மகளிர்க் காடவ ருயிரே"

(குறுந்.135:1-2)

என்றுபாடினார். இச்சமுதாயத்தில் பெண்கள் ஆணைச்சார்ந்து வாழவேண்டியது அன்றைய சமுதாய அமைப்பு. அச்சமுதாயத்தில் பெண்கள் தன்னம்பிக்கைப் பெற்று வாழத் தலைப்பட்டதை ஔவையாரின் வாழ்க்கை காட்டுகிறது. இவர் பாடல்களில் அவரின் குடும்ப வாழ்க்கைப் பற்றியறிய இயலவில்லை. சிறந்த புலவர். புறம்பாடுவதிலும் குறிப்பாக அதியமானைப் பாடுவதில் பெருமை கொண்டவர்.

இவர் பாடல்களில் பல பாடல்கள் அதியமானின் வீரம், அவனியல்பு பாடவிரும்பியதே. சில பாட்டுக்களில் இவர் அவனிடம் பரிசில் வேண்டிச் செல்வதும், பரிசில் பெற்றதும், பரிசில் கொடுக்கக் காலம் நீட்டித்தபோது அவருக்கேயுரிய உள்ளத் துணிவுடன் 'காவினெங் கலனே சுருக்கினெங் கலப்பை' என்றும், 'எத்திசைக் செலினும் அத்திசைக் சோறே' என்றும்,

"உள்ளியது முடிக்கும் உரனுடை உள்ளத்து
வரிசைக்கு வருந்துமிப் பரிசில் வாழ்க்கை"

(புறம்.206:3-4)

என்று பாடுகிறார். ஔவையார் அதியமான் நெடுமானஞ்சியைப் பாடிய புலவர். அதியமானிடம் ஔவைக்கு பெருமதிப்பு இருந்தது போல மற்ற மன்னர்களிடம் இருக்காது என அதியன் கருதினால் அது அவன் தவறு. கற்றவனுக்குச் சென்ற இடமெல்லாம் சிறப்புண்டு அதுபோலக் கல்வியறிவு பெற்றுப் புலமைத்திறத்துடன் வாழும் ஔவைக்கு எங்குச்சென்றாலும் சிறப்பும், உணவும், மதிப்பும் கிடைக்கும் என்ற தன்னம்பிக்கை இருந்தது. அதனால் 'எத்திசைச் செலினும் அத்திசைச் சோறே' என்று பாடினார். இத்தன்னம்பிக்கை அந்நாளில் பெண்கள் பெற்றுவிளங்கியது பெண்களின் வாழ்க்கை முறையை அறியச் சான்றாகின்றன.

**அறிவாற்றல் :**

பெண்புலவர்கள் பாடல்களில் பாடுகின்ற பொருள் பற்றிய கூர்ந்த அறிவைப் பெண்கள் பெற்றிருந்தமையை அறிய ஔவையார் அதியமானைப் பாடிய பாடலில்,

"எண்தேர் செய்யும் தச்சன்
திங்கள் வலித்த காலன் னன்னே"

(புறம் 87:-3-4)

என்று, அதியனின் வலிமையைப் பாடவிழைந்த ஔவையார் ஒரு நாள் எட்டுத்தேரைச் செய்யும் தச்சன் ஒரு மாதங்கூடிக்கருதிச் செய்யப்பட்ட தொரு தேர்க்காலை ஒப்பான் என்கிறார். இது தச்சுத்தொழில் தொடர்பான நுட்பமான கருத்து. தேரில் இரண்டு பகுதிகள்; ஒரு பகுதி தேர்க்கால் (சக்கரம்) அச்சு ஆகியன; இன்னொரு பகுதி மேற்கூடு. தேர் என்னும் மேற்பகுதியை அழகுறவும் கலை வேலைப்பாடுடனும் செய்ய வேண்டும் அதற்கு நாள்கள் பல ஓடும். ஆனால்

தேர்க்காலில் வேலைப்பாடு குறைவு; தேரோட்டத்துக்குக்கால் வலிமையாக இருப்பதே அடிப்படை. கால் வலிமையின்றேல் தேர் அழிந்துவிடும். தேர்க்காலில் குடம் என்னும் உறுப்பு தலைமையானது இதனுள் நுழைக்கப்படும் அச்சே இரண்டு காலையும் இணைக்கும். தேர் உருண்டு ஓட அச்சு வேண்டும். பண்டு மரத்தால் அச்சு, இன்றும் பல ஊர்க்கோவில் தேர்களில் வேலா மரத்தால் ஆன அச்சைப் போட்டிருப்பர்; இப்போதுதான் இரும்பு அச்சு மாட்டப்படுகிறது. இந்த குடம் வெயிலிலும் மழையிலும் பணியிலும் பல நாள் கிடந்தும் கால நிலைக்கு ஏற்ப மாறாதிருக்குமாறும் கெட்டுப் போகாதிருக்குமாறும் செய்வர். சக்கரப் பகுதிகள் அனைத்தும் இவ்வாறுதான் செய்யப்படும். அதனால் சக்கரத்தைச் செய்ய நாள் மிகுதி. ஆனால் பல ஆண்டுகள் மழைக்கும் வெயிலுக்கும் கெடாதிருக்கும். இந்தத் தொழில் நுட்பத்தை ஔவையார் அறிந்திருந்ததால் "கீழ் மரத்தியாத்த சேம வச்சு" (5) என்று பாடினார். இப்பாட்டு பாட்டைப் பாடும் போது பாடுகின்ற பொருள் பற்றிய அறிவினை ஔவையார் பெற்றிருந்ததையும், அக்காலப் பெண்களின் அறிவாற்றலை யறியவும் உதவுவனவாகும்.

**தூதாற்றல் :**

அதியனைப் பாடியவர் ஔவையார். தொண்டை மானுக்கும் அதியனுக்கும் பகை மூண்டு போர் ஏற்படும் சூழலில் தொண்டைமானின் படைக்கலக் கொட்டிலைப்பார்த்து 'இவ்வே பீலியணிந்து மாலை சூட்டிக் (புறம் 95-1) என்று இவைதாம் பீலியணியப்பட்டு மாலை சூட்டப்பட்டு, உடலிடம் திரண்ட வலிய காம்பை அழகு படச் செய்யப்பட்டு நெய்யிடப்பட்டு காவலையுடைய அகன்ற கோயிலிடத்தன. அங்கோ, பகைவரைக் குத்துதலாற் கங்கும் நுனியும் முரிந்து கொல்லனதுப் பணிக்களரியாகிய குறிய கொட்டிலிடத்தன வாயின, எந்நாளும் செல்வமுண்டாயின் உணவு கொடுத்து இல்லையாயின் உள்ளதனைப் பலரோடு கூட உண்ணும் வறியோருடைய சுற்றத்திற்குத் தலைவனாகிய தலைமையையுடைய எம் வேந்தனுடைய கூரிய நுனியையுடைய வேல்' என்றார்.

"சங்ககால ஔவையார் தன்னுடைய வாணாளில் அறிவு, ஆளுமைத்திறன் இவற்றால் சங்ககால மங்கையரின்

மணிவிளக்காகத்திகழ்ந்தார். தற்காலப் பெண்ணியக் கோட்பாடுகள், ஒளவையின் வாழ்க்கைப் போக்காக அமைந்தமையின் அவர், மகளிர் குலத் தலைவியாக விளங்கின எனலாம்"[49] என்ற கருத்து ஒளவையாரின் வாழ்க்கைத் திறத்தைக் காட்டுவனவாகும்.

**பெண்புலவரின் பரிசில் வாழ்க்கை :**

ஆண்பாற் புலவர்கள் அரசனைப் பாடிப்பரிசில் பெற்றது போல பெண்புலவர்களும் மன்னர்களைப் பாடிப் பரிசில் பெற்றுள்ளனர். ஒளவையார் அதியமானைப் பாடிப் பரிசில் பெற்றதும், பேய்மகள் இளவெயினி சேரமானை பாலை பாடிய பெருங்கடுங்கோவைப் பாடிப் பரிசில்வேண்டியதும், மாறோக்கத்து நப்பசலையார் மலையமான் திருமுடிக்காரியிடம் பரிசில் வேண்டிப் பாடிய பாட்டுக்கள் புறநானூற்றில் காணப்படுகின்றன.

அதியமானிடம் ஒளவை பரிசில் வேண்டிச் சென்றபோது அதியன் சாதல் நீங்க நெல்லிக்கனியைப் பரிசாகத் தந்ததை,

"சிறியிலை நெல்லித் தீங்கனி குறியா
தாத னின்னகத் தடக்கிச்
சாதனீங்க வெமக் கீத்தனையே"

(புறம் 91:9-11)

என்று பாடினார்.

காக்கைப் பாடினியார் நச்செள்ளையார் பதிற்றுப்பத்தில் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைப்பாடி ஒன்பது காப்பென்னும், நூறாயிரம் பொற்காசும் பரிசாகப் பெற்றார். முடத்தாமக் கண்ணியார் பொருநராற்றுப்படையில் கரிகாலனைப் பாடி, அவன் விறலிக்குப் பொற்றாமரைப் பூவைச் சூட்டியதைப்பாடி அது போலத்தனக்கும் தருவான் என்ற குறிப்புடன் பாடுகிறார்.

பெண்பாற்புலவர் பரிசில் பெற்றதும், அரசர் பெண்பாற்புலவருக்குப்பரிசில் நல்கிச் சிறப்பித்ததும் ஒருநாட்டில் பெண்களுக்குக் கொடுத்த மதிப்பையும், உயர்வையும் காட்டுகிறது. இல்லறவாழ்க்கையில் ஈடுபட்ட பெண்கள் ஆணிற்குத் தலைவணங்கி வாழ்க்கை நடத்தினர். புறவாழ்க்கையில் புலவர்களாகத் திகழ்ந்த

பெண்கள் ஆண்புலவர்கள் பாடியது போன்று அகப்பாடலும், புறப்பாடலும் பாடி பரிசில் பெற்று வாழ்ந்துள்ளனர். அவர்கள் புறவாழ்வில் போற்றப்பட்டனர். ஆண்புலவருக்குச் சமமாக வாழ்ந்தனர். பெண்ணியம் போற்றப்பட்டது என்பதற்கு பெண்பாற்புலவரின் புறவாழ்க்கை சான்றாகும்.

**மகளிர் வீரம் :**

சங்க காலத்தில் பெண்கள் போர்க்களம் செல்லவில்லை. வீரப்பண்புடன் விளங்கினர். தொல்காப்பியர் காஞ்சித்திணையில் பெண்களைச் சுட்டுகிறார். இவ்விடங்களில் போரின் முடிவில் இறந்த வீரர்களைப் பெண்டிர் சென்று கண்டு அழுததாகவும் இறந்த வீரனுடன் உடன் இறந்த மகளிர் செயல்களையும் சுட்டுகிறார்.[50] போரின் போது பெண்களுக்கு விலக்களிக்கப்பட்டதை,

'ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடையீரும் பேணித்'

(புறம் 9:1-2)

என்று நெட்டிமையார் பாட்டு உணர்த்தும். மகளிர் போர்க்களம் சென்று போரிடவில்லை யாயினும் மறப் பண்புடன் வாழ்ந்தனர். இதற்கு மூதின் முல்லைத் துறை சான்றாகும். பெண்புலவர்களின் புறப்பாக்கள் பல வீரத்தாயின் பண்பினைச் சுட்டுவனவாக அமைகின்றன. உன்மகன் எங்கே என்று வினவியவனிடம் என்மகன் போர்க்களத்தில் இருப்பான் என்கிறாள் ஒரு தாய். இதனை,

"புலி சேர்ந்து போகிய கல்லளை போல
ஈன்ற வயிறோ இதுவே
தோன்றுவன் மாதோ போர்க்களத்தானே"

(புறம் 86:4-6)

என்ற காவற்பெண்டுபாடலில் தாயின் வயிற்றில் வீரமகனைச் சுமந்து பெற்றாள் என்பதைக் குறிப்பாக 'புலி தங்கியிருந்த குகை என்கிறார். ஒரு ஆண் வீரமிக்கவனாக உருவாவது கருவிலிருந்து வரவேண்டும். அதனால் மறப்பண்புள்ள தாய் மறப்பண்புள்ள ஆடவனைப் பெறுவாள். அத்தகையவள் பெற்ற மகன் போர்க்களத்திலே தோன்றுவான் என்கிறாள் தாய். அத்தகைய மறக்குடி மகளான

ஒரு தாய் போர்க்களம் சென்ற பலரும் போர் முடிந்து இல்லம் திரும்ப தன்மகன் வராததால் வருபவர்களிடம் மகனைப் பற்றி வினவுகிறாள். உன்மகன் போர்க்களத்தில் புற முதுகில் புண்பட்டு மாண்டான் என்று கூறக்கேட்டதும் அவ்வாறு அவன் இறந்திருந்தால் அவனுக்குப் பாலூட்டிய முலையை அறுத்திடுவேன் என்று களம் புகுந்து தன் மகன் மார்பிலே விழுப்புண்பட்டு இறந்ததைக் கண்டு பெற்ற பொழுதைவிட மகிழ்கிறாள். இதனை,

"நரம்பெழுந் துலறிய நிரம்பா மென்றோள்
முளரி மருங்கின் முதியோள் சிறுவன்
படையழிந்து மாறின னென்று பலர் கூற
மண்டமர்க் குடைந்தனனாயி னுண்டவென்
முலையறுத் திடுவென் யானெனச் சினைஇக்
கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்
செங்களந் துழவுவோள் சிதைந்து வேறாகிய
படுமகன் கிடக்கை காணூஉ
ஈன்ற ஞான்றினும் பெரிதுவந்தனளே"

(புறம்.278)

என்ற காக்கை பாடினியார் நச்செள்ளையாரின் பாடல் உணர்த்துகின்றது. தாய் தன் மகன் போர்க்களத்தில் புறமுதுகில் புண்பட்டிறந்திருந்தால் அவனுக்குப் பாலூட்டிய முலையறுத்திடுவேன் என்கிறாள். தாய் மகனைக் கருவிலே சுமந்து பெற்று பாலூட்டி வளர்க்கிறாள். மறக்குடிமகளான இவள் வீரஉணர்வை பாலூட்டும் போதே ஊட்டியதால் அவ்வாறு வளர்ந்த வீரன் போர்க்களத்தில் முதுகில் புண்பட்டு இறந்தாள் அவனைப் பெற்ற தாய்க்கு இழிவு என்பதால் அவனுக்குப் பாலூட்டிய முலையை அறுத்திடுவேன் என்கிறாள். இச்செயல் மகளிரின் மறப்பண்பைக் காட்டுவனவாகும்.

மற்றொரு மங்கை போர்க்களம் சென்று தந்தை, கணவன் இருவரையும் இழந்துவிட்ட நிலையில் போர்ப்பறை ஒலிக்கக் கேட்டு ஒரு மகனையும் போர்க்களத்திற்கு அனுப்பினாள். இதனை,

"இன்றும் செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி
வேல்கைக் கொடுத்து வெளிதுவித் துடீஇப்

பாறுமயிர்க் குடுமியெண்ணெய் நீவி
ஒருமக னல்ல தில்லோள்
செருமுக நோக்கிச் செல்கென விடுமே"

(புறம் 279:7-11)

என்ற ஒக்கூர் மாசாத்தியார் பாடலும் மறக்குடி மங்கையின் மறப்பண்பைச் சுட்டுவனவாக அமைகிறது.

அன்னிமிஞிலி என்பவள் தன் தந்தையின் கண்ணைக் கெடுத்தத் தவற்றிற்காகக் கோசர்களை விரைந்து செல்லும் தேரிணையுடைய திதியனது அழுந்தூர் என்னுமிடத்தில் போரிட்டுக் கொன்று மாறுபாட்டைத் தீர்த்துக்கொண்டாள்[51]. இதற்காக அவள் உண்ணவில்லை; தூய உடை உடுத்தவில்லை[52] தனது எண்ணம் ஈடேறும் வரைக்கும் நெஞ்சுரத்துடன் இருந்து வஞ்சம் தீர்த்துக் கொண்டது அந்நாளில் ஆண்களுக்குச் சமமான மறப்பண்புடன் பெண் விளங்கியதைக் காட்டுவனவாகும். மகளிரின் வீரப்பண்பு பெண்ணியத்தின் கோட்பாட்டிற்கு அடிப்படையாகும். பெண்ணென்றால் அச்சம், நாணம், பயிர்ப்பு என்ற குணம் இயல்பாகவே பெற்றவள் என்ற கொள்கைக்கு வேறானது அவளின் மறப்பண்பும், போராற்றலுமாகும். இச்செயல்கள் பெண்களின் உயர்வைக் காட்டுவனவாகும்.

***பெண் கொடுமைகள் :***

சங்க காலத்தில் பெண் அகவாழ்வில் கொடுமையைத் துய்க்கவும் செய்தாள். காதலித்து பெண்ணை ஆடவன் கைவிட்டுள்ளான். இக்குறிப்பு அகநானூற்றில் வெளிப்படுகிறது. இதனை,

"...... ...... ..... பெரும்பெயர்க் கள்ளூர்த்
திருநுதற் குறுமக ளணிநலம் வவ்விய
அறனிலாளன் அறியே னென்ற
திறனில் வெஞ்சூ ளறிகரி காடாஅய்
முறியார் பெருங்கிளை செறியப் பற்றி
நீறுதலைப் பெய்த ஞான்றை

வீறுசா லவையத்து ஆர்ப்பினும் பெரிதே"

(அகநா.256:15-21)

என்ற பாட்டில் பெரும் பெயரைப் பெற்ற கள்ளூரில் ஒருவன் காதலித்த பெண்ணைக் கைவிட்டான் ஓர் இளமகளின் நலத்தை நுகர்ந்து பின் அவளைக் கைவிட்டான் என்ற அவளது முறையீட்டினைக் கேட்டு அவனை உசாவிய சான்றோர் முன் யான் அவளை அறியேன் என்று பொய்ச்சூள் கூறினான். வெஞ்சூள் அறிகரி கடாஅய்ச் செறியப்பற்றி, அவன் தலையிலே நீர்பெய்து தண்டம் செய்தனர். இச்செய்தி அக்காலத்தில் பெண்ணைக் காதலித்துக் கைவிடப்பட்டதற்குச் சான்றாக அமைகின்றது.

நன்னன் நாட்டில் விளைந்த மாங்கனி யொன்றைத் தின்ற பெண்ணை நன்னன் கொன்றான். இதனால் பெண் கொலை புரிந்த நன்னன் என்றே குறிப்பிடப்பட்டான். நன்னனின் இச்செயலுக்காகக் கோசர் நன்னனையும் அவனுடைய நறுமாவினையும் அழித்தனர்.[53] காதல் வாழ்வில் பெண்ணைக் கைவிட்டதும், மாங்கனியைத் தின்றதற்காக பெண்ணைக் கொன்ற நன்னனின் செயலும் பெண்ணுரிமைக்கு மாறானதாகும். பெரும் பெயரைப் பெற்ற கள்ளூரில் பெண்ணை ஏமாற்றிய செயல் நடத்திருப்பது கொடுமையானதாகும். சங்ககாலத்தில் நடந்தகொடுமைகளுக்கு தண்டனை வழங்கப்பட்டது என்பது அக்காலச் சமுதாயக் கட்டமைப்பைக் காட்டுவதாக அமைகிறது. இருந்தும் பெண்ணியக் கோட்பாட்டிற்குப் புறம்பான செயல்களாக இவை அமைகின்றன.

## ஆய்வு முடிவு

பெண்ணியம் பெண்மை பற்றியது. பெண்ணியம் குறித்த பல அறிஞர்களின் கருத்தும் பெண் ஆணுக்கு நிகரானவள் என்பதாகும். இப்பெண்ணியம் சங்க காலத்தில் பல இடங்களில் போற்றப்பட்டும், சில இடங்களில் பெண்ணுரிமைக்கு மாறான செயல்களும் நடந்துள்ளன.

சங்க இலக்கியத்திற்கு இலக்கணமான தொல்காப்பியத்தில் தொல்காப்பியரின் புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் என்ற உணர்வுகள் ஆண், பெண் இருபாலருக்கும் பொதுவாக வைத்து எழுதப்பட்டவை. இது தொல்காப்பியர் ஆண்

பெண் இருவரையும் சமமாக மதித்ததைக்காட்டுவன.

தொல்காப்பியர் கூற்றுக்களை வகுக்கும் போது உலகம் போற்றும் தாய்மையை அவளும் கருதி நற்றாய் கூற்றை முதலில் வரைந்தார். இல்வாழ்க்கையில் இணையும் ஆணும் பெண்ணும் ஒத்த தன்மையுடையவராக இருக்க வேண்டும் என்று இலக்கணம் வரைந்தது அந்நாளில் பெண்ணுரிமை மதிக்கப்பட்டதற்குச் சான்றாகும்.

சங்க இலக்கியங்கள் மூலம் பெண் விருப்பத்துடன் திருமணம் நடந்ததும், அவ்வாறு வேற்றுவரைவு வரும் போது பெண் மறுத்ததும், பெண்ணுரிமையை பெண் பெற்றதைக் காட்டுவன. உடன் போக்கு மணம் நிகழ்ந்தது பெண்துணிவுடன் நடந்து கொண்டு வாழ்க்கைத் துணையைத் தேர்வு செய்யும் உரிமைபெற்றதைக் காட்டுகின்றன.

பெண்களுக்கு அச்சம், நாணம், மடன், பயிர்ப்பு போன்ற பண்புகள் வழங்கப்பட்டன. இப்பண்புகளால் பெண்ணுரிமை பாதிக்கப்படவில்லை. இப் பண்புகளைப் பெண் விரும்பி ஏற்றுக் கொண்டுள்ளாள்.

கற்பு என்பது மணஉறவு. இப்பண்பு பெண்களுக்கு ஒழுக்கம் என்ற செயலுடன் உருவாக்கப்பட்டது. கற்பு என்ற இப்பண்பைப் பெண் விரும்பி ஏற்றுக்கொண்டாள். இந்நற்பண்பால் பெண்ணிற்கு இழிவில்லை. இப்பண்பு இருவருக்கும் பொதுவானதாக இருந்தாலும், ஆணின் பரத்தமைப்பண்பு கருதிப் பெண்ணிற்கு உரியதாகியது.

கல்வி இருபாலருக்கும் பொதுவாக இருந்தது. பெண்கள் பலர் கல்வி கற்றுத் தேர்ந்ததற்கு பெண்புலவர்களின் எண்ணிக்கை சான்றாகின்றது. கல்வி பெறுவது மனித உரிமை. இவ்வுரிமை பெண்ணிற்கு சமுதாயம் வழங்கியது பெண்ணுரிமை நிலை நாட்டப்பட்டதற்குச் சான்றாகும்.

கல்வி கற்றதால் சங்க காலத்தில் தன்னம்பிக்கையும், அறிவாற்றலும், தூதுசெல்லும் வல்லமையும் பெண்பெற்றாள். அரசர்களும் ஆண்புலவரைமதித்துப் போற்றியது போல பெண்புலவரையும் மதித்துப் போற்றிப் பரிசில் வழங்கியுள்ளனர். இச்செயல் பெண்ணியக் கோட்பாட்டின் உயர்ந்த நிலையாகும்.

பெண் போர்க்களம் புகவில்லை. மறப் பண்புடன் திகழ்ந்து மற உணர்வுள்ள ஆடவரைப் பெற்றுவளர்த்தனர். உணர்வில் பெண் வீரமுடன் திகழ்ந்ததை அறியமுடிகிறது. இதனால் 'மூதின்முல்லை' என்று தனித்துறை வழங்கப்பட்டது.

சங்க காலத்தில் இவ்வாறு கல்வி, கலை, இல்வாழ்க்கையில் பெண்ணுரிமை போற்றிப் பாதுகாக்கப்பட்டாலும், காதல் வாழ்வில் பெண் ஏமாற்றப்பட்ட அகநானூற்றுச் செய்தியும், நன்னன் மாங்கனியை உண்டதற்காகப் பெண்ணைக் கொலை செய்த செய்தியும், பெண்ணியத்திற்குமாறானதாகும்.

சங்ககாலத்தில் கணவன் இறந்தஉடன் மனைவி உடன்கட்டை ஏறுவதும், கணவன் இறந்து பெண் உயிர்வாழ நேர்ந்தால் கைம்மை நோன்பு நோற்றுவாழும் நிலையும் பெண்ணுரிமைக்கு மாறானது. இச்செயல்களைப் பெண்கள் மறுக்காமல் ஏற்றனர். அக்காலத்தில் இச்செயல் சரியானது என்று கருதினாலும் எக்காலமும் இச்செயல்கள் பெண்ணுரிமைக்கு மாறானவையேயாம்.

சங்க காலப் பெண்ணியம் என்ற பார்வையில் பெண் ஆணுக்குச் சமமாக அனைத்துப் பண்புகளும் பெற்று வாழ்ந்தாள் என்றால் மிகையாகாது.

**சான்றெண் விளக்கம்**

1. பக்தவத்சல பாரதி இரா.சம்பத் - **பெண்ணிய ஆய்வுகள்**, ப.57

2. இரா.பிரேமா - **பெண்ணியம்**, ப.1

3. மேலது

4. மேலது, ப.2

5. இரா.பிரேமா - **பெண்ணியம்**, ப.2

6. இரா.பிரேமா - **பெண்ணிய அணுகுமுறைகள்**, ப.19

7. மேலது

8. மேலது

9. அன்னிதாமசு - **தமிழக மகளிரியல்**, பக்.121-122,

10. பக்தவத்சல பாரதி இரா.சம்பத் - **பெண்ணிய ஆய்வுகள்**, ப.57

11. மேலது

12. இரா.பிரேமா - **பெண்ணிய அணுகுமுறைகள்**, ப.131

13. தொல்.பொருள். அகத். சூத். 14

14. தொல.பொருள். அகத். சூத்.37

15. தொல்.பொருள். மெய்ப். சூத்.25

16. தொல்.களவு. சூத். 2

17. தொல்.களவு. சூத். 20

18. தொல். களவு. சூத். 16

19. தொல்.கற்பு. சூத். 2

20. தொல். களவு. சூத். 7

21. தொல். களவு. சூத்.8

22. தொல்.களவு. இளம். சூத். 7

23. தொல். களவு. சூத். 22

24. கே.பி.அழகம்மை - **சமூகநோக்கில் சங்க மகளிர்**, ப.181

25. மகாகவி பாரதியார், **பாரதியார் கவிதைகள்,** ப.207

26. தொல்.கற்பு. சூத். 1

27. தொல்.கற். சூத். 11

28. திருவள்ளுவர் - **திருக்குறள்**. அதி.6, குறள். 9

29 தொல்.புறத். சூத். 24

30. "ஆளில் பெண்டிர் தாளின் செய்த
துணங்கு நுண் பனுவல் போல" (நற். 353 1-2)

31. "தொன்று தாம் உடுத்த அம்பகைத் தெரியற்
சிறுவெள் ளாம்பல் அல்லி யுண்ணுங்
கழிகல மகளிர் போல" (புறம் 250 12-14)

32. "படிவ மகளிர் கொடிகொய் தழித்த
பொம்மலடும்பின்" (புறம் 272 2-3)

33. "வேளை வெந்தை வல்சி யாகப்
பரற் பெய்பள்ளி பாயின்றி வதியும்
உயவற் பெண்டிரே மல்லேம் மாதோ" (புறம் 246 8-10)

34. "பருத்திப் பெண்டின் பனுவல் அன்ன" (புறம் 125 -1)

35. "காடு முன் னினனே கட்கா முறுநன்
தொடி கழி மகளிரிற் றொல்கவின் வாடிப்" (புறம் 238 5-6)

36. "வென்வேல் விடலையின்மையிற் புலம்பிக்
கொய்ம் மழித் தலையொடு கைம்மையுறக் கலங்கிய " (புறம் 261, 16-18)

37. புறம் 237 9-14

38. புறம். 250 4-9, 238 6-7

39. புறம் 224 10-11

40. புறம் 246 10-11

41. புறம் 280 12-14

42. புறம் 246 8

43. Parvatheeathavale, Hindu widow can Autobio biography, P.15
"It was the common idea that along with the husband's corpse should go the hair and bracelets of his widow"

44. A.V. Subramanian, Sips from the sangam Cup. P.168.

"The society in the sangam age which had legislated for a pride of place to the married woman had however made the lot of widow ex tremely difficult. She was denied good food and other amenities. she was expected to practive severe austerties.... as a widow she was re garded as a misfit and a problem for the society to solve, and society took out its embarrasment rather severely on the widow.

45. பக்தவத்சலபாரதி இரா.சம்பத் - **பெண்ணிய ஆய்வுகள்**, ப.81

46. K.K. Pillay, A social History of the Tamils P.397 University of Madras-1975. We hear of some pupils having lived in public rest houses like man rams which seems to have served also as schools.

47. வ.சுப.மாணிக்கம் - **தமிழ்க்காதல்**, ப.329

48. மா.பொ.சிவஞானம் - **ஔவை-யார்?** , ப.54

49. அன்னிதாமக - **தமிழக மகளிரியல்**, ப.126

50. தொல்.புறத்.சூத். 24

51. அகம். 196 8-12

52. அகம். 262 1-13

53. குறுந். 73, 94

## எட்டாமியல்

## நிறைவுரை

- சங்கப் பாக்கள் தொகுப்பு முயற்சியில் பெண்பாற்புலவர்கள் ஒருவரும் இடம் பெறவில்லை. சங்க நூல்கள் தொகுப்பில் புரவலரும், புலவரும் ஆணாகவே இருந்துள்ளனர்.

- சங்க நூல்களில் பெண்பாற்புலவர்கள் பாடல் எந்நூலிலும் முதலிடத்தில் இடம் பெறவில்லை.

- தொகுப்பில் புலமை ஒன்றுமட்டும் போற்றப்பட்டது. பாடியோர் ஆண்பாற்புலவரா? பெண்பாற்புலவரா? என்ற பாகுபாடு காட்டப்படவில்லை.

- பெண்பாற்புலவர்கள் குறைந்த அடி எண்ணிக்கையில் பாட விரும்பினர். இதற்கு அகப்பாடல் சான்று குறுந்தொகையில் எழுபத்தொரு பாடல் இவர்கள் பாடியமை காட்டும். மற்ற அகநூல்களிலும் புறநூல்களிலும் இவர் பாக்கள் குறைவாகவே உள்ளன.

- புறப்பாட்டுகளில் அடி எண்ணிக்கைக் கூடுதலாக அமையப் பாடினர். இதற்குக் காக்கைபாடினியார் நச்செள்ளையார் பதிற்றுப்பத்தில் ஆறாம்பத்தைப் பாடியிருப்பதும், பத்துப்பாட்டில் பொருநராற்றுப்படையை (248அடி) முடத்தாமக்கண்ணியார் பாடியிருப்பதும் சான்றாகும்.

- குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு போன்ற அகநூல்கள் பெண்பாற்புலவர்களின் பாக்கள் ஆங்காங்கே இடம் பெற்றுள்ளன. ஔவையார் அதிக எண்ணிக்கையில் பாக்கள் பாடியவர். இவர் பாடல் குறுந்தொகை (15-ஆம் பாட்டு) நூலில் பெண்பாற்புலவரின் பாக்களில் முதலாவதாக இவர் பாட்டுக் கோக்கப்பட்டுள்ளது.

- சங்க நூல்கள் தொகுப்பில் ஒருபாடல் பாடியோர் பல பாடல்கள் பாடியோர் என்று சிறப்பு வழங்கப்படவில்லை. ஒவ்வொரு பாட்டும்

புலமைச் செறிவுடையதால் பாடலின் கருத்திற்குச் சிறப்பு கொடுக்கப்பட்டது. இதனால் ஒருபாடல் பாடிய புலவரின் பாடலுக்குப்பின் பலபாடல் பாடிய புலவரின் பாடல் தொகுப்பில் இடம்பெறக் காரணமாகிறது.

- புறநானூற்றுத் தொகுப்புத் தொடக்கத்தில் சேரன்-பாண்டியன்-சோழன் என்ற வேந்தர் முறையில் தொகுக்கப்பட்டுள்ளது. இந்நூலில் பேய்மகள் இளவெயினியார் பாடல் பதினொராம் பாடலாகிஇடம் பெற்றது. ஒரு பாடல் பாடிய பேய்மகள் இளவெயினியார் பாடல் சேரன் பாலைபாடிய பெருங்கடுங்கோவைப் பாடியதால் இவ்விடத்தில் தொகுக்கக் காரணமாகியது. புறநானூற்றில் ஒவ்வொரு பாடலும் பாடப்பட்டோர் யார், பாடல் கருத்து என்ன என்று ஆராய்ந்து தொகுக்கப்பட்டது. பாடியோர் யார் என்று பார்க்கப்படவில்லை.

- ஔவையார் பாடல் புறநானூற்றில் 87அம் பாடலாகப் பின்னுக்குத் தொகுக்கப்பட்டது. இதற்குக் குறுநிலமன்னர்களின் பாக்கள் பின்னால் தொகுக்கப்பட்டது காரணமாகும்.

- புறநானூற்றில் ஔவையார் பாடிய பல பாடல்கள் ஒருங்கு தொகுக்கப்பட்டுள்ளன. இது ஔவையாருக்குக்கிருந்த மதிப்பினைப் புலப்படுத்துவதாகும்.(87-104) பதினெட்டுப்பாட்டுக்கள் ஒருங்கு தொகுக்கப்பட அப்பாடல் அதியமானைப் பாடிய கருத்து ஒப்புமைக்கருதியும் தொகுக்கப்பட்டதாகும்.

- புறநானூற்றில் கருத்தொற்றுமை கருதிப்பாக்கள் ஒருங்கு தொகுக்கப்பட்டன. இக்கருத்து அமைந்த பாட்டுக்கள் தொகுக்கப்படும் போது பாடியவர் ஆணா? பெண்ணா? என்று பார்க்கப்படவில்லை. இதனால் பெண்பாற்புலவர் பாக்களுக்கிடையில் ஆண்பாற்புலவர் பாக்களும், ஆண்பாற்புலவர் பாக்களுக்கிடையில் பெண்பாற்புலவர் பாக்களும் சில இடங்களில் ஆண்பாற்புலவர் பாக்களைத் தொடர்ந்தும் தொகுக்கக்காரணமாகின.

- சங்கப் பாக்கள் தொகுப்பில் ஆண், பெண்பாற்புலவர்கள் என்ற பால் பாகுபாடோ, பாக்கள் எண்ணிக்கை மிகுதியாகப் பாடியோர் என்ற எப்பாகுபாடோடு பார்க்கப்படவில்லை.

- பெண்பாற்புலவர்கள் ஆண்பாற்புலவர்கள் எண்ணிக்கையைவிடக் குறைவாகவே பாடியுள்ளனர். குறைவான எண்ணிக்கையில் பாடினாலும் ஆண்பாற்புலவர்கள் பாடிய பாடு பொருள்களில் பெண்களும் பாடியுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

- சேர நாட்டில் பெண்பாற்புலவர்கள் மதிக்கப்பட்டனர். இதற்கு காக்கைப் பாடினியார் நச்செள்ளையார் சேர மன்னன் ஆடு கோட்பாட்டுச் சேரலாதனைப் பாடிய பாடல் ஆறாம் பத்தாகத் தொகுக்கப்பட்டிருப்பதும், இப்புலவருக்குப் பரிசில் வழங்கி பெருமைப்படுத்தியதும் சான்றாகும். இந்நாட்டில் மற்ற பெண்பாற்புலவரும் உள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

- சோழ நாட்டிலும் பெண்ணிற்கு உயர்வு கொடுக்கப்பட்டது. இதற்கு முடத்தாமக்கண்ணியார் பாடிய பொருநராற்றுப்படை, திருமுருகாற்றுப்படையை அடுத்து இடம் பெற்றிருப்பது சான்றாகும்.

- சங்கப் பாக்கள் தொகுப்பில் புலமைக்கு மதிப்புக் கொடுத்துப் பாக்கள் தொகுக்கப்பட்டன. பாடினோர் ஆணா? பெண்ணா? என்று குறிப்பிடப்படவில்லை. இதனால் பெண்பாற்புலவர்களைக் கணக்கிடுவதில் வேறுபாடு எழுந்துள்ளன.

- பெண்பாற்புலவர்களில் ஆதிமந்தியார், வெள்ளி வீதியார், ஔவையார் மூவருக்கும் மற்ற பெண்பாற்புலவர்களின் வரலாற்றைவிடச் சற்று கூடுதலாகக் கிடைத்துள்ளன. மற்ற பெண்பாற்புலவர்களைப் பற்றியறிய அவர் பாடிய பாடல் மட்டுமே உள்ளதால் விரிவான வரலாற்றை அறிய முடியாமல் உள்ளது.

- பெண்பாற்புலவர்களின் புலமைச்சிறப்பை மற்ற புலவர்கள் புகழ்ந்து பாடினாரில்லை. ஆண்பாற்புலவரில் கபிலர், பரணர் போன்றோரைப்

புகழ்ந்து பாடியுள்ளனர். ஆனால் பெண்பாற்புலவரில் ஆதிமந்தியார் கணவனைத்தேடி அலைந்ததை வெள்ளிவீதியார், பரணர் போன்றோர் குறிப்பிட்டுள்ளனர். வெள்ளிவீதியார் காதலனைத்தேடி அலைந்ததை ஔவையார் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு காதல் வாழ்க்கையில் ஏற்பட்ட சோகம் குறிப்பிடப்பட்டதன்றி அவர்களின் புலமையைப் போற்றியதாக இல்லை.

- எட்டுத்தொகையிலும் பத்துப்பாட்டிலும் பெண்பாற்புலவர்களின் பாக்கள் மிகக் குறைவு. இவர்களில் ஒருபாடல் பாடியோரும், இருபாடல் பாடியோரும் மிகுதி. இவர்களில் ஔவையார் மிகுதியாகப் பாடியவர். இப்பாக்களும் ஆண்பாற்புலவர்கள் பாடிய எண்ணிக்கைக்குக் குறைவானதாகும். (உதாரணமாக கபிலர், ஓரம்போகியார், பரணர் போன்றோர்)

- பெண்பாற்புலவரின் வரலாற்றை நோக்குழி எந்தப்புலவரின் குடும்ப வரலாறும் தெளிவாகத் தெரியவில்லை.

- ஆதிமந்தியாரின் காதலன் ஆட்டனத்தி என்பதும், ஆதிமந்தியார் மன்னர்குலத் தொடர்புடையவள் என்பதும் பெறப்படுகிறது.

- நக்கண்ணையார் கோப்பெருநற்கிள்ளி மீது கொண்டகாதல் அறியப்படுகிறது.

- புலவர்களின் பெயர்கள் ஆணா? பெண்ணா? என்று சுட்டுமாறு இல்லை. இருபாற்பெயர்களிலும் மரியாதைக்குரிய 'ஆர்' விகுதி வருகின்றது.

- பெண்பாற்புலவர்கள் ஓரினத்தைச் சேர்ந்தவருமல்லர், ஒரு காலத்தில் வாழ்ந்தவருமல்லர். பெண்பாற்புலவர்கள் என்ற நோக்கில் ஒருங்கு தொகுக்கப்பட்டுள்ளனர்.

- பெண்பாற்புலவர்களின் நாடு தெற்றென அறிய முடியவில்லை.

- ஒளவையார் அதியமானை மிகுதியாகப் பாடினார். இதனால் ஒளவையார் நாடும் வெண்ணிக் குயத்தியார், ஆதிமந்தியாரின் நாடும் அறியமுடிகிறது. மற்ற புலவர்களின் நாடு பாடல் கொண்டுப் பெறப்பட்டுள்ளது.

- பெண்பாற்புலவர்களை ஆதரித்த வேந்தர், மன்னர்கள் குறைவு. ஒளவையார் அதியமானால் ஆதரிக்கப்பெற்றவர். காக்கைப்பாடினியார் நச்செள்ளையார் சேரமன்னன் ஆடு கோட்பாட்டுச் சேரலாதனால் ஆதரிக்கப்பட்டவர். ஆதிமந்தி மன்னன் மகள். நக்கண்ணையார் மன்னர் குலத்தவனைக் காதலித்தவள். இவ்வாறு பெண்பாற்புலவர்களை ஆதரித்த புரவலர்கள் குறைவு.

- பெண்பாற்புலவர்கள் பாக்களில் அகப்பாக்கள் மிகுதி. புறப்பாக்கள் குறைவானவை. பெண்பாற்புலவர்கள் நாற்பத்தைவரில் முப்பத்தொரு பெண்பாற்புலவர்கள் அகப்பாடல் பாடியுள்ளனர். இது அகப்பாக்கள் பாட பெண்பாற்புலவர்கள் விரும்பியதைக் காட்டுகின்றது.

- அகப்பாடல்களில் கற்புப்பாக்கள் மிகுதி. களவுப்பாடல் குறைவு. இதுபெண்கள் கற்பு வாழ்க்கையை விரும்பியதைக் காட்டுகின்றது.

- அகப்பாக்களில் பெண் கூற்றுக்கள் மிகுதியாக உள்ளன. இது பெண்கூற்றுக்களைப் பெண்கள் பாடவிரும்பியதைக் காட்டுகின்றது.

  பெண்கள் களவு வாழ்க்கைவிடக் கற்பு வாழ்க்கையை விரும்பினர். ஆண்கள், களவு வாழ்க்கையை நீடிக்க விரும்பினர்.

- உரிப்பொருளான புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் இவற்றில் பெண்கள் பிரிவுப் பொருளில் அதிகம் பாடியுள்ளனர். இது பெண்கள் இன்பியலைவிடத் துன்பியலைப் பாடவிரும்பியதைக் காட்டுவதாக அமைகிறது.

- நெய்தல் திணைப் பாக்கள் அனைத்தும் பெண் கூற்றுக்கள். இதற்கு நெய்தல் நிலத்தில் தலைவன் கடலில் மீன் பிடிக்கச் செல்ல,

அவன்வரும்வரைக் காத்திருந்து நொந்து இரங்கும் தலைவியின் நிலைகண்ட பெண்பாற்புலவர்கள் இத்திணையில் பெண் கூற்றுக்களில் பாட விழைந்தனர்.

- அகப்பாடல்களில் முக்கியஇடம் வகிக்கும் திணை அமைப்பில் பெண்பாற்புலவர்கள் ஐந்திணை அறிவும் பெற்றிருந்தனர். இதற்கு ஐந்திணையிலும் பாக்கள் பாடியிருப்பது சான்றாகும்.

- பாலைத்திணையைப் பாடினால் சுரத்துவெம்மை, அந்நிலவாழ் உயிரினங்கள் போன்றவையும், நெய்தல் திணையில் பாடினால் நெய்தற்கழி, கடல்வாழ் சுறா, மீன், நண்டு, கடலருகில் உள்ள தாழை முதலிய கருப்பொருள்களைச் சுட்டி, அந்நிலத்தலைவனைத் துறைவன், சேர்ப்பன் என்று குறிப்பிடுவர். குறிஞ்சித்திணை எனில் இரவுக்குறியையும் குறிஞ்சி நிலப்புனைவும், மருதமெனில் பரத்தைமை உறவு, தலைவி உடல் என்பனவும், மருதநில வயல் சார்ந்த பகுதிகள் என்று அவ்வவ் நிலப்புனைவில் பாடியுள்ளனர். இப்பாடல்கள்ால் பெண்பாற்புலவர் அவ்வவ்நிலம் பற்றிய அறிவைப் பெற்றிருந்தமையைக் காட்டுகின்றது.

- ஆண்கூற்றுக்களைப் பெண்பாற்புலவர்கள் பாட வல்லவர்கள். இதில் தலைவன் களவு வாழ்க்கையை விரும்புவதையும், மடல் ஏறுதலையும், பாறுதமைஉறவு பற்றியும், வினைவயிற்பிரிந்து வரும்போது பாகனிடம் விரைந்து தேரைச் செலுத்த வேண்டுவதாகப் பாடியுள்ளனர். இது ஆணின் மன உணர்வுகளைப் பெண் அறிந்து பாடலில் பாடு பொருளாக்கியதைக் காட்டுகின்றது.

- அகப்பாக்களில் ஒரே திணையில் பலபாக்கள் பாடவிரும்பிலர். இதற்கு ஐங்குறுநூற்றில் பெண்பாற்புலவர்கள் பாடமை சான்றாகின்றது.

- நிலப்புனைவைப் பாடலின் அடி எண்ணிக்கைக்குத்தக வெளிப்படுத்தியுள்ளனர். குறுந்தொகையில் அடி எண்ணிக்கைக் குறைவினால் பாடல்களில் உரிப்பொருள் சிறந்து விளங்குகிறது.

- நிலப்புனைவு குறைவாக உள்ளது. நற்றிணை, அகநானூறு அடி எண்ணிக்கை மிகுதியானவை. அதனால் முதல், கருப்பொருள் புனைவு அதிகமாக உள்ளது.

- அகப்பாக்கள் முழுமைக்கும் இழையோடும் செய்தி தலைவனுடன் தலைவி இணைந்திருக்க விரும்புவது. இவ்வெண்ணம் பலமுறைகளில் பெண்பாற்புலவர்களால் பாடப்பட்டுள்ளன.

- அக வாழ்க்கையில் பெரும்பங்கு பெண்ணிற்கு உண்டு. புறவாழ்க்கையிலும் சங்க காலத்தில் பெண்கள் ஆணுக்குச் சமமாக வாழ்ந்ததைப் புறப்பாட்டுக்கள் காட்டுகின்றன.

- புறநானூற்றில் அறுபத்தைந்துபாக்கள் பெண்பாற்புலவர்கள் பாடியன. இவ்வெண்ணிக்கை ஆண்பாற்புலவர்களின் பாடல் எண்ணிக்கைக் குறைவு எனினும், பெண்பாற்புலவர்கள் அந்நாளில் புறவாழ்வில் பெற்றிருந்த மதிப்பைக் காட்டுவதாக அமைகிறது.

- புறநானூற்றில் பாடாண்திணைப்பாக்கள் பெண்பாற்புலவர்கள் மற்ற திணைப் பாக்களைவிட அதிகம் பாடியுள்ளனர். இதில் இயன்மொழித் துறைப் பாக்கள் மிகுதியானவை. வேந்தர், மன்னர், வீரனின் வீரம், கொடை, வெற்றி இவற்றைப் பெண்பாற்புலவர்கள் பாடியுள்ளனர். இது பெண்பாற்புலவர்கள் பரிசில் பெறும் நோக்கமின்றிப் பாட விரும்பியதைக் காட்டுகிறது.

- அந்நாளில் புரவலர்கள் பெண்பாற்புலவர்கள் மதித்துப் போற்றினர். இதற்குப் புரவலர்கள் இவர்களை நாடி வந்த போது உணவு, ஆடை, கொடுத்துப் பரிசிலாக யானை, பொன் இவை வழங்கியமை சான்றாகும்.

- ஔவையாரை அதியமான் மதித்துப் போற்றியதைப் புறநானூற்றுப் பாடல் உணர்த்துகின்றது.

- ஔவையார் சேர, சோழ, பாண்டிய மன்னர்களாலும் மதிக்கப்பட்டவர். இதற்கு மூன்று நாட்டுவேந்தர்களும் ஒருங்கிருந்த காட்சியைக் கண்டு பாடியது சான்றாகும்.

- புறப்பாடல்கள் பெண்பாற்புலவர்கள் புறவாழ்வில் சிறந்தோங்கியிருந்ததைக் காட்டுகின்றன. ஔவையார் அதியமானால் புரக்கப் பெற்றவர். அவன் பரிசில் தரக்காலதாமதமான போது எத்திசைச்செலினும் அத்திசைச்சோறே என்று கூறியது பெண்பாற்புலவர்கள் அந்நாளில் பெற்றிருந்த சமுதாய அங்கீகாரத்தைக் காட்டுகிறது.

- பெண்பாற்புலவர்கள் மெய்யியலாகப் பாடினர். ஔவைக்கு அதியமான் நெல்லிக்கனியை வழங்கியபோது 'நீல மணிமிடற்று ஒருவன் போல மன்னுக பெரும நீயே' என்று வாழ்த்தி, பரிசில் கொடுக்கக் காலதாமதமானபோது எத்திசைச் செலினும் 'அத்திசை சோறே' என்று குறிப்பிட்டது ஆகியன நடந்ததை நடந்தவாறு மனம் எண்ணியபடி மறைவின்றிப் பாடியதைக் காட்டுகின்றன. மன்னனைப்பாடுகிறோம் என்பதைவிட உண்மையைப் பாடும் துணிவு பெண்மைக்கிருந்தது பாராட்டத்தக்கதாகும்.

- பெண்பாற்புலவர்கள் ஆற்றுப்படுத்தினர். இதற்கு ஔவையார் பாடிய புறநானூற்றுப் பாடலும் (புறம்.103), காக்கைப்பாடினியார் நச்செள்ளையார் பாடிய விறலியையாற்றுப்படுத்தலும் (பதிற்றுப்பத்து, ஆறாம்பத்து இருபாட்டு) முடத்தாமக்கண்ணியார் பொருநராற்றுப்படையில் பொருநன்விறலியை ஆற்றுப்படுத்துவதும் பெண்கள் தாம் பெற்ற இன்பம் மற்றவரும் பெறக்கருதினர் என்பதற்குச் சான்றாகும்.

- பெண்பாற்புலவர்கள் புரவலனின் வெற்றியைப் பாடினர். வாகைத்திணைப் பாக்களில் கரிகாலனின் வெற்றி (வெண்ணிக்குயத்தியார் புறம்.66), சோழன் கிள்ளிவளவனின் வெற்றி (மாறோக்கத்து நப்பசலையார் புறம்.37), அதியமான் திருக்கோவலூரை அழித்த செய்தி (ஔவையார்) போன்றவை அறியப்படுகின்றன.

- பெண்பாற்புலவர்கள் வென்ற மன்னனை மட்டும் பாடினர். பகைத்த மன்னனைக் குறிப்பிடவில்லை. இதற்குப் பாட்டுடைத் தலைவனைப் பாடவிழைந்ததே காரணமாகும்.
- ஆணின் வீரத்தைப் பெண்கள் பாடியதுபோலப் பெண்களின் வீரத்தையும் பாடவிரும்பினர். இதற்கு மூதின்முல்லைத் துறைப்பாக்கள் சான்றாகின்றன.
- வீரக்குடியின் பெருமையைப் பெண்கள் பாடவிரும்பினர். இதற்கு ஏறாண்முல்லைத் துறைப்பாட்டு சான்றாகும். இத்துறைப்பாக்கள் பெண் மறக்குடியின் வீரத்தைக் கூறுவதாக அமைவது.
- பெண்பாற்புலவர்களின் தும்பைத் திணைப் பாடல்களில் தானை மறத்துறையில் ஔவையார் பாடிய பாடல்கள் போரைத் தடுப்பதாக அமைந்துள்ளன. இதனால் போரைப் பெண் விரும்பவில்லை என்பதும் பெறப்படுகிறது.
- புரவலருக்கும், பெண்பாற்புலவர்களுக்கும் நல்லுறவு இருந்தது. இதனால் புரவலர் இறந்த போது கையறுநிலைப் பாடல்களைப் பெண்பாற்புலவர்கள் பாடினர்.
- அரசகுலப் பெண்கள் சோக நிலையில் பாக்கள் பாடினர். இதற்குப் பாரிமகளிர் பாரிஇறந்தபோது பாடியதும், பெருங்கோப்பெண்டு பூதபாண்டியன் இறந்தபோது பாடியதும் சான்றாகும்.
- புறநானூற்றுப் பாட்டுக்களால் கைம்மை நோன்பு, உடன்கட்டை ஏறுதல் போன்ற செய்திகள் பெறப்படுகின்றன.
- புறப்பாடல்களில் ஒரு பாடல் இருதுறைக்குப் பொருந்துவனவாக அமைகின்றன. இதற்கு (புறம்.93), புறப்பாட்டு உண்மைச் சம்பவங்களை நடந்ததை நடந்தவாறு அப்படியே பாடியமை காரணமாகின்றது.
- பெண்பாற்புலவர்கள் பாடவிரும்பிய யாப்பு நேரிசையாசிரியமாகும்.

இதற்கு அகப்பாடலிலும், புறப்பாடலிலும் ஓரிரு பாடல் தவிர எஞ்சிய பாடல்கள். நேரிசை யாசிரிய யாப்பில் அமைந்துள்ளமை சான்றாகும்.

- புதிய யாப்பு வகையில் பெண்பாற்புலவர் பாட விரும்பினர். இதற்கு அள்ளூர் நன்முல்லையார், வெள்ளிவீதியார் போன்றோர் நிலைமண்டில ஆசிரியயாப்பில் பாடியவை சான்றாகும்.

- பெண்பாற்புலவர்கள் இலக்கிய உத்திகளைப் பாக்களில் புகுத்தினர். இதற்கு அவர்கள் பயன்படுத்திய உவமை, உள்ளுறை, இறைச்சி போன்றவை சான்றாகும்.

- பெண் கல்வி பெறும் வாய்ப்பு சங்ககாலத்தில் இருந்தது. இதற்கு பெண்பாற்புலவர்கள் சான்று. இது பெண்ணுரிமையை அற்றைய சமுதாயம் மதித்ததைக் காட்டுகிறது.

- தொல்காப்பியர் ஆணையும், பெண்ணையும் சமமாக மதித்தார். இதற்குப் புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் என்று இருபாலாரின் உணர்வுகளையும் ஒன்றாக்கியமை காட்டும்.

- தொல்காப்பியர் தாய்மையைப் போற்றினர். இவர் கூற்றுவகுக்கும்போது தாய் கூற்றை முதலில் கூறிஇருப்பது சான்றாகும்.

- சங்ககாலத்தில் திருமணம் பெண் சம்மதித்து நடந்தது. பெண் உடன்படாத மணம் நடைபெறவில்லை. இதற்கு 'வேற்றுவரைவுவரின் அது மாற்றுதற் கண்ணும்' என்று கூறுவது காட்டும்.

- உடன் போக்குமணம் நடந்தது பெண்ணுரிமையைப் பெண்பெற்றதைக் காட்டுகிறது.

- கல்வி கற்றதால் பெண்கள் தன்னம்பிக்கை, அறிவாற்றல், தூது செல்லும் திறன் பெற்று விளங்கினர். இது பெண்ணியம் உயர்ந்து விளங்கியதற்குச் சான்றாகும்.

- சங்க காலத்தில் காதல் கொண்ட பெண்ணை ஆடவன் ஏமாற்றினான் என்ற செய்தி பெண்ணுரிமைக்குப் புறம்பானதாகும். அந்நிகழ்ச்சி

ஊரில் மூத்தோரால் தண்டிக்கப்பட்டது அன்றைய சமுதாயத்தின் சிறப்பைக் காட்டுகிறது.

- உடன்கட்டை ஏறலும், கைம்மை நோன்பும் பெண்ணியக் கோட்பாட்டிற்குப் புறம்பானவை.
- சங்ககாலம்-சங்க இலக்கியம்-புலவர்கள் என்ற ஒருமித்த பார்வையில் ஆண்பாற்புலவர்களின் எண்ணிக்கையில் பெண்பாற்புலவர்கள் மிகக்குறைவு. அவர்கள் பாடிய பாடல்களும் மிகக்குறைவு.
- சேர-சோழ-பாண்டிய நாடுகளிலும், குறுநில மன்னர்கள் ஆட்சிசெய்த பகுதிகளிலும் பெண்பாற்புலவர்கள் வாழ்ந்துள்ளனர் என்பதை நாடு வாரியாகப் பகுத்ததால் அறியமுடிகிறது. ஒவ்வொரு நாட்டிலும் பெண்கள் கல்வி கற்று இருந்தனர். கல்வி பெண்களுக்கு மறுக்கப்படவில்லை. ஆனால், பாடல் பாடிய பெண்பாற்புலவர்கள் குறைவாக இருப்பது, ஆண்களைப் போன்று பெண்கள் பெருமளவில் கல்வி கற்காமல் இருந்ததைக் காட்டுகிறது.
- பாரி மகளிர் பாரியை இழந்த சோக வாழ்க்கை, பெருங்கோப் பெண்டு கணவன் பூதபாண்டியன் இறந்த சோக வாழ்க்கை, ஆதிமந்தி கணவனை இழந்த சோக வாழ்க்கை இவற்றைப் புறநானூற்றுப் பாட்டுக்களால் அறிய முடிகிறது.
- சங்ககாலம் ஆண் - பெண் இருவரையும் சமமாக மதித்தது. பெண் பாற்புலவர்கள் சமுதாயத்தில் ஓர் அங்கமாகத் திகழ்ந்து, பெண்மைக்குப் பெருமை சேர்த்ததைப் பெண்பாற்புலவர்களின் பாட்டுக்கள் புலப்படுத்துகின்றன.

**பின்னனைய ஆய்வுகள்**

- பெண்பாற்புலவர்கள் பாடல்கள் இலக்கண நூல்களில் மேற்கோளாக்கப்பட்ட இடம் குறித்த ஆய்வும், இதன் மூலம் உரையாசிரியர்கள் பெண்பாற்புலவர் பாக்களுக்குக் கொடுத்த மதிப்புப் பற்றியும் ஆராய இடமுண்டு.
- பொருநராற்றுப் படையும் முடத்தாமக்கண்ணியார் படைப்புத் திறனும் என்று தனித்து ஆராய இடமுண்டு.
- பதிற்றுப்பத்தில் ஆண்பாற்புலவர்கள் பாடிய சேர வேந்தர்களைப் பற்றிய பாடல்களையும், பெண்பாற்புலவரான காக்கைபாடினியார் நச்செள்ளையார் பாடிய ஆறாம் பத்தையும் ஒப்பிட்டு ஆராய இடமுண்டு.

## முதன்மைச் சான்றாதாரங்கள்

### சங்க இலக்கிய நூல்கள்


1. சாமிநாதையர், உ.வே.,(உ.ஆ)- **குறுந்தொகை மூலமும் உரையும்**
மகாமகோ பாத்தியாய, டாக்டர்
உ.வே.சாமிநாதையர் நூல் நிலையம், 2-
அருண்டேல் கடற்கரைச்சாலை, பெசன்ட்
நகர், சென்னை - 90. (ம.ப.2000)

2. " - **புறநானூறு மூலமும் உரையும்**
சென்னை. (ம.ப.1971)

3. " - **பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியர் உரையும்,**
தமிழ்ப்பல்கலைக் கழகம்,
தஞ்சாவூர். (ம.ப.1986)

4. சோமசுந்தரனார்,பொ.வே.(உ.ஆ)-**குறுந்தொகை உரையுடன்**
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை. (ம.ப. 1978)

5. " - **பத்துப்பாட்டு மூலமும் உரையும்**
வெளியீட்டகம்,
சைவசிந்தாந்த நூற்பதிப்புக் கழகம்
சென்னை. (ம.ப.1973)

6. துரைசாமிப்பிள்ளை, ஔவை.சு. (உ.ஆ) **நற்றிணை மூலமும் விளக்கஉரையும் (1-200 பாட்டுக்கள்)**
அருணாபப்ளிகேஷன்ஸ்,
13,1, உஸ்மான் ரோடு,
தியாகராய நகரம்,
சென்னை-17. (1956)

7. " - **நற்றிணை மூலமும் விளக்கவிரையும் (201 முதல் 400 பாட்டுக்கள்)**
அருணாபப்ளிகேஷன்ஸ்,
13,1, உஸ்மான் ரோடு,
தியாகராய நகரம்,
சென்னை - 17. (1968)

8. “ - **புறநானூறு (1-200 பாட்டுக்கள்)**
திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
லிமிடெட், திருநெல்வேலி - 6.
சென்னை - 1. (ம.ப. 1967)

9. “ - **புறநானூறு (201-400 பாட்டுக்கள்)**
திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
லிமிட்டெட், திருநெல்வேலி.
சென்னை - 1 (ம.ப.1956)

10. “ - **பதிற்றுப்பத்து மூலமும் விளக்கவுரையும்,**
சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம்,
சென்னை - 1. (ம.ப.1973)

11. நாராயணசாமி ஐயர்.அ.,(உ.ஆ)- **நற்றிணை நானூறு மூலமும் உரையும்,**
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை (1976)

12. மாணிக்க வாசகம் .ஞா.(உ.ஆ)- **புறநானூறு மூலமும் உரையும்,**
உமா பதிப்பகம்,
58, ஐயப்பசெட்டி தெரு,
மண்ணடி, சென்னை. (1998)

13. வேங்கடசாமி நாட்டார்.ந.மு - (உ.ஆ) **அகநானூறு உரை**
திருநெல்வேலித் தென்னிந்திய சைவ
சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
திருநெல்வேலி, சென்னை - 1. (1962)

## இலக்கண நூல்கள்

1. ஆறுமுக நாவலர்(உ.ஆ) **நன்னூல் காண்டிகை உரை**
ஆறுமுக நாவலர் அச்சகம்,
30, தங்கசாலைத் தெரு, சென்னை. (1963)

2. குழந்தை (உ.ஆ) - **தொல்காப்பியம்-பொருளதிகாரம், (மு.ப)**
வேலாபதிப்பகம் (வெளியீடு)
ஈரோடு (1968)

3. சண்முகம் பிள்ளை.மு. (ப.ஆ.) **தொல்காப்பியம் இளம்பூரணம் (மு.ப)**
**(பொருள். அகத்.புறத்திணை)**
முல்லை நிலையம், 43, புதுத்தெரு,

மண்ணடி, சென்னை-1. (மு.ப.1995)

4. " - **தொல்காப்பியம், பொருளதிகாரம், இளம்பூரணம்,(இ.ப.)**
(களவியல், கற்பியல், பொருளியல்)
முல்லை நிலையம், 9, பாரதிநகர் தெரு,
தி.நகர், சென்னை-17. (ம.ப.1997)

5. சண்முகம்பிள்ளை ..மு.(உ.ஆ)- **தொல்காப்பியம் இளம்பூரணம். (மு.ப)**
**(பொருளியல், மெய்ப்பாட்டியல், உவமையியல், செய்யுளியல், மரபியல்)**
முல்லை நிலையம்,
9, பாரதிநகர் முதல் தெரு,
தி.நகர், சென்னை - 17. (1997)

6. சாமிநாதையர் - **யாப்பருங்கலக்காரிகை மூலமும் உரையும்**
உ.வே.சா. நூலகம், சென்னை. (1965)

7. சோமசுந்தரனார் பொ.வே.(உ.ஆ) -**புறப்பொருள் வெண்பாமாலை**
திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம், சென்னை - 18. (2002)

8. நச்சினார்க்கினியர் (உ.ஆ) - **தொல்காப்பினம், பொருளதிகாரம், அகத்திணையல்,**
திருநெல்வேலித் தென்னிந்திய சைவ
சித்தாந்த நூற்பதிப்புக்கழகம்,
சென்னை. (1947)

9. ............. - **புறப்பொருள் வெண்பாமாலை**
உ.வே.சா.அச்சக்கூடம்,
(1950)

## திறனாய்வு நூல்கள்

1. அப்பாத்துரை. கா. - ***சங்க காலப்புலவர்,***
நேஷனல் பப்ளிஷிங் கம்பெனி,
சென்னை. (ம.ப.1947)

2. அழகம்மை.கே.பி. - ***சமூகநோக்கில் சங்க மகளிர்,***
மாணிக்கவாசகர் பதிப்பகம்,
31, சிங்கர் தெரு, பாரிமுனை,
சென்னை - 105. (2001)

3. அறவாணன்.க.ப. - **அற்றை நாட்காதலும் வீரமும்**
பாரிநிலையம், சென்னை. (1978)

4. இராகவையங்கார். இரா. - **நல்லிசைப் புலமைமெல்லியளார்,**
தமிழ்க்கடல் ஆபீஸ், சென்னை. (1933)

5. இராகவையங்கார். இரா. - **தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி,**
பதிப்பு, நாராயண ஐயங்கார். மு.ரா.
மானாமதுரை (1960)

6. இராசமாணிக்கனார். மா. - **பத்துப்பாட்டாராய்ச்சி**
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை. (மு.ப. 1970)

7. இராமநாதன் .ம. - **பைந்தமிழ்ப் பாவையர்**
லோட்டஸ் பப்ளிஷர்ஸ்,
சென்னை - 1. (ம.ப.1956)

8. இராமசாமி.ஆ.வே., - **புறநானூற்றுப் பெண்பாற்புலவர்கள்**
திருவள்ளுவர் பதிப்பகம்,
வைரிசெட்டிப்பாளையம்,
திருச்சி மாவட்டம். (1991)

9. இராமக்கிருட்டிணன் .ஆ. - **அகத்திணைமாந்தர் - ஓர் ஆய்வு**
சர்வோதய இலக்கியப்பண்ணை
மதுரை - 1. (1982)

10. இராம.நாதன் செட்டியார்.லெ.ப.கரு. - **சங்ககாலத்தமிழர் வாழ்வு**
அண்ணாமலை நகர், சென்னை (1942)

11. கந்தசாமி. சோ.ந. - **யாப்பியலின் தோற்றமும் வளர்ச்சியும்**
**முதற்பாகம் - முதற்பகுதி**
தமிழ்ப்பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் (1989)

12. “. - **புறத்திணை வாழ்வியல்,**
தமிழ்ப்பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் (1994)

13. கண்ணதாசன் - **ஆட்டனத்தி ஆதிமந்தி (காவியம்)**
வானதி பதிப்பகம்,
சென்னை. (1978)

14. காளிமுத்து. கா. - **தொல்காப்பிய இலக்கியக் கொள்கைகள்,**
பூம்புகார் பிரசுரம் பிரஸ்,
63, பிராட்வே, சென்னை. (1983)

15. கிருஷ்ணவேணி .எஸ். - **பறம்புநாடும் பாரிமகளிரும்,**
கே. பழனியாண்டிப்பிள்ளை கம்பெனி,
சென்னை. (1936)

16. கைலாசபதி .க. - **பண்டைத்தமிழர் வாழ்வும் வழிபாடும்**
மக்கள் வெளியீடு, சென்னை. (1978)

17. கோவிந்தன் .கா. - **சங்கத்தமிழ்ப்புலவர் வரிசை**
பெண்பாற்புலவர்கள்,
திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
திருநெல்வேலி. சென்னை - 1. (மு.ப. 1953)

18. " - **பண்டைத்தமிழர் போர்நெறி,**
வள்ளுவர் பண்ணை, சென்னை.(1965)

19. சஞ்சீவி .ந. - **சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள்**
சென்னைப் பல்கலைக்கழகம், (1973).

20. சாமிநாதையர் .உ.வே. - **சங்கத்தமிழும் பிற்காலத்தமிழும்,**
உ.வே.சாமிநாதையர் நூல், நிலைய
வெளியீடு, பெசன்ட் நகர், சென்னை-41
(ம.ப.1996)

21. சாம்பசிவனார் .ச. - **தமிழிலக்கியத்தில் நெய்தல் திணை,**
மீனாட்சிபுத்தக நிலையம்,
மேலக்கோபுரவாசல், மதுரை (1964)

22. சாரங்கபாணி .இரா. - **சங்கச்சான்றோர்கள்,**
மணிவாசகர் பதிப்பகம், 55, லிங்கி தெரு,
சென்னை - 1. (மு.ப.1993)

23. சிதம்பரனார்.சாமி. - **இலக்கியச்சோலை,**
ஸ்டார் பிரசுரம், சென்னை-5. (1958)

24. சிவகுருநாதன் .கோ. - **வாகைத்திணை**
மணிவாசகர் பதிப்பகம், 55, லிங்கிதெரு
சென்னை (1992)

25. சிவஞானம்.மா.பொ. - **ஔவையார்**
இன்பநிலையம், மயிலாப்பூர்,
சென்னை-4. (மு.ப.1968)

26. சீனிவாசன் .ரா - **சங்க இலக்கியத்தில் உவமைகள்**
அணியகம், 22,செல்லம்மாள் தெரு,
சென்னை - 30. (மு.ப.1973)

27. சுப்பிரமணியன்.ந. - **சங்ககால வாழ்வியல்**
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட்
லிமிடெட், 41, பி.சிட்கோ இண்ட்டஸ்டிரிஸ்
எஸ்டேட், சென்னை - 98.

28. சுப்பிரமணிய அய்யர்.ஏ.வி. **தமிழ்ஆராய்ச்சியின் வளர்ச்சி,**
(பண்டைக்காலமும் இடைக்காலமும்)
அமுதநிலையம் பிரவேட் லிமிடெட்,
தேனாம்பேட்டை, சென்னை-18 (மு.ப.1959)

29. சுப்புரெட்டியார்.ந. - **அகத்திணைக்கொள்கைகள்**
பாரி நிலையம், 184, பிராட்வே,
சென்னை-1. (1981)

30. செயராமன்.ந. - **சங்கஇலக்கியத்தில் பாடாண்திணை,**
மீனாட்சி புத்தக நிலையம்,
60, மேலக்கோபுரத்தெரு, மதுரை-1(1975).

31. சேசையா .மா - **வெள்ளிவீதி,**
மலர் நிலையம், சென்னை. (1982)

32. சேதுப்பிள்ளை .ரா.பி. - **தமிழர் வீரம்,**
பழனியப்பா பிரதர்ஸ், சென்னை-14.
திருச்சி -2. (1966)

33. சொக்கலிங்கம் .தே. - **கம்பன் புறத்திணை**
பார்வதி பதிப்பகம்,
காரைக்குடி - 3

34. ஞானசம்பந்தன்.அ.ச. - **மகளிர் வளர்த்த தமிழ்**
கங்கை புத்தக நிலையம்,
சென்னை (மு.ப.1994)

35. " - **இலக்கியக்கலை**
திருநெல்வேலித்தென்னிந்திய சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம், சென்னை. (1956)

36. தாயம்மாள் அறவாணன் - **மகடூஉ முன்னிலை-பெண் புலவர் களஞ்சியம் (ஆதிமந்தி முதல் ஆண்டாள் வரை)**
பச்சைப் பசேல், 15, முனிரத்தினம் தெரு, அய்யாவு (நாயுடு) குடியிருப்பு, அமைந்தகரை, சென்னை. (2004)

37. துரைசாமிப்பிள்ளை.ஔவை.அ. -**பெருந்தகைப் பெண்டிர்**
மோகன்ராம் பிரஸ், சென்னை.

38. துரையரங்கசாமி.மொ.அ.- ***சங்ககாலச் சிறப்புப் பெயர்கள்,***
பாரிநிலையம், 184, பிரகாசம் சாலை, சென்னை-1. (மு.ப. 1960)

39. துரையரங்கனார்.மொ.ஆ.- ***தொல்காப்பிய நெறி***
மீனாட்சி புத்தக நிலையம், மதுரை. (1963)

40. நாகராஜன் .கே.எஸ். - ***சங்ககாலப்புலமைச் செல்வியர்,***
எஸ்.ஈசுவரமூர்த்திப்பிள்ளை, ஸ்ரீவைகுண்டம் திருநெல்வேலி.

41. பக்தவத்சலபாரதி & சம்பத்.இரா ***பெண்ணிய ஆய்வுகள்,***
புதுவைமொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி, நிறுவனம், புதுச்சேரி (1998)

42. பத்மஜாரமேஷ் & புருஷோத்தமன் .வி.பி - ***சங்ககாலமன்னர்களின் காலநிலை (தொகுதி -1)***
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சி.ஐ.டி.வளாகம், தரமணி, சென்னை.(மு.ப.2000)

43. பாலசுப்பிரமணியன்.இரா - ***தமிழர் நாட்டு விளையாட்டுக்கள்,***
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், அடையாறு, சென்னை-20. (1980)

44. பாலசுப்பிரமணியன் .சி. - ***சங்ககாலமகளிர்,***
பாரிநிலையம், 184, பிரகாசம் சாலை, சென்னை - 18. (1983)

45. பாலசுப்பிரமணியன் .கு.வெ. ***சங்கஇலக்கியத்தில் வாகைத்திணை***
மணிவாசகர் பதிப்பகம், 55, லிங்கி தெரு, சென்னை - 1. (1987)

46. பாண்டுரங்கன் .கி. - **பண்டைத்தமிழர் போரியல் வாழ்க்கையும்,** போர்நடவடிக்கையும், வெற்றி வேல் வெளியீடு,
63, தென்மேற்கு போக் சாலை,
தியாகராயநகர், சென்னை - 17. (1986)

47. " - **பாரதியார் கவிதைகள்,**
ஸ்ரீசெண்பகா பதிப்பகம், 7, போயஸ் சாலை
(எம்.எம். கார்டன்). தேனாம்பேட்டை,
சென்னை-18.

48. பிரேமா .இர. - **பெண்ணியம்**
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், பி.டி.டி.ஐ.
தரமணி, சென்னை-113. (1994)

49. " - **பெண்ணிய அணுகுமுறைகள்,**
தமிழ்ப் புத்தக நிலையம், 15, மாசிலாமணி
தெரு, பாண்டி பஜார், தியாகராய நகர்,
சென்னை - 17.(1998)

50. பொன்னம்பலநாதன் .பிகே.- **இலக்கியமும் மனித வாழ்க்கையும்,**
திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த
நூற்பதிப்புக்கழகம்,
சென்னை. (1996)

51. மணி. பெ.சு. - **சங்ககால ஔவையாரும் உலகப்**
பெண்பாற்புலவர்களும்
மெய்யப்பன் , தமிழாய்வகம், 53, புதுத்தெரு
சிதம்பரம்-608001. (மு.ப.2000)

52. மறைமலையடிகள் - **முற்கால பிற்காலத் தமிழ்ப் புலவோர்,**
திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை. (1963)

53. மாணிக்கம் .வ.சுப. - **தமிழ்க்காதல்**
பாரிநிலையம், சென்னை. (மு.ப.1962)

54. மீனாட்சி சுந்தரனார்.தெ.பொ- **குடிமக்கள் காப்பியம்**
தொல்காப்பிய நூலகம் (1961)

55. முத்துராசன். கு. - **சங்ககாலம்**
தேன்மொழிப்பதிப்பகம்
சேலம். (1980)

56. முனுசாமி .வே. - **புறநானூற்றுப்பூவையர்,**
வானதிப்பதிப்பகம், தியாகராயர் நகர்,
சென்னை. (1977)

57. வடிவேலன் - **இலக்கிய வரலாற்றுச் சான்றுகள்,**
அருணோதயம், 5,3 கௌடியமடம் சாலை
இராயப்பேட்டை, சென்னை.

58. வரதராசன்.மு - **தமிழிலக்கிய வரலாறு,**
சாகித்திய அக்காடமி, இரவீந்திரன் பவன்,
35, பேரோஸ்ஷா சாலை, புதுதில்லி.1
(ம.ப.1996)

59. " - **இலக்கிய மரபு**
பாரி நிலையம், சென்னை. (1960)

60. வித்தியானந்தன்.சு - **தமிழர் சால்பு**
பாரிபுத்தகப் பண்ணை
58, டி.பி.கோயில் தெரு, திருவல்லிக்கேணி,
சென்னை - 5. (ம.ப. 1985)

61. வெள்ளைவாரணர் .க - **சங்ககாலத் தமிழ்மக்கள்,**
நேஷனல் பப்ளிஷிங் கம்பெனி
சென்னை. (1948)

62. வையாபுரிப் பிள்ளை .எஸ். **சங்க இலக்கியத் தொகுப்பு, இரண்டாம்பகுதி**
பாரிநிலையம், சென்னை.1.

## களஞ்சியங்கள்

1. சாரங்கபாணி .இரா. - **சங்கஇலக்கியப்பொருட் களஞ்சியம் (தொகுதி-1)**
தமிழ்ப்பல்கலைக் கழகம்
தஞ்சாவூர். (மு.ப.1986)

2. பாலுசாமி .நா. (ப.ஆ) - **வாழ்வியற்களஞ்சியம் தொகுதி ஒன்று**
தமிழ்ப்பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் (1991)

3. " - **வாழ்வியற்களஞ்சியம் தொகுதி ஆறு**
தமிழ்ப்பல்கலைக்கழகம்
தஞ்சாவூர். (1991)

4. “ - **வாழ்வியற்களஞ்சியம், தொகுதி ஏழு**
தமிழ்ப்பல்கலைக் கழகம்,
தஞ்சாவூர் (1991)

5. “ - **வாழ்வியற் களஞ்சியம் தொகுதி 11**
தமிழ்ப்பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்-(1991)

## ஆய்வேடு

1. பத்மா வள்ளி .கோ - **சங்க காலப்பெண்பாற்புலவர் ஒரு புதிய பார்வை**
எம்.பில்.ஆய்வேடு,
தமிழ்த்துறை,
அன்னை தெரசா பல்கலைக்கழகம்
கொடைக்கானல் (1989)

## கட்டுரைகள்

1. ச. அகத்தியலிங்கம் - **தமிழியல் (வெள்ளிவீதியார் கவிதைகளின் உள்ளடக்கமும் உருவ ஆக்கமும்)**

2. அன்னிதாமசு (பதிப்பு) - **தமிழக மகளிரியல், (வேனிலா ஸ்டாலின் - பெண்ணியத்தில் ஔவையின் போக்கு)**
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
சி.பி.டி.கேம்பஸ், தரமணி, சென்னை-6000 113.

3. சிவலிங்கனார் .ஆ. - **பாரியைக் கொன்றவர் யார்? (கட்டுரை)**
மயிலம் (1948)

## மலர்

சௌந்தர பாண்டியன் .சு. - **(தமிழ்மாருதம்)**
தமிழர்கண்டகோள்கள்

**ஆங்கில நூல்கள்**


1. Balasubramanian. C. - **The Status of Women in Tamilnadu During the Sangam age,** Published by University of Madras. First Edition (1976)

2. Parvathee athavale - **Hindu Widow (An autobiography)** Translated by Rev. Justin E. Abbotto, Relience Publishing House, 3026, T.A. Ranjith Nagar, New Delhi-110008.

3. Pillay .K.K. - **A Social History of Tamil** University of Madras, (1975)

4. Subramanian .A.V. - **Sips From the Sangam Cup** The South India Saiva Sidhanta works, Publishing Society, Tirunelveli Ltd., Thirunelveli -6 Chennai-7 (1968)

## இரண்டாமியல்
## பின்னிணைப்பு - 1

| வ. எண் | ஆசிரியர் | நூல் | பெண்பாற் புலவர்களின் எண்ணிக்கை | பக்கம் | ஆண்டு |
|---|---|---|---|---|---|
| 1 | உ.வே. சாமிநாத ஐயர் | சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும் | 50 மேல் | 85 | மு.ப. 1929 |
| 2 | ரா. ராகவ ஐயங்கார் | நல்லிசைப்புலமை மெல்லியலார் | 31 (மறு பதிப்பு) | 34 | 1933 |
| 3 | எஸ். வையாபுரிப் பிள்ளை | சங்க இலக்கியச் சிந்தனை | 27 | 81 | 1936 |
| 4 | சைவசித்தாந்த சமாஜம் | சங்க இலக்கியத் தொகுப்பு | 30 | 1430 | 1940 |
| 5 | க.வெள்ளை வாரணர் | சங்க காலத்தமிழ் மக்கள் | 50 | 88 | 1948 |
| 6 | கா. கோவிந்தன் | சங்கத்தமிழ்ப் புலவர் வரிசை - V பெண்பாற்புலவர்கள் | 27 | 1 | 1953 |
| 7 | மு.வரதராசன் | தமிழ் இலக்கிய வரலாறு | 30 | 43 | 1972 |
| 8 | ந. சஞ்சீவி | சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள் | 30 | 30 | 1973 |
| 9 | சி. பாலசுப்பிரமணியன் | சங்க கால மகளிர் | 50 மேல் | 19 | 1983 |
| 10 | ச.வே.சுப்பிரமணியன் | தமிழ் இலக்கிய வரலாறு | 30 | 49 | 1999 |
| 11 | ஔவை சு.து.நடராசன் | பெண்பாற்புலவர் - சங்ககாலம் (ஆய்வேடு) | 41 | - | - |
| 12 | பெ.சு.மணி | சங்ககால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும் | 41 | 80 | 2000 |
| 13 | சு. அமிர்தலிங்கம் | சங்க இலக்கியக் களஞ்சியம் | 30 | 370 | 2000 |
| 14 | தாயம்மாள் அறவாணன் | மகடூஉ முன்னிலை பெண்பாற்புலவர் களஞ்சியம் | 45 | 5 | 2004 |

# இரண்டாமியல்
## பின்னிணைப்பு - 2
## புறநானூற்று அட்டவணை

| வ.எண். | பா.எண் | பெ.புலவர் | திணை | துறை | பாடப்பட்டோர் |
|---|---|---|---|---|---|
| 1. | 11 | பேய்மகள் இளவெயினியார் | பாடாண் | பரிசில் கடா நிலை | சேரமான் பாலை பாடிய பெருங்கருங்கோ |
| 2. | 37 | மாறோக்கத்து நப்பசலையார் | வாகை | அரச வாகை | சோழன் குளமுற்றத்துத் துஞ்சியகிள்ளி வளவன் |
| 3. | 39 | மாறோக்கத்து நப்பசலையார் | பாடாண் | இயன்மொழி | சோழன்குளமுற்றத் துஞ்சியகிள்ளி வளவன் |
| 4. | 66 | வெண்ணிக் குயத்தியார் | வாகை | அரசவாகை | சோழன் கரிகாற் பெருவளத்தான் |
| 5. | 83 | நக்கண்ணையார் | கைக்கிளை | பழிச்சுதல் | போர்வைக் கோப்பெருநற்கிள்ளி |
| 6. | 84 | நக்கண்ணையார் | கைக்கிளை | பழிச்சுதல் | சோழன் போர்வைக் கோப்பெருநற்கிள்ளி |
| 7. | 85 | நக்கண்ணையார் | கைக்கிளை | பழிச்சுதல் | சோழன் போர்வைக் கோப்பெருநற்கிள்ளி |
| 8. | 86 | காவற்பெண்டு | வாகை | ஏறாண்முல்லை | - |
| 9. | 87 | ஔவையார் | தும்பை | தானைமறம் | அதியமான் நெடுமான் அஞ்சி |
| 10. | 88 | ஔவையார் | தும்பை | தானைமறம் | அதியமான் நெடுமான் அஞ்சி |
| 11. | 89 | ஔவையார் | தும்பை | தானைமறம் | அதியமான் நெடுமான் அஞ்சி |
| 12. | 90 | ஔவையார் | தும்பை | தானைமறம் | அதியமான் நெடுமான் அஞ்சி |
| 13. | 91 | ஔவையார் | பாடாண் | வாழ்த்தியல் | அதியமான் நெடுமான் அஞ்சி |
| 14. | 92 | ஔவையார் | பாடாண் | இயன்மொழி | அதியமான் நெடுமான் அஞ்சி |
| 15. | 93 | ஔவையார் | வாகை | அரசவாகை | அதியமான் நெடுமான் அஞ்சி |
| 16. | 94 | ஔவையார் | வாகை | அரசவாகை | அதியமான் நெடுமான் அஞ்சி |
| 17. | 95 | ஔவையார் | பாடாண் | வாண்மங்கலம் | அதியமான் நெடுமான் அஞ்சி |
| 18. | 96 | ஔவையார் | பாடாண் | இயன்மொழி | அதியமான் நெடுமான் அஞ்சி மகன் பொருட்டெழினி |
| 19. | 97 | ஔவையார் | பாடாண் | இயன்மொழி | அதியமான் நெடுமான் அஞ்சி |
| 20. | 98 | ஔவையார் | வாகை | அரசவாகை | அதியமான் நெடுமான் அஞ்சி |

| வ.எண். | பா.எண் | பெ.புலவர் | திணை | துறை | பாடப்பட்டோர் |
|---|---|---|---|---|---|
| 21. | 99 | ஔவையார் | வாகை வஞ்சியுமாம் | அரசவாகை கொற்றவள்ளையுமாம் | அதியமான் நெடுமான்அஞ்சி |
| 22. | 100 | ஔவையார் | வாகை வஞ்சியுமா | அரச வாகை கொற்றவள்ளையுமாம் | அதியமான் நெடுமான்அஞ்சி |
| 23. | 101 | ஔவையார் | பாடாண் | பரிசில்கடாநிலை | அதியமான் நெடுமான்அஞ்சி |
| 24. | 102 | ஔவையார் | பாடாண் | இயன்மொழி | அதியமான் நெடுமான்அஞ்சி மகன் பொருட்டெழினி |
| 25. | 103 | ஔவையார் | பாடாண் | விறலியாற்றுப்படை | அதியமான் நெடுமான்அஞ்சி |
| 26. | 104 | ஔவையார் | வாகை | அரசவாகை | அதியமான் நெடுமான்அஞ்சி |
| 27. | 112 | பாரிமகளிர் | பொதுவியல் | கையறுநிலை | - |
| 28. | 126 | மாறோக்கத்து நப்பசலையார் | பாடாண் | பரிசிற்றுறை | மலையமான் திருமுடிக்காரி |
| 29. | 140 | ஔவையார் | பாடாண் | பரிசில்விடை | நாஞ்சில் வள்ளுவன் |
| 30. | 157 | குறமகள் இளவெயினி | பாடாண் | இயன்மொழி | ஏறைக்கோள் |
| 31. | 174 | மாறோக்கத்து நப்பசலையார் | வாகை | அரசவாகை | மலையமான் சோழிய ஏனாதி திருக்கண்ணன் |
| 32. | 187 | ஔவையார் | பொதுவியல் | பொருண் மொழிக்காஞ்சி | - |
| 33. | 207 | ஔவையார் | பாடாண் | பரிசிற்றுறை | அதியமான் நெடுமான் அஞ்சி |
| 34. | 226 | மாறோக்கத்து நப்பசலையார் | பொதுவியல் | கையறுநிலை | சோழன் குளமுற்றத்துஞ்சிய கிள்ளிவளவன் |
| 35. | 231 | ஔவையார் | பொதுவியல் | கையறுநிலை | அதியமான் நெடுமான் அஞ்சி |
| 36. | 232 | ஔவையார் | பொதுவியல் | கையறுநிலை | அதியமான் நெடுமான் அஞ்சி |
| 37. | 235 | ஔவையார் | பொதுவியல் | கையறுநிலை | அதியமான் நெடுமான் அஞ்சி |
| 38. | 249 | பெருங் கோப்பெண்டு | பொதுவியல் | ஆனந்தப்பையுள் | - |
| 39. | 250 | தாயங்கண்ணியார் | பொதுவியல் | தாபதநிலை | - |
| 40. | 251 | மாற்பித்தியார் | வாகை | தாபதவாகை | - |

| வ.எண். | பா.எண் | பெ.புலவர் | திணை | துறை | பாடப்பட்டோர் |
|---|---|---|---|---|---|
| 41. | 252 | மாற்பித்தியார் | வாகை | தாபதவாகை | - |
| 42. | 266 | ஔவையார் | வெட்சி | உண்டாட்டு | - |
| 43. | 271 | வெறிபாடிய காமக்கண்ணியார் | நொச்சி | செருவிடைவீழ்தல் | - |
| 44. | 277 | பூங்கணுத்திரையார் | தும்பை | உவகைக்கலுழ்ச்சி | - |
| 45. | 278 | காக்கைப் பாடினியார் நச்செள்ளையார் | தும்பை | உவகைக்கலுழ்ச்சி | - |
| 46. | 279 | ஒக்கூர் மாசாத்தியார் | வாகை | மூதின்முல்லை | - |
| 47. | 280 | மாறோக்கத்து நப்பசலையார் | பொதுவியல் | ஆனந்தப்பையுள் | - |
| 48. | 286 | ஔவையார் | கரந்தை | வேத்தியல் | - |
| 49. | 290 | ஔவையார் | கரந்தை | குடிநிலையுரைத்தல் | - |
| 50. | 295 | ஔவையார் | தும்பை | உவகைகலுழ்ச்சி | - |
| 51. | 296 | வெள்ளைமாளர் | வாகை | ஏறாண்முல்லை | - |
| 52. | 299 | பொன்முடியார் | நொச்சி | குதிரைமறம் | - |
| 53. | 302 | வெறிபாடிய காமக்கண்ணியார் | தும்பை | குதிரைமறம் | - |
| 54. | 306 | அள்ளூர் நன்முல்லையார் | வாகை | மூதின்முல்லை | - |
| 55. | 310 | பொன்முடியார் | தும்பை | நூழிலாட்டு | - |
| 56. | 311 | ஔவையார் | தும்பை | பாண்பாட்டு | - |
| 57. | 312 | பொன்முடியார் | தும்பை | மூதின்முல்லை | - |
| 58. | 315 | ஔவையார் | வாகை | வல்லான்முல்லை | அதியமான் நெடுமான் அஞ்சி |
| 59. | 367 | ஔவையார் | பாடாண் | வாழ்த்தியல் | சேரமான் மாவண்கோ பாண்டியன் உக்கிரமப் பெருவழுதி சோழன் இராச சூயம் வேட்ட பெருநற்கிள்ளி |
| 60. | 383 | மாறோக்கத்து நப்பசலையார் | பாடாண் | கடைநிலை | சோழன்குளமுற்றத் துஞ்சிய கிள்ளிவளவன் |

| வ.எண். | பா.எண் | பெ.புலவர் | திணை | துறை | பாடப்பட்டோர் |
|---|---|---|---|---|---|
| 61. | 390 | ஔவையார் | பாடாண் | இயன்மொழி | அதியமான் நெடுமான் அஞ்சி |
| 62. | 392 | ஔவையார் | பாடாண் | கடைநிலை | பொகுட்டெழினி |
| 63. | 9 | நெட்டிமையார் | பாடாண் | இயன்மொழி | பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி |
| 64 | 12 | நெட்டிமையார் | பாடாண் | இயன்மொழி | பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி |
| 65 | 15 | நெட்டிமையார் | பாடாண் | இயன்மொழி | பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி |

# இயல் நான்கு பின்னிணைப்பு 1

## பெண்பாற்புலவர்களின் அகப்பாடல்கள் எண்ணிக்கை

| பத்துப்பாக்களுக்கு மேல் பாடியபுலவர்கள் | மொத்த எண்ணிக்கை | பத்துப் பாக்கள்என்ற எண்ணிக்கைக்குள் | மொத்த எண்ணிக்கை | ஒரு பாடல் பாடிய வர்கள் | மொத்த எண்ணிக்கை |
|---|---|---|---|---|---|
| ஔவையார் | 26 | கழார்க்கீரனெயிற்றியார் | 8 | அஞ்சியத்தைமகள் நாகையார் | 1 |
| வெள்ளிவீதியார் | 13 | ஒக்கூர் மாசாத்தியார் | 7 | அஞ்சில் அஞ்சியார் | 1 |
| அள்ளூர் நன்முல்லையார் | 10 | கச்சிப்பேட்டு நன்னாகையார் | 6 | ஆதிமந்தியார் | 1 |
| குன்றியனார் | 10 | நல்வெள்ளியார் | 4 | ஊண்பித்தையார் | 1 |
| | | நக்கண்ணையார் | 3 | | |
| | | வெறிபாடிய காமக்கண்ணியார் | 3 | காக்கைப் பாடினியார் நச்செள்ளையார் | 1 |
| | | வெண்பூதியார் | 3 | | |
| | | பூங்கணுத்திரையார் | 2 | காமஞ்சேர் குளத்தார் | 1 |
| | | நெடும்பல்லி யத்தையார் | 2 | காமக்கணி நப்பசலையார் | 1 |
| | | மதுரை ஓலைக்கடையத்தார் நல்வெள்ளையார் | 2 | குமுழிஞாழலார் நப்பசலையார் | 1 |
| | | நன்னாகையார் | 2 | குறமகள் குறியெயினியார் | 1 |
| | | கார்க்கியார் | 2 | பொதும்பிற்புல்லாளங் கண்ணியார் | 1 |
| | | | | பொன்மணியார் | 1 |
| | | | | முள்ளியூர்ப் பூதியார் | 1 |
| | | | | பொதுக்கயத்துக் கீரந்தையார் | 1 |
| | | | | போந்தைப் பசலையார் | 1 |
| | | | | மாறோக்கத்து நப்பசலையார் | 1 |
| | | | | வருமுலையா ரித்தியார் | 1 |
| | | | | வெண்மணிப் பூதியார் | 1 |

# இயல் நான்கு பின்னிணைப்பு 2

## பெண்பாற்புலவர்களின் அகப்பாடல்கள்

## திணைகள் (மிகுதி அடிப்படையில் திணை வரிசை)

| | திணை | குறுந்தொகை | நற்றிணை | அகநானூறு | மொத்த எண்ணிக்கை |
|---|---|---|---|---|---|
| 1 | பாலை | 18 | 4 | 10 | 32 |
| 2 | நெய்தல் | 14 | 9 | 3 | 26 |
| 3 | குறிஞ்சி | 14 | 5 | 6 | 25 |
| 4 | மருதம் | 15 | 4 | 1 | 20 |
| 5 | முல்லை | 10 | 3 | 4 | 17 |
| | | 71 | 25 | 24 | 120 |

# இயல் நான்கு பின்னிணைப்பு 3

## பாலைத்திணை

| | ஆசிரியர் | குறுந்தொகை | நற்றிணை | அகநானூறு | மொத்த எண்ணிக்கை |
|---|---|---|---|---|---|
| 1 | ஔவையார் | 15, 28, 39, 43, 388 | - | 11, 147, 273, 303 | 9 |
| 2 | கழார்க்கீரனெயிற்றியார் | - | 281, 312 | 163, 217, 235 | 5 |
| 3 | வெள்ளிவீதியார் | 27, 44, 130, 149 | - | 45 | 5 |
| 4 | அள்ளூர் நன்முல்லையார் | 67, 140, 237 | - | - | 3 |
| 5 | கச்சிப்பேட்டு நன்னாகையார் | 30, 180, 192 | - | - | - |
| 6 | ஊண்பித்தையார் | 232 | - | - | - |
| 7 | காமக்கணி நப்பசலையார் | - | 243 | - | 1 |
| 8 | குன்றியனார் | - | - | 41 | 1 |
| 9 | நல்வெள்ளியார் | - | 7 | - | 1 |
| 10 | பூங்கணுத்திரையார் | 48 | - | - | 1 |
| 11 | முள்ளியூர் பூதியார் | - | - | 173 | 1 |
| 12 | வெண்பூதியார் | 174 | - | - | 1 |
| | | 18 | 4 | 10 | 32 |

6

# பெண்பாற்புலவர்களின் பாலைத்திணை 4 : 4

## மாந்தர் கூற்று

| எண் | கூற்று விவரம் - கேட்போர் | பாடல் எண் | மொத்தம் |
|---|---|---|---|
| 1 | **தலைவன் கூற்று** | | |
| | பொருள் முற்றியதும் தேர்ப்பாகனுக்கு கூறியது (அ.நன்) | நற் 237 | 1 |
| | பொருள் வலித்த தலைமகன் நெஞ்சிற்குச் சொல்லியது | நற். 312 | 1 |
| | பொருள் வயிற்பிரிந்தவிடத்துக் கிழத்தியை (குன்) நினைத்து சொல்லியது | அகநா.41 | 1 |
| | | | 3 |
| 2. | **தலைவி கூற்று** | | |
| | தலைவன் பிரிவில் ஆற்றிய தோழியிடம் | 27,28,30,39,43, குறுந் 67,140 | 7 |
| | | அகநா. 11 | 1 |
| | ஆற்றாமை மீதூரத்தோழியிடம் கூறல் | அக.163,217,235 | 3 |
| | வற்றாமைமீதூரத்தோழிக்கு | அக. 45 | 1 |
| | பிரிவை அறிவித்த தோழியிடம் | குறு. 174, 192 | 2 |
| | பிரிவிடை மெலிந்து கூறியது | நற். 243 | 1 |
| | பிரிவின் அறிவு மயங்கிச் சொல்லியது | அக. 273 | 1 |
| | நெஞ்சிற்குச் சொல்லியது | அக. 303 | 1 |
| | வன்பொறை எதிரழிந்து தோழியிடம் கூறல் | நற். 281 | 1 |
| | உடன்போக்குணர்த்தி தோழியிடம் | குறு. 149 | 1 |
| | | | 20 |
| 3. | **தோழி கூற்று** | | |
| | தலைவியை ஆற்றுவித்தல் | குறு.48,130,180,232 | 4 |
| | | நற். 7 | 1 |
| | தலைமகனை வற்புறுத்தியது | அக. 173 | 1 |
| | உடன்போக்குப்பற்றி | குறு. 388 | 1 |
| | | | 7 |

1

## பின்னிணைப்பு 4 : 5

## நெய்தல் திணை பாடியோர்

| | புலவர்கள் | குறுந்தொகை | நற்றிணை | அகநானூறு | மொத்த எண்ணிக்கை |
|---|---|---|---|---|---|
| 1 | குன்றியனார் | 51,117 | 117, 239 | 40 | 5 |
| 2 | ஔவையார் | 102 | 187, 295 | - | 3 |
| 3 | வெள்ளிவீதியார் | 386 | 335, 348 | - | 3 |
| 4 | கச்சிப்பேட்டு நன்னாகையார் | 172, 197 | - | - | 2 |
| 5 | கார்க்கியார் | 55, 212 | - | - | 2 |
| 6 | நக்கண்ணையார் | - | 19, 87 | - | 2 |
| 7 | நன்னாகையார் | 118, 325 | - | - | 2 |
| 8 | வெண்பூதியார் | 97, 219 | - | - | 2 |
| 9 | குமுழிஞாழலார் நப்பசலையார் | - | - | 160 | 1 |
| 10 | போந்தைப் பசலையார் | - | - | 110 | 1 |
| 11 | மதுரை ஓலைக் கடையத்தார் நல்வெள்ளையார் | - | 369 | - | 1 |
| 12 | வெண்மணிப் பூதியார் | 299 | - | - | 1 |
| 13 | காமஞ்சேர் குளத்தார் | 4 | - | - | 1 |
| | | 14 | 9 | 3 | 26 |

9

## பெண்பாற்புலவர்களின் பாலைத்திணை 6
## நெய்தல் திணை மாந்தர் கூற்று நிரல்

| எண் | கூற்று விவரம் - கேட்போர் | பாடல் எண் | மொத்தம் |
|---|---|---|---|
| 1 | **தலைவன் கூற்று** | | |
| | | இல்லை | |
| 2. | **தலைவி கூற்று** | | |
| | தலைவியின் ஆற்றாமையைத் | குறு.97,102,386,219, | |
| | தோழியிடம் கூறுதல் | நறு.348 | |
| | வரைவிடைப்பிரிவில் தோழியிடம் | குறு.172,4, நற். 87 | |
| | பொழுது, பருவ வரவில் தன்னுள் வருந்து | குறு.118,நற். 187 | |
| | தோழியிடம் கூறல் | குறு.197,325,299 | |
| | வன்பொறையெதிரழிந்து கூறல் | நற் 117, 369 | |
| | காமமிக்கக்கழிபடார்கிளவி கூறல் | நற் 335 | |
| | பொருள் பிரிவு தோழியிடம் | அக. 40 | 17 |
| 3. | **தோழி கூற்று** | | |
| | வரைவு மலிவு தலைவியிடம் | குறு. 51 | |
| | தலைவியிடம் தலைவன் சிறைப் | குறு. 117 | |
| | புறமாகக் கூறல் | நற். 295 | |
| | தலைவியின் ஆற்றாமைபற்றிச் | குறு. 55 | |
| | சிறைப்புறமாகக் கூறல் | நற். 239 | |
| | தலைவிகுறை நயப்பககூறல் | குறு. 212 | |
| | வரைவு கடாவுதல் | நற். 19 | |
| | செவிலித்தாய்க்கு அறத்தொடு நிற்றல் | அகநா. 110 | |
| | வரைவு மலிந்து கூறல் | அக. 160 | 9 |

9

# பின்னிணைப்பு 7

## குறிஞ்சித்திணைப்பாடல்கள்

| வ. எண் | புலவர்கள் | குறுந்தொகை | நற்றிணை | அகநானூறு | மொத்த எண்ணிக்கை |
|---|---|---|---|---|---|
| 1 | ஔவையார் | 23, 29, 158 | 129 | - | 4 |
| 2 | அள்ளூர் நன்முல்லையார் | 32, 68, 96 | - | - | 3 |
| 3 | நல்வெள்ளியார் | 365 | 47 | 32 | 3 |
| 4 | வெள்ளிவீதியார் | 58, 146 | - | 362 | 3 |
| 5 | வெறிபாடிய காமக்கண்ணியார் | - | 268 | 22, 98 | 3 |
| 6 | குன்றியனார் | 301, 336 | - | - | 2 |
| 7 | அஞ்சிஅத்தை மகன் நாகையார் | - | - | 352 | 1 |
| 8 | கழார்க்கீரனெயிற்றியார் | 261 | - | - | 1 |
| 9 | குறமகள் குறிஎயினியார் | - | 357 | - | 1 |
| 10 | நக்கண்ணையார் | - | - | 252 | 1 |
| 11 | பொதுக்கயத்துக் கீரந்தையார் | 337 | - | - | 1 |
| 12 | மாறோக்கத்து நப்பசலையார் | - | 304 | - | 1 |
| 13 | வருமுலையாரித்தியார் | 176 | - | - | 1 |
| | | 14 | 5 | 6 | 25 |

10

# இயல் நான்கு 8

## குறிஞ்சி திணை மாந்தர் கூற்று நிரல்

| எண் | கூற்று விவரம் - கேட்போர் | பாடல் எண் | மொத்தம் |
|---|---|---|---|
| 1 | **தலைவன் கூற்று** | | |
| | கழறிய பாங்கனை மறுத்தல் (கழற்றெதிர் மறை) | குறு. 58 | |
| | இரவுக்குறி மறுக்கப்படும் போது | குறு. 29 | |
| | குறை நயக்க வேண்டிய தோழியிடம் | குறு. 32, 337 | 4 |
| 2. | **தலைவி கூற்று** | | |
| | தன் ஆற்றாமை கண்டு வருந்தும் தோழியிடம் | குறு. 68 | |
| | தோழி தலைவனை இயற்பழித்த வழித்தலைவி இயற்படமொழிதல் | குறு.96 | |
| | வரைவு நீட்டித்த போது தோழியிடம் | குறு.301 | |
| | தலைவன் சிறைப்புறமாகக் கூறல் | குறு.261,அகநா.22 | |
| | தலைவன் இரவுக் குறிமறுத்தல் | குறு.158 | |
| | தோழிக்குச் சொல்லியது (தலைவன் இறைப்புறம்) | அகநா.252 | |
| | வரையாது நெடுங்காலம் வந்தொழுக ஆற்றளாகிய தலைமகன் வன்புறை எதிர் மொழிந்தது. | நற்.304 | |
| | வரைவு நீட்டித்த போது ஆற்றுவேன் என்று தோழியிடம் கூறியது. | நற்.357 | 9 |
| 3. | **தோழி** | | |
| | வரைவு நீட்டித்த போதுதலைவியிடம் (சிறையும் தலைவன்) | குறு.365 | |
| | பகல், இரவக் குறிகளில் தலைவனிடம் | குறு.336 | |
| | அறந்தொடுநிற்றல் (தாயிடம்) | குறு.23 | |
| | தலைவனை மறாமைவேண்டுதல் தலைவியிடம் | குறு.176 | |
| | வரைவு மலிந்தமை தலைவியிடம் கூறல் | குறு.146 | |
| | தலைவியிடம்..... | நற்.129 | |
| | சிறைப்பிறமாகத் தோழி தலைமகளுக்குரைப் பாளாய்ச் சொல்லியது | நற்.47 | 7 |

பின்நின்ற தலைமகற்குக் குறைநேர்ந்த

தோழி தலைமகட்குக் குறைநயப்பக்கூறியது அகநா.32

(தோழிக்குத் தலைமகள்சொற்றதூஉம் ஆம்)

இரவுக் குறிப்பில் சிறைப்புறமாகச் சொல்லியது அகநா.362

தலைமகளுக்குச் சொல்லியது (வெறியாட்டு) நற்.268

(தலைவிக்கும் வுக்கும்) அகநா.48

வரைந்தபின் மகமனைக்கட் சென்றபோது அகநா.352

கூறியது.

1) 5

## மருதத்திணை இயல் நான்கு - 9

| வ.எண் | புலவர்கள் | குறுந்தொகை | நற்றிணை | அகநாநூறு | எண்ணிக்கை |
|---|---|---|---|---|---|
| 1. | ஔவையார் | 80,91,364 | 390 | - | 4 |
| 2. | அள்ளூர் நன்முல்லையார் | 93,157,202 | - | 46 | 4 |
| 3. | குன்றியனார் | 50,238 | - | - | 2 |
| 4. | நெடும்பல்லியத்தையார் | 178,203 | - | - | 2 |
| 5. | வெள்ளிவீதியார் | 169 | 70 | - | 2 |
| 6. | அஞ்சில் அஞ்சியார் | - | 90 | - | 1 |
| 7. | ஆதிமந்தியார் | 31 | - | - | 1 |
| 8. | ஒக்கூர் மாசாத்தியார் | 139 | - | - | 1 |
| 9. | கழார்க்கீரனெயிற்றியார் | 35 | - | - | 1 |
| 10. | பூங்கணுத்திரையார் | 171 | - | - | 1 |
| 11. | மதுரைஓலைக்கடையத்தார் நல்வெள்ளையார் | - | 250 | - | 1 |
| | | 15 | 4 | 1 | 20 |

12

## மருதத்திணை மாந்தர் கூற்று நிரல் - 10

| எண். | கூற்றுவிவரம் - கேட்போர் | பாடல் எண். | மொத்தம் |
|---|---|---|---|
| 1 | தலைவன் - புதல்வனொடு புக்க<br>தலைமகன் ஆற்றினாய்ப் பாறை<br>குரைத்தது | நற்.250 | 1 |
| 2 | தலைவன் வாயிலை ஏற்றல்<br>நெஞ்சிடம்<br>வாயில்களிடம்<br>தோழியிடம் வாயில்மறுத்தல்<br>பூப்பெய்தி தலைவி (தற்கூற்று)<br>தலைவன் உறுதிமொழியை மறுத்தது<br>அறத்தொடு எதிற்றல் (கனவு)<br>பிரிவுத் துயரம்<br>பாங்காயினர்கேட்பக் கூறியது<br>காமம் மிக்க கழிபடர்ந்த துகூறல் | குறுந்.91<br>குறுந்.50<br>குறுந்.93,202,203<br>குறுந்.157<br>குறுந்.169(களவு)<br>குறுந்.31 (தோழிக்கு)<br>குறுந்.35(கூதிர்)<br>குறுந்.171 (களவு)<br>நற். (களவு)<br>நற்.390<br>நற்.70 | 12 |
| 3 | தோழிகூற்று<br>தலைவனிடம்<br>தலைவனிடம் முன்னினைவு கூறல்<br>தலைவனிடம் வாயில் மறுப்பு | குறுந்.139,<br>மறுப்பு.238<br>குறுந்.178<br>அகநா.46, நற்.90 | 5 |
| 4 | பரத்தை கூற்று<br>தலைவிக்குப்பாங்காயினாரிடம் | குறுந்.80,364 | 2 |
| | | | 20 |

## முல்லைத்திணை இயல் நான்கு - 11

| வஎண் | புலவர்கள் | குறுந்தொகை | நற்றிணை | அகநானூறு | மொத்த பாக்கள் |
|---|---|---|---|---|---|
| 1 | ஒக்கூர்மாசாத்தியார் | 126,186,275,220 | - | 324,384 | 6 |
| 2 | ஔவையார் | 99,183,200 | 371,381,394 | - | 6 |
| 3 | கச்சிப்பேட்டுநன்னாகையார் | 287 | - | - | 1 |
| 4 | கழார்க்கீரனெயிற்றியார் | - | - | 294 | 1 |
| 5 | காக்கைப்பாடினியார்<br>நச்செள்ளையார் | 210 | - | - | 1 |
| 6 | பொதும்பிற்புல்லாளங்கண்ணியார் | - | - | 154 | 1 |
| 7 | பொன்மணியார் | 391 | - | - | 1 |
| | | 10 | 3 | 4 | 17 |

## முல்லைத்திணை மாந்தர் கூற்று நிரல் - 12

| எண். | கூற்றுவிவரம் கேட்போர் | பாடல் எண் | மொத்தம் |
|---|---|---|---|
| 1 | தலைவன் கூற்று<br>வினைமுற்றியபின் இல்லம்<br>திரும்பியதும் தோழியிடம்<br>பாகற்கு | குறுந்.99<br>நற்.371,<br>அகநா.154 | 3 |
| 2 | தலைவி கூற்று<br>பருவ வரவில்ஆற்றாமை<br>மிக்குத் தோழியிடம்<br><br>தோழி என்ற விளியின்றிப்<br>பொதுவாகவருந்திக் கூறினும்<br>தோழியை நோக்கிக் கூறியன<br>எனத்தக்கவை | குறுந.126.186.200<br>குறுந்.220,391<br>அகநா.294<br><br><br><br>குறுந்.183<br>நற்.381 | 8 |
| 3 | தோழிகூற்று<br>தலைவியை ஆற்றுவித்தமை<br>பற்றித் தலைமகனிடம்<br>தலைமகன் திரும்புவான்<br>எனத் தலைவியிடம் | குறுந்.210<br>குறுந்.275,287 | 3 |
| 4 | கண்டோர் கூற்று<br>வினைமுற்று மறுத்தது நின்ற<br>தலைமகனை இடைச்சுரத்து | நற்.394 | 1 |
| 5 | உழையர் கூற்று<br>வினைமுற்றிய<br>தலைமகன்கருத்துணர்ந்து | அகநா.324<br>அகநா.384 | 2 |
| | | | 17 |

## பெண்பாற் புலவர்களின் காலம்

சங்க இலக்கியம் என்ற தொகுப்பிலுள்ள பாடல்களின் காலம் "கி.மு. 500 முதல் கி.பி.100 வரை[1]" என்பர் அறிஞர். ஆனால், தமிழ் மொழியும், தமிழ் இலக்கியமும் அவற்றிற்கும் முன்னமே வளர்ந்திருந்தவை என்பதில் ஐயமில்லை[2] சங்கப்பாடல்களின் காலத்தைக் கண்கூடாக காட்டிடச் சான்றுகள் கிட்டில.

சங்கப்புலவர்களின் காலம் அந்நாளில் வாழ்ந்த வேந்தர்களைக் கொண்டு ஆராயப்பட்டுள்ளன. அம்மன்னர் வாழ்ந்த காலம் புலவர் வாழ்ந்த காலமாக உறுதி செய்யப்பெறுகிறது. அகப்பாடல்களில் உவமைகளாகப்புலவர் அல்லது மன்னர் அல்லது மக்கள் பெயர்கள் சுட்டப்பெறுகின்றன. அதனாலும் புலவன் காலம் வரையறுக்கப்பெறுகிறது. வரலாற்றுக் குறிப்பில்லாத பாடல்களைப் பாடிய பல புலவர்களின் காலத்தைத் துணிய இயலவில்லை. எனினும் சங்கப்பாட்டுக்களின் காலமான கி.மு. 500 முதல் கி.பி. 100க்குள் வாழ்ந்தவர்கள் பெண்பாற்புலவர்கள் என்ற பொதுக்கருத்தையே ஏற்றல் தகும்.

சங்கப் பெண்பாற்புலவர்களில் ஔவையார் (59) மிகுதியான பாக்கள் பாடிய மிகச்சிறந்த புலவர். இவர் பாடலில் வெளிப்படும் வெள்ளிவீதியாரைப் பற்றிய குறிப்பு பெண்பாற்புலவர்களுக்கிடையே யார் காலத்தால் முந்தியவர் என்று காணவழிவகுக்கிறது. ஆதிமந்தியார் பாடியதாக ஒரு பாடல் குறுந்தொகையில் இடம் பெற்றுள்ளது. இப்பாடல் கிடைக்கவில்லையாயின் புலவர்கள் பாடிய ஆதிமந்தி யார்? என்று சிந்திக்க வேண்டியிருக்கும் அவர் பாடிய "மள்ளர்குழீஇய விழவினானும்" என்ற பாடலில் தலைவி தலைவனைத் தேடியதாக உள்ள குறிப்பு அவரை அடையாளங்காட்டுகின்றது. இன்னொரு புலவரான வெள்ளிவீதியாரும், பரணரும், இளங்கோவடிகளும் ஆதிமந்தியைக் குறிப்பிடுகின்றனர். இதனால் ஆதிமந்தி பெண்பாற்புலவர்களுள் மிகப்பழமையானவர் என்றுப் பெறப்படுகிறது.

ஆதிமந்தியார்



வெள்ளிவீதியார்

வெள்ளிவீதியார்



ஔவையார்

இம்மூவரில் ஆதிமந்தியார் காலத்தால் முற்பட்டவர். இவர் கணவர் ஆட்டனத்தி. இவர் கரிகாலனின் மகள். இவர் கடலில் ஆட்டனத்தியை இழந்து தேடித்திரிந்துள்ளார். இச்செய்தி, நாடெங்கும் பரவியது. புலவர்கள் ஒவ்வொரு நாடுகளுக்கும் மன்னரைக்காண சென்ற போது இச்செய்தியை அறிந்தனர். இவரின் வாழ்க்கையை விரிவாகப் பாடியவர் பரணர் என்ற ஆண்பாற்புலவர். இவர் பாடலால் ஆதிமந்தி கணவன் ஆட்டனத்தி (அகம்.236); கழாஅர் முன்றுறையில் கணவனை இழந்தாள், அவளுக்கு மருதி உதவினாள், அவனை ஆதிமந்தி தேடி அலைந்தாள் (அகம்.236); இச்செய்திகள் பலரும் அறியும்படிப் பரவியது. இச்செய்தி அகச்செய்தி என்பதால் அகப்பாடல்களில் பயின்று வந்தது. பெண்பாற்புலவரான வெள்ளி வீதியாரும் ஆதிமந்தியின் வாழ்க்கையை அறிந்தவர். அவர் பாடிய அகப்பாடலில் தலைவி கூற்றில் தலைவனைப்பிரிந்தபோதுத் தலைவி வருந்தித் தேடிப்பெற வேண்டும் நிலையினை,

"..........................................................................யானே
காதலற் கெடுத்த சிறுமையொடு நோய்கூர்ந்து
ஆதிமந்தி போலப் பேதுற்று
அலந்தனென் உழல்வென் கொல்லோ"

(அகம் 45: 12-14)

என்று பாடினார். இப்பாடல் வெள்ளிவீதியார் வாழ்க்கையும் ஆதிமந்தியின் வாழ்க்கை போல அமைந்தது என்பதைக் காட்டுகிறது. இச்செய்தியால் ஆதிமந்தியார் வெள்ளிவீதியாரும் சமகாலப் புலவராகவோ ஆதிமந்தி முந்தியவராகவே வாழ்ந்தவர் என்பது பெறப்படும். ஆனால், இருவரும் சமகாலப்புலவர் என்பது உ.வே. சாமிநாதையரின் கருத்து.[3]

பரணர் சோழ மன்னனான கரிகாலன் சோழன், உருவப் பஃறேரிளச்சேட்

சென்னி, என்று பல சோழ அரசர்களைப் பாடியவன்[4]. அதனால் பரணருக்குச் சோழ குடும்பத்தில் பிறந்த ஆதிமந்தியின் வாழ்க்கையையும் அறிய வாய்ப்புக்கிட்டியது. அவர் ஆதிமந்தியைப் பாடிய செய்தி புலவர் மத்தியில் பரவியது. வெள்ளிவீதியாரும் அதனை அறிந்து பாடினார். வெள்ளிவீதியார் பரணர் போன்று விரிவாக இச்செய்தியைப்பாடாததால் பரணர் பாடினார் என்று விடுத்தாரா? இல்லை பரணன் வழிச் செய்தி அறிந்து ஆதிமந்தி பேதுற்றுழந்ததைக் குறிப்பிட்டுப்பாடினாரா? என்பதும் வெள்ளிவீதியாரும் பரணரின்றி ஆதிமந்தியாரின் செய்தியை எல்லோரும் அறிந்திருக்கத்தானும் அறிந்தாரா? என்பது ஆராய்தற்குரியது. பரணர் என்ற ஆண்பாற்புலவர் ஆதிமந்தி காலத்தவராகவோ வெள்ளிவீதிக்கும் முந்தியவராகவோ வாழ்ந்திருக்க வேண்டும். வெள்ளிவீதியார் பாடிய திதியன் (அகம் 45) என்பானைப் பரணர் பாடியுள்ளார் (அகம் 196) இதனால் சாமக்காலப்புலவராகக் கருதஇடமுளது. எவ்வாறாயினும் ஆதிமந்தியார் வாழ்ந்த காலத்தின் பின் வாழ்ந்தவர் வெள்ளிவீதியார் என்பதும் பெறப்படும்.

ஔவையார் வாழ்ந்த காலத்திலோ, அல்லது ஔவைக்கு மூத்தவராக வாழ்ந்தவர் வெள்ளிவீதியார். இதனை ஔவையார் பாடிய அகப்பாடலில்,

''நெறி படுகவலை நிரம்பா நீளிடை
வெள்ளி வீதி போல நன்றும்
செலவு அயர்ந்தி சினால் யானே''

(அகம்:147:8-10)

என்று தலைவி கூற்றுப்பாடலில் ஔவையார் வெள்ளிவீதிபோலத் தேடிச்செல்வேன் என்று பாடுகிறார். இப்பாடலில் ஔவையார் வெள்ளிவீதியாரின் காலத்திற்கு முந்தியவராகவோ, சமகாலத்தவராகவோ வாழ்ந்தவராதல் வேண்டும். ஆனால் ஆதிமந்தியார் வாழ்ந்த காலத்துக்குப் பிந்தியவர் என்ற கருத்து உறுதியாகிறது.

மனித மனத்தில் எவ்வளவு துன்பம் தரும் நிகழ்ச்சியாக இருப்பினும் கால ஓட்டத்தில் அதுமாறி, பிறிதொரு துன்பநிகழ்ச்சி நேரும் போது முதலில் நடந்த துன்பநிகழ்ச்சி இருந்த இடத்தை நிகழ்காலத்தில் நடந்த துன்பநிகழ்ச்சி பிடிக்கும் இது இயல்பு. அதுபோன்று ஆதிமந்தியார் கணவனை இழந்து தேடிய வாழ்க்கை

பலரும் அறிந்திருந்தது என்பது உண்மையாயினும், அதன்பின் அவரைப்போலவே வெள்ளிவீதியாரும் கணவனைத் தேடி அலைந்தார் என்ற விபரம் அறிந்தனர். அவர் காலத்தில் ஔவையார் வாழ்ந்ததால் அந்நிகழ்ச்சியைப் பாடினார். இதனால் பாடலைப்படிப்போர் மனத்தில் சட்டெனத் துன்பத்தின் உச்சம் புரியும் எனக்கருதி ஔவையார் பாடினார். இதனால் ஔவையார் வெள்ளிவீதியாருக்குப் பிற்பட்டவர் என்பது பெறப்படும். பெண்பாற்புலவர்களில் காலத்தால் முற்பட்டவர் ஆதிமந்தியார் என்பதே உண்மை.

## அஞ்சிஅத்தைமகள் நாகையார்

இவர் அதியமானின் அத்தை மகள் இவர் அஞ்சியை,

"கடும் புரிப்புரவி நெடுந்தேர் அஞ்சி
நல்லிசை நிறுத்த நயம் வருபனுவல்
தொல்லிசை நிறீகிய உரைசால் பாண்மகன்"

(அகம்.352:12-15)

என்று குறிப்பிடுகிறார். இவ்வதியமான் நெடுமானஞ்சியை மிகுதியும் பாடிய பெரும் புலவர் ஔவையார். இதுபோன்று, இம் மன்னனைப் பரணரும்,

"நெடுநெறிக் குதிரைக் கூர்வேலஞ்சி
கடுமுனை யலைத்த கொடுவிலாடர்"

(அகம்.372:10-11)

என்று பாடினார். இதனால் பரணர் ஔவையார் இருவரும் சமகாலப்புலவர்கள். அதியமான் நெடுமான் அஞ்சியைப் பரணரும் பாடினார் என்பதை,

"அன்றும் பாடுநர்க்கு அரியை இன்றும்
பரணன் பாடினன் மற்கொல் மற்றுநீ"

(புறநா.99:12-13)

என்றடிகள் உணர்த்தும். இதனால் ஔவையாருக்குப் பரணர் மூத்தவராயினும் சமகாலத்தில் வாழ்ந்தவர் என்பதும். இவ்வஞ்சியைப்பாடிய அஞ்சி அத்தைமகள் நாகையாரும் இவர் காலத்தவர் என்பதும் பெறப்படும்.

### பெருங்கோழி நாய்கன் மகள் நக்கண்ணையார்

இவர் போர்வைக் கோப்பெருநற்கிள்ளியைப் (புறம் 83,84,85) பாடியவர். இம்மன்னனைச் சாத்தந்தையர் (புறம்: 81,82) என்ற ஆண்பாற்புலவரும் பாடியுள்ளார் இவர் தித்தன் என்பவனைப் பாடியவர் (1235); இத்தித்தனைப் பரணர் (அகம்: 122) பாடியுள்ளார். இதனால் பரணர் வாழ்ந்த காலப்புலவர்களில் பெருங்கோழிநாய்கன் மகள் நக்கண்ணையாரும் ஒருவர். நக்கண்ணையாரும் பெருங்கோழிநாய்கன் மகள் நக்கண்ணையாரும் ஒருவர் எனக்கருதுவோரும் உளர்[5]. எவ்வாறாயினும் அகத்தில் பாடிய நக்கண்ணையார் "அழிசி" என்ற குறுநில மன்னனைப் பாடியுள்ளார் (நற்.87) இம்மன்னனைப் பரணரும்

"அழிசி யார்க்காடன்ன விவள்
பழிதீர் மாணலந் தொலைவனகண்டே"

(குறுந்.258: 7-8)

என்று பாடியுள்ளார். இதனால் அழிசி வாழ்ந்த காலத்தில் நக்கண்ணையாரும், பரணரும் வாழ்ந்ததால் பரணர் காலப் புலவர் நக்கண்ணையார் என்பது புலப்படும்.

### மாறோக்கத்து நப்பசலையார்

இப்பெண்பாற்புலவர் கபிலரை "புலன் அழுக்கற்ற அந்தணாளன்" (புறநா.125:11) என்று குறிப்பிடுகிறார். இப்பெண்பாற்பாலர் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப் (38,39,42) பல பாடல்களில் பாடியுள்ளார். இவ்வேந்தனை ஆடுதுறை மாசாத்தனர், ஆலத்தூர் கிழார், ஆவூர் மூலங்கிழார், இடைக்காடனார், ஐயூர் முடவனார், கோவூர் கிழார், தாயங்கண்ணனார், நல்லிறையனார் வெள்ளைக்குடிநாகனார்[6] போன்றபலரும் பாடியுள்ளனர். இவர் மலையமான் திருமுடிக்காரியைப்பாடியுள்ளார். இவரைக் கபிலர், பெருஞ்சித்திரனார் போன்றோரும் பாடியுள்ளனர். இதனால் சிறப்புப்பெற்றுத் திகழ்ந்த கபிலர், பெருஞ்சித்திரனார், கோவூர் கிழார் போன்றோர் வாழ்ந்த காலத்தில் வாழ்ந்த புலவர் இவர் என்பது அறியப்படும்.

### வெண்ணிக்குயத்தியார், முடத்தாமக்கண்ணியார்

இவர் சோழன் கரிகாற் பெருவளத்தானின் வெண்ணிப்போரைப்பாடியவர்

(புறம்.66) இவரைக் கழாத்தலையாரும் பாடியுள்ளார் (புறம்.65); கடியலூர் உருத்திரங்கண்ணனார், முடத்தாமக்கண்ணியார் (பொருந.வெண்பா) போன்றோர் பாடியுள்ளனர். சோழ மன்னர்களில் கரிகாலன் என்ற பெயரில் பலர் உள்ளதாகக் குறிப்பர். இதனால் வெண்ணிக் குயத்தியார் பாடிய கரிகாலன் மூத்தவனாகக் கருதுவர். 'மாமூலனார் (அகம்.55); கருங்குழலாதனார் (புறம்.7,224) போன்றோரும் பாடியுள்ளனர். இதனால் மாமூலனார் -பரணர் வாழ்ந்த காலமாகக்கருதப்படும் கி.மு.3-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தபுலவர்[7] வெண்ணிக்குயத்தியார். முடத்தாமக்கண்ணியார் சோழன் கரிகாற் பெருவளத்தானைப் பாடியவர் இவ்விருவரில் வெண்ணிக்குயத்தியார் மூத்தோராவார். ஆற்றுப்படை நூல்களின் காலம் எட்டுத்தொகை நூல்கள் தோன்றியதற்குப்பின் தோன்றியதால் வெண்ணிக்குயத்தியார் முடத்தாமக்கண்ணியாருக்கு மூத்தவர் என்பது வெளிப்படையாக அறியமுடியும்.

## காக்கைப்பாடினியார் நச்செள்ளையார்

இவர் பாடிய குறுந்தொகைப் (210) பாடலொன்றில் "நள்ளி" என்ற குறுநில மன்னனைக் குறிப்பிட்டுள்ளார். இந்நள்ளி என்பானை இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார், கபிலர், பரணர், பெருஞ்சித்திரனார், வன்பரணர் போன்றோரும் பாடியுள்ளனர்.

காக்கைப் பாடினியார் நச்செள்ளையார் பதிற்றுப்பத்தில் ஆறாம் பத்தைப் பாடியவராவர். இவர் குடக்கோ நெடுஞ்சேரலாதன், வானவரம்பன், வேளாவிக்கோமான், மழவர் போன்றவரைப் பாடலில் குறிப்பிடுகின்றனர். காக்கைப்பாடினியாரின் காலத்தை ஆராயும் போது,

> "பதிற்றுப்பத்தின் பதிகங்கள் பிற்காலத்தில் தோன்றியவை என்று
> கூறி இக்காரணங்களால் பதிற்றுப்பத்தின் பதிகங்களை
> ஒதுக்கிவிட்டு, சங்க நூல்களின் அரசர்களைத் தொகுத்து
> வரிசைப்படுத்துவதே சரியான முறையாகும்[8]"

என்று அறிஞர் கருதுவர். காக்கைப் பாடினியார் பாடிய "வானவரம்பனை" - காப்பியாற்றுக் காப்பியனார், நக்கீரர், மாமூலனார், முரஞ்சியூர் முடிநாகனர்,

முடிநாகராயர்[9] போன்றோரும் பாடியுள்ளனர். அதுபோன்று இவர் பாடிய மழவரைக் காப்பியாற்றுக்காப்பியனார், குடவாயிற் கீரத்தனார், நக்கீரர், நப்பாலத்தனார், பாலைபாடிய பெருங்கடுங்கோ, பொதும்பில் கிழார் மகனார், மருதனிளநாகனார், மாங்குடி மருதனார், மாமூலனார்[10] ப.148, போன்றோரும் பாடியுள்ளனர். இதனால் கபிலர் வாழ்ந்த காலமான கி.மு.250 முதல் கி.மு. 175 வரையுள்ள காலத்தில்[11] வாழ்ந்தவர் என்று துணிய இடமுளது.

## பாரிமகளிர்

பாரியின் அருமைப்புதல்வியர். இவர்கள் பாடிய "அற்றைத்திங்கள்" எனத்தொடங்கும் பாடலில் பாரி நாட்டை இழந்த செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. இவர்கள் வாழ்ந்த காலம் பெரும் புலவர் கபிலன் காலம் என்பது தெளிவாகும்.

## பூதப் பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு

அரச குலப் பெண்பாற்புலவரில் ஒருவர். இவர் பாடிய புறநானூற்றில் 246-ஆம் பாட்டைப் பாடியவர். இவர் பாடலில் பூதப்பாண்டியனைக் குறிப்பிடவில்லை. இவர் தீ பாய்ந்த நிகழ்வைப் பேராலவாயாரும் (புறம்.247) பாடுவர். உரையாசியர் இவரை பூதப்பாண்டியன் தேவி என்று சுட்டுவர்[12]. இப்பாண்டிய மன்னனைப் பற்றி வேறுபாடலில்லை, இதனால் இவர் பற்றியறிய இயலவில்லை. அறிஞர் ஆராய்ந்து இவரை மாமூலனார் பரணர் வாழ்ந்த காலத்தவராகக் கருதுவர் பெருங்கோப்பெண்டின் தீ பாய்ந்த நிகழ்வினைப் பாடிய பேராலவாயர் செழியன் என்ற (அகம்.296) மன்னனைக் குறிப்பிடுகின்றார். இச்செழியனை ஆலங்குடி வங்கனார், ஆலம் பேரி சாத்தனார், இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார், கல்லாடனார், தாயங்கண்ணனார், நக்கீரர், பரணர், பேராலவாயார், மதுரைத்தத்தங்கண்ணனார், மருதனிளநாகனார், முதுகடத்தனார், விற்றுற்று வண்ணக்கன்தத்தனார்[13] போன்ற பலர் பாடியுள்ளனர். இவர்கள் வாழ்ந்த காலத்தில் வாழ்ந்தவராதலால் பரணர் காலப்புலவர் பெருங்கோப்பெண்டு என்பது புலப்படும்.

## பேய்மகள் இளவெயினியார்

சேரமான் பாலைபாடிய பெருங்கோவைப் பாடியவர் (புறம்.11). இம்மன்னனும் புலவனாகத் திகழ்ந்தவன். இவன் பாடல்களில் கொண்கான நன்னன் (நற்.391)

மழவர் (அகம்.337) போன்றோரைக் குறிப்பிட்டுள்ளார். இம் மழவரை காக்கைப்பாடினியார் நச்செள்ளையார், மாமூலனார்[14] போன்ற பலர் பாடியுள்ளனர். இதனால் பேய்மகள் இளவெயினியார் மாமூலனார் காலத்தவர் என்பது உறுதி.

## அள்ளூர் நன்முல்லையார்

இவர் பாடிய பாடலொன்றில் "செழியன்" (அகம்.46) என்ற மன்னனைக் குறிப்பிடுகின்றார். யார் என்று புலனாகவில்லை. செழியனை - ஆலங்குடி வங்கனார், ஆலம் பேரிசாத்தனார், இடைக்கழிநாட்டு நல்லூர் நத்ததனார், கல்லாடனார், தாயங்கண்ணனார், நக்கீரர், பரணர், பேராலவாயர், மதுரைத்தத்தங்கண்ணனார், மருதனிளநாகனார், முதுகூத்தனார், விற்றுற்று வண்ணக்கன்தத்தனார்[15] போன்றோர் பாடியுள்ளனர். இதனால் இவரும் பேராலவாயர் வாழ்ந்த காலமாகக் கருதப்படும் பெருங்கோப்பெண்டுவாழ்ந்தகாலப் புலவராக அள்ளூர் நன்முல்லையாரைக் கருத இடமுளது.

## கழார்க்கீரனெயிற்றியார்

இவர் பாடிய நற்றிணைப்பாடலில் (நற்.281) "சோழர்" என்று குறிப்பிடுகிறார். இச்சோழரைப் பாடியதாகப் பலபுலவர்கள்[16] சுட்டப்படுகின்றனர். அவர்களில் நக்கண்ணையார், பரணர், மாறோக்கத்துப்பசலையார் போன்றோரும் அடங்குவர். இதில் சோழ அரசன் என்று பெயர் குறிப்பிடப்படாததால் கழார்க்கீரனையிற்றியார் யாரைப்பாடினார் என்று அறிய இயலவில்லை. ஆனால், பெண்பாற்புலவரான நக்கண்ணையார், மாறோக்கத்து நப்பசலையாரும் சோழரைப் பாடியவர்களாக இருத்தல் போன்று இவரும் கருதப்படமுடியுமே தவிர இக்காலம் என்று துணிதல் இயலாது.

## கால ஆராய்ச்சியின் இடர்ப்பாடு

சங்ககாலம் இதுவெனத் துணிவதென்பது பலகாலம் இடர்ப்பாடாக இருந்த ஒன்று. பிறகு கி.மு. 5-லிருந்து பத்து நூற்றாண்டு வரை கொண்டனர். இக்கால வரையறைக்குள் ஒரே தொடராகப் பல புலவர்கள் வருகின்றனர். இதில் ஆண்பாற் புலவர், பெண்பாற்புலவர் என்ற வேறுபாடில்லை. பெண்பாற்புலவர்களும் வேந்தன், குறுநில மன்னர், புலவர்கள் போன்றோரைப் பாடியுள்ளனர்.

சங்கப் பெண்பாற்புலவர்களில் ஆதிமந்திமுதலாமவராகவும் அவரையடுத்து வெள்ளிவீதியாரும், அவரையடுத்து ஒளவையாரும் வாழ்ந்தவர்கள். மற்றுள்ள மாறோக்கத்து நப்பசலையார், பெருங்கோழிநாய்கன் மகள் நக்கண்ணையார் பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு இவர்கள் வாழ்ந்த காலம், அவர்களைப் பாடிய வேந்தர், மன்னர், புலவர்களைக் கொண்டும் உறுதி செய்யப்பெற்றன. இவர்கள் பாடியமன்னர்களைப் பாடிய பிற புலவர்கள் வாழ்ந்த காலங்களில் வாழ்ந்தவர் என்றும் காலம் உறுதிசெய்யப்பட்டுள்ளது. ''காக்கைப் பாடினியார் நச்செள்ளையார் கபிலர் காலத்தவர்.

வெண்ணிக்குயத்தியாரும், முடத்தாமக்கண்ணியாரும் பரணர் காலத்தவராகக் கருதப்பட்டுள்ளனர்.

## மேற்கோள் விளக்கம்

1. மு.வரதராசனார் - **தமிழிலக்கிய வரலாறு**, ப.

2. மேலது

3. உ.வே.சாமிநாதையர் குறுந்தொகை மூலமும் உரையும் ப-Cixvi

இவர் பாடிய பாடல்கள் பல தம் அனுபவங்களே ஆகும் என்பதும், இங்ஙனமே தம்அனுபவங்களைக் கூறும் ஆதிமந்தியார் என்ற பெண்பாற்புலவரும் இவரும் ஒரு காலத்தவர் என்பதும் தொல்காப்பிய அகத்திணையியல் சூத்திரம் 54க்கு நச்சினார்க்கினியர் எழுதியவிசேட உரையால் தெரிகின்றன என்பர்.

4. எஸ். வையாபுரிப்பிள்ளை (பதிப்)- **சங்க இலக்கியம்** இரண்டாம் ப.1450 தொகுதி

5. தாயம்மாள் அறவாணன் - **மகடூஉ முன்னிலை பெண்புலவர் களஞ்சியம்** ப.139

6. எஸ். வையாபுரிப்பிள்ளை (பதிப்)- **சங்க இலக்கியம்** - இரண்டாம் தொகுதி- ப.1472

7. பே.க.வேலாயுதம் ப.சீனிவாசன்- **சங்ககால மன்னர்வரிசை**.ப.15

8. பே.க.வேலாயுதம் ப.சீனிவாசன் - சங்ககாலமன்னர் வரிசை, ப. 

9. எஸ். வையாபுரிப்பிள்ளை (பதிப்)- **சங்க இலக்கியம்**- இரண்டாம் தொகுதி. ப.1483

10. மேலது. ப.1481

11. பே.க.வேலாயுதம் ப.சீனிவாசன் - **சங்ககால மன்னர் வரிசை**, ப.18

12. உ.வே.சாமிநாதஅய்யர் - **புறநானூறு மூலமும் உரையும்**, ப.422

13. எஸ். வையாபுரிப்பிள்ளை (பதிப்)- **சங்க இலக்கியம்**, இரண்டாம் தொகுதி, ப.1470

14. மேலது, ப.1481

15. மேலது. ப.1470

16. மேலது. ப.1473

## பெண்பாற் புலவர்களின் காலம் : அட்டவணை I

| காலம் | சேரர் (தலைநகர்) | சேரர் (தலைநகர்) | சோழர் (தலைநகர்-கழுமலம்) | சோழர் (தலைநகர்-உறந்தை) | பாண்டியர் (தலைநகர் - மதுரை | குறுநில மன்னர்கள் |
|---|---|---|---|---|---|---|
| மாமூலனார் பரணர்காலம் கி.மு. 325 - கி.மு. 250 | -மாந்தை- | தொண்டி | உருவப்பஃறேர்இளட் சேட் சென்னி முடத்தாமக்கண்ணியார் (பொருந) கரிகாலன் வெண்ணிக்குயத்தியார் (புறம் 66) <br> ஆதிமந்தி பரணர் (அகம் 76, 135, 222, 236, 376, 396) வெள்ளிவீதியார் (அகம் 45) | | ஒல்லையூர் பூதப் பாண்டியன் பெருங்கோப்பெண்டு (புறம் 246) | திதியன் (அழுந்தூர்) வெள்ளிவீதியார் (அகம் 45) <br> அழிசி நக்கண்ணையார் நற் (87) |
| கபிலர் - பிசிராந்தை யார் கி.மு. 250 கி.மு. 175 | ஆடுகோட் பாட்டுச் சேரலாதன் காக்கைப் பாடினியார்நச் செள்ளையார் (பதிற் IV) | | | போர்வைக்கோப் பெருநற்கிள்ளி பெருங்கோழி நாய்கன் மகள் நக்கண்ணையார் (புறம் 83, 84, 85) | | கண்டீரக்கோப் பெருநற்கிள்ளி காக்கைப்பாடினி யார் நச்செள்ளை யார் (குறுந் 210) |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | | <u>மாரிவண்</u><br><u>கோ</u><br>ஔவையார்<br>(புறம் 367) | - | <u>இராசசூயம் வேட்டப்</u><br><u>பெருநற்கிள்ளி</u><br>ஔவையார் | கானப்பேரெயில்<br>கடந்த உக்கிரப்<br>பெருவழுதி<br>(புறம் 367) | இருங்கோவேள்<br>மாறோக்கத்து<br>நப்பசலையார்<br>(புறம் 126)<br>ஔவையார்<br>(புறம் 367)<br><u>பாரி</u><br>பாரி மகளிர் (புறம்)<br><u>அழிசி</u><br>அஞ்சிஅத்தைமகன்<br>நாகையார்<br>(அகம் 352)<br>ஔவையார் (87-95<br>97, 101, 103, 104, 206,<br>231, 232, 235,<br>315, 390. |
| கோவூர்<br>கிழார் -<br>காலம் -<br>கி.மு.175<br>கி.மு.100 | - | - | | சோழர் - தலைநகர்<br>உறையூர்<br>குளமுற்றத்துஞ்சிய<br>கிள்ளி வளவன்<br>மாறோக்கத்துநப்பசலை<br>யார் (புறம் 37, 39,226) | - | <u>மலையமான்</u><br><u>சோழிய ஏனாதித்</u><br><u>திருக்கண்ணன்</u><br>மாறோக்கத்து<br>நப்பசலையார்<br>(புறம் 174) |

*இவ்வட்டவணை பே. க. வேலாயுதம் & ப. சீனிவாசன் எழுதிய "சங்ககால மன்னர்வரிசை" ஆண்டு 1997 என்ற நூலிலிருந்து பெண்பாற்புலவர்கள் காலம் அறியத்தயாரிக்கப்பட்டது.*

## சங்கப் பெண்பாற்புலவர்களின் கால அட்டவணை - II

| காலம் | சேரர் | சோழர் | பாண்டியர் |
|---|---|---|---|
| கி.மு. 350 - 325 | - | - | ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் பெருங்கோப்பெண்டு (புறம் 246) |
| கி.மு. 300 - 275 | - | போர்வைக்கோப்பெருநற் கிள்ளி (என்ற) தித்தன் பெருங் கோழி நாய்கன் மகள் நக்கண்ணையார் (புறம் 83, 84, 85) | |
| கி.மு. 275 - 250 | - | சோழன்கரிகால் பெருவளத்தான் வெண்ணிக்குயத்தியார் (புறம் 66) | |
| கி.மு. 250 - 225 | சேரமான் பாலைபாடிய பெருங் கடுங்கோ பேய்மகள் இளவெயினியார் (புறம் 11) | - | - |

| காலம் | சேரர் | சோழர் | பாண்டியர் |
|---|---|---|---|
| கி.மு. 200 - 175 | ஆடுகோட்பாட்டுச்சேரலாதன் காக்கைபாடினியார் நச்செள்ளையார் (ப.திற்று | - | - |
| கி.மு. 175 - 150 | - | சோழன் குளமுற்றதத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் மாறோக்கத்து நப்பசலையார் (புறம் 37, 39, 226) | - |
| கி.மு. 150 - 100 | சேரமான் மாரிவெண்கோ ஔவையார் (புறம் 367) | சோழன் இராச சூயம் வேட்டபெருநற்கிள்ளி ஔவையார் (புறம் 367) | பாண்டியன் கானப்பேரெயில் கடந்த உக்கிரப்பெருவழுதி ஔவையார் (புறம் 367) |

**இந்த அட்டவணை பத்மஜா ரமேஷ் & வி.பி. புருஷோத்தமன் எழுதிய "சங்க கால மன்னர்களின் காலநிலை" என்ற நூலிலிருந்து பெறப்பட்டவை பதி-2000**

## பெண்பாற்புலவர்கள் பாடல்களில் இடம்பெற்ற உவமைகள் குறுந்தொகை

1. இமைதீய்ப் பன்ன கண்ணீர் தாங்கி (குறுந். 4.2)
2. நாலூர்க் கோசர் நன்மொழி போல (குறுந். 15.3)
3. மனவுக்கோப் பன்ன நன்னெடுங்கூந்தல் (குறுந். 22.3)
4. நல்லான் தீம்பால் நிலத்துக் காவுங் (குறுந். 27.2)
5. பெயல்நீர்க் கேற்ற பசுங்கலம் போல (குறுந்.29.2)
6. ....................உயர்கோட்டு மகவுடை மந்தி போல (குறுந்.29.5-6)
7. வண்டுபடு மலரிற் சாஅய்த் (குறுந்.30.5)
8. சினைப்பசும் பாம்பின் சூன்முதிர்ப்பன்ன (குறுந்.35.2)
9. நல்லராக் கதுவி யாங்கென் (குறுந்.43.4)
10. ஐயவி அன்ன சிறுவீஞாழல் (குறுந்.50.1)
11. நூலறு முத்திற் காலொடு பாறித் (குறுந்.51.2)
12. மாக்கழி மணிப்பூக் கூம்பத் தூத்திரை (குறுந்.55.1)
13. ஞாயிறுகாயும் வெவ்வறை மருங்கிற்
    கையில் ஊமன் கண்ணிற் காக்கும்
    வெண்ணெய் உணங்கல் போலப் (குறுந்.58.3-5)
14. .......................................கிள்ளை
    வளைவாய்க் கொண்டவேப்ப ஒண்பழம்
    புதுநாண் நுழைப்பான் நுதிமாண் வள்ளுகிர்ப்
    பொலங்கல ஒருகா சேய்க்கும் (குறுந்.67.1-3)
15. பூழ்க்காலன்ன செங்கால் உழுந்தின் (குறுந்.68.1)
16. நுகம்படக் கடக்கும் பல்வேல் அழினி
    முனையான் பெருநிரை போலக் (குறுந்.80.6)
17. கொன்முனை இரவூர் போலச் (குறுந்.91.7)
18. நீடிய மரத்த கோடுதோய் மலிர்நிறை
    இறைத்துணச் சென்றற் றாஅங்கு (குறுந்.99.5)
19. வான்றோய் வற்றே காமம் (குறுந்.102.3)
20. மாரிஆம்ப லன்ன கொக்கின் (குறுந்.117.1)

21. தொகுமுகை இலங்கெயி றாக (குறுந்.126.4)

22. வேதின வெரிநின் ஓதிமுது போத்து (குறுந்.140.1)

23. வான்பூங் கரும்பின் ஓங்குமணற் சிறுசிறை
தீம்புனல் நெரிதர வீய்ந்துக் காஅங்குத் (குறுந்.149.3-4)

24. வாள் போல் வைகறை வந்தன்றால் எனவே (குறுந்.157.4)

25. பாணர் பசுமீன் சொரிந்த மண்டைபோல (குறுந்.169.4)

26. ஏமூர்ப் பொதுவினைக் கோரூர் யாத்த
உலை வாங்கு மிதிதோல் போலத் (குறுந்.172.5-6)

27. வரைமுதிர் தேனிற் போகி யோனே (குறுந்.176.4)

28. ஏறுடை மழையிற் கலிழும்என் எனஞ்சே (குறுந்.176.7)

29. ஆம்பல் குறுநீர் நீர்வேட் டாங்கிவள் (குறுந்.178.3)

30. தொழுதுகாண் பிறையிற் றோன்றி யாறுமக் (குறுந்.178.5)

31. பழூஉப்பல் லன்ன பருவுகிர்ப்பா வடி (குறுந்.180.1)

32. புல்லென் காயாப் பூக்கெழு பெருஞ்சினை
மென்மயில் எருத்தில் தோன்றும் (குறுந்.183.5-6)

33. கொள்ளைப் புனத்த முல்லை மென்கொடி
எயிறென முகைக்கு நாடற்குத் (குறுந்.186.2-3)

34. மின்னின் றூவி இங்குயில் பொன்னின்
உரைதிகழ் கட்டளை கடுப்ப மாச்சினை (குறுந்.192.3-4)

35. கூதிர் உருவிற் கூற்றம் (குறுந்.197.4)

36. புன்புலத் தமன்ற சிறியிலை நெருஞ்சிக்
கட்கின் புதுமலர் முட்பயந் தாஅங் (குறுந்.202.3-4)

37. கடவுள் நண்ணிய பாலோர் போல (குறுந்.203.4)

38. வெருகுசிரித் தன்ன பசுவீமென்பிணி (குறுந்.220.4)

39. தொண்டி யன்னவென் நலந்தந்து (குறுந்.238.4)

40. கடுஞ்சூல் மகளிர் போலநீர்கொண்டு (குறுந்.287.5)

41. முழவுமுத லரைய தடவுநிலைப் பெண்ணை (குறுந்.301.1)

42. கருங்கால் வெண்குருகு மேயும்
பெருங்குளம் ஆயிற்றென் இடைமுறை நிறைந்தே (குறுந்.325.5-6)

43. சிறுநா வொண்மணி விளரி யார்ப்பக் (குறுந்.336.3)

44. இருங்கழி நெய்தல் போல (குறுந்.336.5)

45. அரில் பவர்ப் பிரம்பின் வரிப்புற நீர்நாய் (குறுந்.364.1)

46. மாலையோ அறியேன் மன்னே மாலை

நிலம்பரந் தன்ன புன்கணோடு (குறுந்.386.4-5)

47. கவணை அன்ன பூட்டுப் பொரு தசாஅ

உமணொருத் தொழுகைத் தோடுநிரைத் தன்ன (குறுந்.388.3-4)

## நற்றிணையில் இடம் பெறும் உவமைகள்

1. பூங்கண் ஆயம் ஊக்க ஊங்காள்

நல்கூர் பெண்டின் அமுதனள் பெயரும் (நற்.90.7-8)

2. இறவுப்புறத்தன்ன பிணர்படு தடவுமுதல்

சுறவுக்கோட் டன்ன முள்ளிலைத் தாழை (நற்.19.1-2)

3. பெருங்களிற்று மருப்பின் அன்ன அரும்புதிர்பு (நற்.19.3)

4. விழவுக்களம் கமழும் உரவுநீர்ச் சேர்ப்ப (நற்.19.5)

5. துறைபோகு அறுவைத் தூமடியன்ன (நற்.70.2)

6. உள்ளூர் மாஅத்த முள்ளெயிற்று வாவல்

ஓங்கல் அஞ்சினைத் தூங்குதுயில் பொழுதின்

வெல்போர்ச் சோழன் அழிசியம் பெருங்காட்டு

நெல்லியம் புளிச்சுவை கனவி யாஅங்கு (நற்.87.1-4)

7. .............அரவுத்தலை பனிப்பப்

படுமழை உருமின் உறுகுரல் (நற்.129.7-8)

8. கவறு பெயர்த்தன்ன நில்லா வாழ்க்கையிட் (நற்.243-5)

9. கையறத் துறப்போர்க் கழறுவபோல (நற்.243.6)

10. வெல்போர்ச்சோழர் கழாஅர்க் கொள்ளும்

நல்வகை மிகுபலிக் (நற்.281.3)

11. முரிந்த சிலம்பின் எரிந்த வள்ளியின்

புறன் அவிழ்த் தொலிவரும் தாழிருங் கூந்தல் (நற்.295.1-2)

12. கலிமடைக் கள்ளின் சாடியன்ன (நற்.295.7)

13. வளியெறி வயிரின் (நற்.304.3)

14. மணிமிடை பொன்னின் மாமை சாயஎன் (நற்.304.6)

15. அசுணம் கொல்பவர் கைபோல் நன்றும் (நற்.304.8)

16. சிறைகுவிந்திருந்த பைதல பார்வைக்குருகின் (நற்.312.4)

17. கோடைத் திங்களிற் பனிப்போள் (நற்.312.8)

18. சோறு சொரிகுடையிற் கூம்புமுகை அவிழ (நற்.335.5)

19. பால்மலிகடலின் பரந்து பட்டன்று (நற்.348.2)

20. உண்கண் ஒப்பின் நீலம் அடைச்சி (நற்.357.8)

21. காயாங்குன்றத்துக் கொன்றை போல (நற்.371.1)

22. வேர்கிளர் மாஅத் தந்தளிர் போல (நற்.381.4)

23. ...........இருஞ்சேண் விளங்கத்

தேர்வீ சிருக்கை போல (நற்.381.8-9)

24. வாளை வாளின்பிறழ நாளும் (நற்.390.1)

25. வரைபோல் யானை வாய்மொழி முடியன் (நற்.390.9)

26. பொன்செய் கொல்லனின் முன்னிய இரட்ட (நற்.394.3)

## அகநானூற்று உவமைகள்

1. முடவுமுதிர் பலவின் குடமருள் பெரும்பழம்

பல்கிளைத் தலைவன் கல்லாக்கடுவன்

பாடிமிழருவிப் பாறை மருங்கின்

ஆடுமயின் முன்னதாகக் கோடியர்

விழவுகொண் மூதூர்விறலி பின்றை

முழவன் போல அகப்படத் தழீஇ (அக.நா.352.1-6)

2. களிறுடை யருஞ்சமந் ததைய நூறும்

ஒளிறுவாட்டானைக் கொற்றச் செழியன்

பிண்டநெல்லின் அள்ளூர் அன்ன (அக.நா.46.12-13)

3. உளர்பெயல் வளர்த்த பைம்பயிர்ப்புறவிற்

பறைக்கணன்ன நிறைச்சுனை தோறுந் (அக.நா.5-6)

4. சிறற்சிற கேய்ப்ப வறற்கண் விரித்த (அக.நா.324.10)

5. நிரை செல் பாம்பின் விரைபுநிர் முடுகச்

செல்லும் நெடுந்தகைத் தேரே (அக.நா.324.13-14)

6. தன் வரை மருள் மார்பு (அக.நா.384.12)

7. நெருப்பெனச் சிவந்த உருப்பவிர் அம்காட்

டிலையில (அக.நா.11.2-3)

8. ...........மலர்ந்த முகையில் இலவம்
கலிகொள் ஆயம் மலிபுதொகு பெடுத்த
அஞ்சுடர் நெடுங்கொடி பொற்பத் தோன்றிக் (அக.நா.11.3-5)

9. வம்பு விரித்தன்ன பொங்குமணற் கான்யாற்றுக் (அக.நா.11.8)

10. மெய்புகு அன்ன கைகவர் முயக்கம் (அக.நா.11.10)

11. நீர்வார் நிகர் மலர் ஒப்ப (அக.நா.11.12)

12. அறுகுளம் நிறைக்குந போல (அக.நா.11.13)

13. ஓங்குமலைச் சிலம்பிள் பிடவுடன் மலர்ந்த
வேங்கை வெறித்தலை வேறு வகுத்தன்ன (அக.நா.147.1-2)

14. விசும்புவிசைத் தெறிந்த கூதளங் கோதையில் (அக.நா.273.1)

15. இடைபிற ரறிதலஞ்சி மறைகரந்து
பேஎய் கண்ட கனவிற் பன்மாண் (அக.நா.303.1-2)

16. மறமிகு தானைப் பசும்பூட் பொர்றையன்
கார்புகன் றெடுத்த சூர்புகல் நனந்தலை
மாயிருங் கொல்லி யுச்சித் தாஅய்ற்
ததைந்து செல்லருவியின் அலரெழப் பிரிந்தோர் (அக.நா.303.4-7)

17. வரைபுரை களிற்றொடு நன்கலன் ஈயும்
உரைசால் வண்புகழ்ப் பாரி பரம்பின்
நிரைபறைக் குரீகியினங்காலைப் போகி
முடங்குபுறச் செந்நெற்றரீஇயர் ஓராங்கு
முடங்குபுறச் செந்நெற்றரீஇயர் ஓராங்கு
இரைதேர் கொட்பின வாகிப் பொழுதுபடப்
படர் கொண்மாலைப் படர்ந் தந்தாங்கு (அக.நா.303.9-14)

18. வறன் மரம் பொருந்திய சிற்வீடுமணர்
கணநிரை மணியினார்க்குஞ் சுரனிறந்து (அக.நா.303.17-18)

19. அழிநீர் மீன்பெயர்ந் தாங்கவர் (அக.நா.303.19)

20. களிற்றிரை தெரீஇய பார்வல் ஒதுக்கின்
ஒளித்தியங்கு மரபின் வயப்புலி போல (அக.நா.22.14-15)

21. ஓவத்தன்ன வினைபுனை நல்இல் (அக.நா.98.11)

22. பாவை யன்ன பலராய் மாண்கவின் (98.12)

23. பொறியமை பாவையின் தூங்கல் வேண்டின் (அக.நா.98.19-20)

24. வாடல் உழிஞ்சில் விளைநெற்றந்துணர்
ஆடுகளப் பறையின் அரிப்பன வொலிப்பக் (அக.நா.45.1-2)

25. அரிநுண்பசலை பாஅய்ப் பீரத்
தெழின் மலர் புரைதல் வேண்டும் அலரே
................................. அலரே (அக.நா.45.7-8)

26. அன்னி குறுக்கைப் பறந்தலைத் திதியன்
தொன்னிலை முழுமுதல் துமியப் பண்ணிப்
புன்னை குறைத்த ஒன்றை வயிரியர்
இன்னிசை யார்ப்பினும் பெரிதே (அக.நா.45.8-12)

27. கடல்கால் கிளர்ந்த வென்றி நல்வேல்
வான வரம்பன் அடன்முனைக் கலங்கிய
உடைமதில் ஓரரண் போல (அக.நா.45.16-18)

28. காதலற்கெடுத்த சிறுமையொடு நோய்கூர்ந்
தாதி மந்தி போலப் பேதுற்று
அலந்தனென் .... (அக.நா.45.13-15)

29. முருக்கரும் பன்ன வள்ளுகிர் வயப்பிணவு (அக.நா.362.5)

30. ............ நம் கிடைமுலைச்
சுணங்கணி முற்றத் தாரம் போலவுஞ்
சிலம்பு நீடு சோலைச் சிதர்தூங்கு நளிர்ப்பின்
இலங்கு வெள்ளருவி போலவும் (அக.நா.362.11-14)

31. எளிதிரைத் திவலை தூஉஞ்சிறு கோட்டுப்
பெருங்குளங் காவலன் போல (அக.நா.252.12-13)

32. தொடலை ஆயமொடு (அக.நா.110.6)

33. தடமென் பணைத்தோள் மடநல்லீரே (அக.நா.110.10)

34. கோட்டு வட்டுருவின் புலவுநாறு முட்டை (அக.நா.160.6)

35. வாவுடை மையின் வள் பிற்காட்டி
ஏத்தொழில் நவின்ற எழில்நடைப்புரவி (அக.நா.160.10-11)

36. பாம்புயர் தலையிற் சாம்புவன நிவப்ப (அக.நா.160.14)

37. களிறுயிர்த் தன்ன கண்ணழி துவலை

முளரிகாயும் முன்பனிப் பால்நாள்

குன்று நெகிழ்ப்பன்ன (அக.நா.163.7-9)

38. ...................... புனல்கால்

அயிரிடு குப்பையின் நெஞ்சு நெகிழ்த்தவிழ (அக.நா.163.10-11)

39. எஃகுறு பஞ்சித் துய்ப்பட்டன்ன (அக.நா.217.2)

40. கோடைப் பூளையின் வாடையொடு துயல்வரப் (அக.நா.217.5)

41. தோலெறி பாண்டிலின் (அக.நா.217.8)

42. சுடர்கொள் அகலில் சுருங்கு பினி அவிழ (அக.நா.235.8)

43. விசும்பணி மீனிற் பசும்புதலணியக் (அக.நா.235.10)

44. மாரியங் குருகின் ஈரியகுரங்க (அக.நா.235.14)

45. துள்ளுப்பெயல் கழித்த பின்றைப் புகையுறப்

புள்ளிநுண் துவலை பூவகம் நிறையக் (அக.நா.294.2-3)

46. நீர் வார் கண்ணிற் கருவிளை மலர (அக.நா.294.5)

47. துய்த்தலைப்பூவின் புதலிவர் ஈங்கை

நெய்த்தோய்த்தன்ன நிர் நனையந்தளிர் (அக.நா.294.6-7)

## புறநானூற்றில் - உவமைகள்

1. புலிசேர்ந்து போகிய கல்லளை போல (புறம்.86.4)

2. அணில்வரிக் கொடுங்காய் வாள் போழ்ந்திட்ட

காழ்போல் நல்விளர் நறுநெய் தீண்டாது (246.4-5)

3. ஓவத்தன்ன இடனுடை வரைப்பிற்

பாவையன்ன குறுந்தொடி மகளிர் (251.1-2)

4. தில்லையன்ன புல்லென் சடையோடு (252.2)

5. அடிபுனை தொடுகழன் மையணற்காளைக்கென் (83.1)

6. யாமே, புறஞ்சிறை யிருந்தும் பொன்னன்னம்மே (84.2)

7. ஏமுற்றுக்கழிந்த மள்ளர்க்

குமணர் வெடூஉந் துறையன்னன்னே (84.5-6)

8. முழாவரைப் போந்தை பொருந்திநின் (85.7)

9. பெருமலை விடரகத் துருமெறிந்தாங்குப்

.............................. கங்குல் (37.4)

10. துயில் மடிந்தன்ன தூங்கிருள் (126.7)

11. பறையிசையருவி முள்ளூர்ப் பொருந (126.8)

12. ........................... முள்ளெயிற்

றரவெறி யுருமின் முரசு எழுந்தெலிப்ப (126.18-19)

13. .......................... கடுந்திறல்

அஞ்சன வுருவன் தந்து நிறுத்தாங் (174.4-5)

14. மதிமருள் வெண்குடை காட்டிய காட்டியக் குடை (174.15)

15. உரும் உரறு கருவிய மழை பொழிந்தாங்கு (174.28)

16. விழவு மேம்பட்ட நற்போர்

முழவுத்தோ ளென்னையைக் காணாஒங்கே (88.5-6)

17. மீனுண் கொக்கின் நூவி யன்ன (277.1)

18. பாடுநர் போலுந் கைதொழு தேத்தி (226.3)

19. கழிகல மகளிர் போல (280.14)

20. வெடிவேய் கொள்வது போல (302.1)

21. கூம்புவிடு மெம்மினி யவிழ்த்த வாம்பற்

றேம்பா யுள்ள தங்கமழ் மடருணப் (383.8-9)

22. பாம்புரியன்ன வடிவின காம்பின் (383.10)

23. எறிகோல் அஞ்சா அரவின் அன்ன (89.5)

24. உடைவளை கடுப்ப மலர்ந்த காந்தள் (90.1)

25. எழுமரங்கடுக்குந் தாடோய் தடக்கை (90.10)

26. பால்புரை பிறைறுதற் பொலிந்த சென்னி

நீலமணிமிடற்றொருவன் போல (91.5-6)

27. யாழொடுங்கொள்ளா (92.1)

28. ஊர்க்குறு மாக்கள் வெண்கோடு கழாஅலின்

நீர்த்துறைபடியும் பெருங்களிறு போல (94.1-2)

.......................................................

துன்னருங் கடாஅம்போல (94.4)

29. பூப்போலுண்கண் பசந்த தோணுணுகி (96.4)

30. .................. நிலத்திரைக்குக் கடற்றானைப் (97.14)

31. கூற்றத்தனையை யாகளிற் போற்றார் (98.17)

32. தொன்னிலை மரபின் நின் முன்னோர் போல (99.4)

33. வரிவயம் பொருத வயக்களிறு போல (10.7)

34. கோட்டிடை வைத்த கவளம் போலக் (101.7)

35. ............................: உமணர்

கீழ்மரத்தியாத்த சேமவச் சன்ன (102.5)

36. ............................ நெடியோய் திங்கள்

நாணிறை மதியத் தனையை (102.6-7)

37. ஈர்ப்புடைக் கரா அத்தன்ன (104.4)

38. ............................... குன்றத் தன்னதோர்

பெருங்களிறு நல்கி யோனேயன்னதோர் (140.7-8)

39. மழுவுடைக் காட்டகத்தற்றே (206.12)

40. பனித்துறைப் பகன்றை நறைக்கொண்மாமலர்

சூடாது வைகியாங்குப் (235.18-19)

41. எறிபுனக் குறவன் குறையலன்ன (231.1)

42. விசும்புற நீளினு நீள்க பசுங்கதிர்த்

திங்களன்ன வெண்குடை (231.4-5)

43. குயில்வாயன்ன கூர்முகை (269.1)

44. புத்தகற் கொண்ட புலிக்கண் வெப்பர் (269.4)

45. வெள்ளை வெள்யாட்டுச் செச்சை போலத் (286.1)

46. .............................. தச்சன்

அடுத்தெறி குறட்டினின்று மாய்ந்தனனே (290.4-5)

47. உறைப்புழி யோலை போல (290.7)

48. கடல் கிளர்ந்தன்ன கட்டூர் நாப்பன் (295.1)

49. இல்லிறைசெரீஇய ஞெலிகோல்போல

தோன்றா திருக்கவும் வல்லன் மற்றதன்

கான்றுபடு கனையெரி போலத் (315.4-6)

50. நாகத்தன்ன பாகார் மண்புலம் (367.13)

51. முத்தீப் பிரையக் காண்டக விடுத்த (367.13)

52. விழவணி வியன் களமன்ன (390.4)

53. மலைக்கணத்தன்ன மாடஞ் சிலம்பவெண் (390.7)

54. முதுநீர்ப் பாசியன்ன (390.14)

55. திருமலரன்ன புதுமடிக்கொளீஇ (390.15)

56. அமிழ்தன மரபினூன்றுவை யடிசில் (390.17)

57. அகடுநனை வேங்கை வீகண்டன்ன (390.21)

58. பொருகளிற்றடிவழியன்ன வென்கை (392.4)

59. உருகெழுமன்ன ராரெயில் கடந்து (392.6)

60. தேட்கடுப்பன்ன நாட்படு தேறல் (392.16)

61. கோண்மீனன்ன பொலங்கலத் தளைஇ (392.17)

62. தரும்பெற லமிழ்த மன்ன (392.20)

63. கலந்தொடா மகளிரி னிகழ்ந்து நின்றவ்வே (299.7)

64. மானுனை யன்ன குடுமித் (310.7)

# சங்ககாலப் பெண்பாற் புலவர்களின் பாடல்கள்

## 1. அஞ்சியத்தைமகள் நாகையார் பாடல்

1. அகநானூறு - 352

குறிஞ்சி

தலைவி கூற்று

வரைந்தெய்திய பின்றை மணமகனைக்கண் சென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது. வரைவுமலிந்து சொல்லிய தோழிக்குத் தலைமகள் சொல்லியதூஉம்ஆம்.

முடவுமுதிர் பலவின் குடம்மருள் பெரும்பழம்
பல்கிளைத் தலைவன் கல்லாக் கடுவன்
பாடுஇமிழ் அருவிப் பாறை மருங்கின்
ஆடுமயில் முன்னது ஆகக் கோடியர்
விழவுகொள் மூதூர் விறலி பின்றை

முழுவன் போல வகப்படத் தழீஇ
இன்துணைப் பயிருங் குன்ற நாடன்
குடிநன்கு உடையன் கூடுநர்ப் பிரியலன்
கெடுநா மொழியலன் அன்பினன் எனநீ
வல்ல கூறி வாய்வதின் புணர்த்தோய்

நல்லை காணின் காதல்அம் தோழீ
கடும்பரிப் புரவி நெடுந்தேர் அஞ்சி
நல்லிசை நிறுத்த நயம்வரு பனுவல்
தொல்லிசை நிறீஇய வுரைசால் பாண்மகன்
எண்ணுமுறை நிறுத்த பண்ணி னுள்ளும்

புதுவது புனைந்த திறத்தினும்
வதுவை நாளினும் இனியனால் எமக்கே.

## 2. அஞ்சில் அஞ்சியார் பாடல்

2. நற்றிணை - 90

மருதம்

தோழி கூற்று

தோழி தலைமகளுக்கு உரைப்பாளாய்ப் பாணனை நெருங்கி வாயின் மறுத்தது.

ஆடு இயல் விழவின் அழுங்கல் மூதூர்
உடையோர் பான்மையின் பெருங்கை தூவா

வறன்இல் புலைத்தி எல்லித் தோய்த்த
புகாப்புகர் கொண்ட புன்பூங் கலிங்கமொடு
வாடா மாலை துயல்வர ஓடிப்

பெருங்கயிறு நாலும் இரும்பனம் பிணையற்
பூங்கண் ஆயம் ஊக்க ஊங்காள்
அழுதனள் பெயரும் அஞ்சில் ஓதி
நல்கூர் பெண்டின் சில்வளைக் குறுமகள்
ஊசல் உறுதொழில் பூசற் கூட்டா

நயன் இல் மாக்களொடு கெழீஇப்
பயன் இன்று அம்ம இவ் வேந்துடை யவையே.

## 3. அள்ளூர் நன்முல்லையார் பாடல்கள்

3. அகநானூறு - 46

மருதம்

தோழி கூற்று

வாயில்வேண்டிச் சென்ற தலைமகற்குத் தோழி வாயில் மறுத்தது.

சேற்றுநிலை முனைஇய செங்கட் காரான்
ஊர்மடி கங்குலில் நோன்தளை பரிந்து
கூர்முள் வேலி கோட்டின் நீக்கி
நீர்முதிர் பழனத்து மீன்உடன் இரிய
அந்தூம்பு வள்ளை மயக்கித் தாமரை

வண்டுஊது பனிமலர் ஆரும் ஊர
யாரை யோநிற் புலக்கேம் வாருற்று
உறையிறந் தொளிருந் தாழிருங் கூந்தல்
பிறரும் ஒருத்தியை நம்மனைத் தந்து
வதுவை அயர்ந்தனை யென்ப அஃதுயாம்

கூறேம் வாழியர் எந்தை செறுநர்
களிறுடை யருஞ்சமம் ததைய நூறும்
ஒளிறுவாட் தானைக் கொற்றச் செழியன்
பிண்ட நெல்லின் அள்ளூர் அன்னஎன்
ஒண்தொடி நெகிழினும் நெகிழ்க

சென்றீ பெருமநிந் தகைக்குநர் யாரே.

4. குறுந்தொகை - 32

குறிஞ்சி

பின்நின்றான் கூற்று

காலையும் பகலும் கையறு மாலையும்
ஊர்துஞ்சு யாமமும் விடியலும் என்றுஇப்
பொழுதுஇடை தெரியின் பொய்யே காமம்
மாஎன மடலொடு மறுகில் தோன்றித்
தொற்றெனத் தூற்றலும் பழியே
வாழ்தலும் பழியே பிரிவுதலை வரினே.

5. குறுந்தொகை - 67

பாலை

தலைவி கூற்று

பிரிவிடை ஆற்றாத தலைமகள் தொழிக்கு உரைத்தது.

உள்ளார் கொல்லோ தோழி கிள்ளை
வளைவாய்க் கொண்ட வேப்ப ஒண்பழம்
புதுநாண் நுழைப்பாள் நுதிமாண் வள்உகிர்ப்
பொலங்கல ஒரு காசு ஏய்க்கும்
நிலம்கரி கள்ளியங் காடு இறந்தோரே.

6. குறுந்தொகை - 68

குறிஞ்சி

தலைவிகூற்று

பிரிவிடைக் கிழத்தி மெலிந்து கூறியது.

பூழ்க்கால் அன்ன செங்கால் உழுந்தின்
ஊழ்ப்படு முதுகாய் உழையினம் கவரும்
அரும்பனி அற்சிரந் தீர்க்கும்
மருந்துபிறிது இல்லைஅவர் மணந்த மார்பே.

7. குறுந்தொகை - 93

முல்லை

தலைவி கூற்று

வாயிலாகப் புக்க தோழிக்குத் தலைவி வாயில் மறுத்தது.

நல்நலம் தொலைய நலம்மிகச் சாஅய்
இன்உயிர் கழியினும் உரையல் அவர்நமக்கு
அன்னையும் அத்தனும் அல்லரோ
புலவியஃது எவனோ அன்பிலங் கடையே.

8. குறுந்தொகை - 96

குறிஞ்சி

தலைவி கூற்று

தலைமகனை இயற்பழித்துத் தெருட்டுந் தோழிக்குத் தலைமகள் இயற்படச் சொல்லியது.

அருவி வேங்கைப் பெருமலை நாடற்கு
யான் எவன் செய்கோ என்றி யான்அது
நகைஎன னணரேன் ஆயின்
என் ஆகுவைகொல்? நன்னுதல்! நீயே.

9. குறுந்தொகை - 140

பாலை

பொருள்வயிற் பிரிந்தவிடத்து நீ ஆற்றுகின்றிலை யென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

வேதின வெரிநின் ஓதி முதுபோத்து
ஆறுசெல் மாக்கள் புட்கொளப் பொருந்தும்
சுரனே சென்றனர் காதலர் உரன் அழிந்து
ஈங்குயான் அழுங்கிய எவ்வம்
யாங்கு அறிந் தன்று இவ் அழுங்கல் ஊரே.

10. குறுந்தொகை - 157

மருதம்

தலைவி கூற்று

பூப்பெய்திய தலைமகள் உரைத்தது.

குக்கூ என்றது கோழி அதன்எதிர்
துட்கென் றன்றுஎன் தூஉ நெஞ்சம்
தோள்தோய் காதலர்ப் பிரிக்கும்
வாள்போல் வைகறை வந்தன்றால் எனவே.

11. குறுந்தொகை - 202

மருதம்

தலைவிகூற்று

வாயிலாகப் புக்க தோழிக்குத் தலைமகள் வாயில் மறுத்தது.

நோம், என்நெஞ்சே! நோம் என் நெஞ்சே!
புன்புலத்து அமன்ற சிறியிலை நெருஞ்சிக்
கட்குஇன் புதுமலர் முட்பயந் தாஅங்கு
இனிய செய்தநம் காதலர்

இன்னா செய்தல் நோம் என் நெஞ்சே.

12. குறுந்தொகை - 237

பாலை

தலைவன் கூற்று

பொருள்முற்றி மீள்வான் தேர்ப்பாகற்கு உரைத்தது.

அஞ்சுவது அறியாது அமர்துணை தழீஇ
நெஞ்சுநப் பிரிந்தன்று ஆயினும் எஞ்சிய
கைபிணி நெகிழின்அஃது எவனோ நன்றும்
சேய அம்ம இருவாம் இடையே
மாக்கடல் திரையின் முழங்கி வலன்ஏர்பு
கோட்புலி வழங்கும் சோலை
எனைத்து என்று எண்ணுகோ முயக்கிடை மலைவே.

13. புறநானூறு - 306

திணை - வகை

துறை - மூதின் முல்லை

களிறுபொரக் கலங்கு கழல்முள் வேலி
அரிதுஉண் கூவல் அங்குடிச் சீறூர்
ஒலிமென் கூந்தல் ஒள்நுதல் அரிவை
நடுகற் கைதொழுது பரவும் ஒடியாது
விருந்துஎதிர் பெறுகதில் யானே என்னையும்
ஒ... ... ... வேந்தனொடு
நாடுதரு விழுப்பகை எய்துக எனவே.

## 4. ஆதிமந்தியார் பாடல்

14. குறுந்தொகை - 31

மருதம்

தலைவன் கூற்று

நொதுமலர் வரைவுழித் தோழிக்குத் தலைமகன் அறத்தொடு நின்றது.

மள்ளர் குழீஇய விழவி னானும்
மகளிர் தழீஇய துணங்கை யானும்
யாண்டுங் காணேன் மாண்தக் கோனை
யானும் ஓர்ஆடுகள மகளே என்கைக்
கோடுஈர் இலங்குவளை நெகிழ்த்த
பீடுகெழு குரிசிலும் ஓர்ஆடுகள மகனே.

## 5. ஊண் பித்தை பாடல்

15. குறுந்தொகை - 232

பாலை

தோழி கூற்று

பிரிவிடைத் தோழி வற்புறுத்தியது.

உள்ளார் கொல்லோ தோழி உள்ளியும்
வாய்ப்புணர்பு இன்மையின் வாரார் கொல்லோ
மரற்புகா அருந்திய மாஎருத்து இரலை
உரற்கால் யானை யொடித்துஉண்டு எஞ்சிய
யாஅ வரிநிழல் துஞ்சும்
மாயிருஞ் சோலை மலையிறந் தோரே

## 6. ஒக்கூர் மாசாத்தியார் பாடல்கள்

16. அகநானூறு - 324

முல்லை

உழையர் கூற்று

வினைமுற்றிய தலைமகன் கருத்துணர்ந்து உழையர் சொல்லியது.

விருந்தும் பெறுகுநள் போலுந் திருந்து இழைத்
தடமென பணைத்தோள் மடமொழி அரிவை
தளிர்இயல் கிள்ளை யினிதினின் எடுத்த
வளராப் பிள்ளைத் தூவி அன்ன
உளர்பெயல் வளர்த்த பைம்பயிர்ப் புறவிற்

பறைக்கண் அன்ன நிறைச்சுனை தோறும்
துளிபடு மொக்குள் துள்ளுவன சாலத்
தொளிபொரு பொகுட்டுத் தோன்றுவன மாய
வளிசினை உதிர்த்தலின் வெறிகொள்பு தாஅய்ச்
சிரற்சிறகு ஏய்ப்ப அறற்கண் வரித்த

வண்டு உண்நறுவீ துமித்த நேமி
தண்ணில மருங்கில்போழ்ந்த வழியுள்
நிரைசெல் பாம்பின் விரைபுநீர் முடுகச்
செல்லும் நெடுந்தகை தேரே
முல்லை மாலை நகர்புகல் ஆய்ந்தே.

17. அகநானூறு - 384

முல்லை

உழையர் கூற்று

வினைமுற்றிய தலைமகனது வரவுகண்டு உழையர் சொல்லியது.

இருந்த வேந்தன் அருந்தொழில் முடித்தெனப்
புரிந்த காதலொடு பெருந்தேர் யானும்
ஏறியது அறிந்தன்று அல்லது வந்த
ஆறுநனி யறிந்தன்றோ இலனே தாஅய்
முயற்பறழ் உகளு முல்லையம் புறவில்

கவைக்கதிர் வரகின் சீறூர் ஆங்கண்
மெல்இயல் அரிவை இல்வயின் நிறீஇ
இழிமின் என்ற நின் மொழி மருண்டிசினே
வான்வழங்கு இயற்கை வளிபூட் டினையோ?
மான்உரு வாகநின் மனம்பூட் டினையோ?

உரைமதி வாழியோ வலவ எனத்தன்
வரைமருள் மார்பின் அளிப்பனன் முயங்கி
மனைக் கொண்டு புக்கனன் நெடுந்தகை
விருந்துஏர் பெற்றனள் திருந்திழை யோளே.

18. குறுந்தொகை - 126

முல்லை

தலைவிகூற்று

பருவங் கண்டு அழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

இளமை பாரார் வளம்நசைஇச் சென்றோர்
இவணும் வாரார் எவணரோ எனப்
பெயல்புறந் தந்த பூங்கொடி முல்லைத்
தொகுமுகை இலங்கு எயிறு ஆக
நகுமே தோழி நறுந்தண் காரே

19. குறுந்தொகை - 139

மருதம்

தோழிகூற்று

வாயில் வேண்டிப் புக்க தலைமகற்குத் தோழி வாயின் மறுத்தது.

மனையுறை கோழிக் குறுங்காற் பேடை
வேலி வெருகினம் மாலை உற்றெனப்
புகும்இட ன்அறியாது தொகுபுடன் குழீஇப்
பைதற் பிள்ளைக் கிளை பயிர்ந் தாஅங்கு

இன்னாது இசைக்கு அம்பலொடு
வாரல் வாழியர்-ஐயா! எம்தெருவே.

20. குறுந்தொகை - 186

முல்லை

தலைவி கூற்று

பருவ வரவின்கண் ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி யுரைத்தது.

ஆர்கலி ஏற்றொடு கார்தலை மணந்த
கொல்லைப் புனத்த முல்லை மென்கொடி
எயிறுஎன முகையும் நாடற்குத்
துயில்துறந் தனவால் தோழியெங் கண்ணே.

21. குறுந்தொகை - 220

முல்லை

தலைவி கூற்று

பருவ வரவின்கண் கிழத்தி தோழிக்கு உரைத்தது.

பழமழைக் கலித்த புதுப்புன வரகின்
இரலை மேய்ந்த குறைத்தலைப் பாவை
இருவிசேர் மருங்கிற் பூத்த முல்லை
வெருகு சிரித்தன்ன பசுவீ மென்பிணிக்
குறுமுகை யவிழ்ந்த நறுமலர்ப் புறவின்

வண்டுசூழ் மாலையும் வாரார்
கண்டிசின் தோழி பொருட்பிரிந் தோரே.

22. குறுந்தொகை - 275

முல்லை

தோழிகூற்று

பருவ வரவின்கண் வரவு நிமித்தம் தோன்றத் தோழி தலைமகட்கு உரைத்தது.

முல்லை யூர்ந்த கல்லுயர்பு ஏறிக்
கண்டனம் வருகஞ் சென்மோ தோழி
எல்லூர்ச் சேர்தரும் ஏறுடை இனத்துப்
புல்ஆர் நல்ஆன் பூண்மணி கொல்லோ
செய்வினை முடித்த செம்மல் உள்ளமொடு

வல்வில் விளையர் பக்கம் போற்ற
ஈர்மணற் காட்டாறு வரூஉம்
தேர்மணி கொல்ஆண் டியம்பிய வுளவே.

23. புறநானூறு - 279

திணை - வாகை

துறை - மூதின்முல்லை

கெடுக சிந்தை கடிது இவள் துணிவே
மேல்நாள் உற்ற செருவிற் இவள்தன்னை
யானை எறிந்து களத்துஒழிந் தனனே
நெருநல் உற்ற செருவிற்கு இவள்கொழுநன்
பெருநிரை விலங்கி ஆண்டுப் பட்டனனே

இன்றும், செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி
வேல்கைக் கொடுத்து வெளிது விரித்துஉடீஇப்
பாறுமயிர்க் குடுமி யெண்ணெய் நீவி
ஒருமகள் அல்லது இல்லோள்
செருமுகம்நோக்கிச் செல்க எனவிடுமே

## ஔவையார் பாடல்கள்

அகநானூறு 11, 147, 273, 303 - குறுந்தொகை 15, 23, 28, 29, 39, 43,80, 91, 99, 102,158, 183, 200, 364, 384, நற்றிணை 129, 187, 295, 371, 381, 390, 394 மொத்தம் 26

புறம் 87-104 (18 பாடல்கள்) 148, 187, 206. 231, 232, 235, 269, 286, 290, 295, 311, 315, 367, 390, 392 மொத்தம் 33

24. அகநானூறு - 11

பாலை

தலைவி கூற்று

தலைமகன் பொருள்வயின் பிரிந்தவிடத்து ஆற்றாளாய தலைமகளது வேறுபாடு கண்டு ஆற்றாளாய தோழிக்குத் தலைமகள் யான் ஆற்றுவலென்பதுபடச் சொல்லியது.

வானம் ஊர்ந்த வயங்கு ஒளி மண்டிலம்
நெருப்புஎனச் சிவந்த உருப்புஅவிர் அங்காட்டு
இலைஇல மலர்ந்த முகைஇல் இலவம்
கலிகொள்ஆயம் மலிபுதொகுபு எடுத்த
அஞ்சுடர் நெடுங்கொடி பொற்பத் தோன்றிக்

கயந்துகள் ஆகிய பயம்தபு கானம்
எம்மொடு கழிந்தனர் ஆயின் கம்மென
வம்புவிரித் தன்ன பொங்குமணற் கான்யாற்றுப்

படுசினை தாழ்ந்த பயில்இணர் எக்கர்
மெய்புகுவு அன்ன கைகவர் முயக்கம்

அவரும் பெறுகுவர் மன்னே நயவர
நீர்வார் நிகர்மலர் கடுப்ப ஓமறந்து
அறுகுளம் நிறைக்குந போல அல்கலும்
அழுதல் மேவல ஆகிப்
பழிதீர் கண்ணும் படுகுவ மன்னே.

25. அகநானூறு - 147

பாலை

தலைவி கூற்று

செலவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொல்லியது

ஓங்குமலைச் சிலம்பில் பிடவுடன் மலர்ந்த
வேங்கை வெறித்தழை வேறுவகுத் தன்ன
ஊன்பொதி யவிழாக் கோட்டுகிர்க் குருளை
மூன்றுடன் ஈன்ற முடங்கர் நிழத்தத்
துறுகல்விடர் அளைப் பிணவுப்பசி கூர்ந்தெனப்

பொறிகிளர்உழுவைப் போழ்வாய் ஏற்றை
அறுகோட்டு உழைமான் ஆண்குரல் ஓர்க்கும்
நெறிபடு கவலை நிரம்பா நீளிடை
வெள்ளி வீதியைப் போல நன்றுஞ்
செலவுஅயர்ந்த சிதினால் யானே பலபுலந்து

உண்ணா உயக்கமொ டுயிர்செலச் சாஅய்த்
தோளுந் தொல்கவின் தொலைய நாளும்
பிரிந்தோர் பெயர்வுக்கு இரங்கி
மருந்துபிறிது இன்மையின் இருந்துவினை இலனே

26. அகநானூறு - 273

பாலை

தலைவி கூற்று

பிரிவின்கண் தலைமகள் அறிவுமயங்கிச் சொல்லியது

விசும்பு விசைத்து எழுந்த கூதளங் கோதையின்
பசுங்கால் வெண்குருகு வாப்பறை வளைஇ
ஆர்கலி வளவயிற் போதொடு பரப்பப்
புலம்புனிறு தீர்ந்த புதுவரல் அற்சிரம்

நலம்கவர் பசலை நலியவும் நம்துயர்

அறியார் கொல்லோ தாமே அறியினும்
நம்மனத்து அன்ன மென்மை இன்மையின்
நம்முடை உலகம் உள்ளார் கொல்லோ
யாங்குஎன உணர்கோ யானே வீங்குபு
தலைவரம்பு அறியா தகைவரல் வாடையொடு

முலையிடைத் தோன்றிய நோய்வளர் இளமுளை
அசைவுடை நெஞ்சத்து உயவுத்திறன் நீடி
ஊரோர் எடுத்த அம்பல் அஞ்சினை
ஆராக்காதல் அவிர்தளிர் பரப்பிப்
புலவர் புகழ்ந்த நாணில் பெருமரம்

நிலவரை எல்லாம் நிழற்றி
அலர் அரும்பு ஊழ்ப்பவும் வாரா தோரே.

27. அகநானூறு - 303

பாலை

தலைவி கூற்று

தலைமகன் பிரிவின்கண் வேட்கை மீதூர்ந்த தலைமகள் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

இடைபிறர் அறிதல் அஞ்சி மறைகரந்து
பேஎய் கண்ட கனவிற் பன்மாண்
மறம்மிகு தானைப் பசும்பூட் பொறையன்
கார்புகன் றுஎடுத்த சூர்புகல் நனந்தலை
மாஇருங் கொல்லி யுச்சித் தாஅய்த்

ததைந்துசெல் அருவியின் அலர்எழப் பிரிந்தோர்
புலம்கந் தாக இரவலர் செலினே
வரைபுரை களிற்றொடு நன்கலன் ஈயும்
உரைசால் வண்புகழ்ப் பாரி பறம்பின்
நிரைபறைக் குரீஇயினங் காலைப் போகி

முடங்குபுறச் செந்நெல் தரீஇயர் ஓராங்கு
இரைதேர் கொட்பின ஆகிப் பொழுதுபடப்
படர்கொள் மாலைப் படர்தந் தாங்கு
வருவர்என் றுஉணர்ந்த மடம்கெழு நெஞ்சம்
ஐயம் தெளியரோ நீயே பலவுடன்

வறல்மரம் பொருந்திய சிள்வீடு உமணர்
கணநிரை மணியின் ஆர்க்கும் சுரன்இறந்து
அழிநீர் மீன் பெயர்ந் தாங்குஅவர்
வழிநடைச் சேறல் வலித்திசின் யானே.

28. குறுந்தொகை - 15

பாலை

செவிலி கூற்று

உடன்போயின பின்றைத் தோழி செவிலிக்கு அறத்தோடு நின்றாள், நிற்பச் செவிலித்தாய் நற்றாய்க்கு அறத்தொடு நின்றது.

பறைபடப் பணிலம் ஆர்ப்ப இறைகொள்பு
தொல்மூ தாலத்துப் பொதியில் தோன்றிய
நாலூர்க் கோசர் நன்மொழி போல
வாய்ஆகின்றே தோழி ஆய்கழல்
சேயிலை வெள்வேல் விடலையொடு
தொகுவளை முன்கை மடந்தை நட்பே.

29. குறுந்தொகை - 23

குறிஞ்சி

தோழி கூற்று

கூட்டுக் காணிய நின்றிவிடத்துத் தோழி அறத்தொடு நின்றது.

அகவன் மகளே அகவன் மகளே
மனவுக்கோப்பு அன்ன நல்நெடுங் கூந்தல்
அகவன் மகளே பாடுக பாட்டே
இன்னும் பாடுக பாட்டே அவர்
நன்நெடுங் குன்றம் பாடிய பாட்டே

30. குறுந்தொகை - 28

பாலை

தலைவி கூற்று

வரைவிடை, யாற்றாளாய்க் கவன்ற தோழிக்குக் கிழத்தி யிரைத்தது.

முட்டு வேன்கொல் தாக்கு வேன்கொல்!
ஓரேன் யானும்ஓர் பெற்றி மேலிட்டு
ஆஅ ஒல் எனக் கூவு வேன்கொல்
அலமரல் அசைவளி அலைப்ப என்
உயவுநோய் அறியாது துஞ்சும் ஊர்க்கே.

31. குறுந்தொகை - 29

குறிஞ்சி

தலைவன் கூற்று

இரவுக்குறி மறுக்கப்பட்ட தலைமகன் இவர் எம்மை மறுத்தாரென்று வரைந்து கொள்ள நினையாது பின்னுங் கூடுதற்கு அவாவுற்ற நெஞ்சினை நோக்கிக் கூறியது.

நல்உரை இகந்து புல்உரைத் தாஅய்ப்
பெயல் நீர்க்கு ஏற்ற பசுங்கலம் போல
உள்ளம் தாங்கா வெள்ளம் நீந்தி
அரிதுஅவா உற்றனை நெஞ்சே நன்றும்
பெரிதால் அம்மநின் பூசல் உயர்கோட்டு
மகவுடை மந்தி போல
அகன்உறத் தழீஇக் கேட்குநர்ப் பெறினே.

32. குறுந்தொகை - 39

பாலை

தலைவி கூற்று

பிரிவிடை ஆற்றல் வேண்டுமென்ற தோழிக்கு யாங்ஙனம் ஆற்றுவேனெனத் தனது ஆற்றாமை மிகுதி தோன்றத் தலைமகள் கூறியது.

வெந்திறல் கடுவளி பொங்கர்ப் போந்தென
நெற்றுவிளை உழிஞ்சில் வற்றல் ஆர்க்கும்
மலையுடை அருஞ்சுரம் என்பநம்
முலையிடை முனிநர் சென்ற ஆறே.

33. குறுந்தொகை - 43

பாலை

தலைவி கூற்று

பிரிவிடை மெலிந்த கிழத்தி சொல்லியது.

செல்வார் அல்லர் என்றி யான் இகழ்ந் தனே
ஒல்வாள் அல்லள் என்று அவர் இகழ்ந்தனரே
ஆயிடை, இருபேர் ஆண்மை செய்த பூசல்
நல்அராக் கதுவி யாங்குஎன்
அல்லல் நெஞ்சம் அலமலக் குறுமே.

34. குறுந்தொகை - 80

மருதம்

பரத்தை கூற்று

தலைமகட்குப் பாங்காயினார் கேட்பப் பரத்தை சொல்லியது.

கூந்தல் ஆம்பல் முழுநெறி யடைச்சிப்
பெரும்புனல் வந்த இருந்துறை விருமிபி
யாம்அஃதுஅயர்கஞ் சேறும் தான்அஃது
அஞ்சுவ துஉடைய ள்ஆயின் வெம்போர்
நுகம்படக் கடக்கும் பல்வே ல்எழினி

முனைஆன் பெருநிரை போலக்
கிளையொடு காக்கதன் கொழுநன் மார்பே.

35. குறுந்தொகை - 91

மருதம்

தலைவி கூற்று

பரத்தையர்மாட்டுப் பிரிந்த தலைமகன் வாயில் வேண்டிப் புக்கவழித் தன்வரைத்தன்றி அவன் வரைத்தாகித் தன்னெஞ்சு நெகிழ்ந்துழித் தலைமகள் அதனை நெருங்கிச் சொல்லியது. பரத்தையிற் பிரிந்து வந்த வழி வேறுபட்ட கிழத்தியைத் தோழி கூறியதூஉமாம்.

அரில்பவர்ப் பிரம்பின் வரிப்புற விளைகனி
குண்டுநீர் இலஞ்சிக் கெண்டை கதூஉம்
தண்துறை ஊரன் பெண்டினை ஆயிற்
பலம் ஆகுக நின் நெஞ்சில் படரே
ஓவாது ஈயும் மாரி வண்கைக்

கடும் பகட்டு யானை நெடுந்தேர் அஞ்சி
கொன்முனை இரவுஊர் போலச்
சில ஆகுக நீதுஞ்சும் நாளே.

36. குறுந்தொகை - 99

முல்லை

தலைமகன் கூற்று

பொருண்முற்றிப் புகுந்த தலைமகன், எம்மை நினைத்தும் அறிதிரே என்ற தோழிக்குச் சொல்லியது.

உள்ளினென் அல்லெனோ யானே உள்ளி
நினைந்தனென் அல்லெனோ பெரிதே நினைந்து
மருண்டனென் அல்லெனோ உலகத்துப் பண்பே
நீடிய மராஅத்த கோடு தோய் மலிர்நிறை
இறைத்துணச் சென்று அற்றாங்கு
அனைப்பெருங் காமம் ஈண்டுகடைக் கொளலே.

37. குறுந்தொகை - 102

நெய்தல்

தலைவி கூற்று

ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி யான் யாங்ஙனம் ஆற்றுவேன் என்றது.

உள்ளின் உள்ளம் வேமே உள்ளாது
இருப்பின் எம் அளவைத்து அன்றே வருத்தி
வான்தோய் வற்றே காமஞ்
சான்றோர் அல்லர்யாம் மரீஇ யாரே.

38. குறுந்தொகை - 158

குறிஞ்சி

தலைவி கூற்று

தலைமகன் இரவுக்குறி வந்துழி அவன் கேட்பத் தோழிக்குச் சொல்லியது.

நெடுவரை மருங்கின் பாம்புபட இடிக்குங்
கடுவிசை உருமின் கழறுகுரல் அளைஇக்
காலொடு வந்த ககஞ்சூல் மாமழை
அரளி இலையோ நீயே பேர்இசை
இமையமும் துளக்கும் பண்பினை
துணையிலர் அளியர் பெண்டிர் இஃதுஎவனே.

39. குறுந்தொகை - 183

முல்லை

தலைவி கூற்று

பருவ வரவின்கண் ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தியுரைத்தது.

சென்ற நாட்ட கொன்றையம் பசுவீ
நம்போல் பசக்குங் காலைத் தம்போற்
சிறுதலைப் பிணையின் தீர்ந்த நெறிகோட்டு
இரலை மானையுங் காண்பர்கொல் நமரே
பல்லென் காயாப் பூக்கெழு பெருஞ்சினை
மென்மயில் எருத்தின் தோன்றும்
புன்புல வைப்பிற் கானத்தானே.

40. குறுந்தொகை - 200

நெய்தல்

தலைவி கூற்று

பருவ வரவின்கண் ஆற்றாளாகிய தலைமகட்குத் தோழி பருவமன்று வம்பு என்ற வழித் தலைமகள் சொல்லியது.

பெய்த குன்றத்துப் பூநாறு தண்கலுழ்
மீமிசைத் தாஅய் வீசும் வளிகலந்து
இழிதரும் புனலும் பாரார் தோழி
மறந்தோர் மன்ற மறவாம் நாமே
கால மாரி மாலை மாமழை

இன்இசை யுருமினம் முரலும்
முன்வரல் ஏமஞ் செய்து அகன்றோரே.

41. குறுந்தொகை - 364

மருதம்

பரத்தை கூற்று

வேறொரு பரத்தை தன்னைப் புறங்கூறினாள் எனக் கேட்ட இற்பரத்தை அவட்குப் பாங்காயினார் கேட்பக் கூறியது.

அரில்பவர்ப் பிரம்பின் வரிப்புற நீர்நாய்
வாளை நாள்இரை பெறூஉம் ஊரன்
பொன்கோல்அவிர்தொடித் தற்கெழுதகுவி
எற்புறங் கூறும் என்ப தெற்றென
வணங்கு இறைப் பணைத்தோள் எல்வளை மகளிர்

துணங்கை நாளும் வந்தன அவ்வரைக்
கண்பொர மற்றதன் கண் அவர்
மண்கொளற்கு இவரும் மள்ளர் போரே.

42. குறுந்தொகை - 388

பாலை

தோழி கூற்று

தலைமகள் உடன்போக்கு நேர்ந்தமையுணர்ந்த தலைமகன் சுரத்து வெம்மையும் தலைமகள் மென்மையுங் குறித்துச் செலவழுங் கலுறுவானைத் தோழி அழுங்காமற் கூறியது.

நீர்க்கால் யாத்த நிரையிதழ்க் குவளை
கோடை ஒற்றினும் வாடா தாகுங்
கவணைஅன்ன பூட்டுப் பொருது அசாவா
உமண் எருத்து ஒழுகைத் தோடுநிரைத் தன்ன
முளிசினை பிளக்கும் முன்பு இன் மையின்
யானை கைம்மடித் துஉயவும்
கானமும் இனியஆம் நும்மொடு வரினே.

43. நற்றிணை - 129

குறிஞ்சி

தோழிகூற்று

பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைமகளை முகம்புக்கது.

பெருநகை கேளாய் தோழி காதலர்
ஒருநாள் கழியினும் உயிர்வேறு படூஉம்
பொம்மல் ஓதி நம் இவண் ஒழியச்
செல்ப வென்ப தாமே சென்று
தம்வினை முற்றி வரூஉம்வரை நம்மனை

வாழ்த்தும் என்ப நாமே அதன்தலைக்
கேழ்கிளர் உத்தி அரவுத்தலை பனிப்பப்
படுமழை உருமின் உரற்று குரல்
நடுநாள் யாமத்தும் தமியம் கேட்டே.

44. நற்றிணை - 187

நெய்தல்

தலைவி கூற்று

தலைமகன் பகற்குறிவந்து மீள்வானது செலவு நோக்கித் தலைமகள் தன்னுள்ளே சொல்லுவாளாய்ச் சொல்லியது.

நெய்தல் கூம்ப நிழல் குணக்கு ஒழுகக்
கல்சேர் மண்டிலம் சிவந்து நிலம் தணியப்
பல்பூங் கானலும் அல்கின் றன்றே
இனமணி ஒலிப்பப் பொழுதுபடப் பூட்டி
மெய்ம்மலி காமத்து யாம்தொழுது ஒழியத்

தேருஞ் செல்புறம் மறையும் ஊரொடு
யாங்கு ஆவதுகொல் தானே தேம்பட
ஊதுவண்டு இமிரும்கோதை மார்பின்
மின்இவர் கொடும்பூண் கொண்கனொடு
இன்நகை மேவிநாம் ஆடிய பொழிலே.

45. நற்றிணை - 295

நெய்தல்

தோழி கூற்று

தோழி செறிப்பறிவுறீஇ வரைவு கடாயது. சிறைப்புறமுமாம்.

முரிந்த சிலம்பின் நெரிந்த வள்ளியின்
புறன் அழிந்து ஒலிவரும் தாழ் இருங்கூந்தல்

ஆயமும் அழுங்கின்று யாயும்அஃது அறிந்தனள்
அருங்கடி அயர்ந்தனள் காப்பே எந்தை
வேறு பன்நாட்டுக் கால்தர வந்த

பலவினை நாவாய் தோன்றும் பெருந்துறைக்
கலிமடைக் கள்ளின் சாடி அன்னஎம்
இளநலன் இற்கடை யாழியச்
சேறும் வாழியோ முதிர்கம் யாமே.

46. நற்றினை -371

முல்லை

தலைவன் கூற்று

வினைமுற்றி மறுத்தரா நின்றான் பாகற்குச் சொல்லியது.

காயாங் குன்றத்துக் கொன்றை போல
மாமலை விடர் அகம் விளங்க மின்னி
மாயோள் இருந்த தேஎம் நோக்கி
வியல் இருவிசும்பு அகம் புதையப் பாஅய்ப்
பெயல் தொடங் கினவே பெய்யா வானம்

நிழல் திகழ் சுடர்த்தொடி ஞெகிழ ஏங்கி
அழல் தொடங் கினளே ஆயிழை அதன்எதிர்
குழல் தொடங் கினரே கோவலர்
தழங்கு குரல் உருமின் கங்கு லானே.

47. நற்றினை - 381

முல்லை

தலைவி கூற்று

பிரிவடை ஆற்றாளாகிய தலைமகள் பருவ வரவின்கண் சொல்லியது.

அருந்துயர் உழத்தலின் உண்மை சான்ம்எனப்
பெரும்பிறிது இன்மையின் இலேனும் அல்லேன்
கரைபொருது இழிதரும் கான்யாற்று இகுகரை
வேர்கிளர் மராஅத்து அந்தளிர் போல
நடுங்கல் ஆனா நெஞ்சமொடு இடும்பை
யாங்கனம் தாங்குவென் மற்றே ஓங்குசெலல்
கடும்பகட்டு யானை நெடுமான் அஞ்சி
ஈர நெஞ்ச மோடு இசைச்சேண்விளங்கத்
தேர்வீசு இருக்கை போல
மாரி இரீஇ மான்றன் றால் மழையே.

48. நற்றிணை - 390

மருதம்

தலைவி கூற்று

பாங்காயின வாயில்கேட்ப நெருங்கிச் சொல்லியது. தலைமகள் தோழிக் குரைப்பாளாய் வாயிலாகப் புக்கார் கேட்பச் சொல்லியதூஉமாம்.

வாளை வாளின் பிறழ நாளும்
பொய்கை நீர்நாய் வைகுதுயில் ஏற்குங்
கைவன் கிள்ளி வெண்ணி சூழ்ந்த
வயல்வெள் ஆம்பல் உருவ நெறித்தழை
ஐதுஅகல் அல்குல் அணிபெறத் தைஇ

விழவின் செலீஇயர் வேண்டும் மன்னோ
யாணர் ஊரன் காணுநன் ஆயின்
வரையா மையோ அரிதே வரையின்
வரைபோல் யானை வாய்மொழி முடியன்
வரைவேய் புரையும் நல்தோள்
அளிய தோழி தொலையுந பலவே

49. நற்றிணை - 394

முல்லை

கண்டார் கூற்று

வினை முற்றி மறுத்தரா நின்ற தலைமகனை இடைச்சுரத்துக் கண்டார் சொல்லியது.

மரந்தலை மணந்த நனந்தலைக் கனத்து
அலந்தலை ஞெமையத்து இருந்த குடிஞை
பொன்செய் கொல்லனின் இனிய தெளிர்ப்பப்
பெய்ம்மணி ஆர்க்கும் இழைகிளர் நெடுந்தேர்
வன்பரல் முரம்பின் நேமி அதிரச்

சென்றிசின் வாழியோ பனிக்கடு நாளே
இடைச்சுரத்து எழிலி யுறைத்தென மார்பின்
குறும்பொறிக் கொண்ட சாந்தமொடு
நறுந்தண் ணியன்கொல் நோகோ யானே.

## ஔவையாரின் புறப்பாடல்கள்

50. புறநானூறு - 87

திணை - தும்பை

துறை - தானைமறம்

அதியமான் நெடுமான் அஞ்சியைப் பாடியது

களம்புகல் ஓம்பின் தெவ்விர் போர்எதிர்ந்து
எம்முளும் உளன்ஒரு பொருநன் வைகல்
எண்தேர் செய்யும் தச்சன்
திங்கள் வலித்த கால்அன் னோனே

51. புறநானூறு - 88

திணை - தும்பை

துறை - தானைமறம்

அதியமான் நெடுமான் அஞ்சியைப் பாடியது

யாவிர் ஆயினும் கூழை தார்கொண்டு
யாம் பொருதும் என்றல் ஓம்புமின் ஓங்குதிறல்
ஒளிறு இலங்கு நெடுவேல் மழவர் பெருமகன்
கதிர்விடு நுண்பூண் அம்பகட்டு மார்பின்
விழவு மேம் பட்ட நற்போர்
முழவுத் தோள் என்னையைக் காணா ஊங்கே

52. புறநானூறு - 89

திணை - தும்பை

துறை - தானைமறம்

அதியமான் நெடுமான் அஞ்சியைப் பாடியது.

இழை அணிப் பொலிந்த ஏந்து கோட்டு அல்குல்
மடவரல் உண்கண் வாணுதல் விறலி
பொருநரும் உளரோ நும் அகன்றலை நாட்டென
வினவ லானாப் பொருபடை வேந்தே
எறிகோ ல்அஞ்சா அரவின் அன்ன

சிறுவல் மள்ளரும் உளரே அதா அன்று
பொதுவில் தூங்கும் விசியுறு தண்ணுமை
வளிபொரு தெண்கண் கேட்பின்
அதுபோர் என்னும் என்னையும் உளனே.

53. புறநானூறு - 90

திணை - தும்பை

துறை - தானைமறம்

உடைவளை கடுப்ப மலர்ந்த காந்தள்
அடைமல்கு குளவியொடு கமழும் சாரல்

மறப்புலி உடலின் மான்கணம் உளவோ
மருளின விசும்பின் மாதிரத்து ஈண்டிய
இருளும் உண்டோ ஞாயிறு சினவின்

அச்சொடு தாக்கிப் பார் உற்று இயங்கிய
பண்டச் சாகாட்டு ஆழ்ச்சி சொல்லிய
வரிமணல் ஞெமரக் கல்பக நடக்கும்
பெருமிதப் பகட்டுக்குத் துறையும் உண்டோ
எழுமரம் கடுக்கும் தாள்தோய் தடக்கை

வழுஇல் வன்கை மழவர் பெரும
இருநிலம் மண்கொண்டு சிலைக்கும்
பொருநரும் உளரோ நீகளம் புகினே.

54. புறநானூறு - 91

திணை - பாடாண்திணை

துறை - வாழ்த்தியல்

அதியமான் நெடுமான் அஞ்சியிடம் நெல்லிப்பழம் பெற்றுப் பாடியது.

வலம்படு வாய்வாள் ஏந்தி ஒன்னார்
களம்படக் கடந்த கழல்தொடித் தடக்கை
ஆர்கலி நறவின் அதியர் கோமான்
போர்ஆடு திருவின் பொலந்தார் அஞ்சி
பால்புரை பிறைநுதற் பொலிந்த சென்னி

நீல மணிமிடற் றுஒருவன் போல
மன்னுக பெரும நீயே தொல்நிலைப்
பெருமலை விடரகத்து அருமிசைக் கொண்ட
சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது
ஆதல் நின்னகத்து அடக்கிச்
சாதல் நீங்க எமக்கு ஈத் தனையே.

55. புறநானூறு - 92

திணை - பாடாண்திணை

துறை - இயன்மொழி

அதியமான் நெடுமான் அஞ்சியைப் பாடியது

யாழொடுங் கொள்ளா பொழுதொடும் புணரா
பொருள்அறி வாரா ஆயினுந் தந்தையர்க்கு
அருள்வந் தனவால் புதல்வர்தம் மழலை

என்வாய்ச் சொல்லும் அன்ன ஒன்னார்
கடிமதில் அரண்பல கடந்த
நெடுமான் அஞ்சிநீ யருளன் மாறே.

56. புறநானூறு - 93

திணை - வாகை

துறை - அரசவாகை

அதியமான் நெடுமான் அஞ்சி பொருது புண்பட்டு நின்றோனைப் பாடியது.

திண்பிணி முரசம் இழுமென முழங்கச்
சென்றுஅமர் கடத்தல் யாவது வந்தோர்
தார்தாங் குதலும் ஆற்றார் வெடிபட்டு
ஓடல் மரீஇய பீடுஇல் மன்னர்
நோய்ப்பால் விளிந்த யாக்கை தழீஇக்

காதல் மறந்து அவர் தீதுமருங்கு அறுமார்
அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர்
திறம்புரி பசும்புல் பரப்பினர் கிடப்பி
மறங்கந் தாக நல்அமர் வீழ்ந்த
நீள்கழல் மறவர் செல்வுழிச் செல்கஎன

வாள் போழ்ந்து அடக்கலும் உய்ந்தனர் மாதோ
வரிஞிமிற ஆர்க்கும் வாய்புகு கடாஅத்து
அண்ணல் யானை யடுகளத்து ஒழிய
அருஞ்சமம் ததைய நூறிநீ
பெருந்தகை விழுப்புண் பட்டமாறே.

57. புறநானூறு - 94

திணை - வாகை

துறை - அரசவாகை

அதியமான் நெடுமான் அஞ்சியைப் பாடியது.

ஊர்க்குறு மாக்கள் வெண்கோடு காாஅலின்
நீர்த்துறை படியும் பெருங்களிலு போல
இனியை பெரும எமக்கே மற்றதன்
துன்அருங் கடாஅம் போல
இன்னாய் பெருமநின் ஒன்னா தோர்க்கே

58. புறநானூறு - 95

திணை - பாடாண்திணை

துறை - வாண்மங்கலம்

அதியமான் நெடுமான் அஞ்சி தூதுவிட, தொண்டைமானுழைச் சென்ற ஔவைக்கு அவன் படைக்கலக் கொட்டில் காட்ட அவர் பாடியது.

இவ்வே, பீலி அணிந்து மாலை சூட்டிக்
கண்திரள் நோன்காழ் திருத்தி நெய் அணிந்து
கடியுடை வியல் நகரவ்வே; அவ்வே
பகைவர்க் குத்திக் கோடுநுதி சிதைந்து
கொற்துறைக் குற்றில மாதோ என்றும்

உண்டாயின் பதங்கொடுத்து
இல்லாயின் உடன் உண்ணும்
இல்லோர் ஒக்கல் தலைவன்
அண்ணல் எம் கோமான் வைந்நுதி வேலே.

59. புறநானூறு - 96

திணை - வாகை

துறை - அரசவாகை

அதியமான் நெடுமான் அஞ்சி பொருது புண்பட்ட நின்றோனைப் பாடியது.

அலர்பூந் தும்பை அம்பகட்டு மார்பின்
திரண்டுநீடு தடக்கை என்னை இளையோற்கு
இரண்டு எழுந் தனவால் பகையே ஒன்றே
பூப்போல் உண்கண் பசந்துதோள் நுணுகி.
நோக்கிய மகளிர்ப் பிணித்தன்று ஒன்றே

விழவின் றுஆயினும் படுபதம் பிழையாது
மைஊன் மொசித்த ஒக்கலொடு துறைநீர்க்
கைமான் கொள்ளு மோஎன
உறையுள் முனியும் அவன் செல்லும் ஊரே.

60. புறநானூறு - 97

திணை - பாடாண்திணை

துறை - இயன்மொழி

அதியமான் நெடுமான் அஞ்சியைப் பாடியது.

போர்க்கு உரைஇப் புகன்று கழித்தவாள்
உடன்றவர் காப் புடைமதில் அழித்தலின்
ஊன்உற மூழ்கி உருஇழந் தனவே
வேலே, குறும்பு அடைந்த அரண்கடந்து அவர்
நறுங்கள்ளின் நாடு நைத்தலின்

சுரைதழீஇய இருங்காழொடு
மடைகலங்கி நிலை திரிந்தனவே
களிறே, எழூஉத் தாங்கிய கதவம் மலைத்து அவர்
குழூஉக் களிற்றுக் குறும்பு உடைத்தலின்
பரூஉப்பிணிய தொடிகழிந்தனவே

மாவே, பரந்து ஒருங்கு மலைந்த மறவர்
பொலம்பைந்தார் கெடப்பரிதலின்
களன் உழந்து அசைஇய மறுக்குளம் பினவே
அவன்தானும், நிலத்திரைக்குங் கடல்தானைப்
பொலந்தும்பைக் கழல்பாண்டில்

கணைபொருத துளைத் தோலன்னே
ஆயிடை, உடன்றோர் உய்தல் யாவது தடந்தாள்
பிணிக்கதிர் நெல்லின் செம்மல் மூதூர்
நுமக்குஉரித் தாகல் வேண்டின்சென்று அவற்கு
இறுக்கல் வேண்டும் திறையே மறுப்பின்

ஒல்வான் அல்லன் வெல்போ ரான் எனச்
சொல்லவும் தேறீர் ஆயின் மெல்லியல்
கழற்கனி வகுத்த துணைச்சில் ஓதிக்
குறுந்தொடி மகளிர் தோள்விடல்
இறும்பூறு அன்று அஃதறிந்து ஆடுமினே.

61. புறநானூறு - 98

திணை - வாகை, துறை - அரசவாகை

திணை - வஞ்சியும், துறை - கொற்றவள்ளையுமாம் அதியமான் நெடுமான் அஞ்சியைப் பாடியது.

முனைத்தெவ்வர் முரண் அவியப்
பொரக்குறுகிய நுதிமருப்பின் நின்
இனக்களிறு செலக்கண்டவர்
மதிற்கதவம் எழுச்செல்லவும்
பிணன்அழுங்கக் களன்உழக்கிச்

செலவு அசைஇய மறுக்குளம்பின் நின்
இனநல்மாச் செலக்கண்டவர்
கவைமுள்ளின் புழைஅடைப்பவும்
மார்புறச் சேர்ந்து ஒல்காத்

தோல் செறிப்புஇல் நின்வேல்கண்டவர்

தோல்கழியொடு பிடிசெறிப்பவும்
வாள்வாய்த்த வடுப்பரந்தநின்
மறமைந்தர் மைந்து கண்டவர்
புண்படுகுருதி அம்பு ஒடுக்கவும்
நீயே, ஐயவி புகைப்பவும் தாங்காது ஒய்யென

உறுமுறை மரபின் புறம்நின்று உய்க்கும்
கூற்றத்து அனையை ஆகலின் போற்றோர்
இரங்க விளிவது கொல்லோ வரம்புஅணைந்து
இறங்குகதிர் அலம்வரு கழனிப்
பெரும்புனற் படப்பை அவர் அகன்தலை நாடே

62. புறநானூறு - 99

திணை - வாகை, துறை - அரசவாகை

திணை - வஞ்சியும், துறை - கொற்றவள்ளையுமாம்

அதியமான் நெடுமான் அஞ்சி கோவலூர் எறிந்தானைப் பாடியது

அமரர்ப் பேணியும் ஆவுதி அருத்தியும்
அரும்பெறல் மரபின் கரும்பு இவண்தந்தும்
நீர் அக இருக்கை ஆழி சூட்டிய
தொன்நிலை மரபின் நின்முன்னோர் போல
ஈகைஅம் கழற்கால் இரும்பனம் புடையல்

பூஆர் காவின் புனிற்றுப் புலால் நெடுவேல்
எழுபொறி நாட்டத்து எழாஅத் தாயம்
வழு இன்று எய்தியும் அமையாய் செருவேட்டு
இமிழ்குரல் முரசின் எழுவரோடு முரணிச்
சென்றுஅமர் கடந்துநின் ஆற்றல் தோற்றிய

அன்றும் பாடுநர்க்கு மற்கொல் மற்றுநீ
முரண்மிகு கோவலூர் நூறிநின்
அரண்அடு திகிரி ஏந்திய தோளே.

63. புறநானூறு - 100

திணை - வாகை, துறை - அரசவாகை

திணை - வஞ்சியும், துறை - கொற்றவள்ளையுமாம்

அதியமான் தவமகன் பிறந்தவனைக் கண்டானைப் பாடியது.

கையது வேலே காலன புனைகழல்
மெய்யது வியரே மிடற்றது பசும்புண்
வட்கர் போகிய வளர்இளம் போந்தை
உச்சிக் கொண்ட ஊசி வெண்தோட்டு
வெட்சி மாமலர் வேங்கையொடு விரைஇச்

சுரிஇரும் பித்தை பொலியச் சூடி
வரிவயம் பொருத வயக்களிறு போல
இன்னும் மாறாது சினனே அன்னோ
உய்ந்தனர் அல்லர்இவ ன்உடற்றி யோரே
செறுவர் நோக்கிய கண்தன்
சிறுவனை நோக்கியுஞ் சிவப்பு ஆனாவே.

64. புறநானூறு - 101

திணை - பாடாண்திணை

துறை - பரிசல்கடாநிலை

அதியமான் நெடுமான் அஞ்சியைப் பாடியது.

ஒருநாள் செல்லலம் இருநாள் செல்லலம்
பலநாள் பயின்று பலரொடு செல்லினும்
தலைநாள் போன்ற விருப்பினன் மாதோ
இழைஅணி யானை இயல்தேர் அஞ்சி
அதியமான் பரிசில் பெறூஉம் காலம்

நீட்டினும் நீட்டா துஆயினும் களிறுதன்
கோட்டிடை வைத்த கவளம் போலக்
கையகத் ததுஅது பொய்ஆ காதே
அருந்த ஏமாந்த நெஞ்சம்
வருந்த வேண்டா வாழ்கஅவன் தாளே.

65. புறநானூறு - 102

திணை - பாடாண்திணை

துறை - இயன்மொழி

அதியமான் நெடுமான் அஞ்சி மகன் பொகுட்டெழினியைப் பாடியது.

எருதே யிளைய நுகம் உணராவே
சகடம் பண்டம் பெரிதுபெய் தன்றே
அவல்இழியினும் மிசை ஏறினும்
அவணது அறியுநர் யார்என உமணர்

கீழ்மரத்து யாத்த சேமஅச் சுஅன்ன
இசைவிளங்கு கவிகை நெடியோய் திங்கள்
நாள்நிறை மதியத்து அனையை இருள்
யாவண தோநின் நிழல்வாழ் வோர்க்கே.

66. புறநானூறு - 103

திணை - பாடாண்திணை

துறை - விறலியாற்றுப்படை

அதியமான் நெடுமான் அஞ்சியைப் பாடியது

ஒருதலைப் பதலை தூங்க ஒருதலைத்
தூம்பு அகச் சிறுமுழாத் தூங்கத் தூக்கிக்
கவிழ்ந்த மண்டை மலர்க்குநர் யார்எனச்
சுரன்முதல் இருந்த சில்வளை விறலி
செல்வை ஆயிற் சேணோன் அல்லன்
முனைசுட எழுந்த மங்குல் மாப்புகை
மலைசூழ் மஞ்சின் மழகளிறு அணியும்
பகைப்புலத் தோனே பல்வேல் அஞ்சி
பொழுதுஇடைப் படாஅப் புலரா மண்டை
மெழுகுமெல் அடையின் கொழுநிணம் பெருப்ப
அலத்தற் காலை ஆயினும்
புரத்தல் வல்லன் வாழ்க அவன் தாளே.

67. புறநானூறு - 104

திணை - வாகை

துறை - அரசவாகை

அதியமான் நெடுமான் அஞ்சியைப் பாடியது

போற்றுமின் மறவீர் சாற்றுதும் நும்மை
ஊர்க்குறு மாக்கள் ஆடக் கலங்கும்
தாள் படு சில்நீர்க் களிறு அட்டு வீழ்க்கும்
ஈர்ப்புடைக் கரா அத்துஅன்ன என்னை
நுண்பல் கருமம் நினையாது
இளையன் என்று இகழின் பெறல் அரிது ஆடே

68. புறநானூறு - 140

திணை - பாடாண்திணை

துறை - பரிசில்விடை

நாஞ்சில் வள்ளுவனைப் பாடியது

தடவுநிலைப் பலவின் நாஞ்சிற் பொருநன்
மடவன் மன்ற செந்நாப் புலவீர்
வளைக்கை விறலியர் படப்பைக் கொய்த
அடகின் கண்ணுறை யாக யாஞ்சில்
அரிசி வேண்டினே மாகத் தான்பிறர்
வரிசை அறிதலின் தன்னும் தூக்கி
இருங்கடறு வளைஇய குன்றத் துஅன்னதுஓர்
பெருங்களிறு நல்கி யோனே அன்னதுஓர்
தேற்றா ஈகையும் உளது கொல்
போற்றார் அம்ம பெரியோர்தங் கடனே.

69. புறநானூறு - 187

திணை - பொதுவியல்

துறை - பொருண்மொழிக்காஞ்சி

நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ
எவ்வழி நல்லர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே

70. புறநானூறு - 206

திணை - பாடாண்திணை

துறை - பரிசிற்றுறை

அதியமான் நெடுமான் அஞ்சி பரிசில் நீட்டித்தானைப் பாடியது.

வாயி லோயே வாயி லோயே
வள்ளியோர் செவிமுதல் வயங்குமொழி வித்தித்தாம்
உள்ளியது முடிக்கும் உரனுடை உள்ளத்து
வரிசைக்கு வருந்தும் இப்பரிசில் வாழ்க்கைப்
பரிசிலர்க்கு அடையா வாயி லோயே

கடுமான் தோன்றல் நெடுமான் அஞ்சி
தன்அறி யலன்கொல் என்அறி யலன்கொல்
அறிவும் புகழும் உடையோர் மாய்ந்துஎன
வறுந்தலை உலகமும் அன்றே யதனாற்
காவினெம் கலனே சுருக்கினெம் கலப்பை

மரம்கொல் தச்சன் கைவல் சிறாஅர்
மழுவுடைக் காட்டகத்து அற்றே
எத்திசைச்செலினும் அத்திசைச் சோறே.

71. புறநானூறு - 231

திணை - பொதுவியல்

துறை - கையறுநிலை

அதியமான் நெடுமான் அஞ்சியைப் பாடியது.

எறிபுனக் குறவன் குறையல் அன்ன
கரிபுற விறகின் ஈம ஒள்அழற்
குறுகினும் குறுகுக குறுகாது சென்று
விசும்புற நீளினும் நீள்க பசுங்கதிர்த்
திங்கள் அன்ன வெண்குடை
ஞாயிற்று அன்னோன் புகழ்மா யலவே.

72. புறநானூறு - 232

திணை - பொதுவியல்

துறை - கையறு நிலை

அதியமான் நெடுமான் அஞ்சியைப் பாடியது.

இல்லா கியரோ காலை மாலை
அல்லாகியர் யான் வாழும் நாளே
நடுகல் பீலி சூட்டி நார்அரி
சிறுகலத்து உகுப்பவும் கொள்வன் கொல்லோ
கோடுஉயர் பிறங்குமலை கெழீஇய
நாடுஉடன் கொடுப்பவும் கொள்ளா தோனே.

73. புறநானூறு - 235

திணை - பொதுவியல்

துறை - கையறு நிலை

அதியமான் நெடுமானஞ்சியைப் பாடியது.

சிறியகட் பெறினே எமக்குஈயும் மன்னே
பெரியகட் பெறினே
யாம்பாடத் தான்மகிழ்ந் துஉண்ணும் மன்னே
சிறுசோற் றானும் நனிபல் கலத்தன் மன்னே
பெருஞ்சோற் றானும் நனிபல கலத்தன் மன்னே

என்பொடு தடிபடு வழியெல்லாம் எமக்குஈயும் மன்னே
அம்பொடு வேல்நுழை வழிஎல்லாம் தான்நிற்கும் மன்னே
நரந்தம் நாறும் தன்கையால்
புலவுநாறும் என்தலை தைவரும் மன்னே
அருந்தலை இரும்பாணர் அகன்மண்டைத் துளைஉரீஇ

இரப்போர் கையுளும் போகிப்
புரப்போர் புன்கண் பாவை சோர
அம்சொல் நுண் தேர்ச்சிப் புலவர் நாவில்
சென்றுவீழ்ந் தன்றுஅவன்
அருநிறத்து இயங்கிய வேலே

ஆசு ஆகு எந்தை யாண்டு உளன் கொல்லோ
இனிப், பாடுநரும் இல்லைப் பாடுநர்க்கு ஒன்று ஈகுநருமில்லைப்
பனித்துறைப் பகன்றை நறைக்கொள் மாமலர்
சூடாது வைகி யாங்குப் பிறர்க்கு ஒன்று
ஈயாது வீயும் உயிர்தவப் பலவே.

74. புறநானூறு - 269
திணை - வெட்சி
துறை - உண்டாட்டு

குயில்வாய் அன்ன கூர்முகை அதிரல்
பயிலாது அல்கிய பல்காழ் மாலை
மைஇரும் பித்தை பொலியச் சூட்டிப்
புத்தகல் கொண்ட புலிக்கண் வெப்பர்
ஒன்று இருமுறை இருந்து உண்ட பின்றை

உவலைக் கண்ணித் துடியன் வந்தெனப்
பிழிமகிழ் வல்சி வேண்ட மற்றுஇது
கொள்ளாய் என்ப கள்ளின் வாழ்த்திக்
கரந்தை நீடிய அறிந்து மாறு செருவில்
பல்ஆன் இனநிரை தழீஇய வில்லோர்க்

கொடுஞ் சிறைக் குரூஉப்பருந் துஆர்ப்பத்
தடிந்துமாறு பெயர்த்தது இக்கருங்கை வாளே.

75. புறநானூறு - 286
திணை - கரந்தை
துறை - வேத்தியல்

வெள்ளை வெள்யாட்டுச் செச்சை போலத்
தன்ஓர் அன்ன இளையர் இருப்பப்
பலர்மீது நீட்டிய மண்டைஎன் சிறுவனைக்
கால்கழி கட்டிலில் கிடப்பித்
தூவெள் அறுவை போர்ப்பித் திலதே

76. புறநானூறு - 290

திணை - கரந்தை

துறை - குடிநிலையுரைத்தல்

இவற் கீத்து உண்மதி கள்ளே சினப்போர்
இனக் களிற்று யானை இயல்தேர்க் குருசில்
நுந்தை தந்தைக்கு இவன்தந்தை தந்தை
எடுத்துஎறி ஞாட்பின் இமையான் தச்சன்
அடுத்துஎறி குறட்டின் நின்று மாய்ந்தனனே.

மறப்புகழ் நிறைந்த மைந்தினோன் இவனும்
உறைப்புழி ஓலைபோல
மறைக்குவன் பெருமநிற் குறித்துவரு வேலே.

77. புறநானூறு - 295

திணை - தும்பை

துறை - உவகைக்கலுழ்ச்சி

கடல்கிளர்ந் தன்ன கட்டூர் நாப்பண்
வெந்துவாய் மடித்து வேல் தலைப் பெயரித்
தோடு உகைத்து எழுதரூஉத் துரந்து எறிஞாட்பின்
வருபடை போழ்ந்து வாய்ப்பட விலங்கி
இடைப்படை அழுவத்துச் சிதைந்துவே றாகிய

சிறப்புடை யாளன் மாண்பு கண் டருளி
வாடுமுலை ஊறிச் சுரந்தன
ஓடாப் பூட்கை விடலை தாய்க்கே.

78. புறநானூறு - 311

திணை - தும்பை

துறை - பாண்பாட்டு

களர்ப்படு கூவற் தோண்டி நாளும்
புலைத்தி கழீஇய தூவெள் அறுவை
தாது எரு மறுகின் மாசுண இருந்து
பலர்குறை செய்த மலர்தார் அண்ணற்கு
ஒருவரும் இல்லை மாதோ செருவத்துச்

சிறப்புடைச் செங்கண் புகையஓர்
தோல்கொண்டு மறைக்குஞ் சால்புஉடை யோனே.

79. புறநானூறு - 315

திணை - வாகை

துறை - வல்லாண்முல்லை

நெடுமானஞ்சியைப் பாடியது.

உடையன் ஆயின் உண்ணவும் வல்லன்
கடவர் மீதும் இரப்போர்க்கு ஈயும்
மடவர் மகிழ்துணை நெடுமான் அஞ்சி
இல்இறைச் செரீஇய ஞெலிகோல் போலத்
தோன்றாது இருக்கவும் வல்லன் மற்றதன்
கான்றுபடு கனைஎரி போலத்
தோன்றவும் வல்லன்தான் தோன்றுங் காலே

80. புறநானூறு - 367

திணை - பாடாண்திணை

துறை - வாழ்த்தியல்

சேரமான் மாரிவெண்கோவும், பாண்டியன் கானப்பேர் தந்த உக்கிரப் பெருவழுதியும், சோழன் இராச சூயம் வேட்ட பெருநற்கிள்ளியும் ஒருங்கிருந்தாரைப் பாடியது.

நாகத்து அன்ன பாகுஆர் மண்டிலம்
தமவே ஆயினும் தம்மொடு செல்லா
வேற்றோர் ஆயினு நோற்றோர்க்கு ஒழியும்
ஏற்ற பார்ப்பார்க்கு ஈர்ங்கை நிறையப்
பூவும் பொன்னும் புனல்படச் சொரிந்து

பாசிழை மகளிர் பொலங்கலத்து ஏந்திய
நார்அரி தேறல் மாந்தி மகிழ் சிறந்து
இரவலர்க்கு அருங்கலம் அருகாது வீசி
வாழ்தல் வேண்டும்இவண் வரைந்த வைகல்
வாழச் செய்த நல்வினை அல்லது

ஆழுங் காலைப் புணைபிறிது இல்லை
ஒன்றுபுரிந்து அடங்கிய இருபிறப் பாளர்
முத்தீப் புரையக் காண்தக இருந்த
கொள்ள வெண்குடைக் கொடித்தேர் வேந்திர்
யான்அறி அளவையோ விதுவே வானத்து

வயங்கித் தோன்றும் மீனினும் இம்மெனப்
பரந்து இயங்கு மாமழை உறையினும்

உயர்ந்து மேந் தோன்றிப் பொலிக நும் நாளே.

81. புறநானூறு - 390

திணை - பாடாண்திணை

துறை - இயன்மொழி

அதியமான் நெடுமான் அஞ்சியைப் பாடியது.

அறவை நெஞ்சத் தாயர் வளரும்
மறவை நெஞ்சத் துஆயிவாளர்
அரும்புஅலர் செருந்தி நெடுங்கால் மலர்கமழ்
........மன்ன முற்றத்து
ஆர்வலர் குறுகின் அல்லது காவலர்

கனவினும் குறுகாக் கடியுடை வியன்நகர்
மலைக்கணத்து அன்ன மாடஞ் சிலம்பஎன்
அரிக்குரல் தடாரி இரிய ஒற்றிப்
பாடி நின்ற பல்நா அன்றியும்
சென்ற ஞான்றைச் சென்றுபடர் இரவின்

வந்ததற் கொண்டு நெடுங்கடை நின்ற
புன்தலைப் பொருநன் அளியன் தான் எனத்
தன்னுழைக் குறுகல் வேண்டி என்அரை
முதுநீர்ப் பாசி அன்ன உடைகளைந்து
திருமல ரன்ன புதுமடிக் கொளீஇ

மகிழ்தரல் மரபின் மட்டே அன்றியும்
அமிழ்துஅன மரபின் மட்டே அன்றியும்
அமிழ்துஅன மரபின் ஊன்துவை யடிசில்
வெள்ளி வெண்கலத்து ஊட்டல் அன்றி
முன்ஊர்ப் பொதியில் சேர்ந்த மென்நடை

இரும்பேர் ஒக்கல் பெரும்புலம்பு அகற்ற
அகடுநனை வேங்கை வீகண் டன்ன
பகடுதரு செந்நெல் போரொடு நல்கிக்
கொண்டி பெறுகஎன் றோனே உண்துறை
மலைஅலர் அணியும் தலைநீர் நாடன்

கண்டாற் கொண்டும்அவன் திருந்து அடிவாழ்த்தி

...............................................................

வான்அறி யலஎன் பாடு பசி போக்கல்

அண்ணல் யானை வேந்தர்
உண்மையோ அறியல் காண்புஅறி யலரே.

82. புறநானூறு - 392

திணை - பாடாண்திணை

துறை - கடைநிலை

அதியமான் நெடுமான் அஞ்சி மகன் பொகுட்டெழினியைப் பாடியது.

மதியேர் வெண்குடை அதியர் கோமான்
கொடும் பூண் எழினி நெடுங்கடை நின்றுயான்
பசலை நிலவின் பனிபடு விடியல்
பொருகளிற்று அடிவழி அன்ன வென்கை
ஒருகண் மாக்கிணை ஒற்றுபு கொடாஅ

உருகெழு மன்னர் ஆர்எயில் கடந்து
நிணம்படு குருதிப் பெரும்பாட்டு ஈரத்து
அணங்குடை மரபின் இருங்களந் தோறும்
வெள்வாய்க் கழுதைப் புல்இனம் பூட்டி
வெள்ளை வரகும் கொள்ளும் வித்தும்

வைகல் உழவ வாழிய பெரிதுஎனச்
சென்றுயான் நின்றனெ னாக அன்றே
ஊர்உண் கேணிப் பகட்டுஇலைப் பாசி
வேர்புரை சிதாஅர் நீக்கி நேர்கரை
நுண்நூல் கலிங்கம் உடீஇ உண்எனத்

தேட் கடுப்பு அன்ன நாட்படு தேறல்
கோமீன் அன்ன பொலங்கலத்து அளைஇ
ஊண்முறை யீத்தல் அன்றியுங் கோள்முறை
விருந்து இறை நல்கியோனே யந்தரத்து
அரும் பெறல் அமிழ்தம் அன்ன

கரும்பு இவண் தந்தோன் பெரும்பிறங் கடையே

## கச்சிப்பேட்டு நன்னாகையார் பாடல்கள்

85. குறுந்தொகை

பாலை

தலைவி கூற்று

அவர் நின்னை வரைந்துகோடல் காரணத்தாற் பிரியவும் நீ ஆற்றியிராது ஆற்றாயாகின்றது என்னென வினாய தோழிக்குத் தலைமகள் யான் ஆற்றி

யுள்ளேனாகவும் கனவுவந்து என்னை இங்ஙன் நலிந்ததெனக் கூறியது.

கேட்டிசின் வாழி தோழி அல்கல்
பொய்வ லாளன் மெய்யுற மரீஇ
வாய்த்தகைப் பொய்க்கனா மருட்ட ஏற்றுஎழுந்து
அமளி தைவந் தனனே குவளை
வண்டுபடு மலரின் சாஅய்த்
தமியென் மன்ற அளியென் யானே.

86. குறுந்தொகை - 172

நெய்தல்

தலைவிகூற்று

விரைவிட ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குத் தலைமகள் கூறியது.

தாஅவல் அஞ்சிறை நொப்பறை வாவல்
பழுமரம் படரும் பையுள் மாலை
எமியம் ஆக ஈங்குத் துறந்தோர்?
தமியர் ஆக இனியர் கொல்லோ?
ஏழ்ஊர்ப் பொதுவினைக்கு ஓர்ஊர் யாத்த
உலைவாங்கு மிதி தோல் போலத்
தலைவரம்பு அறியாது வருந்தும் என் நெஞ்சே.

87. குறுந்தொகை - 180

பாலை

தோழி கூற்று

பிரிவிடை வேறுபட்டாளைத் தோழி வற்புறுத்தியது.

பழூஉப்பல் லன்ன பருஉகிர்ப் பாஅடி
இருங்களிற்று இன நிரை ஏந்தல் வரின்மாய்ந்து
அறைமடி கரும்பின் கண் இடை யன்ன
பைதல் ஒருகழை நீடிய சுரன் இறந்து
எய்தினர் கொல்லோ பொருளே அல்குல்
அவ்வரி வாடத் துறந்தோர்
வன்பர் ஆகத்தாம் சென்ற நாட்டே.

88. குறுந்தொகை - 192

பாலை

தலைவி கூற்று

பிரிவடை வற்புறுத்த வன்புறை எதிரழிந்து கிழத்தி உரைத்தது.

ஈங்கே வருவர் இனையல் அவர்என
அழாஅற்கோ இனியே நோய்நொந்து உறைவி
மின்னின் தூவி இருங்குயில் பொன்னின்
உரைதிகழ் கட்டளை கடுப்ப மாச்சினை
நறுந்தாது கொழுதும் பொழுதும்
வறுங்குரற் கூந்தல் தைவரு வேனே.

89. குறுந்தொகை - 197

நெய்தல்

தலைவிகூற்று

பருவ வரவின்கண் வற்புறுத்துந் தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

யாதுசெய் வாம்கொல் தோழி நோதக
நீர் எதிர் கருவிய கார்எதிர் கிளை மழை
ஊதைஅங் குளிரொடு பேதுற்று மயங்கிய
கூதிர் உருவிற் கூற்றம்
காதலர்ப் பிரிந்த எற்குறித்து வருமே.

90. குறுந்தொகை - 287

முல்லை

தோழி கூற்று

பிரிவிடை வேறுபட்ட கிழத்தி நம்மைத் துறந்து வாராரென்று கவன்றாட்குப் பருவங்காட்டித் தோழி வருவர் எனச் சொல்லியது.

அம்ம வாழி தோழி காதலர்
இன்னே கண்டும் துறக்குவர் கொல்லோ
முந்நால் திங்கள் நிறைபொறுத்து அசைஇ
ஒதுங்கல் செல்லாப் பசும்புளி வேட்கைக்
கடுஞ்சூல் மகளிர் போல நீர் கொண்டு
விசும்பு இவர் கல்லாது தாங்குபு புணரிச்
செழும்பல் குன்றம் நோக்கிப்
பெருங்கலி வானம் ஏர் தரும் பொழுதே.

## கழார்க்கீரனெயிற்றியார் பாடல்கள்

91. அகநானூறு - 163

பாலை

தலைவி கூற்று

பிரிவின்கண் வற்புறுத்துந் தோழிக்குத் தலைமகள் ஆற்றாமை மீதூரச் சொல்லியது.

விண்அதிர்பு தலைஇய விரவுமலர் குழையத்
தண்மழை பொழிந்த தாழ்பெயற் கடைநாள்
எமியம் ஆகத் துனிஉளங் கூரச்
சென்றோர் உள்ளிச் சில்வளை நெகிழப்
பெருநசை யுள்ளமொடு வருநசை நோக்கி

விளியும் எவ்வமொடு அளியள் என்னாது
களிறுஉயிர்த் தன்ன கண்அழி துவலை
முளரி கரியும் முன்பனிப் பானாட்
குன்று நெகிழ்ப்பு அன்ன குளிர் கொள் வாடை
எனக்கே வந்தனை போறி புனற்கால்

அயிர்இடு குப்பையின் நெஞ்சு நெகிழ்ந்து அவிழக்
கொடியோர் சென்ற தேஎத்து மடியாது
இனையை யாகிச் செல்மதி
வினைவிதுப் புறுநர் உள்ளலும் உண்டே.

92. அகநானூறு - 217

பாலை

தலைவி கூற்று

பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் ஆற்றாமை மீதூரச் சொல்லியது.

பெய்துபுலந் திறந்த பொங்கல் வெண்மழை
எஃகுஉறு பஞ்சித் துய்ப்பட் டன்ன
துவலை தூவல் கழிய அகல்வயல்
நீடுகழைக் கரும்பின் கணைக்கால் வான்பூக்
கோடைப் பூளையின் வாடையொடு துயல்வரப்

பாசிலை பொதுளிய புதல்தொறும் பகன்றை
நீல்உண் பச்சை நிறம்மறைத்து அடைச்சிய
தோல்எறி பாண்டிலின் வாலிய மலரக்
கோழிலை யவரைக் கொழுமுகை யவிழ
ஊழ்உறு தோன்றி ஒண்பூத் தளைவிடப்

புலந்தொறுங் குருகினம் நரலக் கல்லென
அகன்றுஉறை மகளிர் அணிதுறந்து நடுங்க
அற்சிரம் வந்தன்று அமைந்தன்று இதுவென
எப்பொருள் பெறினும் பிரியன்மி னோவெனச்
செப்புவல் வாழியோ துணையுடை யீர்க்கே

நல்காக் காதலர் நலனுண்டு துறந்த
பாழ்படு மேனி நோக்கி நோய்பொர
இணர் இறுபு உடையும் நெஞ்சமொடு புணர்வேட்டு
எயிறுதீப் பிறப்பத் திருகி
நடுங்குதும் பிரியின்யாம் கடும்பனி உழந்தே.

93. அகநானூறு - 235

பாலை

தலைவி கூற்று

தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள் ஆற்றாமை மீதூரத் தோழிக்குச் சொல்லியது.

அம்ம வாழி தோழி பொருள்புரிந்து
உள்ளார் கொல்லோ காதலர் உள்ளியுஞ்
சிறந்த செய்தியின் மறந்தனர் கொல்லோ
பயன் நிலங் குழைய வீசிப் பெயல் முனிந்து
விண்டு முன்னிய கொண்டல் மாமழை
மங்குல் அற்கமொடு பொங்குபு துளிப்ப
வாடையொடு நிவந்த ஆய் இதழ்த் தோன்றி
சுடர்கொள் அகலின் சுருங்குபிணி யவிழச்
சுரிமுகிழ் முசுண்டைப் பொதிஅவிழ் வான்பூ
விசும்புஅணி மீனிற் பசும்புதல் அணியக்

களவன் மண்அளைச் செறிய அகல்வயற்
கிளைவிரி கரும்பின் கணைக்கால் வான்பூ
மாரிஅங் குருகின் ஈரீய குரங்க
நனிகடுஞ் சிவப்பொடு நாமம் தோற்றிப்
பனிகடி கொண்ட பண்புஇல் வாடை

மருளின் மாலையொடு அருள்இன்றி நலிய
நுதல்இறை கொண்ட அயல்அறி பசலையொடு
தொல்நலஞ் சிதையச் சாஅய்
என்னள்கொல் அளியள் என்னா தோரே.

94. அகநானூறு - 294

முல்லை

தலைவிகூற்று

பருவ வரவின்கண் வற்புறுக்குந் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

மங்குல மாமழை விண்ணதிர்பு முழங்கித்

துள்ளுப் பெயல் கழிந்த பின்றைப் புகை உறப்
புள்ளிநுண் துவலை பூவகம் நிறையக்
காதலர்ப் பிரிந்த கையறு மகளிர்
நீர்வார் கண்ணிற் கருவிளை மலரத்

துய்த்தலைப் பூவின் புதல் இவர் ஈங்கை
நெய்த்தோய்த் தன்ன நீர்நனை யந்தளிர்
இருவகிர் இருளின் ஈரிய துயல்வர
அவரைப் பைம்பூப் பயில அகல்வயற்
கதிர்வார் காய்நெல் கட்கு இனிது இறைஞ்சச்

சிதர்சினை தூங்கும் அற்சிர அரைநாள்
காய்சின் வேந்தன் பாசறை நீடி
நம்நோய் அறியா அறனி லாளர்
இந்நிலை களைய வருகுவர் கொல் என
ஆனது எறிதரும் வாடையொடு
நோனேன் தோழியென் தனிமை யானே.

95. அகநானூறு - 35

மருதம்

தலைவி கூற்று

பிரிவிடை மெலிந்த கிழத்தி தோழிக்குச் சொல்லியது.

நாண்இல மன்ற எம் கண்ணே நாள் நேர்பு
சினைப்பசும் பாம்பின் சூல்முதிர்ப் பன்ன
கனைத்த கரும்பின் கூம்புபொதி அவிழ
நுண்உறை அழிதுளி தலைஇய
தண்வரல் வாடையும் பிரிந்திசினோர்க்கு அழலே

96. அகநானூறு - 261

குறிஞ்சி

தலைவி கூற்று

இரவுக்குறிக்கண் தலைமகன் சிறைப்புறமாகத் தலைமகள் தோழிக்குச் செல்லலுவாளாய்ச் சொல்லியது.

பழமழை பொழிந்தெனப் பதன்அழிந்து உருகிய
சிதட்டுக்காய் எண்ணின் சில்பெயற் கடைநாள்
சேற்றுநிலை முனைஇய செங்கட் காரான்
நள்ளென் யாமத்து ஐ எனக் கரையும்
அஞ்சுவரு பொழுதி னானும் என்கண்

துஞ்சா வாழி தோழி காவலர்
கணக்குஆய் வகையின் வருந்திஎன்
நெஞ்சுபுண் உற்ற விழுமத் தானே.

97. நற்றிணை - 281

பாலை

தலைவி கூற்று

வன்பொறை எதிரழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது. ஆற்றாளெனக் கவன்ற தோழி தலைமகட்கு உரைத்ததூஉமாம்.

மாசுஇல் மரத்த பலிஉண் காக்கை
வளிபொரு நெடுஞ்சினை தளியொடு தூங்கி
வெல்போர்ச் சோழர் கழாஅர்க் கொள்ளும்
நல்வகை மிகுபலிக் கொடையோடு உகுக்கும்
அடங்காச் சொன்றி யம்பல் யாணர்

விடக்குடைப் பெருஞ்சோறு உள்ளுவன இருப்ப
மழைஅமைந் துஉற்ற மால்இருள் நடுநாள்
தாம்நம் உழைய ராகவும் நாம் நம்
பனிக்கடு மையின் நனிபெரிது அழுங்கித்
துஞ்சாம் ஆகலும் அறிவோர்
அன்பிலர் தோழிநங் காத லோரே.

98. நற்றிணை - 312

பாலை

தலைவன் கூற்று

பொருள் வலித்த தலைமகன் நெஞ்சினை நெருங்கிச் சொல்லியது.

நோகோ யானே நோம்என் நெஞ்சே
பனிப் புதல் ஈங்கை அங்குழை வருடச்
சிறை குவிந்திருந்த பைதல் வெண் குருகு
பார்வை வேட்டுவன் காழ்களைந் தருள
மாரி நின்ற மையல் அற்சிரம்

யாம் தன் உழையம் ஆகவுந் தானே
எதிர்த்த தித்தி முற்றா மலையள்
கோடைத் திங்களும் பனிப்போள்
வாடைப் பெருமபனிக்கு என்னள்கொல் எனவே.

# காக்கை பாடினியார் நச்செள்ளையார் பாடல்கள்

99. குறுந்தொகை - 210

முல்லை

தோழிகூற்று

பிரிந்துவந்த தலைமகன் நன்காற்றுவித்தாய் என்றாற்குத் தோழி உரைத்தது.

திண்தேர் நள்ளி கானத் தண்டர்
பல்ஆ பயந்த நெய்யின் தொண்டி
முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெண்சோறு
எழுகலத்து ஏந்தினும் சிறுது என் தோழி
பெருந்தோள் நெகிழ்த்த செல்லற்கு
விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே.

100. பதிற்றுப்பத்து

ஆறாம்பத்து

| | | |
|---|---|---|
| துறை | - | வஞ்சித்துறைப் பாடாண்பாட்டு |
| வண்ணம் | - | ஒழுகு வண்ணமும் சொற்சீர் வண்ணமும் |
| தூக்கு | - | செந்தூக்கும் வஞ்சித் தூக்கும் |
| பெயர் | - | வடு அடு நுண் அயிர் |

மன்னவன் வினோதத்து மென்மையும் செருவகத்துக் கடுமையும் உடன் கூறுதல்.

துளங்கு நீர் வியலகம் கலங்கக் கால் பொர,
விளங்கு இரும் புணரி உரும் என முழங்கும்
கடல் சேர் கானற் குட புலம் முன்னி,
கூவல் துழந்த தடந் தாள் நாரை
குவி இணர் ஞாழல் மாச் சினைச் சேக்கும்,

வண்டு இறைகொண்ட, தண் கடற் பரப்பின்
அடும்பு அமல் அடைகரை அலவன் ஆடிய
வடு அடு நுண் அயிர் ஊதை உஞற்றும்,
தூ இரும் போந்தைப் பொழில், அணிப் பொலிதந்து,
இயலினள், ஒல்கினள், ஆடும் மட மகள்

வெறி உறு நுடக்கம் போலத் தோன்றி,
பெரு மலை, வயின் வயின் விலங்கும் அருமணி
அர வழங்கும், பெருந் தெய்வத்து,
வளை ஞரலும் பனிப் பௌவத்து,
குண குட கடலோடு ஆயிடை மணந்த

பந்தர் அந்தரம் வேய்ந்து,
வண் பிணி அவிழ்ந்த கண் போல் நெய்தல்
நனை உறு நறவின் நாடுடன் கமழ,
சுடர் நுதல், மட நோக்கின்,
வாள் நகை, இலங்குஎயிற்று,

அமிழ்து பொதி துவர் வாய், அசை நடை விறலியர்
பாடல் சான்று நீடினை உறைதலின்,
வெள் வேல் அண்ணல் மெல்லியன் போன்ம்! என
உள்ளுவர் கொல்லோ, நின் உணரா தோரே?
மழை தவழும் பெருங் குன்றத்து,

செயிருடைய அரவு எறிந்து,
கடுஞ் சினத்த மிடல் தபுக்கும்
பெருஞ் சினப் புயல் ஏறு அனையை;
தாங்குநர் தடக் கை யானைத் தொடிக் கோடு துமிக்கும்
எஃகுடை வலத்தர், நின் படைவழி வாழ்நர்;

மறம் கெழு போந்தை வெண் தோடு புனைந்து,
நிறம் பெயர் கண்ணிப் பருந்து ஊறு அளப்ப,
தூக் கணை கிழித்த மாக் கண் தண்ணுமை
கை வல் இளையர் கை அலை அழுங்க,
மாற்று அருஞ் சீற்றத்து மா இருங் கூற்றம்

வலை விரித்தன்ன நோக்கலை;
கடியையால், நெடுந்தகை செருவகத்தானே,

101. பதிற்றுப்பத்து - 52

துறை - குரவை நிலை
வண்ணம் - ஒழுகு வண்ணம்
தூக்கு - செந்தூக்கு
பெயர் - சிறுசெங்குவளை

மன்னவன் கைவண்மையோடும் வென்றியோடும் படுத்து, அவன் காம இன்பச் சிறப்புக் கூறுதல்.

கொடி நுடங்குநிலைய கொல் களிறு மிடைந்து,
வடி மிண நெடுந் தேர்வேறு புலம் பரப்பி,
அருங் கலம் தரீஇயர், நீர் மிசை நிவக்கும்
பெருங் கலி வங்கம் திசை திரிந்தாங்கு,
மை அணிந்து எழுதரு மா இரும் பல் தோல்

மெய் புதை அரணம் எண்ணாது, எஃகு சுமந்து,
முன் சமத்து எழுதரும் வன்கண் ஆடவர்
தொலையாத் தும்பை தெவ்வழி விளங்க,
உயர்நிலை உலகம் எய்தினர், பலர் பட,
நல் அமர்க்கடந்த நின் செல் உறழ் தடக் கை

இரப்போர்க்குக் கவிதல் அல்லதை, இரைஇய
மலர்பு அறியா எனக் கேட்டிகும்; இனியே,
சுடரும் பாண்டில் திரு நாறு விளக்கத்து,
முழா இமிழ் துணங்கைக்குத் தழூஉப் புணை ஆக,
சிலைப்பு வல் ஏற்றின் தலைக் கை தந்து,நீ

நளிந்தனை வருதல், உடன்றனள் ஆகி;
உயலும் கோதை, ஊரல் அம் தித்தி,
ஈர் இதழ் மழைக்கண், பேர் இயல் அரிவை
ஒள் இதழ் அவிழகம் கடுக்கும் சீறடி,
பல் சில கிண்கிணி சிறு பரடு அலைப்ப,

கொல் புனல் தளிரின் நடுங்குவனள் நின்று,நின்
எறியர் ஓக்கிய சிறு செங் குவளை,
'ஈ' என இரப்பவும், ஒல்லாள்; நீ எமக்கு
யாரையோ? எனப் பெயர்வோள் கையதை
கதுமென உருத்த நோக்கமொடு, அது நீ

பாஅல் வல்லாய் ஆயினை, பா அல்
யாங்கு வல்லினையோ-வாழ்க, நின் கண்ணி!-
அகல் இரு விசும்பில் பகல் இடம் தரீஇயர்;
தெறு கதிர் திகழ்தரும் உரு கெழு ஞாயிற்று
உருபு கிளர் வண்ணம் கொண்ட
வான் தோய் வெண்குடை வேந்தர்தம் எயிலே?

102. பதிற்றுப்பத்து - 53

துறை - செந்துரைப்பாடாண் பாட்டு
வண்ணம் - ஒழுகுவண்ணம்
தூக்கு - செந்தூக்கு
பெயர் - குண்டு கண் அகழி

அடைந்தவர்க்கு அருளலொடு படுத்து, மன்னவன் வென்றிச் சிறப்புக் கூறுதல்.

வென்று கலம் தரீஇயர் வேண்டு புலத்து இறுத்து, அவர்
வாடா யாணர் நாடு திறை கொடுப்ப,

'நல்கினை ஆகுமதி, எம்' என்று; அருளி,
கல் பிறங்கு வைப்பின் கடறு அரை யாத்த நின்
தொல் புகழ் மூதூர்ச் செல்குவை ஆயின்,

செம்பொறிச் சிலம்பொடு அணித் தழை தூங்கும்
எந்திரத் தகைப்பின் அம்புடை வாயில்,
கோள் வல் முதலைய குண்டு கண் அகழி,
வான் உற ஓங்கிய வளைந்து செய் புரிசை,
ஒன்னாத் தெவ்வர் முனை கெட விலங்கி,

நின்னின் தந்த மன் எயில் அல்லது,
முன்னும் பின்னும் நின் முன்னோர் ஓம்பிய
எயில் முகப்படுத்தல் யாவது? வளையினும்,
பிறிது ஆறு சென்மதி, சினம் கெழு குருசில்!-
எழூஉப் புறந்தரீஇ, பொன் பிணிப் பலகைக்

குழூஉ நிலைப் புதவின் கதவு மெய் காணின்,
தேம் பாய் கடாத்தொடு காழ் கை நீவி,
வேங்கை வென்ற பொறி கிளர் புகர் நுதல்
ஏந்து கை சுருட்டித் தோட்டி நீவி,
மேம்படு வெல் கொடி நுடங்கத்
தாங்கல் ஆகா, ஆங்கு நின் களிறே.

103. பதிற்றுப்பத்து - 54

துறை - காட்சி வாழ்த்து
வண்ணம் - ஒழுகுவண்ணம்
தூக்கு - செந்தூக்கு
பெயர் - நில்லாத் தானை

மன்னவன் கொடைச் சிறப்பும் தன் குறையும் கூறி, வாழ்த்துதல்.

வள்ளியை என்றலின், காண்கு வந்திசினே;
உள்ளியது முடித்தி; வாழ்க, நின் கண்ணி!
வீங்கு இறைத் தடைஇய அமை மருள் பணைத் தோள்,
ஏந்து எழில் மழைக்கண், வனைந்து வரல் இள முலை,
பூந் துகில் அல்குல், தேம் பாய் கூந்தல்,

மின் இழை, விறலியர் நின் மறம் பாட,
இரவலர் புன்கண் தீர, நாள்தொறும்,
உரை சால் நன் கலம் வரைவு இல வீசி,
அனையை ஆகன்மாறே, எனை யதூஉம்

உயர் நிலை உலகத்துச் செல்லாது, இவண் நின்று,

இரு நில மருங்கின் நெடுது மன்னியரோ!-
நிலம் தப இடூஉம் ஏணிப் புலம் படர்ந்து,
படு கண் முரசம் நடுவண் சிலைப்பத்,
தோமர வலத்தர் நாமம் செய்ம்மார்,
ஏவல் வியங்கொண்டு, இளையரொடு எழுதரும்

ஒல்லார் யானை காணின்,
நில்லாத் தானை இறை கிழவோயே!

104. பதிற்றுப்பத்து - 55

துறை - செந்துறைப் பாடாண் பாட்டு
வண்ணம் - ஒழுங்குவண்ணம்
தூக்கு - செந்தூக்கு
பெயர் - துஞ்சும் பந்தர்

மன்னவன் உலகு புரத்தலும் தன் குறையும் கூறி, வாழ்த்துதல்.

ஆன்றோர் கணவ! சான்றோர் புரவல!
நின் நயந்து வந்ததென், அடு போர்க் கொற்றவ!
இன் இசைப் புணரி இரங்கும் பௌவத்து,
நன் கல வெறுக்கை துஞ்சும் பந்தர்க்
கமழும் தாழைக் கானல்அம் பெருந்துறை,

தண் கடற் படப்பை நல் நாட்டுப் பொருந!
செவ் ஊன் தோன்றா, வெண்துவை முதிரை,
வால் ஊன்வல்சி மழவர் மெய்ம்மறை!
குடவர் கோவே! கொடித் தேர் அண்ணல்!
வாரார் ஆயினும் இரவலர், வேண்டி,

தேரின் தந்து, அவர்க்கு ஆர் பதன் நல்கும்
நசை சால் வாய்மொழி இசை சால் தோன்றல்!-
வேண்டுவ அளவையுள் யாண்டு பல கழிய,
பெய்து புறந்தந்து, பொங்கல் ஆடி
விண்டுச் சேர்ந்த வெண் மழை போலச்

சென்றாலியரோ- பெரும! அல்கலும்,
நனந் தலை வேந்தர் தார் அழிந்து அலற,
நீடு வரை அடுக்கத்த நாடு கைக்கொண்டு,
பொருது சினம் தணிந்த செருப் புகல் ஆண்மைத்

தாங்குநர்த் தகைத்த ஒள் வாள்,
ஓங்கல் உள்ளத்துக் குருசில்! நின் நாளே.

105. பதிற்றுப்பத்து - 56

துறை - ஒள்வாள் அமலை
வண்ணம் - ஒழுகுவண்ணம்
தூக்கு - செந்தூக்கு
பெயர் - வேந்து மெய்ம்மறந்த வாழ்ச்சி

வென்றிச் சிறப்பு

விழவு வீற்றிருந்த வியலுள் ஆங்கண்,
கோடியர் முழவின் முன்னர், ஆடல்
வல்லான் அல்லன்; வாழ்க, அவன் கண்ணி!-
வலம் படு முரசம் துவைப்ப, வாள் உயர்த்து,
இலங்கும் பூணன், பொலங் கொடி உழிஞையன்,

மடம் பெருமையின் உடன்று மேல் வந்த
வேந்து மெய்ம்மறந்த வாழ்ச்சி
வீந்து உகு போர்க்களத்து ஆடும்கோவே.

106. பதிற்றுப்பத்து - 57

துறை - விறலி ஆற்றுப்படை
வண்ணம் - ஒழுகுவண்ணம்
தூக்கு - செந்தூக்கு
பெயர் - சில் வளை விறலி

வென்றிச் சிறப்பொடு கொலைச் சிறப்பும் உடன் கூறுதல்.

ஓடாப் பூட்கை மறவர் மிடல் தப,
இரும் பனம் புடையலொடு வான் கழல் சிவப்பக்,
குருதி பனிற்றும் புலவுக் களத்தோனே,
துணங்கை ஆடிய வலம் படு கோமான்:
மெல்லிய வகுந்தில் சீறடி ஒதுங்கிச்

செல்லாமோதில்-சில் வளை விறலி!-
பாணர் கையது பணி தொடை நரம்பின்
விரல் கவர் பேரியாழ் பாலை பண்ணி,
குரல் புணர் இன் இசைத் தழிஞ்சி பாடி;
இளந் துணைப் புதல்வர் நல் வளம் பயந்த,

வளம் கெழு குடைச்சூல், அடங்கிய கொள்கை,
ஆன்ற அறிவின் தோன்றிய நல் இசை,

ஒள் நுதல் மகளிர் துனித்த கண்ணினும்,
இரவலர் புன்கண் அஞ்சும்
புரவு எதிர் கொள்வனைக் கண்டனம் வரற்கே?

107. பதிற்றுப்பத்து - 58

துறை - செந்துறைப் பாடாண் பாட்டு
வண்ணம் - ஒழுகுவண்ணம்
தூக்கு - செந்தூக்கு
பெயர் - ஏ விளங்கு தடக்கை

மன்னவன் நாட்டுச் செல்வமும் அதற்கேற்ற அவனது கொடையும் கூறுதல்.

ஆடுக, விறலியர்! பாடுக, பரிசிலர்!-
வெண் தோட்டு அசைத்த ஒண் பூங் குவளையர்,
வாள் முகம் பொறித்த மாண் வரி யாக்கையர்,
செல் உறழ் மறவர் தம் கொல்படைத் தரீஇயர்,
'இன்று இனிது நுகர்ந்தனம் ஆயின், நாளை

மண் புனை இஞ்சி மதில் கடந்தல்லது
உண்குவம் அல்லேம், புகா' எனக் கூறிக்
கண்ணி கண்ணிய வயவர் பெருமகன்
பொய் படுபு அறியா வயங்கு செந் நாவின்,
எயில் எறி வல் வில் ஏ விளங்கு தடக் கை,

ஏந்து எழில் ஆகத்துச் சான்றோர் மெய்ம்மறை;
வானவரம்பன் என்ப-கானத்துக்
கறங்கு இசைத் சிதடி பொரி அரைப் பொருந்திய
சிறியிலை வேலம் பெரிய தோன்றும்
புன்புலம் வித்தும் வன் கை வினைஞர்

சீருடைப் பல் பகடு ஒலிப்பப் பூட்டி,
நாஞ்சில் ஆடிய கொழுவழி மருங்கின்
அலங்கு கதிர்த் திரு மணி பெறூஉம்,
அகன் கண் வைப்பின் நாடு கிழவோனே.

108. பதிற்றுப்பத்து - 59

துறை - செந்துறைப் பாடாண் பாட்டு
தூக்கு - ஒழுகுவண்ணம்
பெயர் - செந்தூக்கு
பெயர் - மா கூர் திங்கள்

வென்றிச் சிறப்பு,

பகல் நீடு ஆகாது, இரவுப்பொழுது பெருகி,
மாசி நின்ற மா கூர் திங்கள்,
பனிச் சுரம் படரும் பாண்மகன் உவப்ப,
புல் இருள் விடிய, புலம்பு சேண் அகலப்,
பாய் இருள் நீங்க, பல் கதிர் பரப்பி,

ஞாயிறு குணமுதல் தோன்றிய அங்கு,
இரவல் மாக்கள் சிறுகுடி பெருக,
உலகம் தாங்கிய மேம்படு கற்பின்
வில்லோர் மெய்ம்மறை வீற்று இருங் கொற்றத்துச்
செல்வர் செல்வ சேர்ந்தோர்க்கு அரணம்!-

அறியாது எதிர்ந்து, துப்பில் குறையுற்றுப்,
பணிந்து திறை தருப, நின் பகைவர், ஆயின்;
சினம் செலத் தணியுமோ? வாழ்க, நின் கண்ணி!-
பல் வேறு வகைய நனந் தலை ஈண்டிய
மலையவும் கடலவும் பண்ணியம் பகுக்கும்

ஆறு முட்டுறாஅது, அறம் புரிந்து ஒழுகும்
நாடல் சான்ற துப்பின் பணைத் தோள்,
பாடு சால் நன் கலம் தரூஉம்
நாடு புறந்தருதல் நினக்குமார் கடனே.

109. பதிற்றுப்பத்து - 60

துறை - விறலி ஆற்றுப்படை
வண்ணம் - ஒழுகுவண்ணம்
தூக்கு - செந்தூக்கு
பெயர் - மரம் பட தீம்கனி

மன்னவன் கொடைச் சிறப்பொடு வென்றிச் சிறப்பும் கூறுதல்.

கொலை வினை மேவற்றுத் தானை; தானே
இகல் வினை மேவலன்; தண்டாது வீசும்;
செல்லாமோதில், பாண்மகள்! காணியர்-
மிஞிறு புறம் மூசவும் தீம் சுவை திரியாது,
அரம் போழ்கல்லா மரம் படு தீம் கனி

அம் சேறு அமைந்த முண்டை விளை பழம்
ஆறு செல் மாக்கட்கு ஓய் தகை தடுக்கும்,
மறாஅ விளையுள் அறாஅ யாணர்த்

தொகை மடி களைந்த சிலையுடைய மறவர்
பொங்கு பிசிர் புணரி மங்குலொடு மயங்கி,

வரும் கடல் ஊதையின் பனிக்கும்,
துவ்வா நறவின் சாய் இனத்தானே.

110. பி.சே. பதிப்பகம்

குடக்கோ நெடுஞ்சேரலாதற்கு வேஎள்
ஆவிக் கோமான் தேவி ஈன்ற மகன்
தண்டா ரணியத்துக் கோட்பட்ட வருடையைத்
தொண்டியுள் தந்து கொடுப்பித்து, பார்ப்பார்க்குக்
கபிலையொடு குடநாட்டு ஓர் ஊர் ஈத்து,

வானவரம்பன் எனப்பேர் இனிது விளக்கி,
ஏனை மழவரைச் செருவில் சுருக்கி,
மன்னரை ஓட்டிக்
குழவி கொள்வாரின் குடி புறந்தந்து,
நாடல் சான்ற நயனுடை நெஞ்சின்

ஆடு கோட்பாட்டுச் சேரலாதனை
யாத்த செய்யுள் அடங்கிய கொள்கைக்
காக்கைபாடினியார் நச்செள்ளையார்
பாடினார் பத்துப்பாட்டு.

111. புறநானூறு - 278

திணை - தும்பை

துறை - உவகைக் கலுழ்ச்சி

நரம்பு எழுந்து உலறிய நிரம்பா மென்தோள்
முளரி மருங்கின் முதியோள் சிறுவன்
படை அழிந்து மாறினன் என்றுபலர் கூற
மண்டு அமர்க்கு உடைந்தனன் ஆயின் உண்டஎன்
முலைஅறுத் திடுவென் யான்எனச் சினைஇக்

கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்
செங்களம் துழவுவோள் சிதைந்து வேறாகிய
படுமகன் கிடக்கை காணூஉ
ஈன்ற ஞான்றினும் பெரிது உவந்தன்றே

## காமக்கணிப் பசலையார் (நப்பசலையார்)

112. நற்றிணை - 243

பாலை

தலைவி கூற்று

பிரிவிடை மெலிந்த தலைமகள் சொல்லியது.

தேம்படு சிலம்பில் தெள் அறல் தழீஇய
துறுகல் அயலதூ மணல் அடைகரை
அலங்கு சினை பொதுளிய நறு வடிமாஅத்துப்
பொதும்பு தோறு அல்கும் பூங் கண் இருங்குயில்
'கவறு பெயர்த்தன்ன நில்லா வாழ்க்கை இட்டு
அகறல் ஓம்புமின்' அறிவுடையீர்!' என,
கையறத் துறப்போர்க் கழறுவ போல
மெய் உற இருந்து மேவர நுவல,
இன்னாது ஆகிய காலை, பொருள்வயிற்
பிரிதல் ஆடவர்க்க இயல்பு எனின்,
அரிது மன்றம்ம, அறத்தினும் பொருளே?

## காமம் சேர் குளத்தார் பாடல்

113. குறுந்தொகை - 4

நெய்தல்

தலைவி கூற்று

பிரிவிடை ஆற்றள் எனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

நோம் என் நெஞ்சே நோம் என் நெஞ்சே
இமை தீய்ப்பு அன்ன கண்ணீர் தாங்கி
அமைதற்கு அமைந்தநம் காதலர்
அமைவிலர் ஆகுதல் நோம்என் நெஞ்சே

## கார்க்கியார் (நெய்தற் கார்க்கியார்) பாடல்கள்

114. குறுந்தொகை - 55

நெய்தல்

தோழி கூற்று

வரைவொடு புகுதானேல் இவள் இறந்துபடும் எனத் தோழி, தலைமகன் சிறைப்புறத் தானாகச் சொல்லியது.

மார்கழி மணிப்பூக் கூம்பத் தூத்திரைப்
பொங்குபிதிர்த் துவலையொடு மங்குல் தைஇக்

கையற வந்த தைவரல் ஊதையொடு
இன்னா உறையுட்டு ஆகும்
சின்நாட்டு அம்ம இச் சிறுநல் ஊரே

115. குறுந்தொகை - 212

நெய்தல்

தோழி கூற்று

குறை நேர்ந்த தோழி குறை நயப்பக் கூறியது.

கொண்கன் ஊர்ந்த கொடுஞ்சி நெடுந்தேர்
தெண்கடல் அடைகரைத் தெளிர்மணி ஒலிப்பக்
காண வந்து நாணப் பெயரும்
அளிதோ தானே காமம்
விளிவது மன்ற நோகோ யானே

## காவற் பெண்டு பாடல்

116. புறநானூறு - 86

திணை - வாகை

துறை - ஏறாண்முல்லை

சிற்றில் நல்தூண் பற்றி நின்மகன்
யாண்டு உளனோ? என வினவுதி யென்மகன்
புலிசேர்ந்து போகிய கல்லளை போல
ஈன்ற வயிறோ இதுவே
தோன்றுவன் மாதோ போர்க்களத் தானே

## குமிழிஞாழலார் நப்பசலையார் பாடல்

117. அகநானூறு - 160

நெய்தல்

தோழி கூற்று

தோழி வரைவு மலிந்து சொல்லியது

ஒடுங்கு ஈர் ஓதி நினக்கும் அற்றோ
நடுங்கின்று அளித்துஎன் நிறைஇல் நெஞ்சம்
அடும்புகொடி சிதைய வாங்கிக் கொடுங்கழிக்
குப்பை வெண்மணற் பக்கஞ் சேர்த்தி
நிறைச்சூல் யாமை மறைத்து ஈன்று புதைத்த
கோட்டுவட்டு உருவின் புலவுநாறு முட்டைப்
பார்ப்புஇடன் ஆகும் அளவைப் பகுவாய்க்

கணவன் ஓம்புங் கானல் அஞ் சேர்ப்பன்
முள்உறின் சிறத்தல் அஞ்சி மெல்ல
வாவு உடைமையின் வள்பின் காட்டி

ஏத் தொழில் நவின்ற எழில் நடைப் புரவி
செழுநீர்த் தண்கழி நீந்தலின் ஆழி
நுதிமுகங் குறைந்த பொதிமுகிழ் நெய்தல்
பாம்புஉயர் தலையின் சாம்புவன நிவப்ப
இரவந் தன்றால் திண்தேர் கரவாது

கல்லென வொலிக்கும் இளையரொடு வல்வாய்
அரவச் சீறூர் காணப்
பகல் வந்தன்றால் பாய்பரி சிறந்தே
பாடம் : ஒல்லென (வரி 16) மர்ரே பதிப்பு

## குறமகள் இளஎயினி பாடல்

118. புநனானூறு - 157
திணை - பாடாண்திணை
துறை - இயன்மொழி
ஏறைக்கோனைப் பாடியது

தமர்தற் தப்பின் அதுநோன் றல்லும்
பிறர்கை யறவு தான்நா ணுதலும்
படைப்பழி தாரா மைந்தினன் ஆகலும்
வேந்துடை அவையத்து ஓங்குபு நடத்தலும்
நும்மோர்க்குத் தகுவனஅல்ல எம்மோன்
சிலைசெல மலர்ந்த மார்பின் கொலை வேல்
கோடற் கண்ணிக் குறவர் பெருமகன்
ஆடு மழை தவிர்க்கும் பயம்கெழு மீமிசை
எல்படு பொழுதின் இனம் தலை மயங்கிக்
கட்சி காணாக் கடமான் நல்ஏறு
மடமான் நாகுபிணை பயிரின் விடர்முழை
இரும்புலிப் புகர்ப்போத்து ஓர்க்கும்
பெருங்கல் நாடன்எம் ஏறைக்குத் தகுமே.

## குறமகள் குறியெயினி பாடல்

119. நற்றிணை - 357
குறிஞ்சி

தலைவிகூற்று

தலைமகன் வரைவு நீடிய விடத்து ஆற்றுவ லென்பது படச் சொல்லியது. மனைமருண்டு வேறுபாடாயினா யென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியதூஉமாம்.

நின்குறிப்பு எவனோ தோழி என்குறிப்பு
என்னொடு நிலையாது ஆயினும் என்றும்
நெஞ்சுவடுப் படுத்துக் கெடஅறி யாதே
சேணுறத் தோன்றுங் குன்றத்துக் கவாஅன்
பெயல்உழந்து உலறிய மணிப்பொறிக் குடுமிப்

பீலி மஞ்ஞை ஆலுஞ் சோலை
அங்கண் அறைய அகல்வாய்ப் பைஞ்சுனை
உண்கண் ஒப்பின் நீலம் அடைச்சி
நீர் அலைக் கலைஇய கண்ணிச்
சாரல் நாடனொடு ஆடிய நாளே.

## குன்றியனார் பாடல்கள்

120. அகநானூறு - 40

நெய்தல்

தலைவிகூற்று

தலைமகன் பொருள்வயிற் பிரிந்தவழி, கிழத்தி தோழிக்குச் சொல்லியது.

கானல், மாலைக் கழிப்பூக் கூம்ப,
நீல் நிறப் பெருங்கடல் பாடு எழுந்து ஒலிப்ப,
மீன் ஆர் குருகின் மென் பறைத் தொழுதி
குவை இரும் புன்னைக் குடம்பை சேர,
அசை வண்டு ஆர்க்கும் அல்குறுகாலை

தாழை தளரத் தூக்கி, மாலை
அழிதக வந்த கொண்டலொடு கழிபடர்க்
காமர் நெஞ்சம் கையறுபு இனைய,
துயரம் செய்து நம் அருளார் ஆயினும்-
அறா அலியரோ அவருடைக் கேண்மை!

அளி இன்மையின் அவண் உறைமுனைஇ
வாரற்க தில்ல - தோழி! - கழனி
வெண்ணெல் அரிநர் பின்றைத் ததும்பும்
தண்ணுமை வெரீஇய தடந் தாள் நாரை
செறிமடை வயிரின் பிளிற்றி, பெண்ணை

அகமடல் சேக்கும் துறைவன்
இன் துயில் மார்பில் சென்ற என் நெஞ்சே!

121. அகநானூறு - 41

பாலை

தலைவன் கூற்று

தலைமகன் பொருள்வயிற் பிரிந்தவிடத்து, கிழத்தியை நினைத்து சொல்லியது.

வைகு புலர் விடியல், மை புலம் பரப்பக்
கரு நனை அவிழ்ந்த ஊழுறு முருக்கின்
எரி மருள் பூஞ்சினை இனச் சிதர் ஆர்ப்ப
நெடு நெல் அடைச்சிய கழனி ஏர் புகுத்துக்
குடுமிக் கட்டிய படப்பையொடு மிளிர,

அரிகால் போழ்ந்த தெரிபகட்டு உழவர்
ஓதைத் தெள் விளி புலம்தொறும் பரப்ப,
கோழிணர் எதிரிய மரத்த, கவினிக்,
காடு அணி கொண்ட காண்தகு பொழுதில்,
நாம் பிரி புலம்பின் நலம் செலுச் சாஅய்,

நம் பிரிபு அறியா நலனொடு சிறந்த
நல் தோள் நெகிழ, வருந்தினள் கொல்லோ-
மென் சிறை வண்டின் தண் கமழ் பூந்துணர்த்
தாது இன் துவலை தளிர் வார்ந்தன்ன
அம் கலுழ் மாமை கிளைஇய,
நுண் பல்தித்தி, மா அயோளே?

122. குறுந்தொகை - 50

மருதம்

தலைவி கூற்று

கிழவற்குப் பாங்காயின வாயில்கட்குக் கிழத்தி சொல்லியது.

ஐயவி அன்ன சிறுவீ ஞாழல்
செவ்வி மருதின் செம்மலொடு தாஅய்த்
துறை அணிந்தன்று அவர் ஊரேஇறை இறந்து
இலங்கு வளை நெகிழச் சாஅய்ப்
புலம்பு அணிந்தன்று அவர் மணந்த தோளே

123. குறுந்தொகை - 51

நெய்தல்

தோழி கூற்று

வரைவு நீட்டித்தவிடத்து ஆற்றாளாகிய தலைமகட்குத் தோழி வரைவு மலிவு கூறியது.

கூன்முள் முண்டகக் கூர்ம்பனி மாமலர்
நூல்அறு முத்தின் காலொடு பாறித்
துறைதொறும் வரிக்கும் தூமணற் சேர்ப்பனை
யானும் காதலென் யாயும் நனிவெய்யள்
எந்தையும் கொடீஇயர் வேண்டும
அம்பல் ஊரும் அவனொடு மொழிமே.

124. குறுந்தொகை - 117

நெய்தல்

தோழி கூற்று

வரைவு நீட்டித்தவிடத்து, தலைமகட்குத் தோழி சொல்லியது.

மாரி ஆம்பல் அன்ன கொக்கின்
பார்வல் அஞ்சிய பருவரல் ஈர்ஞெண்டு
கண்டல் வேர் அளைச் செலீஇயர் அண்டர்
கயிறுஅரி எருத்தின் கதழும் துறைவன்
வாராது அமையினும் அமைக
சிறியவும் உள ஈண்டு விலைஞர் கைவளையே.

125. குறுந்தொகை - 238

மருதம்

தோழிகூற்று

தலைமகன் பரத்தையின் மறுத்தந்து வாயில் வேண்டித் தோழியிடைச்சென்று தெளிப்பான் புக்காற்குத் தோழி சொல்லியது.

பாசவல் இடித்த கருங்காழ் உலக்கை
ஆய்கதிர் நெல்லின் வரம்பு அணைத் துயிற்றி
ஒண்தொடி மகளிர் வண்டல் அயரும்
தொண்டி அன்னஎன் நலம்தந்து
கொண்டனை சென்மோ மகிழ்ந நின்சூளே

126. குறுந்தொகை - 301

குறிஞ்சி

தலைவி கூற்று

வரைவிடைவைப்ப, 'ஆற்றகிற்றியோ' என்ற தோழிக்குக் கிழத்தி சொல்லியது.

முழவு முதல் அரைய தடவுநிலைப் பெண்ணைக்
கொழுமடல் இழைத்த சிறுகோல் குடம்பைக்

கருங்கால் அன்றிற் காமர் கடுஞ்சூல்
வயவுப்பெடை அகவும் பானாட் கங்குல்
மன்றம் போழும் இன்மணி நெடுந்தேர்
வாராதாயினும் வருவது போலச்
செவிமுதல் இசைக்கும் அரவமொடு
துயில்மறந் தனவால் தோழிஎன் கண்ணே.

127. குறுந்தொகை - 336

குறிஞ்சி

தோழி கூறியது

தலைமகன் இரவுக்குறி நயந்தானைத் தோழி சொல்லி மறுத்தது.

செறுவர்க்கு உவகை ஆகத் தெறுவர
ஈங்கனம் வருபவோ தேம்பாய் துறைவ
சிறுநா ஒண்மணி விளரி ஆர்ப்பக்
கடுமா நெடுந்தேர் நேமி போகிய
கருங்கழி நெய்தல் போல
வருந்தினள் அளியள்நீ பிரிந்திசி னோளே.

128. நற்றிணை - 117

நெய்தல்

தலைவி கூற்று

வரைவு நீட ஆற்றாளாய தலைவி வண்புறை எதிரழிந்து சொல்லியது; சிறைப்புறமும் ஆம்.

பெருங் கடல் முழங்கக், கானல் மலர,
இருங்கழி ஓதம்இல் இறந்து மலிர
வள்இதழ் நெய்தல் கூம்பப், புள்உடன்
கமழ்பூம் பொதும்பர்க் கட்சி சேரச்,
செல் சுடர் மழுங்கச் சிவந்து வாங்கு மண்டிலம்
கல்சேர்பு நண்ணிப் படர் அடைபு நடுங்க,
புலம்பொடு வந்த புன்கண் மாலை
அன்னர் உன்னார் கழியின், பல்நாள்
வாழலேன் - வாழி, தோழி! - என்கண்
பிணிபிறி தாகக் கூறுவர்;
பழிபிறி தாகல் பண்புமார் அன்றே.

129. நற்றிணை - 239

நெய்தல்

தோழி கூற்று

தலைமகன் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது

ஞான்ற ஞாயிறு குடமலை மறைய,
மான்ற மாலை மகிழ்ந்த பரதவர்
இனிதுபெறு பெருமீன் எளிதினின் மாறி,
அலவன் ஆடிய புலவுமணல் முன்றிற்
காமர் சிறுகுடிச் செல்நெறி வழியின்,

ஆய்மணி பொதிஅவிழ்ந் தாங்கு, நெய்தற்
புல்இதழ் பொதிந்த பூத்தப மிதிக்கும்,
மல்லல் இருங்கழி மலிநீர்ச் சேர்ப்பற்கு,
அமைந்து தொழில் கேட்டன்றோ இலமே; 'முன்கை
வார்கோல் எல்வளை உடைய வாங்கி'

முயங்கு, எனக்கலுழ்ந்த இவ்ஊர்
எற்று ஆவதுகொல், யாம் மற்றொன்று செயினே?

## தாயங்கண்ணியார் பாடல்

130. புறனானூறு - 250

திணை - பொதுவியல்

துறை - தாபத நிலை

குய்குரல் மலிந்த கொழுந் துவை அடிசில்
இரவலர்த் தடுத்த வாயில் புரவலர்
கண்ணீர்த் தடுத்த தண்நறும் பந்தர்க்
கூந்தல் கொய்து குறுந்தொடி நீக்கி
அல்லி உணவின் மனைவியொடு, இனியே

புல்லென் றனையால் - வளங்கெழு திருநகர்
வான்சோறு கொண்டு தீம்பால் வேண்டும்
முனித்தலைப் புதல்வர் தந்தை
தனித்தலைப் பெருங்காடு முன்னிய பின்னே

## நக்கண்ணையார் பாடல்கள்

131. அகநானூறு - 252

குறிஞ்சி

தலைவி கூற்று

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைமகள் சொல்லியது.

இடம்படுபு அறியா வலம்படு வேட்டத்து
வாள்வரி நடுங்கப் புகல்வந்து ஆளி
உயர் நுதல் யானைப் புகர் முகத்து ஒற்றி
வெண்கோடு புய்க்கும் தண்கமழ் சோலைப்
பெருவரை அடுக்கத்து ஒருவேல் ஏந்தித்

தனியன் வருதல் அவனும் அஞ்சான்
பனிவார் கண்ணேன் ஆகி நோய்அட
எமியேன் இருத்தலை யானும் ஆற்றேன்
யாங்குச் செல்வாங்கொல் தோழி ஈங்கைத்
துய் அவிழ் பனிமலர் உதிர வீசித்

தொழில்மழை பொழிந்த பானாட் கங்குல்
எறிதிரைத் திவலை தூஉஞ் சிறுகோட்டுப்
பெருங்குளங் காவலன் போல
அங்கடி அன்னையுந் துயில் மறந்தனளே

132. நற்றிணை - 19

நெய்தல்

தோழிகூற்று

புணர்ந்து நீங்கிய தலைவனைத் தோழி வரைவுகடாயது.

இறவுப்புறத் துஅன்ன பிணர்படு தடவுமுதல்
சுறவுக்கோட் டன்ன முள்இலைத் தாழை
பெருங்களிற்று மருப்பின் அன்ன அரும்புமுதிர்பு
நல்மான் உளையின் வேறுபடத் தோன்றி
விழவுக்களங் கமழும் உரவுநீர்ச் சேர்ப்ப

இனமணி நெடுந்தேர் பாகன் இயக்கச்
செலீஇய சேறி ஆயின் இவளே
வருவை ஆகிய சில்நாள்
வாழா ளாதல்நற்கு அறிந்தனை சென்மே.

133. நற்றிணை - 87

நெய்தல்

தலைவி கூற்று

வரைவிடை வைத்துப் பிரிய ஆற்றாளாய தலைவி கனாக்கண்டு தோழிக்குரைத்தது.

உள்ஊர் மாஅத்த முள்எயிற்று வாவல்
ஓங்கல் அஞ்சினைத் தூங்குதுயில் பொழுதின்
வெல்போர்ச் சோழர் அழிசிஅம் பெருங்காட்டு
நெல்லிஅம் புளிச்சுவைக் கனவி யாஅங்கு
அதுகழிந் தன்றே தோழி அவர்நாட்டுப்
பனி அரும்பு உடைந்த பெருந்தாட் புன்னை
துறை மேய் இப்பி ஈர்ம் புறத்து உறைக்குஞ்
சிறுகுடிப் பரதவர் மகிழ்ச்சியும்
பெருந்தண் கானலும் நினைந்தஅப் பகலே

134. புறநானூறு - 83

திணை - கைக்கிளை

துறை - பழிச்சுதல்

சோழன் போர்வைக்கோப் பெருநற்கிள்ளியைப் பாடியது.

அடிபுனை தொடுகழல் மையணல் காளைக்கு என்
தொடிகழித் திடுதல் யான் யாய் அஞ்சுவலே
அடுதோள் முயங்கல் அவைநா ணுவலே
என்போல் பெருவிதுப் புறுக என்றும்
ஒருபாற் பாடஅ தாகி
இருபாற் பட்டஇம் மையல் ஊரே.

135. புறநானூறு - 84

திணை - கைக்கிளை

துறை - பழிச்சுதல்

சோழன் போர்வைக்கோப் பெருநற்கிள்ளியைப் பாடியது.

என்னை, புற்கை யுண்டும் பெருந்தோ ளன்னே
யாமே, புறம்சிறை இருந்தும் பொன்அன் னம்மே
போர்எதிர்ந் துஎன்னை போர்க்களம் புகினே
கல்லென் பேர் ஊர் விழவுடை ஆங்கண்
ஏமுற்றுக் கழிந்த மள்ளர்க்கு
உமணர் வெரூஉம் துறையன் னன்னே.

136. பறநானூறு - 85

திணை - கைக்கிளை

துறை பழிச்சுதல்

சோழன் போர்வைக்கோப் பெருநற்கிள்ளியைப் பாடியது.

என்னைக்கு ஊர் இஃது அன்மை யானும்
என்னைக்கு நாடு இஃது அன்மை யானும்
ஆடு ஆடு என்ப ஒருசா ரோரே
ஆடு என்று என்ப ஒருசா ரோரே
நல்ல பல்லோர் இருநன் மொழியே

அம்சிலம்பு ஒலிப்ப ஓடி எம்இல்
முழாஅரைப் போந்தை பொருந்தி நின்று
யான்கண் டனன் அவன் ஆடு ஆகுதலே.

## நல்வெள்ளியார் பாடல்கள்

137. அகநானூறு - 32

குறிஞ்சி

தோழி கூற்று (தலைவி கூற்றும் ஆகும்)

பின்நின்ற தலை மகற்குக் குறை நேர்ந்த தோழி தலைமகட்குக் குறை நயப்பக் கூறியது; தோழிக்குத் தலைமகள் சொற்றதூஉம் ஆம்.

நெருநல் எல்லை ஏனல் தோன்றித்
திரு மணி ஒளிர்வரும் பூணன் வந்து
புரவலன் போலும் தோற்றம் உறழ்கொள
இரவல் மாக்களின் பணிமொழி பயிற்றிச்
சிறு தினைப் படு கிளி கடீஇயர், பல் மாண்

குளிர் கொள் தட்டை மதன் இல புடையாச்,
'சூரர மகளிரின் நின்ற நீ மற்று
யாரையோ? எம் அணங்கியோய்! உண்கு' எனச்
சிறுபுறம் கவையினனாக, அதற் கொண்டு
இகு பெயல் மண்ணின் ஞெகிழ்பு, அஞர் உற்ற என்

உள் அவன் அறிதல் அஞ்சி, உள் இல்
கடிய கூறி, கை பிணி விடாஅ,
வெரூஉம் மான் பிணையின் ஒரீஇ, நின்ற
என் உரத் தகைமையின் பெயர்த்துப், பிறிது என்வயின்
சொல்ல வல்லிற்றும் இலனே; அல்லாந்து,

இனம் தீர் களிற்றின் பெயர்ந்தோன் இன்றும்
தோலாவாறு இல்லை - தோழி! நாம் சென்மோ,
சாய் இறைப் பணைத் தோட் கிழமை தனக்கே
மாசு இன்றாதலும் அறியான், ஏசற்று

என் குறைப் புறநிலை முயலும்
அண்கணாளனை நகுகம், யாமே.

138. குறுந்தொகை - 365

குறிஞ்சி

தோழி கூற்று

யான்வரையுந் துணையும் ஆற்றவல்லளோ என வினாவிய கிழவற்குத் தோழி சொல்லியது.

கோடுஈர் இலங்குவளை நெகிழ நாளும்
பாடுஇல கலிழ்ந்து பனி ஆனாவே
துன்அரு நெடுவரைத் ததும்பி அருவி
தண்ணென் முழவின் இழிழ்இசை காட்டும்
மருங்கில் கொண்ட பலவின்
பெருங்கல் நாடாநீ நயந்தோள் கண்ணே

139. நற்றிணை - 7

பாலை

தோழி கூற்று

பட்ட பின்றை வரையாது கிழவோன் நெட்டிடைக் கழிந்து பொருள்வயிற் பிரிய ஆற்றளாய தலைவிக்குத் தோழி சொல்லியது.

சூருடை நனந்தலைச் சுனைநீர் மல்கப்
பெருவரை அடுக்கத்து அருவி ஆர்ப்பக்
கல்அலைத்து இழிதரும் கடுவரற்கான் யாற்றுக்
கழைமாய் நீத்தம் காடு அலைஆர்ப்பத்
தழங்கு குரல் ஏறொடு முழங்கி, வானம்
இன்னே பெய்ய மின்னுமால் - தோழி
வெண்ணெல் அருந்திய வரிநுதல் யானை
தண்நறுஞ் சிலம்பில் துஞ்சும்
சிறியிலைச் சந்தின வாடு பெருங்காட்டே

140. நற்றிணை - 47

குறிஞ்சி

தோழிகூற்று

சிறைப்புறமாகத் தோழி தலைமகளுக்கு உரைப்பாளாய்ச் சொல்லியது.

பெருங்களிறு உழுவை அட்டென, இரும் பிடி
உயங்குபிணி வருத்தமொடு இயங்கல் செல்லாது
நெய்தற் பாசடை புரையும் அம்செவிப்

பைதல்அம் குழவி தழீஇய, ஒய்யென
அரும் புண் உறுநரின் வருந்தி வைக்கும்
கானக நாடற்கு, 'இது என' யான் அது
கூறின் எவனோ தோழி! வேறு உணர்ந்து
அணங்கு அறிகழங்கின் கோட்டம் காட்டி
வெறிஎன உணர்ந்த உள்ளமொடு மறிஅறுத்து
அன்னை அயரும் முருகுநின்
பொன்நேர் பசலைக்கு உதவா மாறே?

## நன்னாகையார் பாடல்கள்

141. குறுந்தொகை - 118

நெய்தல்

தலைவி கூற்று

வரைவு நீட்டித்த வழித் தலைமகள் பொழுது கண்டு தோழிக்குச் சொல்லியது.

புள்ளும் மாவும் புலம்பொடு வதிய
நள்ளென வந்த நார்இல் மாலை
பலர்புகு வாயில் அடைப்பக் கடவுநர்
வருவீர் உளீரோ? எனவும்
வாரார் தோழிநம் காத லோரே

142. குறுந்தொகை - 325

நெய்தல்

தலைவி கூற்று

பிரிவிடை, 'ஆற்றள்' எனக் கவன்ற தோழிக்கு கிழத்தி மெலிந்து உரைத்தது.

சேறும் சேறம் என்றலின் பண்டைத்தம்
மாயச் செலவாச் செத்து மருங்கு அற்று
மன்னிக் கழிக என்றேனே அன்னோ
ஆசுஆகு எந்தை யாண்டு உளன் கொல்லோ
கருங்கால் வெண்குருகு மேயும்
பெருங்குளம் ஆயிற்றுஎன் இடைமுலை நிறைந்தே

## நெடும்பல்லியத்தை பாடல்கள்

143. குறுந்தொகை - 178

மருதம்

தோழி கூற்று

கடிநகர் புக்கதோழி தலைமகன் புணர்ச்சி விதும்பல் கண்டு முன்னர்க் களவுக்

காலத்து ஒழுகலாற்றினை நினைந்து அழிந்து கூறியது.

அயிரை பரந்த அந்தண் பழனத்து
ஏந்துஎழில் மலர தூம்புடைத் திரள்கால்
ஆம்பல் குறுநர்நீர் வேட் டாங்கு இவள்
இடைமுலைக் கிடந்தும் நடுங்கல் ஆனீர்
தொழுதுகாண் பிறையின் தோன்றி யாம் நுமக்கு
அரியம் ஆகிய காலைப்
பெரிய நோன்றனிர் நோகோ யானே.

144. குறுந்தொகை - 203

மருதம்

தலைவி கூற்று

வாயிலாகப் புக்க தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

மலையிடை யிட்ட நாட்டரும் அல்லர்
மரந்தலை தோன்றா ஊரரும் அல்லர்
கண்ணிற் காண நண்ணுவழி இருந்தும்
கடவுள் நண்ணிய பாலோர் போல
ஒழிஇன னொழுகு மென்னைக்குப்
பரியலென் மன்யான் பண்டொரு காலே.

## நெட்டிமையார் பாடல்கள்

145. புறநானூறு - 9

திணை - பாடாண்திணை

துறை - இயன்மொழி

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைப் பாடியது.

ஆவும் ஆன்இயற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புல வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்
பொன்போல் புதல்வர்ப் பெறாஅ தீரும்
எம் அம்பு கடிவிடுதும் நும்மரண் சேர்மின்என
அறத்துஆறு நுவலும் பூட்கை மறத்தின்
கொல்களிற்று மீமிசைக் கொடி விசும்பு நிழற்றும்
எங்கோ வாழிய குடுமி தங்கோச்
செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க்கு ஈத்த
முந்நீர் விழவின் நெடுயோன்
நல்நீர்ப் பஃறுளி மணலினும் பலவே

146. புறநானூறு - 12

திணை - பாடாண்திணை

துறை - இயன்மொழி

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைப் பாடியது.

பாணர் தாமரை மலையவும் புலவர்
பூநுதல் யானையொடு புனைதேர் பண்ணவும்
அறனோ மற்றுஇது விறல்மாண் குடுமி
இன்னா ஆகப் பிறர்மண் கொண்டு
இனிய செய்திநின் ஆர்வலர் முகத்தே

147. புறநானூறு - 15

திணை - பாடாண்திணை

துறை - இயன்மொழி

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைப் பாடியது.

கடுந்தேர் குழித்த ஞெள்ளல் ஆங்கண்
வெள்வாய்க கழுதைப் புல்இனம் பூட்டிப்
பாழ்செய்தனை அவர் நனந்தலை நல்எயில்
புள்ளினம் இமிழும் புகழ்சால் விளைவயல்
வெள்உளைக் கலிமான் கவிகுளம்பு உகளத்
தேர் வழங்கினை நின் தெவ்வர் தேஎத்துத்
துளங்கு இயலான் பணை எருத்தின்
பாடியான் செறல் நோக்கின்
ஒளிறு மருப்பின் களிறு அவர
காப்பு உடைய கயம்படியினை
அன்ன சீற்றத்து அனையை; ஆகலின்
விளங்குபொன் எறிந்த நலம்கிளர் பலகையொடு
நிழல்படு நெடுவேல் ஏந்தி ஒன்னார்
ஒண்படைக் கடுந்தார் முன்புதலைக் கொண்மார்
நசைதர வந்தோர் நசை பிறக்கு ஒழிய
வசைபட வாழ்ந்தோர் பலர்கொல், புரைஇல்
நற்பனுவல் நால் வேதத்து
அருஞ்சீர்த்திப் பெருங் கண்ணுறை
நெய்ம்மலி ஆவுதி பொங்கப் பன்மாண்
வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி
யூபம் நட்ட வியன்களம் பலகொல்?
யா பலகொல்லோ? - பெரும! வார்உற்று

விசிபிணிக் கொண்ட மண்கனை முழவின்
பாடினி பாடும் வஞ்சிக்கு
நாடல் சான்ற மைந்தினோய் நினக்கே

## பாரி மகளிர் பாடல்

148. புறநானூறு - 112

திணை - பொதுவியல்

துறை - கையறுநிலை

அற்றைத் திங்கள் அவ்வெண் ணிலவின்
எந்தையும் உடையேம்எம் குன்றும் பிறர்கொளார்
இற்றைத் திங்கள் இவ்வெண் நிலவின்
வென்றுஎறி முரசின் வேந்தர்எம்
குன்றும் கொண்டார்யாம் எந்தையும் இலமே

## பூங்கணுத்திரையார் பாடல்கள்

149. குறுந்தொகை - 48

பாலை

தோழி கூற்று

பகற்குறிக்கண் காணும் பொழுதினும் காணாப்பொழுது பெரிதாகலின் வேறு பட்ட கிழத்தியது வேறுபாடு கண்டு தோழி சொல்லியது.

தாதின் செய்த தண்பனிப் பாவை
காலை வருந்தும் கையாறு ஓம்புஎன
ஓரை யாயங் கூறக் கேட்டும்
இன்ன பண்பின் இனைபெரிது உழக்கும்
நன்னுதல் பசலை நீங்க அன்ன

நசைஆகு பண்பின் ஒருசொல்
இசையாது கொல்லோ காதலர் தமக்கே.

150. குறுந்தொகை - 171

மருதம்

தலைவி கூற்று

வரைவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குத் தலைமகள் கூறியது.

காண்இனி வாழி தோழி யாணர்க்
கடும்புனல் அடைகரை நெடுங்கயத்து இட்ட
மீன் வலை மாப்பட்டாஅங்கு
இதுமற் றுஎவனோ நொதுமலர் தலையே.

151. புறநானூறு - 277

திணை - தும்பை

துறை - உவகைக்கலுச்சி

மீன்உண் கொக்கின் தூவி அன்ன
வால் நரைக் கூந்தல் முதியோள் சிறுவன்
களிறுஎறிந்து பட்டனன் என்னும் உவகை
ஈன்ற ஞான்றினும் பெரிதே; கண்ணீர்
நோன்கழை துயல்வரும் வெதிரத்து
வான்பெயத் தூங்கிய சிதரினும் பலவே.

## பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு பாடல்

152. புறநானூறு - 246

திணை -பொதுவியல்

துறை - ஆனந்தப் பையுள்

பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு தீப்பாய்வாள் சொல்லியது.

பல்சான் றீரே பல்சான் றீரே
செல்க எனச் சொல்லாது ஒழிக என விலக்கும்
பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான் றீரே
அணில்வரிக் கொடுங்காய் வாள்போழ்ந் திட்ட
காழ்போல் நல்விளர் நறுநெய் தீண்டாது

அடை இடைக் கிடந்த கைபிழி பிண்டம்
வெள்எட் சாந்தொடு புளிப்பெய்து அட்ட
வேளை வெந்தை வல்சி யாகப்
பரற்பெய் பள்ளிப் பாய்இன்று வதியும்
உயவல் பெண்டிரேம் அல்லேம் மாதோ

பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட்டு ஈமம்
நுமக்கு அரி தாகுக தில்ல எமக்குஎம்
பெருந்தோட் கணவன் மாய்ந்தென அரும்புஅற
வள்இதழ் அவிழ்ந்த தாமரை
நள்இரும் பொய்கையும் தீயும் ஓரற்றே

153. புறநானூறு - 11

திணை - பாடாண்திணை

துறை - பரிசில் கடாநிலை

சேரமான் பாலைபாடிய பெருங்கடுங்கோவைப் பாடியது.

அரிமயிர்த் திரள் முன்கை
வால்இழை மடமங்கையர்
வரிமணற் புனை பாவைக்குக்
குலவுச் சினைப் பூக் கொய்து
தண்பொருநைப் புனல் பாயும்

விண் பொருபுகழ் விறல் வஞ்சிப்
பாடல்சான்ற விறல் வேந்தனும்மே
வெப்பு உடைய அரண்கடந்து
துப்பு உறுவர் புறம் பெற்றிசினே
புறம் பெற்ற வயவேந்தன்

மறம் பாடிய பாடினியும்மே
ஏர் உடைய விழுக் கழஞ்சின்
சீர்உடைய இழை பெற்றிசினே
இழைபெற்ற பாடினிக்குக்
குரல் புணர்சீர்க் கொளைவல் பாண்மகனும்மே
வெள்ளி நாரால் பூப்பெற் றிசினே.

## பொதுக்கயத்துக் கீரந்தை பாடல்

154. குறுந்தொகை - 337
குறிஞ்சி
தலைவன் கூற்று

தோழியை இரந்து பின்னின்ற கிழவன் தனது குறை அறியக் கூறியது.

முலையே முகிழ்முகிழ்த் தனவே தலைஇய
கிளையேய் குரலே கிழக்குவீழ்ந் தனவே
செறிமுறை வெண்பலும் பறிமுறை நிரம்பின
சுணங்கும் சிலதோன் றினவே அணங்கென
யான்தன் அறிவல் தான்அறி யலளே
யாங்கு ஆகுவள்கொல் தானே
பெருமுது செல்வர் ஒருமட மகளே

## பொதும்பில் புல்லாளங் கண்ணியார் பாடல்

155. அகநானூறு - 154
முல்லை

வினை முற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

படுமழை பொழிந்த பயம்மிகு புறவின்

நெடுநீர் அவல பகுவாய்த் தேரை
சிறுபல் இயத்தின் நெடு நெறிக் கறங்கக்
குறும் புதற் பிடவின் நெடுங் கால் அலரி
செந்நில மருங்கின் நுண்அயிர் வரிப்ப.

வெஞ்சின அரவின் பை அணந்தன்ன
தண்கமழ் கோடல் தாது பிணி அவிழத்
திரிமருப்ப இரலை தெள் அறல் பருகிக்
காமர் துணையொடு ஏமுற வதியக்
காடு கவின் பெற்ற தண் பதப் பெருவழி;

ஓடு பரி மெலியாக் கொய்சுவற் புரவித்
தாள் தாழ்தார் மணி தயங்குபு இயம்ப
ஊர்மதி - வலவ! தேரே- சீர் மிகுபு
நம்வயிற் புரிந்த கொள்கை
அம்மா அரிவையைத் துன்னுகம், விரைந்தே

**பொன்மணியார் பாடல்**

156. குறுந்தொகை - 391
முல்லை
தலைவி கூற்று

பிரிவிடைப் பருவ வரவின்கண் ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி அழிந்து சொல்லியது.

உவரி ஒருத்தல் உழாஅது மடியப்
புகரி புழுங்கிய புயல்நீங்கு புறவில்
கடிதுஇடி உருமின் பாம்புபை அவிய
இடியொடு மயங்கி இனிதுவீழ்ந் தன்றே
வீழ்ந்த மாமழை தழீஇப் பிரிந்தோர்

கையற வந்த பையுள் மாலைப்
பூஞ்சினை இருந்த போழ்கண் மஞ்ஞை
தாஅம்நீர் நனந்தலை புலம்பக்
கூஉந் தோழி பெரும் பேதையவே.

**பொன்முடியார் பாடல்கள்**

157. புறநானூறு - 299
திணைநொச்சி
துறை - குதிரை மறம்

பருத்தி வேலிச் சீறூர் மன்னன்
உழுத்ததர் உண்ட ஓய்நடைப் புரவி
கடல் மண்டு தோணியின் படைமுகம் போழ
நெய்ம்மிதி அருந்திய கொய்சுவல் எருத்தின்
தண்ணடை மன்னர் தாருடைப் புரவி
அணங்குடை முருகன் கோட்டத்துக்
கலந்தொடா மகளிரின் இகந்துநின் றவ்வே.

158. புறநானூறு - 310
திணை - தும்பை
துறை - நூழிலாட்டு

பால்கொண்டு மடுப்பவும் உண்ணான் ஆகலின்
செறாஅது ஓச்சிய சிறுகோல் அஞ்சியொடு
உயவொடு வருந்தும் மன்னே இனியே
புகர்நிறம் கொண்ட களிறு அட்டுஆனான்
முன்நாள் வீழ்ந்த உரவோர் மகனே
உன்னிலன் என்றும் புண்ஒன்று அம்பு
மானுளை அன்ன குடுமித்
தோல்மிசைக் கிடந்த புல்அண லோனே.

159. புறநானூறு - 312
திணை - வாகை
துறை - மூதின் முல்லை

ஈன்று புறம் தருதல் என்தலைக் கடனே
சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே
வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே
நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே
ஒளிறு வாள்அருஞ் சமம் முருக்கிக்
களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே

## போந்தைப் பசலையார் பாடல்

160. அகநானூறு - 110
நெய்தல்
தோழி கூற்று

தோழி செவிலித் தாய்க்கு அறத்தொடு நின்றது.

அன்னை அறியினும் அறிக அலர்வாய்
அம்மென் சேரி கேட்பினுங் கேட்க

பிறிது ஒன்று இன்மை அறியக் கூறி
கொடுஞ்சுழிப் புகாஅர்த் தெய்வம் நோக்கிக்
கடுஞ்சூள் தருகுவென் நினக்கே கானல்

தொடலை ஆயமொடு கடல்உடன் ஆடியும்
சிற்றில் இழைத்துஞ் சிறுசோறு குவைஇயும்
வருந்திய வருத்தம் தீர யாஞ்சிறிது
இருந்தன மாக எய்த வந்து
தடமென் பணைத்தோள் மடநல் நீரே

எல்லும் எல்லின்று அசைவுமிக வுடையேன்
மெல்இலைப் பரப்பின் விருந்துண்டு யானுமிக்
கல்லென் சிறுகுடித் தங்கின்மற் றுஎவனோ
எனமொழிந் தனனே ஒருவன் அவற்கண்டு
இறைஞ்சிய முகத்தெம் புறஞ்சேர்பு பொருந்தி

இவைநுமக் குஉரிய அல்ல இழிந்த
கொழுமீன் வல்சி என்றனம் இழுமென
நெடுங்கொடி நுடங்கும் நாவாய் தோன்றுவ
காணா மோஎனக் காலின் சிதையா
நில்லாது பெயர்ந்த பல்லோ ருள்ளும்

என்னே குறித்த நோக்கமொடு நன்னுதால்
ஒழிகோ யான்என அழிதகக் கூறி
யாம்பெயர்க என்ன நோக்கித் தான்தன்
நெடுந்தேர்க் கொடிஞ்சி பற்றி
நின்றோன் போலும் என்றும் என்மகட்கே

## மதுரை ஓலைக் கடையத்தார் நல்வெள்ளையார் பாடல்கள்

161. நற்றிணை - 250

மருதம்

தலைவன் கூற்று

புதல்வனொடு புக்க தலைமகன் ஆற்றானாய்ப் பாணற்கு உரைத்தது.

நகுகம் வாராய் பாண பகுவாய்
அரிபெய் கிண்கிணி ஆர்ப்பத், தெருவில்
தேர் நடை பயிற்றும் தேமொழிப் புதல்வன்
பூநாறு செவ்வாய் சிதைத்த சாந்தமொடு
காமர் நெஞ்சம் துரப்ப, யாம்தன்

முயங்கல் விருப்பொடு குறுகினே மாகப்
பிறை வனப்பு உற்ற மாசுஅறு திருநுதல்
நாறுஇருங் கதுப்பின்எம் காதலி வேறு உணர்ந்து
வெரூஉம்மான் பிணையின் ஒரீஇ,
யாரையோ? என்று இருந்து நின்றதுவே.

162. நற்றிணை - 369

நெய்தல்

தலைமகள் கூற்று

பட்டபின்றை வரையாது பொருள்வயின் பிரிந்து, ஆற்றாளாகிய தலைமகள் வன்புறை எதிர் அழிந்தது.

சுடர் சினம் தணிந்து குன்றம் சேர,
நிறை பறைக் குருகினம் விசும்பு உகந்து ஒழுக
எல்லை பைபயக் கழிப்பி, முல்லை
அரும்பு வாய் அவிழும் பெரும்புன் மாலை
இன்றும் வருவது ஆயின், நன்றும்
அறியேன் வாழி தோழி அறியேன்
ஞெமை ஓங்கு உயர்வரை இமையத்து உச்சி,
வாஅன் இழிதரும் வயங்கு வெள்அருவிக்
கங்கைஅம் பேர்யாற்றுக் கரை இறந்து இழிதரும்
சிறைஅடு கடும்புனல் அன்னஎன்
நிறைஅடு காமம் நீந்து மாறே

## மாறோக்கத்து நப்பசலையார் பாடல்கள்

163. நற்றிணை - 304

குறிஞ்சி

தலைவி கூற்று

வரையாது நெடுங்காலம் வந்தொழுக ஆற்றாளாகிய தலைமகள் வன்புறை எதிர்மொழிந்தது.

வாரல் மென்தினைப் புலவுக்குரல் மாந்திச்
சாரல் வரைய கிளையுடன் குழீஇ
வளிஎறி வயிரின் கிளிவிளி பயிற்றும்
நளிஇருஞ் சிலம்பின் நல்மலை நாடன்
புணரிற் புணருமார் எழிலே பிரியின்
மணிமிடை பொன்னின் மாமை சாயஎன்
அணிநலஞ் சிதைக்குமார் பசலை அதனால்

அசுணம் கொல்பவர் கைபோல் நன்றும்
இன்பமும் துன்பமும் முடைத்தே
தண்மகழ் நறுந்தார் விறலோன் மார்பே.

164. புறநானூறு - 37

திணை - வாகை

துறை - அரசவாகை, முதல் வஞ்சியுமாம்

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப் பாடியது.

நஞ்சுடை வால் எயிற்று ஐந்தலை சுமந்த
வேக வெந்திறல் நாகம் புக்கென
விசும்புதீப் பிறப்பத் திருகிப் பசுங்கொடிப்
பெருமலை விடரகத்து உருமெறிந் தாங்குப்
புள்உறு புன்கண் தீர்த்த வெள்வேல்

சினம்கெழுதானைச் செம்பியன் மருக
கராஅங் கலித்த குண்டுகண் அகழி
இடம்கருங் குட்டத்து உடன்தொக்கு ஓடி
யாங் கொள்பவர் சுடர்நிழற் கதூஉங்
கடுமுரண் முதலைய நெடுநீர் இலஞ்சிச்

செம்புஉறழ் புரிசைச் செம்மல் மூதூர்
வம்புஅணி யானைவேந்து அகத்து உண்மையின்
நல்ல என்னாது சிதைத்தல்
வல்லையால் நெடுந்தகை! செருவத் தானே.

165. புறநானூறு - 39

குறிஞ்சி

திணை - பாடாண் திணை

துறை - இயன்மொழி

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப் பாடியது.

புறவின் அல்லல் சொல்லிய கறைஅடி
யானை வல்மருப்பு எறிந்த வெண்கடைக்
கோல்நிறை துலாஅம் புக்கோன் மருக
ஈதல்நின் புகழும் அன்றே சார்தல்
ஒன்னார் உட்கும் துன்அருங் கடுந்திறல்

தூங்கு எயில் எறிந்த நின் ஊங்கணோர் நினைப்பின்
அடுதல்நின் புகழும் அன்றே கெடுவின்று
மற்கெழு சோழர் உறந்தை அவையத்து

அறம்நின்று நிலையிற்று ஆகலின் அதனால்
முறைமைநின் புகழும் அன்றே மறம்மிக்கு

எழுசமங் கடந்த எழுஉறழ் திணிதோள்
கண்ஆர் கண்ணிக் கலிமான் வளவ
யாங்கனம் மொழிகோ யானே ஓங்கிய
வரைஅளந்து அறியாப் பொன்படு நெடுங்கோட்டு
இமயம் சூட்டிய ஏம விற்பொறி

மாண்வினை நெடுந்தேர் வானவன் தொலைய
வாடா வஞ்சி வாட்டும் நின்
பீடுகெழு நோன்தாள் பாடுங் காலே.

166. புறநானூறு - 126

திணை - பாடாண்திணை

துறை - பரிசில் துறை

மலையமான் திருமுடிக்காரியைப் பாடியது.

ஒன்னார் யானை ஓடைப்பொன் கொண்டு
பாணர் சென்னி பொலியத் தைஇ
வாடாத் தாமரை சூட்டிய விழுச்சீர்
ஓடாப் பூட்கை உரவோன் மருக
வல்லேம் அல்லேம் ஆயினும் வல்லே

நின்வயின் கிளக்குவம் ஆயின் கங்குல்
துயில்மடிந் தன்ன தூங்கு இருள் இறும்பின்
பறைஇசை யருவி முள்ளூர்ப் பொருந!-
தெறல்அரு மரபின்நின் கிளையொடும் பொலிய
நிலமிசைப் பரந்த மக்கட்கு எல்லாம்

புலன் அழுக்கு அற்ற அந்தணாளன்,
இரந்து செல்மாக்கட்கு இனிஇடன் இன்றிப்,
பரந்து இசை நிற்கப் பாடினன்; அதற்கொண்டு
சினம்மிகு தானை வானவன் குடகடல்
பொலம்தரு நாவாய் ஓட்டிய அவ்வழிப்,

பிறகலம் செல்கலாது அனையேம் அத்தை,
இன்மைதுரப்ப, இசை தர வந்து, நின்
வண்மையின் தொடுத்தனம், யாமே-முள்எயிற்று
அரவு எறி உருமின் முரசு எழுந்து இயம்ப
அண்ணல் யானையொடு வேந்துகளத்து ஒழிய,

அருஞ்சமம் ததையத் தாக்கி, நன்றும்
நண்ணாத் தெவ்வர்த் தாங்கும்
பெண்ணை அம்படப்பை நாடுகிழ வோயே!

167. புறநானூறு - 174
திணை - வாகை
துறை - அரசவாகை

மலையமான் சோழிய ஏனாதி திருக்கண்ணனைப் பாடியது.

அணங்குடை அவுணர் கணம்கொண்டு ஒளித்தெனச்
சேண்விளங்கு சிறப்பின் ஞாயிறு காணாது
இருள்கண் கெடுத்த பருதி ஞாலத்து
இடும்பைகொள் பருவரல் தீரக் கடுந்திறல்
அஞ்சன உருவன் தந்து நிறுத்தாங்கு

அரசு இழந்தி ருந்த அல்லல் காலை
முரசு எழுந்து இரங்கும் முற்றமொடு கரைபொருது
இரங்குபுனல் நெரிதரும் மிகுபெருங் காவிரி
மல்லல் நல்நாட்டு அல்லல் தீரப்
பொய்யா நாவின் கபிலன் பாடிய

மையனி நெடுவரை ஆங்கண் ஒய்யெனச்
செருப்புகல் மறவர் செல்புறங் கண்ட
எள்ளறு சிறப்பின் முள்ளூர் மீமிசை
அருவழி இருந்த பெருவிறல் வளவன்
மதிமருள் வெண்குடை காட்டி அக்குடை

புதுமையின் நிறுத்த புகழ்மேம் படுந
விடர்ப்புலி பொறித்த கோட்டைச் சுடர்ப்பூண்
சுரும்பார் கண்ணிப் பெரும்பெயர் நும்முன்
ஈண்டுச்செய் நல்வினை ஆண்டுச் சென்று உணீஇயர்
உயர்ந்தோர் உலகத்துப் பெயர்ந்தனன் ஆகலின்

ஆறுகொல் மருங்கின் மாதிரம் துழவும்
கவலை நெஞ்சத்து அவலம் தீர
நீதோன் றினையே நிரைத்தார் அண்ணல்
கல்கண் பொடியக் கானம் வெம்ப
மல்குநீர் வரைப்பில் கயம்பல உணங்கக்

கோடை நீடிய பைதறு காலை

இருநிலம் நெளிய ஈண்டி
உருமுரறு கருவிய மழைபொழிந் தாங்கே

168. புறநானூறு - 226

திணை - பொதுவியல்

துறை - கையறுநிலை

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப் பாடியது.

செற்றன்று ஆயினும் செயிர்த் தன்று ஆயினும்
உற்றன்று ஆயினும் உய்வின்று மாதோ
பாடுநர் போலக் கைதொழுது ஏத்தி
இரந்தன் றாகல் வேண்டும் பொலந்தார்
மண்டுஅமர் கடக்குந் தானைத்
திண்தேர் வளவன் கொண்ட கூற்றே

169. புறநானூறு - 280

திணை - பொதுவியல்

துறை - ஆனந்தப்பையுள்

என்னை மார்பில் புண்ணும் வெய்ய;
நடுநாள் வந்து தும்பியும் துவைக்கும்;
நெடுநகர் வரைப்பின் விளக்கும் நில்லா;
துஞ்சாக் கண்ணே துயிலும் வேட்கும்;
அஞ்சுவரு குராஅல் குரலும் தூற்றும்;

நெல்நீர் எறிந்து விரிச்சி ஓர்க்குஞ்
செம்முது பெண்டின் சொல்லும் நிரம்பா
துடிய பாண பாடுவல் விறலி
என் ஆகு விர்கொல் அளியிர் நுமக்கும்
இவண்உறை வாழ்க்கையோ அரிதே யானும்

மண்ணுறு மழித்தலைத் தெண்ணீர் வாரத்
தொன்றுதாம் உடுத்த அம்பகைத் தெரியற்
சிறுவெள் ஆம்பல் அல்லி யுண்ணுங்
கழிகல மகளிர் போல
வழிநினைந் திருத்தல் அதனினும் அரிதே.

170. புறநானூறு - 383

திணை - பாடாண்திணை

துறை - கடைநிலை

அவியனைப் பாடியது

ஒண்பொறிச் சேவல் எடுப்ப ஏற்றெழுந்து
தண்பனி யுறைக்கும் புலரா ஞாங்கர்
நுண்கோற் சிறுகிணை சிலம்ப ஒற்றி
நெடுங்கடை நின்று பகடுபல வாழ்த்தித்
தன்புகழ் ஏத்தினெ னாக ஊன்புலந்து

அருங்கடி வியல்நகர்க் குறுகல் வேண்டிக்
கூம்புவிடு மென்பிணி யவிழ்த்த ஆம்பல்
தேம்பாய்உள்ள தம்கமழ் மடர்உளப்
பாம்புஉரி அன்ன வடிவின காம்பின்
கழைபடு சொலியின் இழையணி வாரா

ஒண்பூங் கலிங்கம் உடீஇ நுண்பூண்
வசிந்துவாங்கு நுகப்பின் அவ்வாங்கு உந்திக்
கற்புடை மடந்தை தன்புறம் புல்ல
எற்பெயர்ந்த நோக்கி ..... .....
.... .... .... கல்கொண்டு

அழித்துப் பிறந்தனெ னாகி அவ்வழிப்
பிறர், பாடுபுகழ் பாடிப் படர்பு அறியேனே
குறுமுலைக்கு அலமரும் பால்ஆர் வெண்மறி
நரைமுக ஊகமொ டுகளுஞ் சென....
..... ..... கன்றுபல கொழீஇய

கான்கெழு நாடன் கடுந்தேர் அவியன்என
ஒருவனை யுடையேன் மன்னே யானே
அறான் எவன் பரிகோ வெள்ளியது நிலையே.

## மாற்பித்தியார் பாடல்கள்

171. புறநானூறு - 251

திணை - வாகை

துறை - தாபதவாகை

.......................................... பாடியது

ஓவத் தன்ன இடனுடை வரைப்பில்
பாவை யன்ன குறுந்தொடி மகளிர்
இழைநிலை நெகிழ்த்த மள்ளற் கண்டிகும்
கழைக்கண் நெடுவரை அருவிஆடிக்
கான யானை தந்த விறகின்

கடுந்தெறல் செந்தீ வேட்டுப்
புறம்தாழ் புரிசடை புலர்த்து வோனே.

172. புறநானூறு - 252

திணை - வாகை

துறை - தாபத வாகை

........................................... பாடியது

கறங்கு வெள்ளருவி ஏற்றலின் நிறம் பெயர்ந்து
தில்லை யன்ன புல்லென் சடையோடு
அள் இலைத் தாளி கொய்யு மோனே-
இல்வழங்கு மடமயில் பிணிக்கும்
சொல்வலை வேட்டுவன் ஆயினன் முன்னே.

## முடத்தாமக்கண்ணியார் பாடல்கள்

173. பொருநர் ஆற்றுப்படை

சோழன் கரிகாற் பெருவளத்தானை முடத்தாமக்கண்ணியார் பாடியது.

அறாஅ யாணர் அகன் தலைப் பேரூர்ச்,
சாறுகழி வழிநாள், சோறு நசை உறாது,
வேறு புலம் முன்னிய விரகு அறி பொருந!

### பாலையாழின் அமைப்பு

குளப்பு வழி அன்ன கவடு படு பத்தல்;
விளக்கு அழல் உருவின் விசிஉறு பச்சை,
எய்யா இளஞ்சூற் செய்யோள் அவ்வயிற்று
ஐது மயிர் ஒழுகிய தோற்றம் போலப்,
பொல்லம் பொத்திய பொதியுறு போர்வை;

அளை வாழ் அலவன் கண் கண்டன்ன,
துளை வாய் தூர்ந்த துரப்பு அமை ஆணி;
எண் நாள் திங்கள் வடிவிற்று ஆகி,
அண்-நா இல்லா அமை வருவறு வாய்ப்;
பாம்பு அணந்தன்ன ஓங்கு இரு மருப்பின்;

மாயோள் முன்கை ஆய் தொடி கடுக்கும்;
கண்கூடு இருக்கைத் திண்பிணித் திவவின்;
ஆய் தினை யரிசி அவையல் அன்ன
வேய்வை போகிய விரல்உளர் நரம்பின்

கேள்வி போகிய நீள்விசித் தொடையல்;

மணம்கமழ் மாதரை மண்ணி யன்ன
அணங்க மெய்ந் நின்ற அமைவரு, காட்சி
ஆறு அலை கள்வர் படைவிட அருளின்
மாறு தலை பெயர்க்கும் மருவுஇன் பாலை

## யாழை மீட்டிப் பாடுதல்

வாரியும் வடித்தும் உந்தியும் உறழ்ந்தும்
சீருடை நன்மொழி நீரொடு சிதறி

## பாடினியின் கேசாதிபாத வருணனை

அறல்போல் கூந்தல், பிறைபோல் திருநுதல்
கொலைவில் புருவத்து, கொழுங்கடை மழைக்கண்
இலவு இதழ் புரையும் இன் மொழித் துவர் வாய்ப்,
பல உறு முத்தின் பழிதீர் வெண்பல்,
மயிர் குறை கருவி மாண் கடை அன்ன

பூங்குழை ஊசற் பொறை சால் காதின்,
நாண் அடச் சாய்ந்த நலம் கிளர் எருத்தின்,
நெடு வரை மிசைய காந்தள் மெல் விரல்,
கிளி வாய் ஒப்பின் ஒளி விடு வள் உகிர்,
அணங்கு என உருத்த சுணங்கு அணி ஆகத்து,

ஈர்க்கு இடை போகா ஏர் இள வன முலை,
நீர்ப் பெயர்ச் சுழியின் நிறைந்த கொப்பூழ்,
உண்டு என உணரா உயவும் நடுவின்,
வண்டு இருப்பு அன்ன பல் காழ் அல்குல்,
இரும் பிடித் தடக் கையின் செறிந்து திரள் குறங்கின்,

பொருந்து மயிர் ஒழுகிய திருந்து தாட்கு ஒப்ப
வருந்து நாய் நாவின், பெருந் தகு சீறடி
அரக்கு உருக்கு அன்ன செந் நிலன் ஒதுங்கலின்
பரற்பகை உழந்த நோயொடு சிவணி,
மரல் பழுத்தன்ன மறுகு நீர் மொக்குள்

நன் பகல் அந்தி நடை இடை விலங்கலின்,
பெடை மயில் உருவின், பெருந் தகு பாடினி

## காடுறை தெய்வத்திற்குக் கடன் கழித்தல்

பாடின பாணிக்கு ஏற்ப, நாள்தொறும்
களிறு வழங்கு அதர கானத்து அல்கி,
இலை இல் மரா அத்த, எவ்வம் தாங்கி,
வலை வலந்தன்ன மென் நிழல் மருங்கில்,
காடு உறை கடவுட் கடன் கழிப்பிய பின்றைப்

## பரிசு பெற்றோன் பெறாதோனை விளித்தல்

பீடு கெழு திருவின், பெரும் பெயர், நோன் தாள்,
முரசு முழங்கு தானை, மூவரும் கூடி
அரசவை இருந்த தோற்றம் போலப்
பாடல் பற்றிய பயனுடை எழாஅல்
கோடியர் தலைவ! கொண்டது அறிந!

அறியா மையின் நெறிதிரிந்து ஒராஅது,
ஆற்று எதிர்ப்படுதலும் நோற்றதன் பயனே;
போற்றிக் கேண்மதி, புகழ் மேம்படுந!

## பரிசு பெற்றோன் பாடின முறை

அடுபசி உழந்த நின்இரும் பேர் ஒக்கலொடு
நீடுபசி ஒராஅல் வேண்டின், நீடு இன்று
எழுமதி; வாழி, ஏழின் கிழவ!
பழுமரம் உள்ளிய பறவையின், யானும், அவன்
இழுமென் சும்மை இடனுடை வரைப்பின்,

நசையுநர்த் தடையா நன் பெருவாயில்
இசையேன் புக்கு, என் இடும்பை தீர,
எய்த்த மெய்யேன் எய்யேன் ஆகிப்,
பைத்த பாம்பின் துத்தி ஏய்ப்பக்,
கைக் கசடு இருந்த என் கண் அகன் தடாரி

இரு சீர்ப் பாணிக்கு ஏற்ப, விரிகதிர்
வெள்ளி முளைத்த நள்இருள் விடியல்,
ஒன்று யான் பெட்டா அளவையின்-ஒன்றிய

## அரசன் விருந்தோம்பலின் சிறப்பு

கேளிர் போல, கேள் கொளல் வேண்டி,
வேளாண் வாயில் வேட்பக் கூறிக்,

கண்ணில் காண நண்ணு வழி இரீஇப்,
பருகு அன்ன அருகா நோக்கமோடு,
உருகுபவை போல் என்பு, குளிர் கொளீஇ,

ஈரும் பேனம் இருந்து இறைகூடி,
வேரோடு நனைந்து, வேற்று இழை நுழைந்த
துன்னற் சிதாஅர் துவர நீக்கி,
நோக்கு நுழைகல்லா நுண்மைய, பூக் கனிந்து
அரவு உரி அன்ன அறுவை நல்கி,

மழை என மருளும் மகிழ் செய் மாடத்து,
இழை அணி வனப்பின் இன் நகை மகளிர்,
போக்கு இல் பொலங் கலம் நிறையப் பல்கால்,
வாக்குபு தரத்தர, வருத்தம் வீட,
ஆர உண்டு, பேர் அஞர் போக்கிச்,
செருக்கொடு நின்ற காலை,

## இரவில் சுற்றத்துடன் கவலையின்றித் தூங்கி எழுதல்

மற்று-அவன்
திருக்கிளர் கோயில் ஒரு சிறைத் தங்கித்,
தவம் செய் மாக்கள் தம்உடம்பு இடாஅது
அதன் பயம் எய்திய அளவை மான,
ஆறு செல் வருத்தம் அகல நீக்கி,

அனந்தர் நடுக்கம் அல்லது யாவதும்
மனம் கவல்வு இன்றி, மாழாந்து எழுந்து,

### காலையில் அரசவைக்குச் செல்லுதல்

மாலை அன்னது ஓர் புன்மையும், காலைக்
கண்டோர் மருளும் வண்டு சூழ்நிலையும்,
கனவு என மருண்ட என் நெஞ்சு ஏமாப்ப,
வல் அஞர் பொத்திய மனம் மகிழ் சிறப்ப,
கல்லா இளைஞர் சொல்லிக் காட்டக்,

### அரசனை அணுகுதல்

கதுமெனக் கரைந்து, 'வம் எனக் கூஉய்,
அதன் முறை கழிப்பிய பின்றைப், பதன் அறிந்து,

## உணவு கொடுத்து ஓம்பிய முறை

துராஅய் துற்றிய துருவை அம்புழுக்கின்
பரா அரை வேவை 'பருகு' எனத் தண்டிக்,
காழின் சுட்ட கோழ் ஊன் கொழுங் குறை
ஊழின் ஊழின் வாய் வெய்து ஒற்றி,
அவைஅவை முனிகுவம் எனினே, சுவைய

வேறுபல் உருவின் விரகு தந்து இரீஇ,
மண் அமை முழுவின் பண் அமை சீறியாழ்
ஒண் நுதல் விறலியர் பாணி தூங்க,
மகிழ்ப் பதம் பல் நாள் கழிப்பி, ஒரு நாள்.
'அவிழ்ப் பதம் கொள்க' என்று இரப்ப, முகிழ்த் தகை

முரவை போகிய முரியா அரிசி
விரல் என நிமிர்ந்த நிரல் அமை புழுக்கல்,
பரல் வறைக் கருனை, காடியின் மிதப்ப
அயின்ற காலைப், பணின்று இனிது இருந்து,
கொல்லை உழு கொழு ஏய்ப்ப, பல்லே

எல்லையும் இரவும் ஊன் தின்று மழுங்கி,
உயிர்ப்பிடம் பெறாஅது, ஊண் முனிந்து, ஒருநாள்

## ஊருக்குச் செல்லப் பரிசிலன் விரும்புதல்

'செயிர்த்து எழு தெவ்வர் திறை துறை போகிய
செல்வ! சேறும், எம் தொல் பதிப் பெயர்ந்து' என,
மெல்லெனக் கிளந்தனம் ஆக, வல்லே

## அரசன் பிரிய மனமின்றிப் பரிசு வழங்கி அனுப்புதல்

'அகறிரோ எம் ஆயம் விட்டு?' எனச்,
சிரறியவன் போல் செயிர்த்த நோக்கமொடு,
'துடி அடி அன்ன தூங்கு நடைக் குழுவியொடு
பிடி புணர் வேழம் பெட்டவை கொள்க!' எனத்,
தன்அறி அளவையின் தரத்தர, யானும்
என்அறி அளவையின் வேண்டுவ முகந்துகொண்டு,

## கரிகால் வளவனது சிறப்புக்கள்

வென் வேல்
உருவப் பல்தேர் இளையோன் சிறுவன்,

முருகற் சீற்றத்து உரு கெழு குருசில்,
தாய் வயிற்றிருந்து தாயம் எய்தி,
எய்தாத் தெவ்வர் ஏவல் கேட்பச்,

செய்யார் தேஎம் தெருமரல் கலிப்பப்,
பவ்வ மீமிசைப் பகற் கதிர் பரப்பி,
வெவ் வெஞ்செல்வன் விசும்பு படர்ந் தாங்குப்,
பிறந்து தவழ் கற்றதன் தொட்டுச், சிறந்த நன்
நாடு செகிற்கொண்டு நாள்தொறும் வளர்ப்ப,

### வெண்ணிப் போர் வெற்றி

ஆளி நன் மான் அணங்குடைக் குருளை-
மீளி மொய்ம்பின் மிகு வலி செருக்கி-
முலைக் கோள் விடாஅ மாத்திரை, ஞெரேரெனத்,
தலைக்கோள் வேட்டம் களிறு அட்டாங்கு,
இரும் பனம் போந்தைத் தோடும், கருஞ் சினை
அர வாய் வேம்பின் அம் குழைத் தெரியலும்,
ஓங்கு இருஞ் சென்னி மேம்பட மிலைந்த
இரு பெரு வேந்தரும் ஒரு களத்து அவிய,
வெண்ணித் தாக்கிய வெருவரு நோன் தாள்,
கண் ஆர் கண்ணி, கரிகால் வளவன்

தாள் நிழல் மருங்கின் அணுகுபு குறுகித்
தொழுது முன் நிற்குவிர் ஆயின்,

### கரிகாலனது கொடையின் சிறப்பு

பழுது இன்று,
ஈற்றுஆ விருப்பின், போற்றுபு நோக்கி, நும்
கையது கேளா அளவை, ஒய்யெனப்,
பாசி வேரின் மாசொடு குறைந்த
துன்னற் சிதாஅர் நீக்கித், தூய

கொட்டைக் கரைய பட்டு உடை நல்கிப்,
'பெறல் அருங் கலத்தில் பெட்டாங்கு உண்க' எனப்,
பூக் கமழ் தேறல் வாக்குபு தரத்தர,
வைகல் வைகல் கை கவி பருகி,
எரி அகைந்தன்ன ஏடு இல் தாமரை

சுரி இரும் பித்தை பொலியச் சூட்டி,

நூலின் வலவா நுணங்கு அரில் மாலை
வால் ஒளி முத்தமொடு பாடினி அணியக்,
கோட்டின் செய்த கொடுஞ்சி நெடுந் தேர்
ஊட்டு உளை துயல்வர, ஓரி நுடங்கப்,

பால் புரை புரவி நால்கு உடன் பூட்டிக்,
காலின் ஏழ் அடிப்பின் சென்று, 'கோல் இன்
தாறு களைந்து, ஏறு' என்று ஏற்றி, வீறு பெறு
பேர் யாழ் முறையுளிக் கழிப்பி, நீர் வாய்த்
தண் பணை தழீஇய தளரா இருக்கை

நன் பல் ஊர நாட்டொடு, நன் பல்,
வெரூஉப் பறை நுவலும், பரூஉப் பெருந் தடக்கை,
வெருவரு செலவின், வெகுளி வேழம்
தரவிடைத் தங்கல் ஓவிலனே: வரவிடைப்
பெற்றவை பிறர்பிறர்க்கு ஆர்த்தித், தெற்றெனச்,
செலவு கடைக்கூட்டுதிர் ஆயின், பல புலந்து,
நில்லா உலகத்து நிலைமை தூக்கிச்,
'செல்க' என விடுக்குவன் அல்லன்-

## சோழ நாட்டின் வளமும் வனப்பும்

ஒல்லெனத்
திரை பிறழிய இரும் பௌவத்து
கரை சூழ்ந்த அகன் கிடக்கை,
மா மாவின் வயின் வயின் நெல்,
தாழ் தாழைத் தண் தண்டலைக்,

கூடு கெழீஇய, குடிவயினான்,
செஞ் சோற்ற பலி மாந்திய
கருங் காக்கை கவர்வு முனையின்,
மனை நொச்சி நிழல் ஆங்கண்,
ஈற்று யாமை தன் பார்ப்பு ஓம்பவும்;

இளையோர் வண்டல் அயரவும்; முதியோர்
அவை புகு பொழுதில் தம் பகை முரண் சொலியவும்
முடக் காஞ்சிச் செம் மருதின்,
மடன் கண்ண மயிர் ஆலப்,
பைம் பாகற் பழம், துணரிய

செஞ் சுளைய கனி, மாந்தி;
அறைக் கரும்பின் அரி நெல்லின்
இனக் களமர் இசை பெருக,
வறள் அடும்பின் இவர் பகன்றைத்
தளிர்ப் புன்கின் தாழ் காவின்

நனை ஞாழலொடு மரம் குழீஇய
அவண் முனையின், அகன்று மாறி,
அவிழ் தளவின் அகன் தோன்றி,
நகு முல்லை, உகு தேறுவீப்,
பொன் கொன்றை, மணிக் காயா,

நல் புறவின் நடை முனையின்,
சுற வழங்கும் இரும் பௌவத்து
இறவு அருந்திய இன நாரை
பூம் புன்னைச் சினைச் சேப்பின்,
ஓங்கு திரை ஒலி வெரீஇத்,

தீம் பெண்ணை மடல் சேப்பவும்;
கோட் தெங்கின், குலை வாழைக்,
கொழுங் காந்தள், மலர் நாகத்துத்,
துடிக் குடிஞை, குடிப் பாக்கத்து,
யாழ் வண்டின் கொளைக்கு ஏற்பக்,

கலவம் விரித்த மட மஞ்ஞை
நிலவு எக்கர்ப் பல பெயரத்;

## நில மயக்கமும் நல்ஆட்சியும்

தேன் நெய்யொடு கிழங்கு மாறியோர்
மீன் நெய்யொடு நறவு மறுகவும்;
தீங் கரும்போடு அவல் வகுத்தோர்
மான் குறையொடு மது மறுகவும்;
குறிஞ்சி பரதவர் பாட, நெய்தல்

நறும் பூங்கண்ணி குறவர் சூடக்;
கானவர் மருதம் பாட, அகவர்
நீல் நிற முல்லைப் பல் திணை நுவலக்;
கானக் கோழி கதிர் குத்த,
மனைக் கோழி தினைக் கவர;

வரை மந்தி கழி மூழ்கக்,
கழி நாரை வரை இறுப்பக்;
தண் வைப்பின் நால் நாடு குழீஇ,
மண் மருங்கினான் மறு இன்றி,
ஒரு குடையான் ஒன்று கூறப்,

பெரிது ஆண்ட பெருங் கேண்மை,
அறனொடு புணர்ந்த திறன் அறி செங்கோல்,
அன்னோன் வாழி, வென் வேற் குருசில்!

### காவிரியின் வெள்ளச் சிறப்பு

மன்னர் நடுங்கத் தோன்றிப், பல் மாண்
எல்லை தருநன் பல் கதிர் பரப்பிக்,
குல்லை கரியவும், கோடு எரி நைப்பவும்,
அருவி மா மலை நிழத்தவும், மற்றுஅக்
கருவி வானம் கடற்கோள் மறப்பவும்,
பெரு வறன் ஆகிய பண்பு இல் காலையும்-
நறையும் நரந்தமும் அகிலும் ஆரமும்,
துறைதுறைதோறும், பொறை உயிர்த்து ஒழுகி,
நுரைத் தலைக் குரைப் புனல் வரைப்பு அகம் புகுதொறும்,
புனல் ஆடு மகளிர் கதுமெனக் குடையக்-

### காவிரி நாட்டு வயல் வளம்

கூனி, குயத்தின் வாய் நெல் அரிந்து,
சூடு கோடாகப் பிறக்கி, நாள்தொறும்,
குன்று எனக் குவைஇய குன்றாக் குப்பை
கடுந் தெற்று மூடையின் இடம் கெடக் கிடக்கும்,
சாலி நெல்லின் சிறை கொள் வேலி,

ஆயிரம் விளையுட்டு ஆக,
காவிரி புரக்கும் நாடு கிழவோனே,

### முள்ளியூர்ப் பூதியார் பாடல்

177. அகநானூறு - 173

பாலை

தோழி கூற்று

தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.

'அறம் தலைப்பிரியாது ஒழுகலும் சிறந்த

கேளிர் கேடு பல ஊன்றலும், நாளும்
வருந்தா உள்ளமொடு இருந்தோர்க்கு இல்' எனச்
செய்வினை புரிந்த நெஞ்சினர், 'நறு நுதல்
மைஈர்ஓதி அரும்படர் உழத்தல்

சில் நாள் தாங்கல் வேண்டும்' என்று, நின்
நல் மாண் எல் வளை திருத்தினர் ஆயின்,
வருவர்-வாழி, தோழி!-பல புரி
வார் கயிற்று ஒழுகை நோன் சுவற் கொளீஇ
பகடு துறை ஏற்றத்து உமண்விளி வெரீஇ

உழை மான் அம் பிணை இனன் இரிந்து ஓட
காடு கவின் அழிய உரைஇ, கோடை
நின்று தின விளிந்த, அம்பணை, நெடுவேய்க்
கண் விடத் தெறிக்கும் மண்ணா முத்தல்
கழங்கு உறழ் தோன்றல, பழங்குழித் தாஅம்

இன்களி நறவின் இயல் தேர் நன்னன்
விண் பொரு நெடுவரைக் கவாஅன்
பொன்படு மருங்கின் மலைஇறந் தோரே

## வருமுலையாரித்தி பாடல்

178. குறுந்தொகை - 176

குறிஞ்சி

தோழி கூற்று

தோழி கிழத்தியைக் குறை நயப்பக் கூறியது.

ஒருநாள் வாரலன் இருநாள் வாரலன்
பல்நாள் வந்து பணிமொழி பயிற்றிஎன்
நன்னர் நெஞ்சம் நெகிழ்த்த பின்றை
வரைமுதிர் தேனின் போகி யோனே
ஆறுஆகு எந்தை யாண்டுஉளன் கொல்லோ?
வேறுபுலன் நல்நாட்டுப் பெய்த
ஏறுடை மழையின் கலுழும் என்நெஞ்சே

## வெண்ணிக்குயத்தியார் பாடல்

179. புறநானூறு - 66

திணை - வாகை

துறை - அரசவாகை

சோழன் கரிகாற்பெருவளத்தானைப் பாடியது.

நளியிரு முந்நீர் நாவா ய்ஓட்டி
வளிதொழில் ஆண்ட உரவோன் மருக
களிஇயல் யானைக் கரிகால் வளவ!
சென்று அமர்க் கடந்தநின் ஆற்றல் தோன்ற
கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை
மிகப்புகழ் உலகம் எய்திப்
புறப்புண் நாணி, வடக்கிருந் தோனே?

## வெண்பூதியார் பாடல்கள்

180. குறுந்தொகை - 97

நெய்தல்

தலைவி கூற்று

வரைவு நீட்டித்தவழித் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

யானே ஈண்டை யேனே என்நலனே
ஆனா நோயொடு கான லஃதே
துறைவன் தம்மூ ரேனே
மறை அலர் ஆகி மன்றத் தஃதே.

181. குறுந்தொகை - 174

பாலை

தலைவி கூற்று

பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

பெயல்மழை துறந்த புலம்பு உறு கடத்துக்
கவைமுடக் கள்ளிக் காய்விடு கடுநொடி
துதைமென் தூவித் துணைப்புறவு இரிக்கும்
அத்தம் அரிய வென்னார் நத்துறந்து
பொருள்வயிற் பிரிவார் ஆயின் இவ் வுலகத்துப்
பொருளே மன்ற பொருளே.
அருளே மன்ற ஆரும்இல் லதுவே.

182. குறுந்தொகை - 219

நெய்தல்

தலைவி கூற்று

சிறைப்புறம்

பயப்புஎன் மேனி யதுவே நயப்புஅவர்
நார்இல் நெஞ்சத்து ஆரிடை யதுவே

செறிவும் சேண் இகந்துன்றே அறிவே
ஆங்கண் செல்கம் எழுக என ஈங்கே
வல்லா கூறி யிருக்கும் அள்இலைத்
தடவு நிலைத்தாழைச் சேர்ப்பற்கு
இடம்மன் தோழிஎந் நீரோ எனினே,

## வெண்மணிப்பூதியார் பாடல்

183. குறுந்தொகை - 299

நெய்தல்

தலைவி கூற்று

சிறைப்புறமாகத் தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

இதுமற்று எவனோ தோழி முதுநீர்ப்
புணரி திளைக்கும் புள்இமிழ் கானல்
இணர் அவிழ் புன்னை எக்கர் நீழல்
புணர்குறி வாய்த்த ஞான்றைக் கொண்கன்
கண்டன மன்எம் கண்ணே அவன்சொல்

கேட்டன மன்எம் செவியே மற்றுஅவன்
மணப்பின் மாண்நலம் எய்தித்
தணப்பின் ஞெகிழ்ப எம்தடமென் தோளே.

## வெள்ளிவீதியார் பாடல்கள்

184. அகநானூறு - 45

பாலை

தலைவி கூற்று

வற்புறுத்தும் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

வாடல் உழுஞ்சில் விளை நெற்று அம்துணர்
ஆடுகளப் பறையின், அரிப்பன ஒலிப்பக்,
கோடை நீடிய அகன் பெருங் குன்றத்து,
நீர் இல்ஆர் ஆற்று நிவப்பன களிறு அட்டு,
ஆள் இல் அத்தத்து உழுவை உகளும்

காடு இறந்தனரே, காதலர், மாமை,
அரி நுண் பசலை பாஅய்ப், பீரத்து
எழில் மலர் புரைதல்வேண்டும். அலரே,
அன்னி குறுக்கைப் பறந்தலை, திதியன்
தொல் நிலை முழுமுதல் துமியப் பண்ணிப்,

புன்னை குறைத்த ஞான்றை, வயிரியர்
இன் இசை ஆர்ப்பினும் பெரிதே. யானே,
காதலற் கெடுத்த சிறுமையொடு, நோய்கூர்ந்து,
ஆதிமந்தி போலப், பேதுற்று
அலந்தனென் உழல்வென் கொல்லே - பொலந்தார்க்,

கடல் கால் கிளர்ந்த வென்றி நல்வேல்,
வானவரம்பன் அடல் முனைக் கலங்கிய
உடை மதில் ஓர் அரண் போல,
அஞ்சுவரு நோயொடு, துஞ்சாதேனே!

185. அகநானூறு - 362
குறிஞ்சி
தோழி கூற்று
இரவுக்குறிச் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது.

பாம்புடை விடர பனிநீர் இட்டுத் துறைத்
தேம் கலந்து ஒழுக, யாறு நிறைந்தனவே;
வெண் கோட்டு யானை பொருத புண் கூர்ந்து,
பைங்கண் வல்லியம் கல்அளைச் செறிய,
முருக்கு அரும்பு அன்ன வள் உகிர் வயப்பிணவு

கடிகொள, வழங்கார் ஆறே ஆயிடை
எல்லிற்று என்னான், வென்வேல் ஏந்தி,
நசைதர வந்த நன்னராளன்
நெஞ்சு பழுதாக, வறுவியன் பெயரின்,
இன்று இப்பொழுதும் யான் வாழலனே;

எவன்கொல்? - வாழி, தோழி! - நம் இடை முலைச்
சுணங்கு அணி முற்றத்து ஆரம் போலவும்,
சிலம்பு நீடு சோலைச் சிதர் தூங்கு நளிப்பின்
இலங்கு வெள்அருவி போலவும்,
நிலம் கொண்டனவால், திங்கள் அம்கதிரே!

186. குறுந்தொகை - 27
பாலை
தலைவி கூற்று
பிரிவிடை ஆற்றள் எனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

கன்றும் உண்ணாது கலத்தினும் படாது
நல்லான் தீம்பால் நிலத்து உக் காஅங்கு

எனக்கும் ஆகாது என்னைக்கும் உதவாது
பசலை உணீஇயர் வேண்டும்
திதிலை அல்குல் என் மாமைக் கவினே

187. குறுந்தொகை 44

பாலை

செவிலி கூற்று

இடைச்சுரத்துச் செவிலித்தாய் கையற்றுச் சொல்லியது

காலே பரிதப் பினவே கண்ணே
நோக்கி நோக்கி வாள்இழந் தனவே
அகல்இரு விசும்பின் மீனினும்
பலரே மன்றஇவ் உலகத்துப் பிறரே

188. குறுந்தொகை - 58

குறிஞ்சி

தலைவி கூற்று

கழற்று எதிர்மறை

இடிக்கும் கேளிர் நுங்குறை ஆக
நிறுக்கல் ஆற்றினோ நன்றுமன் தில்ல
ஞாயிறு காயும் வெவ்அறை மருங்கின்
கையில் ஊமன் கண்ணில் காக்கும்
வெண்ணெய் உணங்கல் போலப்
பரந்தன்று இந்நோய் நோன்று கொளற்கு அரிதே

189. குறுந்தொகை - 130

பாலை

தோழி கூற்று (தலைவி கூற்றும் ஆகும்)

பிரிவிடை அழிந்த தலைமகளைத் தோழி வற்புறுத்தியது. நீ அவர் பிரிந்தார் என்று ஆற்றாயாகின்றது என்னை? யான் அவர் உள்வழி அறிந்து தூதுவிட்டுக் கொணர்வேன்; நின் ஆற்றாமை நீங்குக எனத் தோழி தலைமகளை ஆற்றுவித்தது; தோழி தூது விடுவாளாகத் தலைமகள் தனது ஆற்றாமையால் கூறியதூஉம் ஆம்.

நிலந்தொட்டுப் புகாஅர் வானம் ஏறார்
விலங்கிரு முந்நீர் காலில் செல்லார்
நாட்டின் நாட்டின் ஊரின் ஊரின்
குடிமுறை குடிமுறை தேரின்
கெடுநரும் உளரோ நம் காதலோரே.

190. குறுந்தொகை - 146

குறிஞ்சி

தோழி கூற்று

தலைமகன் தமர் வரைவொடு வந்து சொல்லாடுகின்றுழி வரைவு மறுப்பவோவெனக் கவன்ற தலைமகட்குத் தோழி சொல்லியது.

அம்ம வாழி தோழி நம்மூர்ப்
பிரிந்தோர்ப் புணர்ப்பவர் இருந்தனர் கொல்லோ
தண்டுடைக் கையர் வெண்தலைச் சிதவலர்
நன்றுநன் றுஎன்னும் மாக்களோடு
இன்றுபெரிது என்னும் ஆங்கணது அவையே.

191. குறுந்தொகை - 149

பாலை

தலைவி கூற்று

உடன்போக்கு உணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

அளிதோ தானே நாணே நம்மொடு
நனி நீடு உழந்தன்று மன்னே இனியே
வான்பூங் கரும்பின் ஓங்குமணற் சிறுசிறைத்
தீம்புனல் நெரிதர வீந்து உக்கா அங்குத்
தாங்கும் அளவைத் தாங்கிக்
காமம் நெரிதரக் கைந்நில் லாதே.

192. குறுந்தொகை - 169

மருதம்

தலைவி கூற்று

கற்புக்காலத்துத் தெளிவிடை விலங்கியது; இனித் தோழி வரைவு நீட்டித்த வழி வரைவுகடாயதூஉம்.

சுரம்செல் யானைக் கல்உறு கோட்டின்
தெற்றென இறீஇயரோ ஐய மற்று யாம்
நும்மொடு நக்க வால்வெள் எயிறே
பாணர், பசுமீன் சொரிந்த மண்டை போல
எமக்கும் பெரும் புலவு ஆகி
நும்மும் பெறேஎம் இறீஇயர் எம்உயிரே.

193. குறுந்தொகை - 386

நெய்தல்

தலைவி கூற்று

பிரிவிடை வற்புறுத்துந் தோழிக்குக் கிழத்தி வன்புறை எதிரழிந்து கூறியது.

வெண்மணல் விரிந்தவீ ததை கானல்
தண்ணந் துறைவன் தணவா ஊங்கே
வால்இழை மகளிர் விழவுஅணிக் கூட்டும்
மாலையோ அறிவேன் மன்னே மாலை
நிலம்பரந் தன்ன புன்கணொடு
புலம்பு உடைத்து ஆகுதல் அறியேன் யானே.

194. நற்றிணை - 70

மருதம்

தலைவி கூற்று

காமமிக்க கழிபடர்கிளவி.

சிறுவெள்ளாங் குருகே சிறுவெள்ளாங் குருகே
துறைபோகு அறுவைத் தூமடி அன்ன
நிறங்கிளர் தூவிச் சிறுவெள்ளாங் குருகே
எம்ஊர் வந்துஎம் வண்டுறைத் துழைஇச்
சினைக் கெளிற்று ஆர்கையை அவர் ஊர்ப் பெயர்த்தி

அனையஅன் பினையோ பெருமற வியையோ
ஆங்கண் தீம்புனல் ஈங்கண் பரக்குங்
கழனி நல்ஊர் மகிழ்நர்க்குஎன்
இழைநெகிழ் பருவரல் செப்பா தோயே.

195. நற்றிணை - 335

நெய்தல்

தலைவி கூற்று

காமம் மிக்க கழிபடர்கிளவி மீதூர்ந்து தலைமகள் சொல்லியது.

திங்களும் திகழ்வான் ஏர்தரும்; இமிழ்நீர்ப்
பொங்குதிரைப் புணரியும் பாடு ஓவாதே;
ஒலிசிறந்து ஓதமும் பெயரும்; மலிபுனற்
பல்பூங் கானல் முள் இலைத் தாழை
சோறு சொரி குடவயின் கூம்பு முகைஅவிழ,

வளிபரந்து ஊட்டும் விளிவுஇல் நாற்றமொடு
மைஇரும் பனைமிசைப் பைதல உயவும்
அன்றிலும் என்புற நரலும்; அன்றி,
விரல் கவர்ந்து உழந்த கவர்வின் நல்யாழ்
யாமம் உய்யாமை நின்றது;
காமம் பெரிதே களைஞரோ இலரே!

196. நற்றிணை - 345

நெய்தல்

தலைவி கூற்று

வேட்கை பெருகக் தாங்கலளாய், ஆற்றாமை மீதூர்கின்றாள் சொல்லியது.

நிலவே, நீல் நிற விசும்பில் பல்கதர் பரப்பிப்,
பால்மலி கடலில், பரந்து பட்டன்றே
ஊரே, ஒலிவரும் சும்மையொடு மலி தொகுபு ஈண்டிக்
கலிகெழு மறுகின், விழவு அயருமே
கானே, பூமலர் கஞலிய பொழில் அகம் தோறும்
தாம்அமர் துணையொடு வண்டு இமிருமே
யானே புனைஇழை ஞெகிழ்த்த புலம்புகொள் அவலமொடு
கனை இருங் கங்குலும் கண்படை இலனே
அதனால், என்னொடு பொரும்கொல், இவ் உலகம்?
உலகமொடு பொரும்கொல், என் அவலம் உறுநெஞ்சே?

197. புறநானூறு - 296

திணை - வாகை

துறை - ஏறாண்முல்லை

வேம்புசினை ஒடிப்பவும் காஞ்சி பாடவும்
நெய்யுடைக் கையர் ஐயவி புகைப்பவும்
எல்லா மனையும் கல்லென் றவ்வே
வேந்து உடன்று எறிவான் கொல்லோ
நெடிது வந்தன்றால் நெடுந்தகை தேரே

## வெறிபாடிய காமக்கண்ணியார் பாடல்கள்

198. அகநானூறு - 22

குறிஞ்சி

தலைவி கூற்று

வரைவிடை வைத்துப் பிரிந்தகாலத்துத் தலைமகள் ஆற்றாளாகத் தோழி தலைமகனை இயற்பழிப்பத் தலைமகள் இயற்பட மொழிந்தது. தலைமகன் இரவுக்குறிவந்து சிறைப் புறத்தானாகத் தோழியாற் சொல்லெடுக்கப்பட்டுத் தலைமகள் சொல்லியதூஉம் மாம்.

அணங்குடை நெடுவரை உச்சியின் இழிதருங்
கணம்கொள் அருவிக் கான்கெழு நாடன்
மணம்கமழ் வியல்மார்பு அணங்கிய செல்லல்
இதுஎன அறியா மறுவரற் பொழுதிற்

படியோர்த் தேய்த்த பல்புகழ்த் தடக்கை
நெடுவேட் பேணத் தணிகுவள் இவள்என
முதுவாய்ப் பெண்டிர் அதுவாய் கூறக்
களம்நன்கு இழைத்துக் கண்ணி சூட்டி
வளநகர் சிலம்பப் பாடிப் பலிகொடுத்து
உருவச் செந்தினை குருதியொடு தூஉய்

முருகுஆற்றுப் படுத்த உருகெழு நடுநாள்
ஆரம் நாற அருவிடர்த் ததைந்த
சாரற் பல்பூ வண்டுபடச் சூடிக்
களிற்றுஇரை தெரீஇய பார்வல் ஒதுக்கின்
ஒளித்து இயங்கு மரபின் வயப்புலி போல

நன்மனை நெடுநகர்க் காவலர் அறியாமைத்
தன்நசை உள்ளத்து நம்நசை வாய்ப்ப
இன்உயிர் குழைய முயங்குதொறும் மெய்ம்மலிந்து
நக்கனென் அல்லனோ யானே எய்த்த
நோய்தணி காதலர் வர ஈண்டு
ஏதில் வேலற்கு உலந்தமை கண்டே.

199. அகநானூறு - 98

குறிஞ்சி

தோழி கூற்று - தலைவி கூற்றும் ஆகும்.

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைமகற்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது. தோழிக்குத் தலைமகள் சொல்லியதூஉம் மாம்.

பனிவரை நிவந்த பயன்கெழு கவாஅன்
துனிஇல் கொள்கையொடு அவர்நமக்கு உவந்த
இனிய உள்ளம் இன்னா ஆக
முனிதக நிறுத்த நல்கல் எவ்வம்
சூர்உறை வெற்பன் மார்புஉறத் தணிதல்

அறிந்தனன் அல்லள் அன்னை வார்கோல்
செறிந்து இலங்கு எல்லள் அன்னை வார்கோல்
செறிந்து இலங்கு எல்வளை நெகிழ்ந்தமை நோக்கிக்
கையறு நெஞ்சினள் வினவலின் முதுவாய்ப்
பொய்வல் பெண்டிர் பிரப்புஉளர்பு இரீஇ

முருகன் ஆர்அணங்கு என்றலின் அதுசெத்து
ஓவத் தன்ன வினை புனை நல்இல்

பாவைஅன்ன பலர்ஆய் மாண்கவின்
பண்டையின் சிறக்க என் மகட்கு எனப் பரைஇக்
கூடுகொள் இன்இயங் கறங்கக் களன்இழைத்து

ஆடுஅணி அயர்ந்த அகன்பெரும் பந்தர்
வெண்போழ் கடம்பொடு சூடி இன்சீர்
ஐதுஅமை பாணி இரீஇக் கைபெயராச்
செல்வன் பெரும்பெயர் ஏத்தி வேலன்
வெறிஅயர் வியன்களம் பொற்ப வல்லோன்

பொறியமை பாவையின் தூங்கல் வேண்டின்
என்ஆங் கொல்லோ தோழி மயங்கிய
மையற் பெண்டிர்க்கு நொவ்வல் ஆக
ஆடிய பின்னும் வாடிய மேனி
பண்டையின் சிறவாது ஆயின் இம்மறை

அலர்ஆ காமையோ அரிதே அஃதான்று
அறிவர் உறுவிய அல்லல்கண் டருளி
வெறிகமழ் நெடுவேள் நல்குவன் எனினே
செறிதொடி யுற்ற செல்லலும் பிறிதுஎனக்
கான்கெழு நாடன் கேட்பின்
யான்உயிர் வாழ்தல் அதனினும் அரிதே.

200. நற்றிணை - 268

குறிஞ்சி

தோழி கூற்று

தலைமகட்குச் சொல்லியது; தலைமகன் வந்தொழுகவும் வேறுபாடு கண்டாள்; 'அவன் வருவானாகவும் நீ வேறுபட்டாய் வெறி எடுத்துக்கொள்ளும் வகையான் என்றதூஉம்.

சூருடை நனந்தலைச் சுனைநீர் மல்க
மால்பெயல் தலைஇய மன்நெடுங் குன்றத்துக்
கருங்காற் குறிஞ்சி மதனில் வான்பூ
ஓவுக்கண்டன்ன இல்வரை இழைத்த
நாறுகொள் பிரசம் ஊது நாடற்குக்

காதல் செய்தலுங் காதலம் அன்மை
யாதெனிற் கொல்லோ தோழி வினவுகம்
பெய்ம்மணல் முற்றங் கடிகொண்டு
மெய்ம்மலி கழங்கின் வேலற் தந்தே.

201. புறநானூறு - 271

திணை - நொச்சி

துறை - செருவிடை வீழ்தல்

நீர் அறவு அறியா நிலமுதற் கலந்த
கருங்குரல் நொச்சிக் கண்ஆர் குரூஉத்தழை
மெல்லிழை மகளிர் ஐதுஅகல் அல்குல்
தொடலை ஆகவுங் கண்டனம் இனியே
வெருவரு குருதியொடு மயங்கி உருவு கரந்து
ஒறுவாய்ப் பட்ட தெரியல் ஊன்செத்துப்
பருந்துகொண்டு உகப்ப யாம் கண்டனம்
மறம்புகல் மைந்தன் மலைந்த மாறே.

202. புறநானூறு - 302

திணை - தும்பை

துறை - குதிரைமறம்

வெடிவேய் கொள்வது போல ஓடித்
தாவுபு உகளும் மாவே, பூவே
விளங்குஇழை மகளிர் கூந்தற் கொண்ட
நரந்தப் பல்காழ்க் கோதை சுற்றிய
ஐதுஅமை பாணி வணர்கோட்டுச் சீறியாழ்க்
கைவார் நரம்பின் பாணர்க்கு ஓக்கிய
நிரம்பா இயல்பின் கரம்பைச் சீறூர்
வேலின் அட்ட களிறுபெயர்த்து எண்ணின்
விண்இவர் விசும்பின் மீனும்
தண்பெயல் உறையும் உறைஆர் றாவே.